ஸ்ரீ:

# ஸ்ரீ மஹாபாரதம்.

## சல்ய ஸௌப்திக ஸ்த்ரீபர்வங்கள்.

திரிசிரபுரம்
ஸேண்ட் ஜோஸப் காலேஜ் ஸம்ஸ்கிருத தலைமைப்பண்டிதர்,
மஹாவித்வான், ஸாரஸ்வதஸாரஜ்ஞர், கவிசிகாமணி,
ஸ்ரீ. உ. வே. T. V. ஸ்ரீநிவாஸாசார்யர்
அவர்களால்
மொழிபெயர்க்கப்பெற்று,

கும்பகோணம் காலேஜ் ரிடயர்ட் தமிழ்ப்பண்டிதர்
ம. வீ. இராமானுஜாசாரியரால்
பதிப்பிக்கப்பெற்றன.

சென்னை:
கமர்ஷியல் பிரஸ்.

விலை ரூபா ௩-0-0: தபால்சார்ஜ் வேறு.

1923.

ஸ்ரீ

# முகவுரை.



ஸ்ரீ மஹாபாரதமொழிபெயர்ப்பில், சல்யபர்வமும் ஸௌப்திக பர்வமும் ஸ்த்ரீபர்வமும் சேர்ந்து வெளிவந்தது, அன்பர்களுக்குப் பெருமகிழ்ச்சியைத் தரும். இந்தப்புஸ்தகம் சிலமாதங்களின் முன்னமே வெளிவந்திருக்கவேண்டும். அங்ஙனம் வெளிவராமைக்குக் காரணம், நான் முன்பு பலமுறை தெரிவித்திருக்கிறபடி போதிய அளவு பொருளுதவி கிடைக்காமையே; அதனோடு, என் வாஸத்தை மயிலாப்பூரைவிட்டு இவ்வூருக்கு மாற்றியதில் இங்கே வேண்டிய ஸௌகர்யங்களை அமைத்துக்கொள்ள நேர்ந்ததும் மற்றொரு காரணமாகும். இந்த ஸத்கைங்கர்யம் இம்மட்டில் சிறிது காலதாமதத்தோடாவது நடைபெற்றுவருவது, ஸர்வசக்தனான ஸர்வேஶ்வரனுடைய பரமகிருபையினாலேயே.

ஸ்ரீமஹாபாரதத்தில் ஒவ்வொரு பர்வத்திலும் தனித்தனியான சுவை நிரம்பியிருக்கும். சத்துருநாசமே முழுவெற்றியுமாதலாலும், பாரதயுத்தத்துக்கே முக்கிய காரணமான துர்யோதன வதம் இந்தப்பர்வங்களில் சொல்லப்படுவதாலும், இந்தப் பர்வங்கள் சிறப்புடையன. ஸ்ரீமஹாபாரதத்திற்கு, 'ஜயம்' என்று ஒரு சிறப்புப்பெயர் உண்டு. அந்தப்பெயரை அதற்கு உறுதிப்படுத்துவன இந்தப் பர்வங்களே. மஹாபாரதத்தை ஒரு விருக்ஷமாக உருவகம் செய்த இடத்தில் * சல்யபர்வத்தை அந்த விருக்ஷத்திலுள்ள மலரின்மணமென்றும் ஸ்த்ரீபர்வத்தையும் ஐஷீகபர்வத்தையும் அம்மரத்தின் நிழலென்றும் வர்ணித்திருப்பதே இந்தப் பர்வங்களின் சிறப்பை நன்கு விளக்கும். இந்தப்பர்வங்களிலடங்கிய கதைச்சுருக்கத்தை ஆதிபர்வம் † பர்வஸங்க்ரஹ அத்யாயத்தில் காண்க. இந்தப் பர்வங்களில், அஶ்வத்தாமா துர்யோதனனிடத்தும் வாஸுதேவர் பாண்டவர்களிடத்தும் காட்டிய நட்பும் பாண்டவபக்ஷத்தார் திருதராஷ்டிரனுக்கும் காந்தாரிக்கும் கூறிய ஸமாதானங்களும் காந்தாரி கிருஷ்ணனுக்கு யுத்தபூமியைக்காட்டிக் கூறியவைகளும் மிகப்பாராட்டற்பாலன.

---

* ஆதிபர்வம், பக்கம். கக. † ஆதிபர்வம் ; பக்கம். ௫0.

ஸ்ரீமஹாபாரத கைங்கர்யத்தைத் தொடங்கிப் பலவருஷங்கள் ஆயினமையால், அதனை விரைவில் பூர்த்திசெய்யும் விருப்பத்துடன் நான் சென்னைக்குப்போனது முதலிய விவரங்களைக் கர்ணபர்வ முகவுரையில் தெரிவித்திருக்கிறேன். சென்னையில் 2-வருஷகாலம் வஸித்ததில் புதிய ஸஞ்சிகைகளிற் சிலவும் இரண்டாம்முறை பதிப்பிக்கப்படவேண்டிய பழைய ஸஞ்சிகைகளிற் சிலவும் அச்சிட்டு முடிந்தன. புதிய ஸஞ்சிகைகளை வெளியிடுவதோடு பழைய ஸஞ்சிகைகள் பலவற்றை இரண்டாம் முறை பதிப்பிக்க நேர்ந்தமையால், பதிப்புவேலையை நிர்வகித்து நடத்துவது மிகச்சிரமமாயிருந்தது. வேலையை நடத்தமுடியாமையால், மேல் இன்னது செய்வதென்று தோன்றாமல் என்மனம் மிகத்தளர்ச்சியுற்றது. வேலையை முழுதும் நிறுத்திவிடலாமா அல்லது யாரேனும் ஒப்புக்கொண்டால் அவர்களிடம் கொடுத்துவிடலாமா என்றுகூடச் சில ஸமயங்களில் ஆலோசித்தேன். இந்த மஹாபாரதமொழிபெயர்ப்பை ஆதிதொடங்கி ஆதரித்துவருபவர்களும் இந்த மொழிபெயர்ப்பை மூலத்தோடு ஒப்பிட்டுப்பார்த்து இதில் பரமத்ருப்திஅடைபவர்களும் இது விரைவில் பூர்த்தியாகவேண்டுமென்னும் விருப்பம் மிக உடையவர்களுமான ஸ்ரீமான் திவான்பகதூர், G. க்ருஷ்ணமாசாரியரவர்கள், ஸ்ரீமான் Sir **M. C. T.** முத்தைய செட்டியாரவர்கள், Kt., ஸ்ரீமான் R. நாராயண ஐயரவர்கள், M.A., Bar-at-Law, I.C.S., ஸ்ரீமான் ராவ்பகதூர், **V. T.** க்ருஷ்ணமாசாரியரவர்கள், ஸ்ரீமான் ராவ்பகதூர், **N.** கோபால ஸ்வாமி ஐயங்காரவர்கள் முதலான சிலகனவான்கள் மஹாபாரதப் பதிப்புவேலை விரைவில் நடைபெறாமலிருப்பதையும் அதற்குக் காரணத்தையும் அறிந்து சென்னையிலுள்ள தங்கள் ஸ்நேகிதர்களுடன் கலந்து ஆலோசித்துத் தங்களுக்குள் கையொப்பம்செய்து சில தொகை சேகரித்து என்னிடம் கொடுத்து, வேண்டியஉதவிகள் தாமே வருமென்றும் சிறிதும் மனத்தளர்ச்சியின்றி ஸஞ்சிகைகளை வெளியிடவேண்டுமென்றும் சொல்லி எனக்கு மிக்க மனஊக்கத்தை அளித்தார்கள். மிக்க தளர்ச்சியுற்று நின்றுபோகும் தருணத்திலிருந்த ஸ்ரீமஹாபாரதப் பதிப்பு திரும்ப நடைபெறத்தொடங்கியது இந்தப் பரமோபகாரிகளினுடைய ஆதரவினாலேயே. இந்தஸமயத்தில் அவர்கள்செய்த பேருதவியானது, வாடிய பயிருக்கு மழைபெய்தது போல இருந்தது. அப்பொழுது கையொப்பம்செய்து உதவிபுரிந்த பரமோபகாரிகளினுடைய பெயர்களை மிக்க நன்றியறிதலுடன் இதனடியில் குறித்திருக்கிறேன்.

ரூ.

ஸ்ரீமான் திவான்பகதூர் G. கிருஷ்ணமாசாரியரவர்கள், Secretary, Legal Department, ஹைதராபாத் ... 500
„ ராவ்ஸாகிப் Sir. M. C. T. முத்தைய செட்டியார் அவர்கள் Kt. சென்னை ... ... 500
„ R. நாராயண ஐயரவர்கள் M.A., Bar-at-Law I.C.S. District Judge, சிற்றூர் ... ... 50
„ ராவ்பகதூர் V. T. கிருஷ்ணமாசாரியர் அவர்கள் டிஸ்ட்ரிக்ட் கலெக்டர், ராமநாதபுரம் ... 50
„ ராவ்பகதூர் N. கோபாலஸ்வாமி ஐயங்காரவர்கள் B.A.B.L., Registrar General of Panjayats, சென்னை 50
„ K.கோவிந்தாசாரியரவர்கள் (Messrs Best & Co) சென்னை ... ... ... ... 250
„ ராவ்பகதூர் C. V. விஸ்வநாத சாஸ்த்ரிகளவர்கள் B.A.B.L., District Judge, தஞ்சை ... 25
„ ராவ்பகதூர் T. A. ராமலிங்க செட்டியாரவர்கள், கோயம்புத்தூர் ... ... ... 50
„ C. V. வேங்கடரமண ஐயங்காரவர்கள் B.A.B.L., கோயம்புத்தூர் ... ... ... 50
„ T. நரஸிம்ம ஐயங்காரவர்கள் B.A.B.L., High Court Vakil, சென்னை ... ... ... 50

இவர்களெல்லாம் முன்னமே கையொப்பஞ்செய்து புஸ்தகம் வாங்கிக்கொண்டுவருபவர்கள்.

இந்தப் பரமோபகாரிகளுக்குக்கண்ணபிரானுடையதிருவருளால் எல்லா நன்மைகளும் உண்டாகுக. அவர்களுடைய புகழ் உலகுள்ளளவும் தழைத்தோங்குக. இப்படிப்பட்ட பெருந்தகையாளர்களுடைய அபிமானத்தைப் பெற்றிருத்தலால், ஸ்ரீ மஹாபாரத கைங்கர்யம் விரைவில் பூர்த்தியாகிவிடுமென்பது நிச்சயம். அடுத்த புஸ்தகம் 'ஸ்ரீமஹாபாரதம் முற்றிற்று'என்று போடப்பெற்று வெளிவருவதே அதற்குத் தக்க ஸாக்ஷியாகும். பல வருஷங்களாயினமையாலும், பிராயமுதிர்ச்சியும் தேகத்தளர்ச்சியும் அதிகரித்து வருதலாலும், மேற்கொண்ட இப்பெருங்கார்யம் பூர்த்தியாகவேண்டுமே என்னும் பெருங்கவலையோடிருக்கிற எனக்கு மஹாபாரதம் சீக்கிரம் பூர்த்தியாகுமென்னும் உறுதியுண்டாகும்போது என்மனத்தில் உண்டாகும் உவகைக்கு ஓர் அளவில்லை. எல்லாம்வல்ல ஸர்வேஸ்வரன் எனது விருப்பத்தை இனிது நிறைவேற்றியருளுக.

பீஷ்மபர்வமுதல் ஸ்த்ரீபர்வம் வரையிலுள்ள ஆறுபர்வங்களையும் மொழிபெயர்த்து உதவிய திரிசிரபுரம் ஸெண்ட்ஜோஸெப்ஸ் காலேஜ் ஸம்ஸ்கிருத தலைமைப் பண்டிதர், மஹாவித்வான், ஸாரஸ்வத ஸாரஜ்ஞர், கவிசிகாமணி, ஸ்ரீ. உ. வே. T. V. ஸ்ரீநிவாஸாசார்யர்ஸ்வாமியினுடைய பரமோபகாரத்தை நான் எந்நாளும் மறவேன். அவர்கள் ஒப்புக்கொண்ட பர்வங்களைப் பலவருஷங்களின் முன்னமே மொழி பெயர்த்துக் கொடுத்து க்ருதக்ருத்யர்களாகப் பரமஸந்தோஷத்தோடிருக்கிறார்கள். அவர்கள் மொழிபெயர்த்துதவிய ஆறுபர்வங்களும் அச்சிட்டு வெளிவந்து உலகத்துக்குப்பயனளித்துவருதலைப் பார்க்கும்போது, அவர்களுக்குப் பரமதிருப்தியாயிருக்கும். இன்னும் இந்தமாதிரி நல்லகார்யங்களைச் செய்யும்படி நீண்டஆயுளையும் ஆரோக்யத்தையும் மனவூக்கத்தையும் அவர்களுக்கு ஸர்வேஸ்வரன் அளித்தருள்க.

மேலே தெரிவித்தபடி, இந்த மஹாபாரத கைங்கர்யத்தைப் பூர்த்திசெய்தற்காகவே, நான் சென்னையில் போய் வஸித்தேன். சென்னைவாஸம் புஸ்தகப்பதிப்புக்கு மிக்க ஸௌகர்யமுள்ளதானாலும், அங்கு வஸிப்பதில் செலவு அதிகமாதலாலும் அதற்குத் தக்கபடி உதவிகள் கிடைக்காமையாலும் சொந்த ஊராகிய இங்குவந்து வஸிக்கிறேன். இவ்வூர் புஸ்தகப்பதிப்பு வேலைக்கு அவ்வளவு ஏற்றதன்று. ஆனாலும், லோகோபகாரமான இந்த ஸத்கார்யத்தை விரைவில் பூர்த்திசெய்தற்கு என்னால் இயன்ற அளவு முயலுவேன். எல்லாம்வல்ல ஸர்வேஸ்வரன் பரமக்ருபையால் நிறைவேற்றியருளவேண்டும். நன்கொடையளித்தும், கையொப்பம்செய்தும், கையொப்பங்கள் சேர்த்துக்கொடுத்தும், இந்த அரிய பெரிய கார்யத்தை இதுவரையில் ஆதரித்துவருகிற ஆப்தர்கள், தயைசெய்து, மற்றப் பகுதியும் பூர்த்தியாகும்வண்ணம், தம்மாலியன்ற உதவிகளைச் செய்து ஆதரிக்கவேண்டுமென்று அவர்களை நிரம்பப்ப்ரார்த்திக்கிறேன்.

மஹாபாரத ஸஞ்சிகைகளை வெளியிடுவதற்கு வேண்டிய உதவிகளைச் செய்து எனக்கு ஊக்கமளித்துவருகிற ஆப்தர்களுக்கு இந்த ஸத்கார்யத்திலுள்ள அபிமானம் மேன்மேலும் வளரச்செய்யவும் அவர்களுக்கு எல்லா நன்மைகளையும் அளித்தருளவும், எல்லாம்வல்ல இறைவனது திருவடித்தாமரைகளை எப்பொழுதும் தியானித்துக்கொண்டிருக்கிறேன்.

மணலூர், நரசிங்கன்பேட்டை P.O.
1—11—1923.

இங்ஙனம்,
ம.வீ. இராமானுஜாசாரியன்.

ஸ்ரீ:

# ஸ்ரீ மஹாபாரதம்.

# சல்ய ஸௌப்திக ஸ்த்ரீ பர்வங்களின்

## விஷய ஸூசிகை.

## சல்யபர்வம்.

### சல்யவதபர்வம்.

அத்யாயம். பக்கம்.

அத்யாயம். பக்கம்.

# விஷயஸூசிகை.

## ஸௌப்திகபர்வம்.

### ஸௌப்திகபர்வம்.

## ஐஷீகபர்வம்.

## ஸ்திரீபர்வம்.

### ஜலப்ரதானிகபர்வம்.



* அதிகபாடத்துக்கு விஷயஸூசிகை எழுதப்படவில்லை.

அத்யாயம். பக்கம்.



ஸ்திரீவிலாபபர்வம்.

## ஶ்ராத்தபர்வம்.

சல்ய ஸௌப்திக ஸ்திரீபர்வங்களின்

விஷயஸூசிகை முற்றிற்று.

---

## பிழையும் திருத்தமும்.

| பர்வம். | பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ஸௌப்திகபர்வம் | 66 | 33 | அவர் | அரசர் |
| ,, | 69 | 5 | போகத் | கோபத் |
| ஸ்திரீபர்வம் | 35 | 3 | ப்ரதாவும் | ப்ராதாவும் |

ஸ்ரீ:

ஸ்ரீ க்ருஷ்ணாய வ்யாஸரூபிணே நம:.

ஸ்ரீக்ருஷ்ணத்வைபாயநாய நம:.

# ஸ்ரீ மஹாபாரதம்.

---

## சல்யபர்வம்.



### முதலாவது அத்யாயம்.

### சல்யவதபர்வம்.

* நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம்।
தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீரயேத்॥

---

(துர்யோதனனால் சல்யன் ஸேனாபதியாக்கப்பட்டு மீண்டும் யுத்தத்திற்காகச் சேன்றதும், சல்யன் துரியோதனன்முதலியவர்களுடைய வதத்தை ஸஞ்சயனிடத்திலிருந்து கேட்டதனால் மூர்ச்சையடைந்த திருதராஷ்டிரனை விதுரர் தேற்றியதும்.)

ஜனமேஜயர், "ப்ராம்மணரே! யுத்தத்தில் ஸவ்யஸாசியினால் இவ்வாறு கர்ணன் வதஞ்செய்யப்பட்டவுடன், கௌரவர்களில் மிகுந்திருந்தசிலர் யாது செய்தனர்? குருகுலத்திலுதித்த அரசனான துரியோதனன் பாண்டவர்களாற் பிளக்கப்படுகின்ற சேனையைக் கண்டு அச்சமயத்திற்கு ஏற்றதான எதைச்செய்தான்? ப்ராம்மணோத்தமரே! நான் இதனைக் கேட்க விரும்புகிறேன். இதனை உரைப்பீராக. முன்னோர்களுடைய பெருமைபொருந்திய சரித்திரத்தைக் கேட்டு நான் திருப்தியடையவில்லை" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

"அரசரே! பிறகு, கர்ணன்கொல்லப்பட்டவுடன், திருதராஷ்டிரபுத்ரனான துரியோதனன் துக்கக்கடலில் மிக மூழ்கி எவ்விதத்தாலும் ஆசையற்றவனானன். அவன், 'ஆ! கர்ண! ஆ! கர்ண!' என

---

* இதன்உரை விசேஷங்களை ஆதிபர்வம் முதற்பக்கம் குறிப்பிற்காண்க.

அடிக்கடி தூக்கித்துக்கொண்டு மாண்டவர்கள்போக மீதியிருக்கின்ற அரசர்களோடு மனவருத்தத்துடன் தனதுபாசறையை அடைந்தான். அரசரே! ஐஸ்வர்யத்தை விரும்புகின்றவர்களால் சாஸ்திரத்தினால் நிச்சயிக்கப்பட்ட காரணங்களைக்கொண்டு அந்தத் துரியோதனன் தேற்றப்பட்டும், கர்ணனை நினைத்துக்கொண்டே விதிவலிதென்றெண்ணி அதிகாலையில் யுத்தம்செய்வதில் நிச்சயம்செய்துகொண்டு மறுபடியும் யுத்தத்திற்கே புறப்பட்டான். அவன், அரசர்களுள் மிகச்சிறந்தவனான சல்யனைச் சாஸ்திரமுறைப்படி சேனாபதியாக ஏற்படுத்தி மரித்தவர்கள்போக மிச்சமுள்ளஅரசர்களுடன் யுத்தத்திற்குச் சென்றான். பரதர்களுட் சிறந்தவரே! பிறகு, கௌரவ பாண்டவசேனைகளுக்கு மிகநெருங்கியதும் தேவாஸுரர்களின் யுத்தம்போன்றதுமான யுத்தம் தொடங்கிற்று. மஹாராஜரே! பிறகு, சல்யன் யுத்தத்தில் பாண்டவசேனையில் துன்பத்தையுண்டுபண்ணி உச்சிவேளையில் தருமராஜரால் தள்ளப்பட்டான். பிறகு, பந்துக்கள் கொல்லப்பட்ட துரியோதனராஜன் சத்துருக்களிடமிருந்து உண்டான பயத்தினால் யுத்தரங்கத்தினின்று விலகிக் கோரமான மடுவில் பிரவேசித்தான். பிறகு, அப்பகலின் * பிற்பகுதியில் நான்கு பக்கங்களிலும் மஹாரதிகர்களோடு சூழ்ந்துகொண்டு யுத்தத்திற்காக மடுவினின்று அழைத்துப் பீமஸேனனால் தள்ளப்பட்டான். அந்த வீரன் கொல்லப்பட்டவுடன், யுத்தத்தில் பெரியவில்லாளிகளான கிருதவர்மா, கிருபர், அஸ்வத்தாமா இம்மூவரும் பாண்டவ ஸேனாவீரர்களைக் கொன்றார்கள். பிறகு,ஸஞ்சயன் முற்பகலில் பாசறையினின்று புறப்பட்டுத் தீனனாகவும் துக்கத்தோடும் சோகத்தோடும் கூடியவனாகவும் பட்டணத்திற் பிரவேசித்தான். பிறகு, அவன், பட்டணத்திற்பிரவேசித்து இருகைகளையும் உயரத்தூக்கிக்கொண்டு துக்கமுள்ளவனாகவும் நடுக்கமுற்றவனாகவும் அரசனுடையஅரண்மனையில் புகுந்தான். மிக்க துன்பமுள்ள அந்த ஸஞ்சயன் ஓடுகின்றவர்களும் பித்தர்கள்போல மனத்தையிழந்தவர்களும் சோகத்தால் அதிக துக்கமுள்ளவர்களுமான அங்குள்ள புருஷஸ்ரேஷ்டர்களைக் கண்டான். அந்த மனிதர்களைக் கண்டவுடனே, ஸஞ்சயன் அதிக துக்கத்தை அடைந்தவனாக, 'அந்தோ! கஷ்டம்! மஹாத்மாவினுடைய நாசத்தால் ஆபத்தையடைந்தேன். எந்தக்காலத்தினால் இந்திரனுக்குநிகரான பலமுடையஅரசர்களெல்லாரும் கொல்லப்பட்டார்களோ அந்தக்காலமானது மிக்கபலமுடையது. அந்தோ! அவ்விதமானகதியும்

* 'அபரான்னே' என்பது மூலம்.

சிறந்தது' என்று விரைவாகக் கூறினன். அரசரே! பட்டணத்தி லுள்ள எல்லாஜனங்களும் அந்தஸஞ்சயனைப் பார்த்தமாத்திரத்தி லேயே பயத்தால் பீடிக்கப்பட்டவர்களாக, 'அரசரே!' என்ற உரத்த சத்தத்துடன் அழுதார்கள். மனிதர்களுள் சிறந்தவரே! அரசன் கொல்லப்பட்டானென்றதைக்கேட்டு நாற்புறமும் அந்நகரத்திலுள்ள வர்கள் சிறுவர்முதல்எல்லாரும் பெரிதான துன்பொலியை வெளி யிட்டார்கள். அப்படி மனத்தளர்ச்சியடைந்த அந்த ஸஞ்சயன் அரண்மனையில்நுழைந்து ராஜஶ்ரேஷ்டனும் ஞானக்கண்ணுள்ள வனுமான அரசனைக் கண்டான். பாரதருள் சிறந்த ஜனமேஜயரே! வீற்றிருப்பவனும் தோஷமற்றவனும் நாற்புறங்களிலும் நாட்டுப்பெண் களாலும் காந்தாரியாலும் விதுரராலும் அவ்வாறே மற்றத்தோழர் களாலும் நன்மையைவிரும்பும் ஞாதிகளாலும் சூழப்பட்டவனும் கர்ணனுடைய வதத்தைப்பற்றி அவ்விஷயத்தையே யோசித்துக் கொண்டிருப்பவனுமான அரசனைக்கண்டு அந்த ஸஞ்சயன் மனத்தில் மிக்க துக்கமுடையவனுகவும் கண்ணீரால் விளக்கமில்லாத வாக்கை யுடையவனுகவும் அழுதுகொண்டே வார்த்தை சொல்லலானன்.

"புருஷஶ்ரேஷ்டரே! யான் ஸஞ்சயன். பரதரிற்சிறந்தவரே! உமக்கு வந்தனம். புருஷஶ்ரேஷ்டரே! மத்திரதேசாதிபதியான சல்ய னும் அவ்வாறே ஸுபலனுடையபுத்திரனுன சகுனியும் மிகுந்தவல்ல மையையுடையவனும் சூதாடியின்குமாரனுமான உலூகனும் எல்லா ஸம்சப்தகர்களும் சகர்களோடுகூடின காம்போஜர்களும் மிலேச்சர் களும் மலைநாட்டுவீரர்களும் யவனர்களும் நாசஞ்செய்யப்பட்டார் கள். மஹாராஜரே! ஆண்மையிற் சிறந்தவர்களான கீழ்நாட்டு வீரர்களும் எல்லாத் தென்னுட்டுவீரர்களும் வடநாட்டுவீரர்களும் மேல்நாட்டுவீரர்களும் எல்லாரும் கொல்லப்பட்டார்கள். அரசரே! எல்லாஅரசர்களும் ராஜகுமாரர்களும் கொல்லப்பட்டார்கள். சூர னும் மஹாபலசாலியுமான கர்ணபுத்ரனுகிய ஸத்யஸேனனும் கொல் லப்பட்டான். அரசனுன துரியோதனனும் பாண்டுபுத்ரனுன பீம ஸேனனுல் சொன்னபடியே கொல்லப்பட்டான். மஹாராஜரே! துரியோதனன், தொடைகள் முறிக்கப்பட்டும் (ரத்தத்தினுல்) பூசப் பட்டும் புழுதிகளில் படுத்திருக்கின்றுன். அரசரே! திருஷ்டத்யும் னனும் பிறரால்ஜயிக்கமுடியாத சிகண்டியும் உத்தமௌஜஸும் யுதா மன்யுவும் அவ்வாறே எல்லாப்ரபத்ரகர்களும் கொல்லப்பட்டார்கள். புருஷஶ்ரேஷ்டரே! பாஞ்சாலராஜனும் சேதிதேசத்துவீரர்களும் நாசஞ்செய்யப்பட்டார்கள். பாரதரே! உம்முடைய குமாரர்களனைவர்

களும் த்ரௌபதிபுத்திரர்களும் கொல்லப்பட்டார்கள். புருஷஸ்ரேஷ்டரே! எல்லாமனிதர்களும் கொல்லப்பட்டார்கள். யானைகளும் தள்ளப்பட்டன. போரில் ரதிகர்களும் குதிரைகளும் கொல்லப்பட்டனர். அரசரே! பிரபுவே! உம்மைச்சேர்ந்தவர்கள் சூரர்களான பாண்டவர்கள் இருவர்களின் படைகளும் ஒன்றையொன்று தாக்கியதில் உங்களுடையபடைவீடுகள் மிச்சமின்றிச் செய்யப்பட்டன. உலகம் காலத்தினால் மயக்கம்கொள்ளும்படி செய்யப்பட்டுப் பெரும்பாலும் ஸ்திரீகளே மிச்சப்பட்டதாயிற்று. பாண்டவகக்ஷியில் ஏழு பெயர்கள் மிச்சப்பட்டார்கள். கௌரவர்களில் மூன்றுரதிகர்கள் மிகுந்தனர். அவர்கள்யாவரெனின், பிராதாக்களான ஐந்துபாண்டவர்களும் ஸாத்யகியும் வாஸுதேவரும் கிருபரும் கிருதவர்மாவும் ஜயிப்பவருள்சிறந்தவரான அஸ்வத்தாமாவுமாகிய இவர்களே. மஹாராஜரே! ராஜஸ்ரேஷ்டரே! பதினெட்டு அக்ஷௌஹிணியில் மிச்சமானரதிகர்கள் இவர்கள்தாம். ஸம்சயமில்லை. மஹாராஜரே! இவர்கள்தாம் மிகுந்தவர்கள். மற்றஅனைவரும் மாண்டார்கள். பரதரில் சிறந்தவரே! காலத்தினால் உலகமனைத்தும் அழிக்கப்பட்டது. எல்லாமனிதர்களும் துரியோதனனைமுன்னிட்டுக் கொல்லப்பட்டார்கள்" என்றான்.

கோரமான இவ்வார்த்தையைக் கேட்டு ஜனநாதனும் ராஜஸ்ரேஷ்டனுமான அந்தத்திருதராஷ்டிரன் பிரஜ்ஞையையிழந்து பூமியில் விழுந்தான். மஹாராஜரே! அவ்வீரன் விழுந்தவுடன், மஹாகீர்த்தியையுடையவரான விதுரரும் சோகத்தாலும் துயரத்தாலும் பீடிக்கப்பட்டு விழுந்தனர். மஹாபாக்கியவதியான காந்தாரியும் எல்லாக்கௌரவஸ்திரீகளும் மிக்க கோரமானவார்த்தையைக்கேட்டு உடனே பூமியில் விழுந்தார்கள். அறிவற்றுப் பூமியில்விழுந்ததும் துன்பமுற்றதுமான ராஜமண்டலமானது அப்பொழுது துணியிலெழுதப்பட்டசித்திரம்போல இருந்தது. பிறகு, பூபதியும் புத்திரவிசனத்தினால் துன்பமுற்றவனுமான திருதராஷ்டிரராஜன் பிரயாசத்தினால் மெள்ள உயிரை அடைந்தான். மிகத்துன்பமுற்ற அந்தஅரசன் உயிரையடைந்து நடுக்கமுற்று எல்லாத்திசைகளையும் நன்குபார்த்து விதுரரைநோக்கி இந்தவாக்கியத்தைக்கூறலானான். 'பேரறிவாளனே! பாரதருள் சிறந்தவனே! விதுரா! தெரிந்துகொள். நாதனற்றவனும் எல்லாப்புத்ரர்களாலும் முழுதும் விடப்பட்டவனுமான எனக்கு நீயே கதி' என்றான். இவ்வாறுசொல்லியபிறகு, மறுபடியும் அறிவற்று விழுந்தான். அவ்வாறு விழுந்திருக்கிற அவ்வரசனைக்கண்டு உறவி

னருள்சிலர் குளிர்ந்தநீரால் நனைத்தார்கள்; விசிறிகளாலும் வீசினர்கள். வெகுநேரங்கழித்து, மீண்டும் தெளிவடைந்தவனும் புத்திர சோகத்தால் பீடிக்கப்பட்டவனும் பூமியைக்காப்பவனுமான அந்த அரசன் குடத்திலடைக்கப்பட்ட ஸர்ப்பம்போலப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு பேசாமலிருந்தான். அச்சமயத்தில் துன்பமுற்ற அரசனைக்கண்டு ஸஞ்சயனும் அவ்வாறே எல்லாமாதர்களும் கீர்த்தியையுடைய காந்தாரியும் புலம்பினர்கள். நரஸ்ரேஷ்டரே! அடிக்கடி புத்திமயக்கங்கொள்ளுகின்ற திருதராஷ்டிரன் நெடுநேரஞ்சென்று விதுரரைப்பார்த்து, 'எல்லாமங்கையரும் புகழ்பெற்றகாந்தாரியும் அவ்வாறே இந்த எல்லாத்தோழர்களும் செல்லட்டும். என்மனம் மிகவும் மயங்குகின்றது' என்றுகூறினன். பரதருள்சிறந்தவரே! பிறகு, இவ்வாறு சொல்லப்பட்ட விதுரர், அடிக்கடி மயக்கத்தை அடைந்து அந்தஸ்திரீகளை மெள்ள வெளிப்படுத்தியனுப்பினர். பரதஸ்ரேஷ்டரே! பிறகு, எல்லாமாதர்களும் அவ்வாறே எல்லாத்தோழர்களும் துக்கத்தையடைந்த அரசனைக்கண்டு அவ்விடம்விட்டு வெளியிற்சென்றனர். பிறகு, பகைவர்களை வாட்டுகின்ற அரசன் அப்பொழுது அறிவையடைந்து, 'இப்பொழுது எனக்கு எவன் கதியாவான்' என்ற கவலையினல் கலக்கமுற்றவனுகி அப்பொழுது அழுகின்றவனும் மிக்க துன்பமடைந்தவனும் கைகளைக் குவித்துக்கொண்டிருப்பவனும் அடிக்கடி புலம்புகின்றவனுமான ஸஞ்சயனைப்பார்த்து வினவினன். பிறகு, விதுரர், ஞாதிகளையும் ஸ்திரீகளையும் வெளிப்படுத்திவிட்டு மறுபடியும் துக்கத்துடன் அரசனருகில்வந்து, அடிக்கடி துக்கமடைகின்ற அவ்வரசனை இனியசொற்களினல் தேற்றினர்.

---

## இரண்டாவது அத்யாயம்.

## சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



**(திருதராஷ்டிரன் ஸஞ்சயனுக்கெதிரில் துரியோதனனுடைய சொற்களை நினைத்துப் புலம்பியது.)**

மஹாராஜரே! மாதர்கள் அவ்விடத்தைவிட்டு விலகிச்சென்றவுடன், அம்பிகாபுத்ரனை திருதராஷ்டிரன் துக்கத்திினின்றும் அதிக துக்கத்தையடைந்து புலம்பினன். மிகச் சூடாகப்பெருமூச்சுவிட்டு அடிக்கடி கைகளையுதறிக்கொண்டு பலவாறு ஆலோசித்து

ஸஞ்சயனை நோக்கிப் பின்வருமாறு வாக்கியத்தைக் கூறலானான். 'ஆ! கஷ்டம்! ஸூத! யுத்தத்தில் பாண்டவர்கள் க்ஷேமமுள்ளவர்களாகவும் குறைவற்றவர்களாகவும் இருக்கிறார்களென்று யான் உன்னிடத்தினின்று கேட்பது பெரிதான துக்கம். என் புத்ரர்கள் கொல்லப்பட்டார்களென்பதைக் கேட்டும் ஆயிரம் துண்டாகச் சிதறாமையால் என்மனமானது சிறந்த வஜ்ரத்தினால் செய்யப்பட்டிருக்கின்றது; மிக்க திடமானது. இது நிச்சயம். ஸஞ்சய! அவர்களுடைய சொல்லையும் பால்யவிளையாட்டையும் நினைத்தும், இப்பொழுது அவர்களே கொல்லப்பட்டார்களென்பதைக் கேட்டும், என்மனமானது மிகவும் பிளக்கப்படுகிறது. நான் குருடனாயிருப்பதால் என் புத்திரர்களுடைய உருவத்தைப் பார்த்ததில்லை. ஆனாலும், புத்திர ஸ்னேகத்தாலுண்டுபண்ணப்பட்ட பிரீதியானது அவர்களிடத்தில் எப்பொழுதும் வைக்கப்பட்டிருந்தது. குற்றமற்றவனே! அக்குழந்தைகள் இளமைப் பருவத்தைத்தாண்டி யௌவனத்தில் நிலைபெற்றுச் செல்வத்தை அடைந்தவர்களாயிருப்பதைக்கேட்டு நான் அப்பொழுது மனக்களிப்புற்றிருந்தேன். அவர்கள் இப்பொழுது மரித்தவர்களும் செல்வத்தையும் பராக்ரமத்தையும் இழந்தவர்களுமானார்களென்பதைக் கேட்டுப் புத்ரசோகத்தில் மூழ்கினவனாகி ஒரு ஸமயத்திலும் நான் ஆறுதலடையவில்லை. ஏ! குழந்தாய்! ராஜஸ்ரேஷ்ட! அநாதனான என் அருமைக் குழந்தாய்! வா; வா; மிக்க கைவன்மையுடையவனே! உன்னால் விடப்பட்டவனான யான் எந்தக்கதியை அடைவேன்? அப்பா! நீ, வந்திருக்கின்ற அரசர்களை எவ்வாறு விட்டுச் சாமாணியனான ஓர் இழிவான மன்னன்போலக் கொல்லப்பட்டுப் பூமியில் படுத்திருக்கிறாய்? மஹாராஜ! வீர! ஞாதிகளுக்கும் தோழர்களுக்கும் கதியாகவிருந்து, குருடனும் பிராயமுதிர்ந்தவனுமான என்னைவிட்டு எங்கே போகப்போகின்றாய்? உன்னுடைய கருணையானது அப்படிப்பட்டது! ப்ரீதியும் அப்படிப்பட்டது! அரசர்களிடத்தில் கௌரவமும் அப்படிப்பட்டது! யுத்தங்களில் ஜயிக்கப்படமுடியாதவனான நீ எவ்வாறு பார்த்தர்களால் கொல்லப்பட்டாய்? ஸமயத்தில் எழுந்திருந்து, 'அப்பா! அப்பா!' என்றும் 'மஹாராஜா!' என்றும் 'லோகநாதா!' என்றும் எப்பொழுதும் அடிக்கடி எவன் என்னைச் சொல்லப்போகின்றான்? ஏ! குருகுலத்திலுதித்தவனே! நேசத்தோடு எவனை நான் கழுத்தில் கட்டிக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் ததும்புகின்ற கண்களோடு உத்தரவு செய்வேன்? எனக்கு அப்படிப்பட்ட ஒருவார்த்தையை நன்கு கூறு

வாயாக. புதல்வனே! 'அப்பா! எனக்கு இந்தப் பூமியானது அதிக மாயிருக்கின்றது; பார்த்தனுக்கு அவ்வாறு இல்லை' என்று சொல்லுகின்ற உன்வார்த்தையை யான் முந்திக் கேட்டேனன்றோ? 'ராஜஸ்ரேஷ்டரே! பகதத்தன், கிருபர், சல்யன், அவந்திதேசாதிபன், ஜயத்ரதன், பூரிஸ்ரவஸ், ஸோமதத்தன், மஹாராஜனான பாஹ்லீகன், அஸ்வத்தாமா, போஜன், மஹாபலசாலியான மகததேசாதிபதி, ப்ருஹத்பலன், க்ராதன், ஸுபலகுமாரனான சகுனி, லக்ஷம்மிலேச்சர்கள், யவனர்களுடன்கூடிய சகர்கள், காம்போஜனான ஸுதக்ஷிணன், அவ்வாறே திரிகர்த்ததேசாதிபதி, பாட்டனான பீஷ்மர், பரத்வாஜகுமாரரான துரோணர், *கௌதமர், ஸ்ருதாயு, அஸ்ருதாயு, சிறந்த வீர்யமுள்ளவனான சதாயு, † ஆர்ஷ்யஸ்ருங்கி, ஜலஸந்தன், அலாயுதனென்ற ராக்ஷஸன், அலம்புஸன், வீரபாஹு, மஹாரதனான ஸுபாஹுஎன்ற இவர்களும் இன்னும் மற்ற அனேக அரசர்களும் என் நிமித்தமாகத் தம்உயிரையும் பொருள்களையும்மதிக்காமல் அடிக்கப்போகின்றார்கள். ராஜஸ்ரேஷ்டரே! அவர்களுக்குநடுவில் நான் நின்றுகொண்டு யுத்தத்தில் பிராதாக்களாற்சூழப்பட்டவனைப் பார்த்தர்களையும் எல்லாப் பாஞ்சாலர்களையும் சேதிநாடர்களையும் திரௌபதிபுத்திரர்களையும் ஸாத்யகியையும் குந்திபோஜனையும் ராக்ஷஸனான கடோத்கசனையும் யுத்தத்தில் எதிர்த்துப் போர்புரியப்போகின்றேன். மஹாராஜரே! இவர்களுள் மிக்க கோபங்கொண்ட ஒருவனே, எதிர்த்து ஓடிவருகின்ற பாண்டவவீரர்களைத் தடுக்கச் சாமர்த்தியமுள்ளவன். அவ்வாறிருக்க, பாண்டவர்களோடு பகைகொண்டவர்களும் வீரர்களுமான இவரனைவரும் ஒன்றுசேர்ந்தால் சொல்லவும் வேண்டுமோ? ராஜேந்திரரே! அல்லது, இவ்வனைவர்களுமே பாண்டவர்களைப் பின்தொடர்ந்துவருகின்ற வீரர்களோடு யுத்தம் செய்வார்கள்; யுத்தத்தில் அவர்களைக் கொல்லவும் செய்வார்கள். கர்ணன் ஒருவனே என்னுடன் பாண்டவர்களைக் கொல்வான். அந்த வீரர்களான அரசர்கள் எனது கட்டளையில் நிற்கப்போகின்றார்கள். அரசரே! அப்பாண்டவர்களுக்குத் தலைவனும் பலசாலியுமான வாஸுதேவன் முயற்சியைச் செய்யமாட்டான்' என்று இவ்விதம் என்னை நோக்கி வார்த்தைகூறினான். ஸூத! இவ்வாறு எனக்குச் சமீபத்

* 'கௌதமர்' என்று க்ருபருக்குப் பெயருண்டு. ஆனால், 'க்ருபர்' என்பது முன்னமே வந்திருத்தலால், இங்கே அங்ஙனம் கொள்ளக்கூடவில்லை.

† துரோணபர்வம். 371-ம் பக்கத்தில், இவனே அலம்புஸன் என்றும், இவ்விடத்தில் இவன் வேறு அலம்புஸன் வேறு என்றும் வருதல் காண்க.

தில் பலவார்த்தைகளைத் துரியோதனன் சொல்லுகையில், பாண்டவர்களை யுத்தத்தில் கொல்லப்பட்டவர்களாகவே யுக்தியால் ஊகித்தேன். அவர்களுடைய மத்தியில் நின்றவர்களும் யுத்தத்தில் பயிற்சியுள்ளவர்களுமான என் அருமைப்பிள்ளைகள் கொல்லப்பட்டது முன்வினையைத் தவிர வேறு என்ன? உலகங்களுக்கு நாதரும் சிறந்த பிரதாபமுள்ளவருமான பீஷ்மரும், சிங்கமானது நரியை எதிர்த்துக் கொல்லப்பட்டதுபோல எந்தயுத்தத்தில் சிகண்டியையெதிர்த்துக் கொல்லப்பட்டாரோ, எல்லாச்சஸ்திரங்கள் அஸ்திரங்கள் இவைகளுடையகரையையும் அடைந்தவரும் பிராம்மணருமான துரோணர் பாண்டவர்களால் எந்தயுத்தத்தில் கொல்லப்பட்டாரோ, அந்தயுத்தத்தில் (அப்படி மடிவதற்கு) அதிர்ஷ்டத்தைத்தவிர வேறு யாதுகாரணமுளது? திவ்யாஸ்திரங்களையறிந்தவனும் மிக்கபலசாலியுமான கர்ணனும் பூரிஸ்ரவஸும் ஸோமதத்தனும் பாஹ்லீகனும் கொல்லப்பட்டமையால், அதற்குப் பாக்கியத்தைத்தவிர வேறுகாரணம்யாது? யானைப்போரில் வல்லவனான பகதத்தனும் ஜயத்ரதனும் கொல்லப்பட்டதற்கு விதியைத்தவிர வேறுஎன்ன காரணம்? ஸுதக்ஷிணனும், பௌரவனான ஜலஸந்தனும், ஸ்ருதாயுவும், அஸ்ருதாயுவும், அந்தப்போரில் கொல்லப்பட்டதற்கு அதிர்ஷ்டத்தைத்தவிர வேறு யாதுகாரணம்? அவ்வாறே, மஹாபலசாலியும் சஸ்திரங்களைப்பிடித்த எல்லாவீரர்களுள்ளும் சிறந்தவனுமான * பாண்டியனும் பாண்டவர்களால் யுத்தத்தில் கொல்லப்பட்டான். அதற்கு அதிர்ஷ்டத்தைத்தவிர வேறு யாதுகாரணம்? ப்ருஹத்பலனும் மஹாபலசாலியானமாகதனும் வல்லமையுடையவனும் வில்லாளிகளுக்குக் கொடிபோன்றவனுமான உக்ராயுதனும் அவந்திதேசாதிபதியும் ஜனங்களுக்குநாதனான திரிகர்த்ததேசாதிபதியும் ஸம்சப்தகர்களும் கொல்லப்பட்டதற்கு அதிர்ஷ்டத்தைந்தவிர வேறு யாதுகாரணம்உளது? அரசனே! அவ்வண்ணமே, அலம்புஸனும் ராக்ஷஸனான அலாயுதனும் ஆர்ஷ்யஸ்ருங்கியும் அந்தயுத்தத்தில் கொல்லப்பட்டதற்குப் பாக்கியத்தைத்தவிர வேறு யாதுகாரணம்? நாராயணர்களும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்ட கோபாலர்களும் அநேகமாயிரக்கணக்கான மிலேச்சர்களும் அந்த யுத்தத்தில் கொல்லப்பட்டதற்கு அதிர்ஷ்டத்தைத்தவிர வேறுயாது காரணம்? ஸுபலபுத்ரனும் மஹாபலசாலியும் வீரனும் ஸைன்யங்

* அஸ்வத்தாமாவினால் பாண்டியன்ஒருவன் கொல்லப்பட்டதாகத் தெரிகிறது. கர்ணபர்வம், 354 - ம் பக்கம் பார்க்க.

களுடன்கூடினவனும் சூதில்ஸமர்த்தனுமான சகுனியும் கொல்லப் பட்டதற்கு அதிர்ஷ்டத்தைத்தவிர வேறு என்னகாரணமிருக் கிறது? இவர்களும் அஸ்திரத்தில் நல்லபயிற்சியுடையவர்களும் யுத் தத்தில் கெட்டமதமுள்ளவர்களும் சூரர்களும் பரிகாயுதம்போன்ற கைகளையுடையவர்களுமான இன்னும் அநேகஅரசர்களும் ராஜ புத்ரர்களும் அந்தயுத்தத்தில் கொல்லப்பட்டதற்கு அதிர்ஷ்டத் தைத்தவிர வேறுயாதுகாரணம்? ஸூத! ஸஞ்சய! சூரர்களும் மஹாவில்லாளிகளும் அஸ்திரங்களில்தேர்ச்சியுள்ளவர்களும் யுத் தத்தில் மிக்ககொழுப்புள்ளவர்களும் மஹேந்திரனுக்கு நிகரான விக்ரமமுள்ளவர்களும் பற்பலதேசங்களிலிருந்து வந்தவர்களுமான பற்பலக்ஷத்திரியர்களும் அந்தயுத்தத்தில் கொல்லப்பட்டதற்கு அதிர்ஷ்டத்தைத்தவிர வேறுயாதுகாரணம்? மஹாபலசாலிகளான என்புத்திரர்களும் பௌத்திரர்களும் தோழர்களும் ஸகோதரர் களும் கொல்லப்பட்டார்கள். இதற்கு விதியைத்தவிர வேறு என்ன காரணம்? மனிதன் அதிர்ஷ்டத்துடன்கூடியவனாகப் பிறக்கிறான்; நிச்சயம். எந்தமனிதன் பாக்கியத்தையுடையவனோ அவன் மங்களத் தையடைகிறான். ஸஞ்சய! நான் இவ்வுலகில் அந்தப்பாக்கியங்களா லும் அந்தப்புத்திரர்களாலும் விடப்பட்டவனாகவும் பிராயமுதிர்ந்த வனாகவும் சத்துருக்கள்வசமடைந்தவனாகவும் இப்பொழுது எவ் வாறு இருப்பேன்? பிரபுவே! வனவாஸத்தைத்தவிர இந்தச்சம யத்தில் மற்றதைச் சிறந்ததாக நான் நினைக்கவில்லை. ஞாதிகள் அழிந்தசமயத்தில் பந்துக்களையிழந்த இப்படிப்பட்ட யான் கானகஞ் செல்வேன். ஸஞ்சய! இந்த நிலைமையை அடைந்தவனும் சிறகொடிந் தவனுமான எனக்கு அரண்யவாஸத்தைத்தவிர வேறுநன்மை இல்லையன்றோ? எந்தயுத்தத்தில் துரியோதனனும் சல்யனும் துச்சா ஸனனும் விவிம்சனும் மஹாபலசாலியான விகர்ணனும் கொல்லப் பட்டார்களோ, எவனொருவனாலே அந்தயுத்தத்தில் என்னுடைய நூறுபிள்ளைகளும் கொல்லப்பட்டார்களோ அந்தப்பீமஸேனனுடைய உத்தமமானசப்தத்தை நான் எவ்வாறுகேட்பேன்? துக்கத்தாலும் சோகத்தாலும் நன்குதவிக்கும்படி செய்யப்பட்டிருக்கிற நான், துரியோதனனைக்கொன்றதனால் அடிக்கடி வீரவாதம்செய்கின்ற அந்தப் பீமஸேனனது கடுஞ்சொற்களைக் கேட்கமாட்டேன்' என்று கூறினான்.

அரசரே! இப்படி சோகத்தால் நன்குவாட்டப்பட்டவனும் அரச னும் பந்துக்களையிழந்தவனும் அடிக்கடிமதிமயக்கங்கொள்பவனும்

புத்திரர்களைப்பற்றிய மனோவியாதிகளால் மூடப்பட்டவனும் அதிக துக்கத்தால் மிகத்தவிக்கச்செய்யப்பட்டவனும் பரதஸ்ரேஷ்டனும் அம்பிகாபுத்திரனுமான அந்தத்திருதராஷ்டிரன் நெடுநேரம்புலம்பி உஷ்ணமாகப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு, அவமானத்தைநினைத்து மீண்டும் கவல்கணகுமாரனான ஸஞ்சயனைப்பார்த்து உள்ளபடி வினவலானான்.

"ஸஞ்சய! பீஷ்மத்துரோணர்களும் ஸூதபுத்திரனும் மாண்டார்களென்பதைக்கேட்டு என்னைச்சேர்ந்தவர்கள் தலைவனான எவனைச் சேனாபதியாக்கினார்கள்? என்னைச்சேர்ந்தவர்கள் யுத்தத்தில் எந்தஎந்தமனிதனைச் சேனாதிபதியாக ஏற்படுத்துகிறார்களோ அவனவனைப் பாண்டவர்கள் சிறிதுகாலத்திற்குள்ளாகவே கொன்றுவிடுகிறார்கள். நீங்கள்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே யுத்தமுனையில் பீஷ்மர் கிரீடியால்கொல்லப்பட்டார். இவ்வாறாகவே, அனைவரும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே துரோணரும் கொல்லப்பட்டார். ராஜஸமூகங்களுடன்கூடின நீங்களனைவரும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே சிறந்த பிரதாபமுள்ளவனும் ஸூதபுத்ரனுமான கர்ணனும் இவ்வண்ணமே கிரீடியால் கொல்லப்பட்டான். மஹாத்மாவான விதுரன், 'துரியோதனனுடைய குற்றத்தினால் இந்தப் பிரஜைகள் நாசமடையப்போகின்றன' என்று கூறியதை முன்னமே நான் கேட்டேன். சிலர் நன்றாகப் பார்க்கிறார்களில்லை; நன்றாகப் பார்த்தும் மூடர்களாயிருக்கின்றனர். மூடனான எனக்கு யதார்த்தமான அந்தவார்த்தையானது அவ்விதமே பலித்துவிட்டது. தர்மாத்மாவும் தீர்க்கதர்சியுமான அந்தவிதுரன் எதைச்சொன்னானோ ஸத்யவாதியான அவனுடைய அந்தவார்த்தை அவ்விதமாகவே நேர்ந்துவிட்டது. ஓ! ஸஞ்சய! தெய்வத்தால் கெடுக்கப்பட்ட புத்தியுள்ள என்னால் எப்படிப்பட்ட அநீதி முன்பு அனுஷ்டிக்கப்பட்டதோ அதன் பயனை, மீண்டும் கூறுவாயாக. கர்ணன் தள்ளப்பட்டவுடன் படைகளுக்கு எவன் தலைவனானான்? எந்தரதிகன் அர்ஜுனனையும் வாஸுதேவனையும் எதிர்த்துச் சென்றான்? யுத்தத்தில் மத்திரராஜனுடைய வலப்பக்கத்திலுள்ள ஸேனாஸமூகத்தை எவர்கள் பாதுகாத்தார்கள்? யுத்த விருப்பமுள்ளவனும் வீரனுமான அந்த மத்திரராஜனுடைய பின்புறத்தில் நின்று இடப்பக்கத்திலுள்ள சேனைகளை எவர்கள் பாதுகாத்தார்கள்? நீங்கள் ஒன்றுசேர்ந்திருக்கும் சமயத்தில் மஹாரதனான மத்திரராஜனும் என் புத்திரனும் யுத்தத்தில் பாண்டவர்களால் எவ்வாறு கொல்லப்

பட்டார்கள்? உள்ளபடி பரதர்களுக்குநேர்ந்த மகாநாசத்தை முழுதும் உரைப்பாயாக. என் புதல்வனான துரியோதனன் யுத்தத்தில் எவ்வாறு கொல்லப்பட்டான்? காலாட்களுடன்கூடின பாஞ்சாலர்களனைவரும் திருஷ்டத்யும்னனும் சிகண்டியும் த்ரௌபதிகுமாரர்களனைவரும் எவ்வாறு கொல்லப்பட்டார்கள்? பாண்டவர்களும் அவ்வாறே வாஸுதேவனும் ஸாத்யகியும் கிருபரும் கிருதவர்மாவும் துரோணபுத்திரரும் யுத்தத்தில் எவ்வாறு விடுபட்டார்கள்? ஸஞ்சய! எந்தயுத்தம் எவ்வாறாகவும் எதற்கு ஸமானமாகவும் இப்பொழுது நடந்ததோ அது முழுமையும் நான் கேட்க விரும்புகிறேன். நீ ஸமர்த்தனாயிருக்கிறாய்" என்று வினவினான்.

---

## அதிகபாட அத்யாயம்.

### (கர்ணன் கொல்லப்பட்டவுடன் பாண்டவர்களிடத்திலுண்டான பயத்தினால் ஓடுகின்றசேனையைத் திருப்பித் துரியோதனன் மீண்டும் யுத்தத்திற்கு முயன்றது.)

ஸஞ்சயன், "அரசரே! ஒருவரையொருவர்தாக்கிக் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் மிக்கநாசம் நேர்ந்தவிதத்தைக் கருத்துடன் கேளும். மஹாத்மாவான பாண்டவனால் ஸூதபுத்திரன் கொல்லப்பட்டபிறகு, அடிக்கடி அழைக்கப்பட்ட சேனைகள் ஓடவே, மானிடதேகமெடுத்தவர்களுக்குப் பயங்கரமானதும் உத்தமபுருஷர்களை நாசமடையச்செய்கின்றதுமான யுத்தத்தில் பார்த்தன் * சிங்கநாதஞ்செய்தான். வேந்தரே! அப்பொழுது உமது குமாரர்களை மிக்கபயம் வந்தணுகியது. கர்ணன் கொல்லப்பட்டவுடனே, உம்மைச் சார்ந்த ஒரு யுத்தவீரனுக்காவது சேனைகளை ஒன்றுபடுத்தவோ அல்லது பராக்ரமத்தை வெளிப்படுத்தவோ எண்ணம்உண்டாகவில்லை. கரையில்லாத ஆழ்ந்தகடலில் கப்பலுடைபட்டவுடன் தெப்பமில்லாத வியாபாரிகள் எப்படி கரையை அடைய விருப்பங்கொள்வார்களோ அப்படியே கர்ணன் கிரீடியால் கொல்லப்பட்டவுடன்,போர்வீரர்கள் கரையைவிரும்பினர்.ராஜரே! ஸூதபுத்ரன் கொல்லப்பட்டவுடனே, மிக்கபயமடைந்தவர்களும் பாணங்களால் காயப்படுத்தப்பட்டவர்களும் நாதனற்றவர்களுமான கௌரவர்கள் நாயகனைவிரும்புகின்றவர்களாகச் சிங்கத்தால் துன்புறுத்தப்பட்ட மான்கள்போலத் துன்பத்தைஅடைந்தார்கள்.ஸவ்யஸாசியால் ஜயிக்கப்பட்ட நாங்கள் கொம்பொடிந்த காளைகள்போலவும் பல்லுடைந்த ஸர்ப்பங்கள்போலவும் சாயங்காலத்தில் திரும்பிவந்தோம். மன்னரே! ஸூதபுத்திரன் கொல்லப்படவே, சிறந்தவீரர்கள் கொல்லப்பட்டவர்களும் மிகஅடிபட்டவர்களும் கூர்மையுள்ள சரங்களால் அறுக்கப்பட்டவர்களு

---

* கூறியதுகூறலால் இரண்டுசொற்கள் விடப்பட்டன.

## மூன்றுவது அத்யாயம்.

## சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



(கிருபர் இருதிறத்தாரின் பலாபலங்களையும் துரியோதனனுக்குக் கூறி ஸமாதானம் செய்துகொள்ள ஏவியது.)

ஸஞ்சயன், "அரசரே! கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் ஒருவரையொருவர் எதிர்த்துப் பெரிதான நாசமானது ஏற்பட்ட விதத்தை ஊக்கத்துடன்கேளும். பாரதரே! மஹாத்மாவான பல்குனனால் ஸூதபுத்திரன் கொல்லப்பட்டும் அடிக்கடி அழைத்துவரப் பட்டிருக்கிற சைனிகர்கள் ஓடியும் துக்கத்தினல் அடிக்கப்பட்ட மனமுள்ள உமது குமாரன் யுத்தத்தில் நோக்கமற்றவனுகியும் சைனியங்கள் பார்த்தனுடைய வல்லமையைக்கண்டு மிக்க மனவருத்தமுற்றான உமதுபுத்திரர்கள் அவ்விடத்தினின்று ஓடினர்கள். கவசங்களழிக்கப் பட்டவர்களும் மனநிலையிழந்தவர்களும் நடுக்கமடைந்தவர்களுமான எல்லாவீரர்களும் ஒருவரையொருவர் எதிர்த்தடித்துக்கொண்டும் பயத்தால் திசைகளைப் பார்த்துக்கொண்டும் ஓடினர்கள். பாரதரே! 'பீபத்ஸுவானவன் நிச்சயமாக என்னையே நோக்கிவருகின்றான். விருகோதரன் என்னையே நோக்கிவருகின்றான்' என்று எண்ணிக்கொண்டு உமதுவீரர்கள் கீழேவிழுந்தார்கள்; வாட்டமுமடைந்தார்கள். சிலமஹாரதர்கள் குதிரைகளின்மீதும் மற்றவர்கள் யானைகளின் மீதும் மற்றவர்கள் தேர்களின்மீதும் ஏறிக்கொண்டு விரைவுடன்கூடினவர்களாகக் காலாட்களை இழந்தார்கள். ஓடுகின்றயானைகளால் தேர்கள் முறிக்கப் பட்டன. மஹாரதர்களால் குதிரைவீரர்களும், குதிரைக்கூட்டங்களால் காலாட்களுடையகூட்டங்களும் அதிகமாகநாசஞ்செய்யப்பட்டன. அப்பொழுது ஸூதபுத்திரன் கொல்லப்பட்டவுடன், உம்மைச்சேர்ந்தவர்கள் துஷ்டமிருகங்களாலும் திருடர்களாலும் சூழப்பட்டகாட்டில் கூட்டத்தினின்றுவிலகின வியாபாரிகள்போலஆனர்கள். யானைகள், வீரர்கள் கொல்லப்பெற்றவையாயின. அவ்விதமே மற்றச்சிலயானைகள் துதிக்கைகளறுக்கப்பட்டவைகளாயின. பயத்தால் பீடிக்கப்பட்டவர்களான கௌரவர்கள் உலகமனைத்தையும் அர்ஜுனமயமாகக் கண்டார்கள். பீமஸேனனிடமுண்டான பயத்தால் பீடிக்கப்பட்டவர்களும் ஓடுகின்றவர்களுமான அவர்களனைவர்களையுங்கண்டு, பிறகு, துரியோதனன் ஹாஹாகாரம்செய்து தன்ஸாரதியை நோக்கிப் பின்வருமாறு உரைக்கலானன்.

'விற்பிடித்துநின்று பின்பக்கத்திலிருந்து யுத்தம்செய்கின்ற என்னைப் பார்த்தன் மீறிச்செல்லமாட்டான். விரைவாகக் குதிரைகளை நடத்து. பெருங்கடலானது கரையைக் கடக்கமுடியாததுபோல அவ்வாறு போர்புரிகின்ற என்னைக் குந்திபுத்திரனை தனஞ்சயன் யுத்தத்தில் மீறிச்செல்லுவதற்குச் சக்தியுள்ளவனுகான். இப்பொழுது கோவிந்தனுடன்கூடிய அர்ஜுனனையும் கர்வமுள்ள

றும் யுத்தவீரர்கள் துன்பமுற்றுக் கவலையடைந்துமிருக்கும்போது, பீடிக்கப்படுகின்ற சேனைகளுடைய உரத்த சத்தத்தைக்கேட்டும், யுத்தத்தில் விகாரப்பட்டிருக்கின்ற அரசர்களுடைய அடையாளத்தையும் கீழேவிழுந்திருக்கின்ற அரசர்களையும் மஹாத்மாக்களுடைய த்வஜங்களையும் யுத்தத்தில் கொல்லப்பட்டிருக்கின்ற யானைகளையும் காலாட்களையும் மிக்க கோரமானதும் ருத்திரருடைய உத்யானத்திற்கொப்பானதுமான வசையை அடைந்திருக்கின்ற லக்ஷக்கணக்கான அரசர்களுடைய யுத்தத்தையும் பார்த்தும் தயையடைந்தவரும் பிராயமுதிர்ச்சியையும் சீலத்தையுமுடையவரும் பேசுவதில் திறமையுடையவரும் தேஜஸ்வியுமான அந்தக்கிருபாசார்யர் அரசனை துரியோதனனை நாடிவந்து தயையினால் அச்சமயத்தில் வசனிக்கலானார்.

---

விருகோதரனையும் மிகுதியுள்ள சத்துருக்களையும் கொன்று கர்ணன்விஷயத்தில் கடனாளியாகாதிருத்தலை அடையப்போகிறேன்' என்றான். சூரர்களுக்கும் உத்தமர்களுக்கும் தகுந்ததான குருராஜனுடைய அந்தவார்த்தையைக்கேட்டு ஸாரதியானவன் பொற்கவசம்பூண்ட குதிரைகளை மெதுவாக நடத்தினான். பெரியவரே ! யானைகளாலும் குதிரைகளாலும் தேர்களாலும் விடப்பட்டவர்களான இருபத்தையாயிரம் காலாட்கள் மெதுவாக ஓடினார்கள். மிகுந்தகோபங்கொண்ட பீமஸேனனும் பார்ஷதனான த்ருஷ்டத்யும்னனும் சதுரங்கசேனைகளோடு அவர்களைச்சூழ்ந்துகொண்டு அம்புகளால்அடித்தார்கள். அவர்களனைவர்களும் பார்ஷதனுடன்கூடின பீமஸேனனை எதிர்த்துப் போர்புரிந்தார்கள். அந்தயுத்தத்தில் மற்றவர்களும் பார்த்தன் பார்ஷதன் இவர்களுடைய பெயர்களைக் கூறினார்கள். யுத்தத்தில் எதிர்த்துநிற்கின்ற அந்தவீரர்களோடு போராடுவதில் பீமன் அதிககோபங்கொண்டான். அந்தப் பீமன் தேரினின்று விரைவாகக் கீழேஇறங்கிக் கதாயுதத்தைக் கையிற்கொண்டு போர்புரியலானான். தருமத்தில் நோக்கமுள்ள விருகோதரன் தேரின்மீதிருந்துகொண்டு பூமியிலிருக்கின்ற அவ்வீரர்களை எதிர்த்து யுத்தம் செய்யவில்லை. தனது புஜபலத்தையே துணையாகக்கொண்ட குந்தியின்புத்திரன், பொன்னால் மூடப்பட்டிருக்கின்ற பெரியகதையைக் கையிலெடுத்துக்கொண்டு காலதண்டத்தைக் கையிற்பிடித்த யமன்போல் உம்மைச்சேர்ந்த அனைவரையும் கொன்றான். கோபங்கொண்ட காலாட்கள் யுத்தத்தில் உயிரையும் உறவினர்களையும்இழந்தவர்களாக விட்டில்கள் நெருப்பைநோக்கி ஓடுவதுபோலப் பீமனைஎதிர்த்து ஓடினார்கள். கோபமுள்ளவர்களும் யுத்தத்தில் கொடிய மதங்கொண்டவர்களுமான அவ்வீரர்கள் பீமஸேனனை எதிர்த்துப் பிராணிவர்க்கங்கள் யமனைப்பார்த்து அலறுவதுபோல அவனைப்பார்த்து உடனே அலறினார்கள். பீமன் கத்தியோடும் அப்படியே கதாயுதத்தோடும் கழுகுபோல ஸஞ்சரித்தான் ; உம்மைச்சேர்ந்தவீரர்களில் இருபத்தையாயிரம்பேர்களைக் கொன்றான். உண்மையான பராக்கிரம

'குருவம்சத்திலுதித்தவனே! துரியோதனா! நான் உன்னைப் பார்த்துச் சொல்லும் வார்த்தையை அறிந்துகொள். மஹாராஜனே! தோஷமற்றவனே! கேட்டு, உனக்கும் ருசித்திருக்குமாகில், செய்வாயாக. அரசர்களுக்குத் தலைவனே! க்ஷத்ரியருள் சிறந்தவனே! க்ஷத்ரியர்கள் எதைநாடி யுத்தம் செய்கின்றார்களோ அப்படிப்பட்ட யுத்ததர்மத்தைவிடச் சிறந்தவழியில்லை. க்ஷத்திரியத்தன்மையினால் ஜீவிப்பவர்களான புத்திரனும் உடன்பிறந்தவனும் தந்தையும் தங்கை தமக்கைமக்களும் அவ்வாறே மாமனும் ஸம்பந்திகளும் பந்துக்களும் யுத்தம்செய்யத் தக்கவர்களே. (போரில்) மரிப்பது சிறந்த தர்மம். அவ்வாறே ஓடுவது அதர்மம். பிழைப்பைவிரும்புகின்ற அவர்கள் கோரமான பிழைப்பை அடைந்துவிட்டார்கள். ஆதலால், ஒரு நன்மையான வசனத்தை உனக்கு இப்பொழுது சிறிதுசொல்

---

முடையவனும் மஹாபலிஷ்டனுமான பீமன் அந்தக் காலாட்படையைக் கொன்றுவிட்டுத் திருஷ்டத்யும்னனை முன்னிட்டுக்கொண்டு மீண்டும் நின்றான். சிறந்தவீரியமுடையவனான தனஞ்சயன் தேர்ப்படையை எதிர்த்தான். மாத்ரீகுமாரர்களான நகுலஸஹதேவர்களும் மஹாபலசாலியான ஸாத்யகியும் உத்ஸாகமுடையவர்களாகத் துரியோதனனுடையபடையை நாசஞ்செய்துகொண்டு சகுனியை வேகத்துடன் எதிர்த்தார்கள். அச்சமயத்தில் அவர்கள் அவனுடைய அனேகம் குதிரைவீரர்களைக் கூரிய அம்புகளால்கொன்று வேகத்துடன் அவனை எதிர்த்துச்சென்றார்கள். பெரும்போர் நடந்தது. மன்னரே! பிறகு, தனஞ்சயன் மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்றிருக்கின்ற காண்டீவமென்கிற வில்லை அசைத்துக்கொண்டு தேர்ப்படையில் நுழைந்தான். கிருஷ்ணனை ஸாரதியாகக் கொண்டு வருகின்றதும் வெள்ளைக்குதிரைகளுடன்கூடியதுமான ரதத்தையும் யுத்தம்செய்கின்ற அர்ஜுனனையுங்கண்டு உம்மைச் சேர்ந்தவர்கள் பயத்தால் ஓடினார்கள். ரதங்களையும் குதிரைகளையும் இழந்தவர்களும் அம்புகளால் நான்கு பக்கமும் சூழப்பட்டவர்களுமான இருபத்தையாயிரம் காலாட்கள் பார்த்தனை எதிர்த்தார்கள். பாஞ்சாலர்களுள் மஹாரதிகனான திருஷ்டத்யும்னன் அந்தக் காலாட்படையைக்கொன்று பீமஸேனனை முன்னிட்டுக்கொண்டு விரைவாக எதிரில் காணப்பட்டான். பெரியவில்லைக் கையிற்பிடித்தவனும் பகைவர்கூட்டத்தை நொறுக்குகின்றவனும் பாஞ்சாலராஜனுடைய புதல்வனுமான திருஷ்டத்யும்னன் மஹாகீர்த்தியையுடையவனாகவும் சிறந்த கத்தியையுடையவனாகவும் விளங்கினான். புறாவின் நிறத்துக்குநிகரான நிறமுள்ள குதிரைகளையுடையவனும் கோவிதாரமரத்தைக் கொடியாகக்கொண்டவனுமான திருஷ்டத்யும்னனை யுத்தத்திற்கண்டு உம்மைச் சேர்ந்தவர்கள் பயத்தால்ஓடினார்கள். கீர்த்தியுடையவர்களான மாத்ரீகுமாரர்களிருவரும் ஸாத்யகியுடன்கூடி விரைவாக அஸ்திரங்களைப் பிரயோகிக்கின்றவனான காந்தாரராஜனைப் பின்தொடர்ந்துகொண்டு சீக்கிரத்தில் எதிரில் காணப்பட்டார்கள். ஐயா! சேகிதானனும்

லப்போகின்றேன். தோஷமற்றவனே! பீஷ்மரும் துரோணரும் மஹாரதனான கர்ணனும் ஜயத்ரதனும் உன்னுடையபிராதாக்களும் உன்குமாரனான லக்ஷ்மணனும் கொல்லப்பட்டபிறகு, மிகுந்திருக்கின்ற எதனை நாம் பிடிப்பாகக் கொள்வோம்? எவர்களிடத்தில் சுமையைவைத்து ராஜ்யத்தில் புத்தியைச்செலுத்தினோமோ அந்தச் சூரர்கள் சரீரங்களையிழந்து பிரம்மவித்துக்களுடையகதியை அடைந்தார்கள். நாமோ இப்பொழுது சிறந்தகுணமுள்ள மஹாரதர்களால் விடப்பட்டவர்களாக அனேகஅரசர்களை நாசமடையும்படிசெய்து தீனமாயிருக்கப்போகிறோம். ஸ்ரீகிருஷ்ணனைத் தேர்ப்பாகனாகக் கொண்டவனும் மிக்கதோள்வலியமைந்தவனும் தேவர்களாலும் அணுகமுடியாதவனும் ஜயிக்கப்படாதவனுமான பீபத்ஸுவானவன், உயிரோடிருக்கின்ற எல்லாக்கௌரவர்களாலும் தோல்வியடையும்

---

சிகண்டியும் திரௌபதிபுத்திரர்களும் உமது மிகுந்த பெரிய படையைக் கொன்று பிறகு சங்கங்களை முழக்கினார்கள். அவரனைவரும் புறங்காட்டியோடுகின்ற உம்மைச்சேர்ந்தவர்களைப்பார்த்து அடித்துக்கொண்டு, காளைகள் காளைகளை ஜயித்துத் துரத்துவதுபோல எதிர்த்தோடினார்கள். அரசரே! பாண்டுபுத்திரனான ஸவ்யஸாசி, நிற்கின்ற உமது புத்திரனுடைய அந்தமிச்சமுள்ள சேனையைக்கண்டு அதிக கோபங்கொண்டான். அரசரே! பிறகு, அவன் அந்தச் சேனையின்மீது அம்புகளை விரைவாக இறைத்தான். பிறகு, உயரக்கிளம்பியிருக்கும் புழுதியில் ஒன்றுமே புலப்படவில்லை. மஹாராஜரே! உலகம் இருளடைந்ததாகச் செய்யப்பட்டுப் பூமியும் அம்புமயமாகவே, உம்மைச்சேர்ந்த வீரர்கள் பயத்தினால் எல்லாத்திசைகளிலும் ஓடினார்கள். வேந்தரே! குருராஜனான துரியோதனன், எல்லாவீரர்களும் முறியஅடிக்கப்படவே, பிறர்களுடையதும் தன்னுடையதுமான இரண்டுசேனைகளுக்குமருகில் விரைவாகச் சென்றான். பரதர்களுள் சிறந்தவரே! பிறகு, அவன் முற்காலத்தில் பலி என்றவன் தேவர்களைப் போருக்காக அழைத்ததுபோல எல்லாப்பாண்டவர்களையும் போருக்கு அழைத்தான். அவர்கள் கோபங்கொண்டவர்களாகவும் பற்பல சஸ்திரங்களைப் பிரயோகிக்கின்றவர்களாகவும் அடிக்கடி அதட்டுகின்றவர்களாகவும் ஒன்றுசேர்ந்தவர்களாகவும், எதிர்த்துக் கர்ஜிக்கின்ற துரியோதனனை நோக்கி அருகில் விரைவாகச் சென்றார்கள். துரியோதனனும் கலங்காமலே அந்தச்சத்துருக்களை அம்புகளால் நாசஞ்செய்தான். பாண்டவரனைவரும் இந்தத் துரியோதனனை மிஞ்சுவதற்குச் சக்தியற்றவர்களானதாகிய உமது குமாரனது ஆச்சரியமான ஆண்மையை அவ்விடத்தில்கண்டோம். துரியோதனன், சமீபத்தில் யுத்தத்தைவிட்டுச் செல்லுகின்றதும் ஓடுவதில்நிச்சயங்கொண்டதும் அதிகமாகக் காயப்படுத்தப்பட்டதுமான தனது சைன்யத்தைக்கண்டான். ராஜேந்திரரே! பிறகு, புத்திசாலியான அவன் அந்தயுத்தவீரர்களை நிற்கும்படிசெய்து உத்ஸாஹம் அடையும்படி செய்துகொண்டு, 'வீரர்களே! எந்தவிடத்தில் நீங்கள்

படி செய்யப்படவில்லை. இந்திரனுடைய விற்போலவும் வஜ்ராயுதம் போலவும் விளங்குகின்றதும் இந்திரத்வஜம்போல உன்னதமாயிருப்பதுமான வானரத்துவஜத்தைப்பார்த்து நமதுபெரும்படை ஓடிவிட்டது. பீமனுடையஸிம்மநாதத்தாலும் பாஞ்சஜன்யத்தினுடைய ஒலியினாலும் காண்டீவத்வனியாலும் நம்முடையமனங்கள் மிக்க மயக்கமடைகின்றன. கண்ணொளியைக்கவருகின்றதும் பிரகாசிக்கின்றதுமான பெருமின்னற்போன்ற காண்டீவமானது நான்குபுறமும் சுழற்றப்பட்ட கொள்ளிபோலக் காணப்பட்டது. பொன்னாலிழைக்கப்பட்டதும் அசைக்கப்படுகின்றதுமான பெரிய (காண்டீவமென்ற)வில்லானது, மேகக்கூட்டங்களில் மின்னல்போல எல்லாத் திசைகளிலும் காணப்படுகிறது. அரசனே! காற்றினால் மேகம் சென்றால் உங்களைப் பாண்டவர்கள் கொல்லமாட்டார்களோ அப்படிப்பட்ட இடத்தைப் பூமிக்குள்ளாவது மலைகளிலாவது நான் காணவில்லை. நீங்கள் ஓடுவதால் யாதுபயன்? அவர்களுடையசேனையோ அல்பமாக இருக்கின்றது. கிருஷ்ணார்ஜுனர்கள் அதிகமாகக் காயப்படுத்தப்பட்டார்கள். நாமெல்லாரும் இங்கு நிற்போமாகில் நமக்கு நிச்சயமாக ஜயமுண்டாகும். புறங்காட்டியோடுகின்றவர்களும் பிளக்கப்பட்டவர்களும்பாவச்செய்கையைச் செய்தவர்களுமான உங்களைப் பின்தொடர்ந்து பாண்டவர்கள் கொல்லுவார்கள். யுத்தத்தில் நமக்கு வதம் (நேரிடுவது) க்ஷேமகரமன்றோ? க்ஷத்திரிய தர்மத்துடன் யுத்தஞ் செய்பவர்களுக்கு யுத்தத்தில் உண்டாகிற மரணமானது நன்மைபயப்பது.மரித்தவன் துக்கத்தை அறிவதில்லை; உயிரையிழந்தும் முடிவற்ற ஸுகத்தை அடைகிறான். இந்தயுத்தரங்கத்தில் வந்திருக்கிற க்ஷத்திரியர்கள்அனைவரும் கேளுங்கள். ஓடுகின்றவர்களே! பகைவனான பீமஸேனனுடைய வசத்தை அடைவீர்கள். பாட்டன்மார்களால் அனுஷ்டிக்கப்பட்டுவந்த தர்மத்தை நீங்கள் விடத்தக்கவர்களல்லீர். க்ஷத்திரியனுக்கு ஓடுவதைவிட மிக்சகொடியபாவமான செய்கை வேறில்லை. கௌரவர்களே! யுத்ததருமத்தைவிட ஸ்வர்க்கத்திற்குப்போதற்குச் சிறந்தவழி வேறில்லை. நெடுங்காலம் முயன்று அடையப்படும் உலகங்களை யுத்தத்தால் உடனே அடையலாம்' என்று கூறினான்.

அவ்வரசனுடைய அந்தவசனத்தை மஹாரதர்களான க்ஷத்திரியர்கள் புகழ்ந்து அபஜயத்தைப் பொறுக்காதவர்களாகவும் பராக்ரமத்தை வெளியிடுவதில் உறுதியுள்ளவர்களாகவும் பாண்டவர்களைக்குறித்து மீண்டும் எதிர்த்துச் சென்றார்கள். பிறகு, மறுபடியும் உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் சத்துருக்களுக்கும் அதிகபயங்கரமானதும் தேவாஸுர யுத்தத்திற்கொப்பானதுமான யுத்தம் தொடங்கிற்று. மஹாராஜரே! உமது குமாரனான துரியோதனன், யுதிஷ்டிரரைத் தலைவராகக்கொண்ட பாண்டவர்களைக் குறித்து எல்லாச்சேனைகளுடனும் சென்றான்.

---

நடத்தப்படுவதுபோலக் கிருஷ்ணனால் நடத்தப்படுகின்றவனும் அஸ்திரங்களில் ஸமர்த்தனுமான அர்ஜுனன் உன்னுடைய அந்தச்சேனையைப் பின்பனிக்காலத்தின் முடிவாகிய வேனிற்காலத்தில் பெருநெருப்பானது காட்டை எரிப்பதுபோல எரித்தான். சேனைகளில் பிரவேசிக்கின்றவனும் மஹேந்திரனுக்கு நிகரான ஒளியையுடையவனும் சேனையை அதிகமாகக் கலக்குகின்றவனும் அரசர்களைப் பயப்படுத்துகின்றவனுமான தனஞ்சயனைத் தாமரையோடையைக் கலக்குகின்ற யானையைப்போலக் கண்டோம். அவ்வாறே, வில்லின் ஒலியால் யுத்தவீரர்களைப் பயமுறுத்துகின்ற இப்பாண்டவனை, மான்களுடைய கூட்டங்களைப் பயமுறுத்துகின்ற சிங்கத்தைப்போல மறுபடியுங் கண்டோம். எல்லா உலகங்களுள்ளும் பெரியவில்லாளிகளும், விற்பிடித்த எல்லா வீரர்களுள்ளும் சிறந்தவர்களும் கவசமணிந்தவர்களுமான கிருஷ்ணார்ஜுனரிருவர்களும் ஜனங்களுடைய நடுவில் விசேஷமாகப் பிரகாசித்தார்கள். பாரத! போரில் நான்கு புறத்திலும் போர்புரிகின்றவர்களுக்கு இன்றுடன் பதினேழுநாள் அதிகோரமான யுத்தம் நடந்துவிட்டது. காற்றினால் அலைக்கப்பட்ட சரத்கால மேகமண்டலங்கள்போலச் செல்லுகின்ற அர்ஜுனனால் உன்னுடைய படைகள் நாற்புறங்களிலும் சிதறஅடிக்கப்படுகின்றன. மஹாராஜனே! பெரிய கடலில் உடைபட்டு அமிழ்கின்ற அந்தக்கப்பலைப்போல உன் சேனையை ஸவ்யஸாசி அதிகமாக நடுக்கமடையும்படி செய்துவிட்டான். உன்னுடைய ஸூதபுத்திரன் எங்கே சென்றான்? புத்திரனுடன்கூடின துரோணர் எங்கே? நானும் எங்கே? நீயும் எங்கே? அவ்வாறே, ஹ்ருதிகனுடைய குமாரனை கிருதவர்மாவும் எங்கே? ஸகோதரர்களுடன்கூடிய உனது பிராதாவான துச்சாஸனனும் எங்கே? அரசனே! ஜயத்ரதன் அர்ஜுனனுடைய பாணங்களுக்கு இலக்கான இடத்தை அடைந்திருப்பதைக்கண்டு உன்னுடைய ஸம்பந்திகள் பிராதாக்கள் துணைவர்கள் அவ்வாறே மாதுலர்கள் அனைவர்களும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே விக்ரமத்தை வெளியிட்டு உலகத்தைத் தலையில் மிதித்து அந்த ஜயத்ரதனைக் கொன்றான். மிகுதியான எதை நாம் பிடிப்பாகக்கொள்வோம்? இவ்வுலகில் பாண்டவனை ஜயிக்கக்கூடிய மனிதன் எவன்இருக்கிறான்? மஹாத்மாவான அந்த அர்ஜுனனுடைய திவ்யாஸ்திரங்கள் அறியப்பட்டிருக்கின்றன. காண்டீவத்தின் ஒலியானது நம்முடைய தைரியங்களைக் கவருகின்றதன்றோ? நாயகனை இழந்த இந்தச் சேனையானது, சந்திரனையிழந்த ராத்திரி

போலவும், யானையினால் முறிக்கப்பட்ட மரங்களையுடையதும் நீர் வற்றியிருக்கின்றதுமான நதி போலவும் எனக்குத் தோன்று கின்றது. தலைவனழிக்கப்பட்ட சேனையில், வெள்ளைக் குதிரை களையுடையவனும் மஹாராஜனுமான அர்ஜுனன் உலர்ந்த காடு களில் மூள்கின்ற நெருப்புப்போல இஷ்டப்படி ஸஞ்சரிக்கப்போ கின்றான். ஸாத்யகி பீமஸேனன் இவ்விருவர்களுடைய வேகமானது எல்லாமலைகளையும் பிளக்கும்; கடல்களையும் வற்றச்செய்யும். ஜனங் களுக்கு நாதனே! பீமஸேனன், சபையின்நடுவில் சொல்லிய வாக் கியங்களையெல்லாம் பயனுள்ளனவாகச் செய்தான்; மறுபடியுமே செய்யவும் போகின்றான். அப்பொழுது, கர்ணன் நேரிலிருக்கும் போது, பாண்டவர்களால் காக்கப்பட்டதும், (எவ்விதத்தாலும்) அணுகமுடியாததுமான சேனையானது, காண்டீவத்தை வில்லாகக் கொண்ட அர்ஜுனனால் அணிவகுத்துக் காக்கப்பட்டது. நல்லோர்க ளான பாண்டவர்கள்விஷயத்தில் அப்படிப்பட்ட எந்தக் கெட்டசெய் கைகள் காரணமின்றி உங்களால் செய்யப்பட்டனவோ, அவைக ளுடைய பயன் உங்களை வந்துஅடைந்துவிட்டது. பரதர்களுள் சிறந்தவனே! அப்பா! உன்னால் உன்பொருட்டு முயற்சியினால் எல்லா உலகமும் அப்படிப்பட்ட வீரர்கூட்டங்களும் உன்ஆன்மா வும் ஸம்சயத்தை அடைந்துவிட்டன. துரியோதனா! நீ உன் ஆத்மாவைப் பாதுகாத்துக்கொள். எல்லாவற்றிற்கும் ஆத்மாவே ஆதாரம். அப்பா! பாத்திரமுடைந்துபோனால் அதிலுள்ள வஸ்து வானது திசைகளிற் செல்லுகின்றது. குறைவுபட்டவன், தனக் குச் சமானனோடும் விருத்தி அடைகின்றவனோடும் ஸந்தியைச் செய்துகொள்ளவேண்டும். விருத்தியடைகின்றவன் குறைந்தவ னோடு சண்டை செய்யவேண்டும். இந்தநீதி பிருகஸ்பதியினுடை யது. அப்படிப்பட்ட நாம் பாண்டுபுத்திரர்களைக்காட்டிலும் பலத் தினாலும் சக்தியினாலும் கீழ்ப்பட்டிருக்கின்றோம். பிரபுவே! இப் பொழுது பாண்டுபுத்திரர்களோடு உனக்குச் சந்தியே தகுந்ததென்று எண்ணுகிறேன். எவன் நன்மையை அறியவில்லையோ க்ஷேமத்தை அவமதிக்கின்றானோ அவன் ராஜ்யத்தினின்று விரைவாக நழுவு கிறான்; நன்மையையும் அடைகிறதில்லை. அரசனே! அரசனைப் பணிந்து நாம் ராஜ்யத்தை அடைவோமாகில் நன்மை உண்டா கும். மூடத்தன்மையால் அவமானத்தை அடைவது நன்று அன்று. விசித்திரவீரியன்குமாரரான திருதராஷ்டிரரதுவார்த்தை யாலும், கோவிந்தரது வார்த்தையாலும் இயற்கையில் இரக்க

முள்ளவனுன யுதிஷ்டிரன் உன்னை ராஜ்யத்தில் ஸ்தாபிப்பான். எவரையும் தனக்குப் பகைவராக நினையாத யுதிஷ்டிரன் பெரியோர்களது பணிவிடையில் பற்றுதலுள்ளவன். தார்மிகனுன அவன் திருதராஷ்டிரரது வார்த்தையை அவமதிக்கமாட்டான். பிராதாக்களும் இந்தயுதிஷ்டிரனுடைய வார்த்தையை நடத்துவார்கள். இதில் ஐயமில்லை. வாஸுதேவர் எதைப்பற்றித் தோல்வியடையாத அரசனுன தருமநந்தனனைக்குறித்துக் கூறுவாரோ அதை அர்ஜுனனும் பீமஸேனனும் மற்ற எல்லோரும் ஸம்சயமில்லாமல் செய்வார்கள். தர்மபுத்ரனுடைய வார்த்தையை ஸ்ரீவாஸுதேவரும் மீறிநடக்கமாட்டார். தர்மபுத்ரனும், திருதராஷ்டிரர் வாஸுதேவர் இவர்களுடையவார்த்தையை மீறிநடக்கமாட்டானென்று நான் எண்ணுகிறேன். பார்த்தர்களோடு சண்டைசெய்யாமலிருக்கிறதாகிற இது உனக்கு நலமென நான் நினைக்கின்றேன். தீனத்தன்மையாலாவது உயிரைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டுமென்ருவது நான் உனக்குச் சொல்லவில்லை. ராஜனே! உன்னைக்குறித்து இதமானதைக் கூறுகிறேன். அதனை நீ பிராணனைவிடும் நிலைமையை அடையும்போது நினைப்பாய்' என்ருர். இவ்விதம், முதியவரும் சாரத்வதருமான கிருபாசாரியர் இந்தவசனத்தைப் புலம்பிச் சூடாகப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு துக்கித்தார்; மயக்கத்தையும் அடைந்தார்.

---

## நான்காவது அத்யாயம்.

### சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



(துரியோதனன் கிருபரைப்பார்த்துக் காரணங்களைக்கூறிப் பாண்டவர்களோடு சந்தியை மறுத்தது.)

அரசரே! பிறகு, தவமுடையவரான கிருபாசாரியரால் இவ்வாறு சொல்லக்கேட்ட அரசன், தீர்க்கமாயும் உஷ்ணமாயும் பெருமூச்சுவிட்டுக்கொண்டு பேசாமலிருந்தான். பெரியமனமுடையவனும் பகைவர்களைவாட்டுபவனுமான அந்த உமதுகுமாரன், பிறகு, ஒருமுகூர்த்தம் ஆலோசித்துச் சரத்துவானின் புத்திரரான கிருபாசாரியரைப்பார்த்துப் பின்வரும் வாக்கியத்தை உரைக்கலானுன்:

'உயிரையிழக்கத்துணிந்து போர்புரிகின்ற ஆப்தரான உம்மால் சொல்லத்தக்கவையனைத்தையும் நான் கேட்டேன். எல்லாக்காரியமும் உம்மால் செய்யப்பட்டன. படைகளில் நுழைகின்றவரும்,

மஹாரதர்களும் அதிககாந்தியுள்ளவர்களுமான பாண்டவர்களோடு போர்புரிகின்றவருமான உம்மை உலகம் பார்த்திருந்தது. அன்புடையவரான நீர் சொல்லியதைக் கேட்டேன். சாகப்போகிறவனுக்கு மருந்து எப்படி ருசிக்காதோ அப்படியே அவை அனைத்தும் எனக்குப் பிரியத்தை உண்டுபண்ணவில்லை. மிக்க புஜபலமுள்ளவரே! பிராம்மணோத்தமரே! ஹேதுக்களோடும் காரணங்களோடும் கூடினதும் நன்மையானதும் சிறந்ததும் உம்மால் சொல்லப்பட்டதுமான இவ்வார்த்தையானது எனக்கு ருசிக்கவில்லை. ராஜ்யத்தினின்று விலக்கப்பட்ட அந்தத் தருமநந்தனன் நம்மிடத்தில் எவ்வாறு விசுவாஸம் வைப்பான்? மேலும், பெருந்தனமுள்ளவனும் அரசனாயிருந்தவனுமான தருமநந்தனன் சூதாட்டத்தில் நம்மால் தோல்வியடைவிக்கப்பட்டான். அவன் எவ்வாறு என்வாக்கியங்களை மறுபடியுமே நம்புவான்? பார்த்தனுக்கு நன்மையைச்செய்வதில் ஆசையுள்ளவனும் அவ்வாறே தூதாகவந்தவனும் ஹ்ருஷீகேசனுமான கிருஷ்ணன் (என்னால்) வஞ்சிக்கப்பட்டான். அந்தக் காரியம் ஆலோசிக்கப்படவில்லை. ப்ராம்மணரே! அந்தக்கிருஷ்ணனும் என்வார்த்தையை எப்படி அபிமானிப்பான்? ஸபைநடுவில் அழைக்கப்பட்ட துரௌபதி புலம்பினதையும் அவ்வாறே நாம் நாட்டைக்கவர்ந்ததையும் கிருஷ்ணன் பொறுக்கமாட்டான். பிரபுவே! 'கிருஷ்ணார்ஜுனர்களிருவரும் ஒரே உயிரை உடையவர்கள்; ஒருவரையொருவர் பற்றி நிற்பவர்கள்' என்று முன்பு கேட்டவார்த்தையை இப்பொழுது காண்கின்றேன். கேசவன், ஸகோதரியின் புத்திரனான அபிமன்யு கொல்லப்பட்டதைக் கண்டு நித்திரையிலும் துயரப்படுகிறான். நாம் அவன்விஷயத்தில் தீங்கைச் செய்திருக்கின்றோம். அவன் எனக்கு நன்மையை எவ்வாறு செய்வான்? அர்ஜுனன் அபிமன்யுவின் நாசத்தால் வருத்தமுற்றிருக்கிறான். வேண்டப்பட்டாலும், அந்தஅர்ஜுனன் எனக்குநன்மையைச்செய்வதில் எவ்வாறு முயற்சியைச் செய்வான்? மஹாபலசாலியும் பாண்டவர்களுள் இடைப்பட்டவனுமான பீமஸேனன் கொடியவன். அவனால், கொடுமையாகச் சபதம் செய்யப்பட்டிருக்கிறது. அவன் யுத்தத்தில் தோல்வியடைந்தாலும் அடைவான்; வணங்கமாட்டான். வீரர்களும் இரட்டையர்களுமான அந்த நகுலஸஹதேவர்களிருவர்களும் கத்தியைக்கட்டியவர்களும் கவசத்தைப் பூண்டவர்களுமாயிருந்து வைரத்தைப் பாராட்டிக்கொண்டிருக்கின்றனர்; யமன்போன்றவர்களாயுமிருக்கின்றனர். ப்ராம்மணோத்தமரே! என்னோடு திருஷ்டத்யும்னனும் சிகண்டியும் வைரங்கொண்டிருக்

கின்றனர். அவ்விருவரும் எவ்வாறு எனக்கு நன்மையைச்செய்ய முயல்வார்? எல்லாஜனங்களும் பார்த்துக்கொண்டிருந்தபொழுதே, ஒற்றைத்துணியை உடுத்தவளும் வீட்டுக்குவிலக்கானவளுமான திரௌபதி துச்சாஸனனால் சபைநடுவே மிகுந்த துன்பத்திற்கு உள்படுத்தப்பட்டாள். அவ்வாறு அந்தப்பாஞ்சாலி துகிலையிழந்ததையும் எளிமையடைந்ததையும் பாண்டவர்கள் இன்னும் நினைக்கின்றார்கள். பகைவரை வாட்டுபவர்களான அப்பாண்டவர்கள் யுத்தத்தினின்று தடுக்கப்படுதற்கு அஸாத்தியமானவர்கள். எப்பொழுது திரௌபதி துன்பப்படுத்தப்பட்டாளோ அதுமுதல் அவள் துயரத்தால் என்விநாசத்தின்பொருட்டும் தன் கணவர்களின் காரியஸித்தியின்பொருட்டும் உக்ரமான தவம்புரிகிறாள். பகைமுடிக்கும்வரையில் எப்பொழுதுமே அவள் பூமியில் படுக்கிறாள். வாஸுதேவனுடையசகோதரியான ஸுபத்ரையும், மானத்தையும் கர்வத்தையும்விட்டு கிருஷ்ணைக்கு அடிமைபோலாகி எப்பொழுதும் பணிவிடைசெய்துவருகிறாள். இவ்வாறாக, எல்லாம் மேற்பட்டிருக்கின்றன; எவ்விதத்தாலும் தணியா. அபிமன்யுவின் நாசத்தினால் அவன் எவ்வாறு என்னோடு சந்திசெய்துகொள்ளத் தக்கவன்? அரசனாகவிருந்தநான் கடல்சூழ்ந்தபூமியை அனுபவித்து (இப்பொழுது) பாண்டவர்களுடைய அருளால ராஜ்யத்தை எவ்வாறு அனுபவிப்பேன்? அரசர்களுக்கு மேன்மேல் சூரியன்போலப் பிரகாசித்துக்கொண்டிருந்த நான் தாஸன்போல் யுதிஷ்டிரனுக்குப்பின் எவ்வாறு பின்தொடர்ந்து செல்வேன்? நான் தானாகப் போகங்களை அனுபவித்துக்கொண்டும் மிகுதியான தானங்களைக் கொடுத்துக்கொண்டுமிருந்து இப்பொழுது கிருபணர்களுடன் சேர்ந்து, எளிய ஜீவனத்தை எவ்வாறு அடைவேன்? ஸ்நேகத்துடன் இதமாக உம்மால் உரைக்கப்பட்ட உம்முடைய வாக்யத்தில் நான் அஸூயையைப் படவில்லை. பகைவர்களைத் தவிக்கச்செய்கின்றவரே! எவ்விதத்தினாலும் நான் சந்தியை இச்சமயத்திற்கு உசிதமென எண்ணவில்லை. கடும்போர் புரிவதால் பகைவர்களை வெல்வதே நல்ல நீதியென்று எண்ணுகிறேன். ஆண்மையற்றவன்போலிருப்பதற்கு இது ஸமயமன்று. கடும்போர்புரிவதற்கே நமக்குச் சமயம்நேர்ந்திருக்கின்றது. நான் அநேகம் யஜ்ஞங்களால் தேவர்களை நன்றாகப் பூஜித்திருக்கின்றேன்; ப்ராம்மணர்களுக்குத் தக்ஷிணைகளும் கொடுத்திருக்கிறேன்; காமபோகங்களும் அனுபவித்திருக்கிறேன்; வேதங்களைக் கேட்டிருக்கிறேன்; பகைவர்களுடைய முடியில் * வாஸ

* முடியின்மேல் காலை வைத்தேன், என்பதுகருத்து.

மும் செய்தேன்; ஐயன்மீர்! என்னுடைய வேலைக்காரர்களை நன்ருகப் போஷித்தேன்; தீனஜனங்களைக் கரையேற்றியும் விட்டேன். ப்ராம்மணோத்தமரே! நான் இப்பொழுது பாண்டவர்களை நோக்கி எவ்வித வார்த்தையைக் கூறுவதென்பதை அறியேன். சத்துரு ராஜ்யங்கள் என்னால் ஜயிக்கப்பட்டன. சொந்த ராஜ்யம் நன்ருக்க் காக்கப்பட்டது. பற்பல போகங்களும் அனுபவிக்கப்பட்டன. அறம்பொருளின்பங்களும் என்னால் அனுஷ்டிக்கப்பட்டன. பிதிருக்கள் க்ஷத்திரியதர்மம் இவ்விரண்டின் விஷயமான கடன்களைத் தீர்த்துக்கொண்டுவிட்டேன். இனி, இவ்வுலகத்தில் நிச்சயமாக ஸுகம் கிடையாது. ராஜ்யம் ஏது! கீர்த்தி ஏது! இவ்வுலகத்தில் கீர்த்தியொன்றே தேடத்தக்கது. அதுவும் யுத்தத்தால் தேடத்தக்கதேயொழிய வேறு விதத்தால் இல்லை. க்ஷத்திரியனுக்கு (யுத்தம் செய்யாமல்) வீணைமரணமென்பது இகழப்பட்டிருக்கிறது. வீட்டில் படுக்கையில் மரணமென்பது மிக்க பெரிதான அதர்மம். எந்த அரசன் அரண்யத்திலாவது யுத்தத்திலாவது சரீரத்தையிழப்பானே அவன் மஹாயஜ்ஞங்களைச் செய்வதினல் உண்டாகக்கூடிய பெருமையை அடைகிருன். எவன் வியாதியினுற் பீடிக்கப்பட்டும் ஜரையினுல் ஆக்ரமிக்கப்பட்டும் தீனமாகப் புலம்பிக்கொண்டு, புலம்புகின்ற ஞாதிகளுடைய மத்தியில் மரணமடைகிருனே அவன் ஆண்பிள்ளையாகான். பற்பலபோகங்களை இழந்து உத்தமகதியை அடைந்திருப்பவர்களுடன் ஸாலோக்யத்தை நல்லயுத்தத்தினுல் இப்பொழுது நான் அடைவேன். சூரர்களும் நல்ல ஒழுக்கமுடையவர்களும் யுத்தங்களில் திரும்பாதவர்களும் புத்திசாலிகளும் ஸத்யஸந்தர்களும் யாகங்களால் தேவர்களைப் பூஜிக்கின்றவர்களும் சஸ்திரங்களால் ஏற்படுத்தப்பட்ட அவப்ருதத்தினுல் பரிசுத்தர்களுமான எல்லாவீரர்களுக்கும் ஸ்வர்க்கத்தில் வாஸமானது நிச்சயம். யுத்தத்தில் (போர்புரிகின்ற வீரர்களை) அப்ஸரஸ்திரீகளுடைய கூட்டங்கள் நிச்சயமாக ஸந்தோஷத்துடன் பார்க்கின்றன. தேவஸபையில் பூஜிக்கப்பட்டவர்களும், அப்ஸரஸுகளால் நாற்புறத்திலும் சூழப்பட்டவர்களும், ஸ்வர்க்கத்தில் சந்தோஷிக்கின்றவர்களுமான மனிதர்களை நிச்சயமாகப் பித்ருக்கள் பார்க்கிருர்கள். தேவர்களாலும் புறங்காட்டாதவர்களான சூரர்களாலும் செல்லப்பட்டதும், வயதுசென்ற பிதாமஹராலும் புத்திசாலியான துரோணசார்யராலும் ஜயத்ரதனுலும் கர்ணனுலும் அவ்வாறே துச்சாஸனனுலும் செல்லப்பட்டிருப்பதுமான அந்தவழியில் நாமும் ஏறப்போகிருேம். என்னிமித்தமாக இந்தயுத்தத்தில் முயன்றவர்க

ளும் சூரர்களுமான அரசர்கள் பாணங்களால் விசேஷமாகக் காயப் படுத்தப்பட்டு ரக்தத்திஞல் மேனி நனேக்கப்பட்டும் கொல்லப்பட்டும் பூமியில் படுத்திருக்கிருர்கள். உத்தமமான அஸ்திரங்களே அறிந்தவர்க ளும் சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டபடி யாகங்களால் தேவதைகளே ஆராதித்தவர்களுமான சூரர்கள் யுத்தமுறைப்படி உயிரையிழந்து ஸ்வர்க்கத்தில் வீற்றிருக்கின்ருர்கள். அவர்களால் ஸ்வயமாக ஏற் படுத்தப்பட்டிருக்கிற வழியானது மீண்டும் (நடக்கப்படாமல் போமாகில்) பிரவேசிக்க முடியாததாகிவிடும். விழுகின்றவர்களும் மஹாவேகமுள்ளவர்களுமான சூரர்களோடு இவ்விடத்தினின்று நல்லகதியை அடையப்போகிறேன். எந்தச் சூரர்கள் எனக்காகக் கொல்லப்பட்டார்களோ அவர்களால் செய்யப்பட்ட செய்கையை நினேக்கின்றவனும் அந்தக்கடனேத் திருப்பிக்கொடுப்பவனுமான நான் ராஜ்யத்தில் மனத்தைச்செலுத்தவில்லே. தோழர்களேயும் பிராதாக்க ளேயும் பிதாமஹர்களேயும் விழும்படிசெய்துவிட்டு நான் உயிரைக் காப்பாற்றிக்கொள்வேளுகில் உலகம் நிச்சயமாக என்னே இகழும். உற வினர்களாலும் விசேஷித்துத் தோழர்களாலும் விடப்பட்டிருக்கின்ற எனக்குப் பாண்டவனேப்பணிந்து அடையப்படும் ராஜ்யமானது எவ் விதமாகஇருக்கும்? அப்படிப்பட்டநான், இந்தஉலகத்திற்கு இவ்வித மான அவமானத்தை ஏற்படுத்தி நல்லயுத்தத்திஞல் கொல்லப்பட்டு ஸ்வர்க்கத்தை அடையப்போகிறேன். இது வேருவிதம் ஆகாது' என்று சொன்ஞன்.

துரியோதனன் இவ்வாறு கூறவே, எல்லாக்ஷத்திரியர்களும் அவனுடையவார்த்தையைப் புகழ்ந்து அரசனை அவனே நோக்கி, 'நல்லது, நல்லது' என்றுசொன்ஞர்கள். எல்லோரும் தோல்வியைப் பற்றி விசனப்படாதவர்களும் பராக்ரமத்தில் மனத்தைச் செலுத்தி னவர்களும் போர்புரிவதில்உறுதியுள்ளவர்களும் மனத்தில்ஊக்கமுள் ளவர்களுமாஞர்கள். பிறகு, யுத்தத்திஞல் ஸந்தோஷிக்கின்றஎல்லாக் கௌரவர்களும் குதிரைகளேத் தேற்றிச் சிறிது குறைய இரண்டு யோஜனே தூரத்திற் சென்று எதிர்த்து நின்ருர்கள். அவர்கள், திறந்த வெளியும் மரங்களில்லாததும் பரிசுத்தமானதும் மங்களகரமுமான இமயமலேயினுடைய தாழ்வரையில் சிவந்தநிறமுள்ள ஸரஸ்வதி நதியையடைந்து அதன்ஜலத்தில் குளிக்கவும் அதனேப் பருகவும் செய்தார்கள். பிறகு, அவர்கள் உம்முடையபுத்திரஞல் உண்டுபண் ணப்பட்ட உற்சாகத்துடன் நாற்புறங்களிலும் இருந்தார்கள். அரசரே! எல்லா அரசர்களும், காலஞல் தூண்டப்பட்டவர்களாக அப்பொழுது ஒருவர் ஒருவருடைய மனத்தைத் தேற்றிக்கொண்டு மீண்டும் திரும் பிஞர்கள்.

---

## ஐந்தாவது அத்யாயம்.

## சல்யவதபர்வம் (தொடர்ச்சி.)



(துரியோதனன் அஸ்வத்தாமாவைச் சேனாபதியாக வேண்டினதும், அவர் சல்யனைச் சேனாபதியாக்கச் சொல்லியதும் துரியோதனன் சல்யனைச் சேனாபதியாக வேண்டினதும்.)

பிறகு, யுத்தத்தினால் களிப்பவர்களான சிறந்தயுத்தவீரர்களெல்லாரும் இமயமலையின் தாழ்வரையில் நின்றுகொண்டு ஆங்காங்கு ஒன்றுகூடினார்கள். சல்யன், சித்திரஸேனன், மஹாரதனான சகுனி, அஸ்வத்தாமா, கிருபர், ஸாத்வதனான கிருதவர்மா, ஸுஷேணன், அரிஷ்டஸேனன், வீர்யவானான திருதஸேனன், ஜயத்ஸேனன் இந்த அரசர்களெல்லாரும் அங்கு இரவில் வாஸம்பண்ணினார்கள். யுத்தத்தில் வீரனானகர்ணன் கொல்லப்பட்டவுடன், ஜயத்தால் விளங்கும் பாண்டவர்களால் பயப்படுத்தப்பட்ட உமதுகுமாரர்கள் இமயமலையைத்தவிர வேறிடத்தில் ஸுகம்பெறவில்லை. ராஜரே! அவர்கள் அவ்விடத்தில் ஒன்றுகூடி யுத்தத்தில் முயற்சியுள்ளவர்களாகச் சல்யனுடைய முன்னிலையில் ராஜாவான துரியோதனனை அப்பொழுது விதிப்படி பூஜித்து, 'எவனால் நாம் யுத்தத்தில் பாதுகாக்கப்பட்டுப் பகைவரைஜயிப்போமோ அப்படிப்பட்டசேனாபதியை ஏற்படுத்திக்கொண்டு நீ பகைவரோடு போர்புரியக்கடவாய்' என்று கூறினார்கள். பிறகு, உமதுகுமாரனான துரியோதனன், தேரில்வீற்றிருந்துகொண்டு, ரதிகசிரேஷ்டருள் சிறந்தவரும், எல்லாயுத்தங்களுடைய தன்மைகளையும் அறிந்தவரும், யுத்தத்தில் யமனுக்கொப்பானவரும், அழகிய அங்கங்களையுடையவரும், தலையை மூடிக்கொண்டிருப்பவரும், சங்கம்போன்ற கழுத்தையுடையவரும், பிரியமாக வசனிக்கின்றவரும், மலர்ந்த தாமரையிதழ்போன்ற கண்களையுடையவரும், புலிபோன்ற முகத்தையுடையவரும், மேருவைப்போலக் கௌரவம் பெற்றவரும், தோள்களாலும் கண்களாலும் நடையாலும் குரலாலும் ருத்திரரது விருஷபத்திற்கொப்பானவரும், பருத்தும் இசைந்தும் நீண்டுமிருக்கின்றகைகளையுடையவரும், அதிகவிசாலமானசிறந்தமார்பையுடையவரும், பலத்தில் அருணனுடைய இளையஸஹோதரனான கருடனுக்கொப்பானவரும், வேகத்தில் காற்றிற்கு நிகரானவரும், காந்தியால் சூரியனுக்கு நேரானவரும், புத்தியால் சுக்கிராசாரியருக்குச் சமான

ரும், காந்தி உருவம் முகஸௌந்தரியம் இம்மூன்றிலும் சந்திரனை யொத்தவரும், பொற்கட்டிக் குவியல்போன்றவரும், இசைந்திருக் கின்ற பொருத்துக்களையுடையவரும், நன்கு உருண்ட தொடைகளை யும் இடையையும் முழந்தாள்களையுமுடையவரும், அழகிய கால்களை யுடையவரும், சுந்தரமான விரல்களையும் நகங்களையுமுடையவரும், பிரம்மதேவரால் குணங்களை நினைத்து நினைத்து முயற்சியினுற்படைக் கப்பட்டிருப்பவரும், எல்லாலக்ஷணங்களும் பொருந்தியவரும், ஸமர்த்தரும், வேதங்களுக்குக் கடல் போன்றவரும், பலத்தினல் சத்துருக்களை ஜயிக்கின்றவரும், பகைவரால் பலங்கொண்டு ஜயிக்க முடியாதவரும், பிரயோகத்திலும் பலத்திலும் ஸம்ஹாரஞ்செய் வதிலும் ப்ராயச்சித்தத்திலும் மனத்தை மிகச்செலுத்தினவரும், சிறந்த மங்களமான வடிவமுள்ளவரும்,மந்திரங்களுடையபிரயோகம் வினியோகம் நினைவுகளை (இயற்கைக்) குணங்களாக உடையவரும், *பத்துஅங்கங்களுள்ளதும் நான்குபாதங்களுள்ளதுமான பாணு ஸ்திரமந்திரத்தை உள்ளபடி அறிந்தவரும், அங்கங்களுடன்கூடின வையும் இதிஹாஸத்தை ஐந்தாவதாகக்கொண்டவையுமான நான்கு வேதங்களையும் நன்குணர்ந்தவரும், அயோனிஜரான துரோணசாரி யரால் உக்கிரமான விரதங்களால் முயற்சிசெய்து ஈசுவரரைப்பூஜித்து அயோனிஜையான கிருபியினிடம் உண்டுபண்ணப்பட்டவரும், மிக்க தவமுடையவரும், ஒப்பற்ற செய்கையையுடையவரும், பூலோகத் தில் உருவத்தால் சமானமில்லாதவரும், எல்லாவித்தைகளிலும் கரைகண்டவரும், குணங்களுக்குக் கடலாயிருப்பவரும், இகழப்படா தவருமான அந்த அஸ்வத்தாமாவை அடைந்து, 'ஓ! ஆசாரியபுத் திரரே! இப்பொழுது எங்களனைவருக்கும் நீர் பரமகதியாயிருக்கின் றீர். ஆதலால், உம்முடைய கட்டளையால் எவன் எனக்குச் சேனாதி பதியாகலாம்? எவனை முன்னிட்டுக்கொண்டு ஒன்றுகூடி யுத்தத் தில் பாண்டவர்களை ஜயிப்போம்' என்று கேட்டனன்.

அஸ்வத்தாமா, 'குலத்தாலும் உருவத்தாலும் தேஜஸினுலும் கீர்த்தியாலும் ஐசுவரியத்தாலும் நிறைந்தவனும் எல்லாக்குணங்களும் நிறைந்தவனுமான இந்தச்சல்யன் நமக்குச் சேனாபதியாக இருக்கட் டும். நன்றியறிவுள்ள இந்தச்சல்யன் தன்மருமக்களை விட்டு விட்டு நம்மைவந்தடைந்தான். இவன் பெரியசேனையையுடைய வன்; நீண்டகைகளையுடையவன்; வேறொரு ஸ்கந்தருக்கொப்பா னவன். ராஜஸ்ரேஷ்டனே! ஜயிக்கப்படாத ஸுப்ரம்மண்யரைச்

* ஆதிபர்வம் 878-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

சேனுபதியாக ஏற்படுத்திக்கொண்டு தேவர்களால் எவ்வாறு ஜயமடையப்பட்டதோ அவ்வாறு இந்த அரசனைச் சேனுபதியாக ஏற்படுத்திக்கொண்டு நம்மால் ஜயமடையப்படும்' என்று கூறினார். துரோணபுத்திரர் அவ்வாறு சொல்லியவுடனே, எல்லா அரசர்களும் சல்யனை நான்குபக்கத்திலும் சூழ்ந்து நின்றுகொண்டு ஜயசப்தங்களைக் கூறினார்கள்; யுத்தத்தின்பொருட்டும் புத்தியைச்செலுத்தினார்கள்; அதிக ஆவேசத்தையும் அடைந்தார்கள். பிறகு, துரியோதனன், பூமியில் நின்றுகொண்டு, இரதத்திலிருப்பவனும் யுத்தத்தில் துரோணருக்கும் பீஷ்மருக்கும் சமானனுமான சல்யனை நோக்கிக் கைகுவித்துக்கொண்டு, 'மித்ரர்களிடம் அன்புள்ளவனே! கற்றறிந்த ஜனங்கள் எந்த ஸமயத்தில் மித்திரன் அமித்திரனென்று பரீக்ஷை செய்கிறார்களோ, அப்படிப்பட்டகாலம் இதோ மித்திரர்களுக்கு வந்துவிட்டது. அப்படிப்பட்டவனும் சூரனுமான நீ நமது படைமுகத்தில் சேனுபதியாகவேண்டும். நீ யுத்தத்தை நாடியவுடனே, பாண்டவர்கள் மந்திரிகளுடன் அறிவு குறைந்தவர்களாவார்கள். பாஞ்சாலர்களும் முயற்சியற்றவர்களாவார்கள்' என்று கூறினான். அப்பொழுது வாக்கியங்களை அறிந்தவனும் மத்ரநாதனுமான சல்யன், துரியோதனனுடைய வார்த்தையைக்கேட்டு அரசர்களின் முன்னிலையில் அரசனைப்பார்த்துப் பின்வரும் வாக்கியத்தை உரைக்கலானான். 'வேந்தனே! குருராஜனே! நீ என்னை எந்தக்காரியத்தில் (ஏற்படுத்த) எண்ணுகின்றாயோ, அதனைச் செய்கிறேன். என்னுயிரும் ராஜ்யமும் செல்வமுமாகிய அனைத்தும் உன் பிரியத்தின் பொருட்டே இருக்கின்றன' என்று கூறினான்.

துரியோதனன், 'மாமா! நிகரில்லாத உன்னை நான் சேனுபதி நிலையில் வரிக்கிறேன். யுத்தஞ்செய்பவருள்சிறந்தவனே! யுத்தத்தில் ஸுப்ரம்மண்யர் தேவர்களைக் காத்ததுபோல அப்படிப்பட்ட நீ எங்களைக் காப்பாயாக.ராஜேந்திர! தேவர்களுள் ஸுப்ரம்மண்யரைப் போல் (நம்முள்) நீ ஸேனாதிபதி ஸ்தானத்தில் அபிஷேகம் செய்துகொள். வீரனே! மஹேந்திரன் அஸுரர்களைக் கொன்றதுபோல நீ யுத்தத்தில் பகைவர்களைக் கொல்' என்று கூறினான்.

---

## ஆறுவது அத்யாயம்.

## சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



(துரியோதனன் சல்யனைச் சேனதிபதி ஸ்தானத்தில் அபிஷேகம் செய்ததும், கேசவர் யுதிஷ்டிரரைச் சல்யனுடைய வதத்தைச்செய்யச் சொல்லியதும்.)

அரசரே! பிரதாபசாலியான மத்ரராஜன் துரியோதனராஜனுடைய இந்தவார்த்தையைக்கேட்டு அவனைப்பார்த்து அப்பொழுது இந்த வசனத்தைக் கூறலானன். 'துரியோதன! மிக்க தோள் வலியமைந்தவனே! வாக்கியங்களையறிந்தவர்களுள் உத்தமனே! கேள். இதோ தேரில் வீற்றிருப்பவரான எந்தக் கிருஷ்ணர்ஜுனரிருவர்களையும் ரதிகர்களுள் சிறந்தவர்களாக எண்ணுகிருயோ அந்த இருவர்களும் புஜபலத்தில் எவ்விதத்தாலும் எனக்கு ஒப்பானவர்களல்லர். தேவர்களோடும் அஸுரர்களோடும் மனிதர்களோடும் சேர்ந்து முயல்கின்றபூமண்டலமுழுமையையும்மிக்ககோபங்கொண்ட நான் யுத்தமுனையில் எதிர்த்துப் போர்புரிவேன். பாண்டவர்களை எதிர்த்துப் போர்புரிவேனென்னும் விஷயத்தில் ஐயமென்ன? நான் யுத்தத்தில் பார்த்தர்களையும் வந்திருக்கின்ற ஸோமகர்களையும் ஜயிப்பேன். யான் உனக்குச் சேனபதியாவேன். ஸம்சயமில்லை. எந்த வியூகத்தைச் சத்துருக்கள் ஏற்படுத்த மாட்டார்களோ அந்த வ்யூகத்தை நான் எற்படுத்தப்போகிறேன். துரியோதன! இதனை உண்மையாகச் சொல்லுகிறேன். ஸம்சயமில்லை. ராஜனே! நான் இன்றைத்தினத்திலேயே யுத்தத்தில் எல்லாப் பாஞ்சாலர்களையும் பாண்டவர்களுடன் சேர்த்துச் சங்கரிக்கப்போகின்றேன்; இல்லாவிடில் கொல்லப்பட்டு ஸ்வர்க்கத்தையாவது அடைவேன். பயமற்றவனக ஸஞ்சரிக்கின்ற என்னை இன்று உலகங்கள் பார்க்கட்டும். இப்பொழுது எல்லாப் பாண்டவர்களும் ஸாத்யகியும் வாஸுதேவனும் பாஞ்சாலர்களும் சைத்யர்களும் திரௌபதிகுமாரரனைவரும் திருஷ்டத்யும்னனும் சிகண்டியும் எல்லாப் பிரபத்ரகர்களும் என்னுடைய விக்கிரமத்தையும் வில்லின் மஹாபலத்தையும் இலாகவத்தையும் அஸ்திர வீரியத்தையும் யுத்தத்தில் இருகைகளின் வன்மையையும் பார்க்கட்டும். என்னிருகைகளின் வலிமையையும் எனக்கு அஸ்திரங்களில் எவ்விதமான நிறைவிருக்கின்றதென்பதையும் இன்று பார்த்தர்களும் சாரணர்களுடன்கூடிய ஸித்தர்களும் பார்க்கட்டும். பாண்

டவர்களுடைய ரதிகர்கள் இன்று என்விக்கிரமத்தைக்கண்டு பிரதி செய்வதில் நோக்கமுற்றவர்களாகப் பற்பல காரியங்களைச் செய்வார்கள். இன்று பாண்டவர்களுடைய சைன்யங்களை நான்கு பக்கத்திலும் துரத்தப்போகின்றேன். பிரபுவே! கௌரவனே! உனக்குப் பிரியத்தைச் செய்யவேண்டி நான் யுத்தத்தில் துரோணரையும் பீஷ்மரையும் கர்ணனையும்விட மேலாகப் பராக்கிரமத்துடன்கூடி யுத்தமுனையில் ஸஞ்சரிக்கப்போகின்றேன்' என்று கூறினன். பரதருட்சிறந்தவரே! ராஜரே! மனம் வருந்தியவனும் இவ்வாறு கூறியதைக்கேட்டவனுமான துரியோதனராஜன், பிறகு, சாஸ்திரத்தினால் கண்டறியப்பட்ட விதிப்படி மத்திரநாதனைச் சேனையின் நடுவில் விரைவாக (ஸேனுபதியாக) அபிஷேகஞ்செய்தான். பாரதரே! பிறகு, அந்தச்சல்யன் அபிஷேகஞ்செய்யப்பட்டவுடன், பெரிதான ஸிம்மநாதம் உண்டாயிற்று. உமது படையில், நான்குவித வாத்தியங்களும் முழக்கப்பட்டன. அவ்வாறே, யுத்தவீரர்களும் மஹாரதர்களான மத்திரகர்களும் ஸந்தோஷமுள்ளவர்களானார்கள். யுத்தத்தில் பிரகாசிக்கின்ற அரசனான சல்யனைப்பார்த்து, 'ராஜனே! (பகைவர்களை) ஜயிப்பாயாக. நெடுங்காலம் வாழ்ந்திருப்பாயாக. வந்திருக்கின்ற பகைவர்களைத் தொலைப்பாயாக. உன்னுடைய தோள்வலிமையைத் துணையாகக்கொண்டு மஹாபலசாலியான துரியோதனன் அகண்டபூமண்டலமனைத்தையும் பகைவர்களழிக்கப்பெற்றதாகப் பரிபாலனஞ் செய்யட்டும். தேவர்களோடும் அஸுரர்களோடும் மனிதர்களோடுங்கூடின (உலகங்களை) நீ யுத்தத்தில் ஜயிக்கச் சக்தியுள்ளவனன்றோ? அவ்வாறிருக்க, மரணத்தை ஸ்வபாவமாகக் கொண்ட ஸ்ருஞ்சயர்களையும் ஸோமகர்களையும் இந்த யுத்தத்தில் நீ ஜயிப்பாயென்பதில் ஸம்சயமென்ன விருக்கின்றது?' என்று துதித்தார்கள். இவ்வாறு, நன்குபுகழப்படுகின்றவனும் பலசாலியும் வீரனுமான மத்திரநாதன், மனோதிடமில்லாதவர்களால் அடையமுடியாததான ஸந்தோஷத்தை அப்பொழுது அடைந்தான். பகைவர் கர்வத்தை அழிப்பவரே! பாரதரே! அவ்வாறு சல்லியன் அபிஷேகஞ் செய்யப்பட்டவுடன், அந்தஇடத்தில் உமது சேனையிலுள்ள சைனிகர்கள் கர்ணனுடைய (நாசத்தாலுண்டான) விசனத்தைச் சிறிதும் எண்ணவில்லை. அச்சமயத்தில் போர்வீரர்கள் சந்தோஷமடைந்தவர்களும் நல்ல மனநிலைமையடைந்தவர்களுமானார்கள்; பார்த்தர்களை மத்திரராஜனுக்கு வசப்பட்டவர்களென்றும் கொல்லப்பட்டவர்களென்றும் எண்ணினார்கள். பரதர்களுள் உத்தமரே! உம்முடைய

அந்தச்சேனையானது மிகுந்த ஸந்தோஷத்தையடைந்து அன்றிரவு ஸுகமாக உறங்கி ஸந்தோஷமுள்ள மனத்தையுடையதாயிற்று.

யுதிஷ்டிரராஜர் உமதுபடையில்அந்தச்சப்தத்தைக்கேட்டு எல்லா க்ஷத்திரியர்களும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே, விருஷ்ணி குலத்திலுதித்தவரான ஸ்ரீவாஸுதேவரைப் பார்த்து, 'மாதவரே! சிறந்த வில்லாளியும் எல்லாச்சைனிகருள்ளும் பூஜிக்கப்பட்டவனும் மத்திரராஜனுமான சல்யன் துர்யோதனனால் ஸேனாபதியாக ஏற் படுத்தப்பட்டான். மாதவரே! இதனையறிந்து எது தகுந்ததோ அதனை நீர் முன்பு நடந்தவண்ணம் செய்யவேண்டும். நீர் நாயகராக வும் ரக்ஷகராகவுமிருக்கிறீர்.அடுத்துச் செய்யவேண்டியவிஷயத்தைச் செய்வீராக' என்கிற வாக்கியத்தை உரைத்தார். மஹாராஜரே! வாஸுதேவர் அரசரான அந்த யுதிஷ்டிரரைப்பார்த்து, 'பார தரே! நான் கிருதவர்மாவை உள்ளபடி அறிந்திருக்கிறேன். அவன் சிறந்த வீரியமுள்ளவன்; அதிக தேஜஸையுடையவன்; விசேஷித்து அதிகமான பலமுள்ளவன்; ஸமர்த்தன்; விசித்திர மாகப் போர்புரிபவன்; லாகவத்தையுடையவன். யுத்தத்தில் பீஷ்மர் எவ்விதமோ, துரோணர் எவ்விதமோ, கர்ணன் எவ்விதமோ, அவ் விதமானவனென்றே அவர்களைவிட அதிகமானவனென்றே மத் திரராஜனை நான் எண்ணுகிறேன். பாரதரே! ஜனநாதரே! யான் ஆலோசிக்குமிடத்துப் போர்புரிகின்ற அந்த மத்ரராஜனுக்குத் தகுந்த யுத்தவீரனை நான் அறியவில்லை. பாரதரே! அந்த மத்ர நாதன் யுத்தத்தில் பலத்தினால் சிகண்டியையும் அர்ஜுனனையும் பீமனையும் ஸாத்யகியையும் திருஷ்டத்யும்னனையும் மீறினவன். சிங்கம்போலவும் யானைபோலவும் விக்கிரமமுடையவனும் மஹா ராஜனுமான மத்ரராஜன் கோபங்கொண்ட காலனானவன் பிரஜை களிடம் பிரளயகாலத்தில் ஸஞ்சரிப்பதுபோலப் பயமற்றவனாக ஸஞ் சரிப்பான். புருஷஶ்ரேஷ்டரே! புலிக்குச்சமமான வல்லமையுள்ள உம்மைத்தவிர யுத்தத்தில் அவனை எதிர்த்துப் போர்புரிகின்றவனை நான் இப்பொழுது காணவில்லை. குருநந்தனரே! யுத்தத்தில் கோ பங்கொண்டிருக்கின்ற மத்திரராஜனைக் கொல்லக்கூடிய மனிதர் இவ் வுலகில் நீர் ஒருவரே. உம்மைத் தவிர வேறொருவன் இல்லை. ஆத லால், நாடோறும் போர்புரிகின்றவனும் உமது சைனியத்தைக் கலக்குகின்றவனுமான சல்யனை இந்திரன் சம்பரனைக் கொன்றது போல யுத்தத்தில் கொல்வீராக. ஸூதபுத்திரனான கர்ணனுக்குப் பிறகு, இந்தவீரன் துரியோதனனால் நன்குமதிக்கப்பட்டிருக்கின்

ரூன். மத்திரநாதன் யுத்தத்தில் கொல்லப்பட்டால் ஜயம் உமக்கே நிச்சயம். அவன் கொல்லப்பட்டால், துரியோதனனுடைய பெரிய சேனை முழுவதும் கால்லப்பட்டதே. மஹாராஜரே! குந்திநந்தனரே! தக்கதான எனது இந்த வார்த்தையைக்கேட்டு மஹாரதனான மத்ரராஜனை யுத்தத்தில் எதிர்த்துச் செல்லுவீராக. மிக்க புஜபலமுள்ளவரே! இந்திரன் நமுசியைக் கொன்றதுபோல இந்தச் சல்யனைக் கொல்வீராக. 'இவன் எனக்கு அம்மான்' என்று இவன் விஷயத்தில் நீர் தயைபாராட்டாதீர். க்ஷத்திரிய தருமத்தை முன்னிட்டுக் கொண்டு மத்திரதேசத்து ஜனங்களுக்குத் தலைவனான சல்யனை வதஞ்செய்யக்கடவீர். துரோண பீஷ்மர்களாகிய ஸமுத்திரத்தையும் கர்ணனாகிய ஆழ்ந்த மடுவையும் கடந்து சல்யனாகிய மாட்டுக் குளப்படியை அடைந்து பரிவாரங்களுடன் நீர் முழுகிவிடாதீர். உமக்குள்ள தபோபலத்தையும் உமக்குள்ள க்ஷத்திரியபலத்தையும் முழுதும் யுத்தத்தில் காண்பிப்பீராக. இந்த மஹாரதனை வதஞ்செய்யும்' என்று கூறினார். பகைவீரர்களைக் கொல்பவரான ஸ்ரீ கேசவர் இவ்வளவு வார்த்தையைச் சொல்லிவிட்டுப் பிறகு பாண்டவர்களால் பூஜிக்கப்பட்டுச்சாயங்காலத்தில்பாசறைக்குச்சென்றார். அப்பொழுது, கேசவர் சென்றவுடன், தருமநந்தனரான யுதிஷ்டிரர் எல்லாச்சகோதரர்களையும்பாஞ்சாலர்களையும் ஸோமகர்களையும் அனுப்பிவிட்டு அன்றிரவுமுழுவதும் துன்பமில்லாத யானைபோலநித்திரைசெய்தார். மஹாவில்லாளிகளான அந்த எல்லாப்பாஞ்சாலர்களும் அவ்வாறே பாண்டவர்களும் கர்ணனுடைய மரணத்தால் மகிழ்ந்தவர்களாக அப்பொழுது அன்றிரவு உறங்கினார்கள். பெரியவரே! பாண்டவருடைய சேனையானது, ஸூதபுத்திரனது மரணத்தால் ஜயத்தையடைந்து மனக்கவலையற்றதும் பெரியவில்லையுடையதும் கரையைக்கடந்ததும் பெரிய ரதங்களுடன்கூடியதும் இரவில் மனக்கிளர்ச்சியுடையதுமாயிற்று.

---

## ஏழாவது அத்யாயம்.

### சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



(இருதிறத்துச் சைனிகர்களும் அணிவகுத்தலை முன்னிட்டு இருவர் இருவராகப் போருக்குப் புறப்பட்டது.)

இரவு கழிந்தவுடன், அப்பொழுது ராஜனான துரியோதனன் உம்மைச் சேர்ந்த எல்லோரையும் பார்த்து, 'மஹாரதர்களே! யுத்தஸன்னாஹத்தைச் செய்யுங்கள்' என்று கூறினான். அரசனுடைய

எண்ணத்தையறிந்து அச்சேனையானது ஸன்னாஹமுள்ளதாயிற்று. சிலர் விரைவாகத் தேர்களைப்பூட்டினர். அவ்வாறே, சிலர் எல்லாப்பக்கத்திலும் ஓடினார்கள். யானைகள் ஸித்தஞ்செய்யப்பட்டன. காலாட்களும் ஸன்னத்தம் செய்விக்கப்பட்டனர். மற்றவர்கள் ஆயிரம் ஆயிரமாகக் குதிரைகளை மேல்விரிப்புடன்கூடியவைகளாகச் செய்தார்கள். ராஜரே! நான்குவிதவாத்தியங்களின் ஓசையும் தோன்றியது. ஒருவரையொருவர் எதிர்த்துக்கர்ஜிக்கின்றவர்களும் சைனிகர்களுள் பிரதானர்களுமான யுத்தவீரர்களுடைய ஒலியும் தோன்றியது. பாரதரே! பிறகு, மாண்டதுபோக மிச்சமுள்ள எல்லாச்சேனைகளும் மரணம்வரையில் திரும்புகிறதில்லையென்று எண்ணி ஸன்னாகமுள்ளவைகளாகக் காணப்பட்டன. மஹாரதர்கள், மத்திரராஜனான சல்யனைச் சேனாபதியாக ஏற்படுத்திக்கொண்டு எல்லாச் சேனையையும் அணிவகுத்துச் சைனியங்களில் ஆயத்தமாக நின்றார்கள். பிறகு, எல்லாச்சைனிகர்களும், கிருபரும்,கிருதவர்மாவும்,அஸ்வத்தாமாவும், சல்யனும்,சகுனியும்,இன்னும்மிகுந்திருந்த மற்றஅரசர்களும் உமது புத்திரனோடு சேர்ந்து அன்புடன் பிரதிஜ்ஞை செய்தனர். 'இப்பொழுது ஆசாரியகுமாரரான அஸ்வத்தாமா தனிமையாயிருந்து பகைவர்களுடன் போர்புரியக்கூடாது. எவ்விதத்தாலும் பாண்டவர்களோடு நமக்குள் ஒருவனால் யுத்தம்செய்யத்தக்கதன்று. எவன் ஒருவனைப் பாண்டவரோடு போர்புரிவனோ, எவன் யுத்தஞ்செய்பவனை விட்டுவிடுவனோ, அவன் பஞ்சமகாபாதகங்களையும் உபபாதகங்களையும் செய்தவனாவான். நமதுயுத்தவீரர்கள் ஒருவரையொருவர் பாதுகாத்துக்கொண்டும் சேர்ந்தும் யுத்தஞ்செய்யவேண்டும்' என்றார்கள். இவ்வாறு அந்த எல்லாமஹாரதர்களும் அங்கு பிரதிஜ்ஞையைச்செய்து கொண்டு மத்திரநாதனைமுன்னிட்டு விரைவாகப் பகைவர்களைஎதிர்த்துச் சென்றார்கள். ராஜரே! அவ்வாறே, பாண்டவர்களும், மஹாயுத்தத்தில் சேனையை அணிவகுத்துக்கொண்டு யுத்தகளத்தில் நான்குபுறத்திலும் கௌரவர்களைக்குறித்து யுத்தம்செய்யப்போகிறவர்களாக எதிர்த்துச்சென்றார்கள். பிறகு, பலத்தினால் விருத்தியடைந்த ரதங்களுடனும் யானைகளுடனுங்கூடின சேனையானது, பொங்குகின்ற கடலுக்கொப்பான சத்தத்துடன்கூடியதும் கரைபுரண்டு வரும் கடல்போன்ற வடிவமுள்ளதுமாயிற்று." என்றான்.

திருதராஷ்டிரன், "துரோணர், பீஷ்மர், ராதாபுத்திரனான கர்ணன் இவர்களின் மரணத்தை நான் கேட்டேன். இதற்குமேல் மறுபடியும் சல்யன் என்புத்திரன் இவர்களின் மரணத்தை எனக்குக்

கூறுவாயாக. ஸஞ்சய ! தருமராஜனால் சல்யன் எவ்வாறு யுத்தத்தில் கொல்லப்பட்டான் ? மிக்க புஜபலமமைந்த என்புத்திரனான துரியோதனனும், பீமனால் எவ்விதம் கொல்லப்பட்டான்?'' என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

''வேந்தரே ! மனிதர்களுக்கும் அவ்வாறே யானைகளுக்கும் குதிரைகளுக்கும் க்ஷயத்தை உண்டுபண்ணினதான யுத்தத்தைச் சொல்லுகிறேன். என்னிடமிருந்து மனவுறுதியுடன் கேளும். அரசரே ! பெரியவரே ! துரோணரும் பீஷ்மரும் கர்ணனும் கொல்லப்பட்ட பிறகு, சல்யன் எல்லாப்பார்த்தர்களையும் யுத்தத்தில் கொல்லப்போகிறானென்ற ஆசை உமது புத்திரர்களுக்கு அப்பொழுது அதிகமாயிருந்தது. உம்முடைய குமாரன் அந்த ஆசையை மனத்தில் வைத்துக்கொண்டு மனத்தேறுதலுற்று மஹாரதனான மத்ரராஜனை யுத்தத்தில் ரக்ஷகனாகஅடைந்து அப்பொழுது தன்னை நாதனுள்ளவனாக எண்ணிக்கொண்டான். அரசரே ! கர்ணன் கொல்லப்பட்டவுடன், பார்த்தர்கள் ஸிம்மநாதம் செய்தபொழுதே, கௌரவர்களைப் பெரிதானபயம் வந்தணுகிற்று. மஹாராஜரே ! பிரதாபசாலியும் மஹாரதனுமான மத்ரராஜன்அப்பொழுது அவர்களைத்தேற்றி,நிறைவுள்ளதும் ஸர்வதோபத்திரமென்று பெயருடையதுமான வியூகத்தை ஏற்படுத்திக்கொண்டு, விசித்திரமானதும் (பகைவர்களின்) பெருக்கத்தை நாசஞ்செய்கின்றதும் அதிவேகமுள்ளதுமான வில்லை உதறிக்கொண்டும் ஸிந்துதேசத்திலுண்டான குதிரைகள்பூட்டிய சிறந்ததேரில் ஏறிக்கொண்டும் பார்த்தர்களைக்குறித்து யுத்தத்தில் எதிர்த்துச்சென்றான். மஹாராஜரே!அவனுடைய தேர்ப்பாகன் தேரிலிருந்துகொண்டு தேரை விளங்கச்செய்தான். மஹாராஜரே ! பகைவர்களைநாசஞ்செய்கின்றவனும் வீரனும் சூரனுமானஅந்தச்சல்யன் அவ்விதமான தேருடன் உமதுபுத்திரர்களுடையபயத்தைப் போக்குபவனாக நின்றான். கவசமணிந்த மத்திரராஜன் வீரர்களான மத்திரர்களோடும் ஜயிக்கமுடியாதகர்ணபுத்திரர்களோடும்கூட யுத்தப்பிரயாணகாலத்தில் வ்யூகத்திற்கு முகமானான். திரிகர்த்தவீரர்களால் சூழப்பட்ட கிருதவர்மா இடப்புறத்தில் நின்றான். சகர்களோடும் யவனர்களோடும்கூடிய கிருபாசாரியர் வலப்பக்கத்தில் நின்றார். அஸ்வத்தாமா காம்போஜர்களால் நான்குபுறமும் சூழப்பட்டவராகப் பின்புறம் நின்றார். சிறந்த கௌரவவீரர்களால் ரக்ஷிக்கப்பட்ட துரியோதனன் நடுவிலிருந்தான். மஹாரதனும் சூதாடியுமான சகுனியும், பெரிய குதிரைப்படையால் சூழப்பட்டவனாக எல்லாச்சைனியத்துடனும் சென்றான். மஹா

ராஜரே! பகைவர்களை அழிப்பவர்களும் மஹாவில்லாளிகளுமான பாண்டவர்களும் மூன்றாகப்பிரிந்தவர்களாகிச் சைனியத்தை அணி வகுத்துக்கொண்டு உமதுசேனையினருகில் வந்தார்கள். திருஷ்டத்யும்னனும் சிகண்டியும் மஹாரதனான ஸாத்யகியும் சல்யனுடைய சேனையைக் கொல்வதற்காக யுத்தத்தில் எதிர்த்துச் சென்றனர். பிறகு, பரதஸ்ரேஷ்டரும் அரசருமான யுதிஷ்டிரர் தமது படையினால் சூழப்பட்டுச் சல்யனையே கொல்லவெண்ணங்கொண்டு அவனை எதிர்த்துச்சென்றார். பகைவர்கூட்டங்களையழிப்பவனான அர்ஜுனன், சிறந்தவில்லாளியான கிருதவர்மாவையும் ஸம்சப்தகர்களின் கூட்டங்களையும் வேகத்துடன் எதிர்த்துச்சென்றான். ராஜேந்திரரே! பீமஸேனனும் மஹாரதர்களான ஸோமகர்களும் யுத்தத்தில் பகைவர்களைக்கொல்லஎண்ணிக் கிருபரைஎதிர்த்தார்கள். மாத்ரீகுமாரர்களான அந்த நகுலஸஹதேவர்கள் சேனைகளுடன்சேர்ந்து சேனைகளுடன் கூடின சகுனியையும் மஹாரதனான உலூகனையும் யுத்தத்தில் கிட்டினார்கள். அவ்வாறே, மிகுந்தகோபங்கொண்டவர்களும் பற்பல ஆயுதங்களைக் கையிற்கொண்டவர்களும் பதினாயிரக் கணக்காயிருப்பவர்களுமான உமதுயுத்தவீரர்கள், யுத்தத்தில் பாண்டவர்களை எதிர்த்தார்கள்" என்றுகூறினான்.

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! சிறந்தவில்லாளிகளான பீஷ்மரும் துரோணரும் கர்ணனும் ஜயத்ரதனும் கொல்லப்பட்டு, யுத்தத்தில் கௌரவர்களும் பாண்டவர்களும் சிலர்களேமிகுந்து, பார்த்தர்கள் கோபமுள்ளவர்களாகப் பராக்கிரமத்தைக் காண்பிக்கவே, நம்மவர்களிலும் பிறர்களிலும் எவ்வளவு சேனை மிகுந்திருந்தது" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான். "அரசரே! எவ்வாறு நாங்களும்பிறர்களும் யுத்தத்திற்காக நெருங்கினோமென்பதையும், யுத்தத்தில் சேனையானது எவ்வளவு மிகுந்திருந்ததென்பதையும் என்னிடமிருந்து அறிந்து கொள்ளும். பரதர்களுள் சிறந்தவரே! பதினோராயிரம்தேர்களும் பதினோராயிரத்தெழுநூறு யானைகளும் இருந்தன. பாரதரே! அந்த யுத்தத்தில் இரண்டுலக்ஷம்குதிரைகள் நிறைந்திருந்தன. மூன்று கோடிகாலாட்களும் இருந்தார்கள். உமதுசைனியம் இவ்வளவிருந்தது. பாரதரே! பாண்டவர்களுடைய சேனையில் ஆறாயிரம் தேர்களும் ஆறாயிரம்யானைகளும் பதினாயிரம்குதிரைகளும் இரண்டு கோடிகாலாட்படையும் யுத்தத்தில்மிகுந்திருந்தன. பரதர்களுள்சிறந்தவரே! ராஜேந்திரரே! இவர்களே இவ்விதமாக அணிவகுத்துக் கொண்டு மத்திரராஜனுடைய கட்டளையில் கட்டுப்பட்டவர்களாக

யுத்தத்திற்கு வந்துகூடினார்கள். நாங்கள் ஜயத்தில் ஆசையுள்ளவர்களாக அதிககோபத்துடன் பாண்டவர்களை எதிர்த்துச் சென்றோம். அவ்வாறே, சூரர்களும் யுத்தத்தில் ஜயத்தோடு விளங்குகிறவர்களுமான பாண்டவர்களும் புருஷஸ்ரேஷ்டர்களும் புகழுள்ளவர்களுமான பாஞ்சாலர்களும் நமதுபடையை எதிர்த்துவந்தனர். பிரபுவே! சேனையின்கூட்டத்தினால் ஒருவருக்கொருவர் வதத்தை விரும்புகிறவர்களும் புருஷஸ்ரேஷ்டர்களுமான இவ்வீரர்கள் விடியற்காலத்தில் இவ்விதமாக அணுகினர். பிறகு, ஒருவரையொருவர் நாசஞ் செய்கின்றவர்களான உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் பிறர்களுக்கும் கோரரூபமுள்ளதும் பயங்கரமுமான யுத்தம் நடந்தது.

---

## எட்டாவது அத்யாயம்.

### சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



(பதினெட்டாநாள் யுத்தத்தொடக்கமும், ஸங்குலயுத்தமும்.)

**கௌ**ரவர்களுக்கு ஸ்ருஞ்சயர்களுடன் கோரமும் பயத்தை விருத்திபண்ணுகின்றதுமானயுத்தம் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் நடந்ததுபோல நடந்தது. வீரர்களும் தேர்களும் யானைக் கூட்டங்களும் ஆயிரமாயிரமாகக் குதிரைவீரர்களும் குதிரைகளும் பகைவரால் எதிர்க்கப்பட்டு ஒன்றையொன்றுகிட்டி எதிர்த்தன. பயங்கரமான வடிவங்களையுடையவைகளும் ஓடுகின்றவைகளுமானயானைகளுடைய பெரியசப்தமானது மாரிக்காலத்தில் ஆகாயத்திலுள்ள மேகங்களுடையசப்தம்போலக் கேட்கப்பட்டது. யானைகளால் எதிர்த்து அடிக்கப்பட்ட சிலதேராளிகள் தேருடனே விழுந்தார்கள். (சிலர்) மதத்தால் கொழுப்பேறிய யானைகளால் துரத்தப்பட்டு யுத்தத்தில் பயந்து ஓடினார்கள். பாரதரே! அந்த யுத்தத்தில் பழக்கப்பட்ட ரதிகர்கள், குதிரைக்கூட்டங்களையும் காலாட்களையும் அம்புகளால் பரலோகத்திற்கு அனுப்பிவிட்டார்கள். வேந்தரே! (யுத்தத்தில் பழக்கமுள்ள) குதிரைவீரர்கள் யுத்தத்தில்சஞ்சரிக்கின்றவர்களாக மஹாரதர்களை எல்லாப்பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டு ப்ராஸங்களாலும் சக்திகளாலும்ரிஷ்டிகளாலும்எதிர்த்தடித்தார்கள். வில்லைப்பிடித்தசிலவீரர்கள் மஹாரதர்களைச்சூழ்ந்துகொண்டு ஒருவனைப் பலராகஎதிர்த்து யமலோகத்திற்கு அனுப்பினார்கள். சிலமஹாரதர்கள் சிறந்தவர்களுடன் கூடி யானைகளையும் சிறந்தரதிகர்களையும் சூழ்ந்துகொண்டு யுத்தத்தில்

ஓடுகின்றமஹாரதனை மிகப் புடைத்தார்கள். மஹாராஜரே! யானைகள், அவ்வாறே கோபங்கொண்டவனும் பலபாணங்களை இறைக்கின்றவனுமான ஒருரதிகனை நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டு அடித்தன. பாரதரே! அந்தயுத்தத்தில் பல யானைகள் சக்திகளாலும் தோமரங்களாலும் நாராசங்களாலும் ஒரு யானையை எதிர்த்தடித்தன. யுத்தத்தில் ஒரு ரதிகனும் மற்றொருரதிகனை அடித்தான். ரதங்களும் யானைகளும் குதிரைகளும் காலாட்படைகளைத் துகைத்துக்கொண்டும் அதிகக்குழப்பத்தைச் செய்துகொண்டும் யுத்தமத்தியில் காணப்பட்டன. சாமரங்களோடு விளங்குகின்றவைகளும் இமயமலையின் தாழ்வரையில் அன்னப்பறவைகள் போன்றவைகளுமான குதிரைகளும் பூமியைப் பக்ஷிக்கின்றவைபோல நாற்புறங்களிலும் விரைவாக ஓடின. அரசரே! அக்குதிரைகளுடைய குளப்படிகளால் விசித்திரமான பூமியானது, நகங்களால் பலவிதமாகக் காயப்படுத்தப்பட்ட ஒரு பெண் போல் விளங்கிற்று.

பாரதரே! குதிரைகளின் குளம்பின் சத்தத்தாலும் தேருருளைகளின் நேமியொலியாலும் காலாட்களுடைய முழக்கத்தினாலும் யானைகளுடைய கர்ஜனத்தாலும் நான்குவித வாத்தியங்களுடைய கோஷத்தாலும் சங்கங்களுடைய ஒலியினாலும் பூமியானது இடிமுழக்கங்களால்போல் ஒலியுள்ளதாயிற்று. சப்திக்கின்றவிற்கள், போடப்படுகிற சஸ்திரஸமூகங்கள், கவசங்கள் இவற்றின் ஒளிகளால் ஒன்றுமே அறியப்படவில்லை. சிறந்தயானையின் துதிக்கைபோன்றவைகளும் அறுக்கப்பட்டவைகளுமான அனேகம் கைகள் மேலே துள்ளின; பலவிதமாகப் புரண்டன; உக்கிரமான வேகத்தைக் காட்டின. மஹாராஜரே! பூமியில் விழுகின்ற தலைகளுடைய ஓசையானது, பனைமரங்களினின்று விழும் பழங்களின் ஓசைபோலக் கேட்கப்பட்டது. பாரதரே! குருதியால் நனைந்து கீழே விழுந்திருக்கின்ற தலைகளால் பூமியானது, (சரத்) காலத்தில் பொன்போன்ற தாமரைப்பூக்களால் விளங்குவதுபோல் விளங்கியது. வேந்தரே! கண்கள்புரண்டவைகளும், நன்கு காயப்படுத்தப்பட்டவைகளும், உயிரை இழந்தவைகளுமான அம்முகங்களால் பூமியானது தாமரைமலர்களால் சூழப்பட்டதுபோல விளங்கியது. ராஜேந்திரரே! சந்தனங்களால் பூசப்பட்டவைகளும், தோள்வளைகளை அணிந்தவைகளும், பெருவிலையுள்ள அணிகலன்கள்பூண்டவைகளும், தள்ளப்பட்ட பெரியஇந்திரத்துவஜம் போன்றவைகளுமான கைகளால் (ரணபூமியானது) பிரகாசித்தது. பெரியயுத்தத்தில் விசே

ஷமாக அறுக்கப்பட்டவைகளும் யானைகளின் துதிக்கைகளுக்கொப்பானவைகளுமான அரசர்களுடைய தொடைகளாலும் அந்த யுத்த பூமியானது நன்கு மூடப்பட்டதாயிற்று. அனேகம் தலையில்லா முண்டங்களால் நன்கு வியாபிக்கப்பட்டதும், குடைகளாலும் சாமரங்களாலும் நெருங்கியதுமான அந்தச்சேனாஸமூகமானது, புஷ்பங்களால் நாற்புறத்திலும் நிறைக்கப்பட்டிருக்கின்ற காடுபோலப் பிரகாசித்தது. மஹாராஜரே! அந்தயுத்தத்தில் பயமற்றவர்கள்போல ஸஞ்சரிப்பவர்களும் இரத்தத்தால் நனைக்கப்பட்ட அங்கங்களுள்ளவர்களுமான யுத்தவீரர்கள் பூத்திருக்கும் பலாசமரங்கள்போலக் காணப்பட்டார்கள். யுத்தத்தில் அம்புகளாலும் தோமரங்களாலும் பீடிக்கப்பட்டு ஆங்காங்கு கீழேவிழுந்திருக்கின்ற யானைகளும், துண்டாக்கப்பட்டிருக்கிற மேகங்களுக்கொப்பாகக் காணப்பட்டன. மஹாராஜரே! அதிகபலசாலிகளால் கொல்லப்படும் யானைப்படையானது காற்றினால்தள்ளப்படும் மேகங்கள்போல எல்லாத்திசைகளிலும் சிதறஅடிக்கப்பட்டது. மேகங்களுக்கொப்பான அந்தயானைகள் நாற்பக்கத்திலும் பூமியில் விழுந்தன. அவைகள், யுகாந்தகாலத்தில் வஜ்ராயுதத்தால் அடித்துத்தள்ளப்பட்ட மலைகள்போல விளங்கின. பூமியில் வீரர்களுடன் விழுந்திருக்கின்ற குதிரைகளின் குவியல்கள் ஆங்காங்கு மலையளவாகக் காணப்பட்டன. ரத்தமாகிய ஜலமுள்ளதும், ரதங்களாகிய சுழல்களுடன்கூடியதும், துவஜங்களாகிய மரங்களும் எலும்புகளாகிய சுக்கான்கற்களுமுள்ளதும், கைகளாகிய முதலைகளுள்ளதும், விற்களாகிய வெள்ளப்பெருக்கையுடையதும், யானைகளாகிய மலைகளுள்ளதும், குதிரைகளாகிய கற்களுள்ளதும், மாம்ஸங்களும் மஜ்ஜைகளுமாகிய சேறுள்ளதும், குடைகளாகிய அன்னங்களுள்ளதும், கதைகளாகிய தெப்பங்களுள்ளதும், கவசங்களும் தலைப்பாகைகளுமாகிய மறைவுள்ளதும், கொடிமரங்களாகிய அழகியமரங்களையுடையதும், சக்கராயுதங்களாகிய சக்கரவாகப் புட்களுடைய வரிசையால் அடையப்பட்டதும், திரிவேணுக்களாகிய ஸர்ப்பங்களால் சூழப்பட்டதும், பரலோகத்தைக்குறித்துப் பெருகியோடுகின்றதுமான ஒருநதி யுத்தபூமியில் தோன்றியது.

கௌரவர்களுக்கும் ஸ்ருஞ்சயர்களுக்கும் நேர்ந்தசண்டையில், சூரர்களுக்குச் சந்தோஷத்தை உண்டுபண்ணுகிறதும், பயப்படுகிறவர்களுக்குப்பயத்தைப்பெருக்குகின்றதுமான பயங்கரமான நதியானது பெருகவாரம்பித்தது. பரலோகத்தைக்குறித்துச் செல்லுகின்றதும் அதிபயங்கரமாயிருப்பதுமான அந்தநதியைப் பரிகம்போன்ற கைகளை

யுடைய அந்தச்சூரர்கள் வாகனங்களாகிற ஓடங்களால் தாண்டினார்கள். ஓ! அரசரே! பகைவரைவாட்டுபவரே! சதுரங்கசேனைகளுக்கும் அழிவையுண்டுபண்ணுகின்றதும் கோரமானதும் தேவாஸுரயுத்தம் போன்றதுமான யுத்தமானது அப்பொழுது * வரம்புகடந்து நடக்கையில், ஆங்காங்கு சிலர் பந்துக்களை அழைத்தார்கள். பயத்தால் பீடிக்கப்பட்டிருக்கிறசிலர் அலறுகின்றபந்துக்களோடு திரும்பவில்லை. வரம்புகடந்ததும் பயங்கரமாயிருக்கின்றதுமான யுத்தமானது நடந்துவரும்பொழுது அர்ஜுனனும் பீமஸேனனும் பகைவர்களை மயங்கச்செய்தார்கள். மன்னரே! கொல்லப்படுகின்ற பெரிதான உம்முடைய அந்தச்சேனையானது மதத்தினால் மயங்குகின்ற ஸ்திரீபோல் ஆங்காங்கு மயக்கமுற்றது. அந்த யுத்தரங்கத்தில் பீமஸேனனும் அர்ஜுனனும் அந்தச்சேனையை மயங்கச்செய்து சங்கங்களை ஊதினார்கள்; சிங்கநாதங்களையும் செய்தார்கள். திருஷ்டத்யும்னனும் சிகண்டியும் பேரொலியைக் கேட்டவுடன், தருமராஜரை முன்னிட்டுக்கொண்டு மத்ரராஜனை எதிர்த்துச் சென்றார்கள். சல்யனோடு எதிர்த்த சூரர்கள் துண்டுதுண்டாகப் போர்புரிந்ததும் கோரரூபமுள்ளதும் மகாபயங்கரமானதும் ஆச்சரியகரமாயுள்ளதுமான யுத்தத்தை அங்குக் கண்டோம். வேகமுள்ளவர்களும் அஸ்திரங்களில் தேர்ச்சியுள்ளவர்களும் யுத்தத்தில் கொடியமதங்கொண்டவர்களுமான மாத்ரீபுத்திரர்கள், உம்முடைய படையை ஜயிக்கவெண்ணங்கொண்டு வேகமாக எதிர்த்தார்கள். பரதருட்சிறந்தவரே! பிறகு, உம்முடைய படையானது, ஜயத்தால்விளங்குகின்ற பாண்டவர்களால் அம்புகளால் பலவாறாக அடிக்கப்பட்டும் எதிர்த்துநின்றது. வேந்தரே! அம்புமழைகளால் நன்கு அடிக்கப்பட்டதும் வதம்செய்யப்படுகின்றதுமான அந்தப்படையானது உமதுபுத்திரர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, பத்துத்திசைகளையும் அடைந்தது. பாரதரே! அந்தயுத்தகளத்தில் யுத்தவீரர்களுடைய பெரிதான 'ஆ! ஆ!' என்னும் ஒலி தோன்றியது. துரத்தப்பட்டவர்களும் மஹாத்மாக்களும் யுத்தத்தில் ஒருவரையொருவர் ஜயிக்க விரும்புகிறவர்களுமான க்ஷத்திரியர்களுடைய 'நில், நில்' என்னும் ஒலியும் தோன்றிற்று. உம்முடையசைனிகர்கள் பாண்டவர்களால் மிகஅடிக்கப்பட்டு ஓடிவிட்டார்கள். பாரதரே! பரதரிற்சிறந்தவரே! உம்மைச்சேர்ந்த யுத்தவீரர்கள் தம்மைக் காத்துக்கொள்வதில், ஊக்கத்துடன் நாற்புறத்திலும் குதிரைகளையும்

* ஒருசொல் விடப்பட்டது.

யானைகளையும் விரைவாக நடத்திக்கொண்டு யுத்தத்தில் அன்புள்ளவர்களான புத்திரர்களையும் உடன்பிறந்தோர்களையும் பாட்டன்மாரையும் அம்மான்களையும் மருமான்களையும் தோழர்களையும் விட்டுவிட்டுச் சென்றுவிட்டார்கள்.

---

## ஒன்பதாவது அத்யாயம்.

## ச ல் ய வ த ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(நகுலன் கர்ணனதுபுத்திரர் மூவரைக் கொன்றது.)

மூறிய அடிக்கப்பட்ட அந்தச்சேனையைக்கண்டு, பிரதாபசாலியான மத்திரராஜன் ஸாரதியைப்பார்த்து, 'மகாவேகமுள்ளகுதிரைகளை விரைவாகநடத்து. தூக்கிப்பிடிக்கப்படுகின்றதும் வெண்மையானதும் பிரகாசிக்கின்றதுமான குடையுடனே இதோ பாண்டு புத்திரனும் அரசனுமான யுதிஷ்டிரன் நிற்கிறான். ஸாரதியே! அந்தஇடத்தை என்னை விரைவாக அடையும்படிசெய். என்பலத்தைப் பார். இப்பொழுது யுத்தத்தில் என்முன்னிலையில் நிற்பதற்குப் பார்த்தர்கள் திறமையுடையவர்களாகார்களன்றோ?' என்று கூறினான். பிறகு, இவ்வாறு கூறப்படவே, மத்திரராஜனது ஸாரதியானவன் அரசரும் ஸத்தியஸந்தரும் தருமநந்தனருமான யுதிஷ்டிரர் இருக்குமிடம் சென்றான். யுத்தத்தில் விரைவாக எதிர்த்துவருகின்ற பாண்டவரது பெரும்படையைப் பொங்கிவருகின்ற சமுத்திரத்தைக் கரைதாங்குவதுபோலச் சல்யன் ஒருவனேவே தாங்கினான். பெரியவரே! பாண்டவருடைய சேனைக்கூட்டமோ, அப்பொழுது யுத்தத்தில் சல்யனை எதிர்த்து, நதியின்வேகமானது மலையை அடைந்து நிற்பதுபோலத் தட்டிநின்றது. போர்க்களத்தில் போருக்காகநிற்கின்ற மத்திரராஜனைக் கண்டு, கௌரவர்கள், மரணம்வரையில் திரும்புவதில்லையென்றெண்ணி(ப்போருக்குத்) திரும்பினார்கள். அரசரே! நான்குபக்கத்திலும் வகுக்கப்பட்ட சேனைகள், திரும்பினவுடனே, மிக்கபயங்கரமாயுள்ளதும் இரத்தத்தால் நனைக்கப்படுவதுமான யுத்தம் நடக்க ஆரம்பித்தது. யுத்தத்தில் அடங்காத மதங்கொண்ட நகுலன், சித்திரஸேனனை எதிர்த்தான். விசித்திரமான விற்களைத் தரித்த அவ்விருவர்களும் ஒருவரையொருவர்கிட்டி அதிக ஆடம்பரத்துடன் தென்திசையிலும் வடதிசையிலும் மழைகளைப்பொழிகின்ற இரண்டு மேகங்களைப்போலப் பாணங்களாகிற ஜலங்களால் ஒருவரை

யொருவர் யுத்தத்தில் நினைத்தார்கள். அந்த யுத்தத்தில் நகுலனுக்கும் சித்திரஸேனனுக்கும் வேற்றுமையைக் கண்டிலோம். இருவரும் அஸ்திரத்தில் நல்லதேர்ச்சியுள்ளவர்கள்; வன்மையுள்ளவர்கள்; தேரை நடத்துவதில் ஸமர்த்தர்கள்; ஒருவரையொருவர் கொல்வதில் முயற்சியுள்ளவர்கள்; அனர்த்தத்தை விளைவிக்கக்கூடிய ஸமயத்தைத் தேடுவதில் நோக்கமுள்ளவர்கள். மஹாராஜரே! சித்திரஸேனனே துவைந்ததும் கூர்மையுள்ளதுமான ஒரு பல்லத்தால் நகுலனுடைய வில்லைக் கைப்பிடியில் வெட்டினன். பிறகு, சித்தரஸேனன் பரபரப்பில்லாதவனாகவே வில்வெட்டப்பெற்ற அந்த நகுலனைப் பொற்புங்கமுள்ளவைகளும் சாணையில் தீட்டப்பட்டவைகளுமான மூன்றம்புகளால் நெற்றியில் அடித்தான். அவனுடையகுதிரைகளையும் கூர்மையுள்ள அம்புகளால் யமனிடம் அனுப்பினான். அவ்வாறே கொடியையும் ஸாரதியையும் மும்மூன்றுபாணங்களால் கீழேதள்ளினன். வேந்தரே! சத்துருவின்கையினால் பிரயோகிக்கப்பட்டவைகளும் நெற்றியில் தைத்திருப்பவைகளுமான மூன்றம்புகளால் அந்த நகுலன் மூன்று சிகரங்களுடன்கூடிய மலைபோல் விளங்கினன். வில் அறுக்கப்பட்டவனும் ரதத்தையிழந்தவனுமான அந்தவீரன், கத்தியையும் கேடகத்தையும் எடுத்துக்கொண்டு மலையினுச்சியினின்று ஒரு சிங்கம் இறங்குவதுபோல் ரதத்தினின்று இறங்கினன். கால்களால் நடந்துவருகின்ற அந்த நகுலன்மீது சித்திரஸேனன் அம்புமழையைப் பொழிந்தான். லாகவத்துடன் கூடிய பராக்கிரமமுள்ள நகுலனும் அந்த அம்புமழையைக் கேடகத்தினால் தடுத்தான். விசித்திரமாகப்போர்புரிகின்றவனும் சிரமத்தை ஜயித்தவனும் மிக்ககைவன்மையுள்ளவனுமான நகுலன் எல்லாச் சைனியங்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, சித்திரஸேனனுடைய ரதத்தைஅணுகி (அதன்மீது) ஏறினன். பாண்டவன், குண்டலங்களுடன்கூடியதும் கிரீடத்தைத் தரித்ததும் நல்ல மூக்குள்ளதும் மிகநீண்ட கண்களையுடையதுமான சித்திரஸேனனுடைய தலையைச் சரீரத்தினின்று கொய்தான். சூரியன்போன்ற காந்தியையுடைய அந்தச்சித்திரஸேனன் அந்தரதத்தினின்று விழுந்தான். மஹாரதர்கள் அந்தயுத்தத்தில் சித்திரஸேனனுடைய தலையைக்கண்டு 'நல்லது, நல்லது' என்கிற சப்தங்களையும் அதிகமான ஸிம்மநாதங்களையும் வெளியிட்டார்கள். மன்னரே! ஸகோதரன் கொல்லப்பட்டதைக்கண்டு, மஹாரதர்களான ஸுசர்மா ஸத்தியஸேனன்என்கிற கர்ணபுத்திரரிருவரும், பற்பலஅம்புகளை எய்துகொண்டு

பெருங்காட்டில் ஒருயானையை இரண்டுபுலிகள் எதிர்ப்பதுபோல் ரதிகருள்சிறந்தவனான பாண்டவனைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணங்கொண்டு விரைவாக எதிர்த்துச்சென்றார்கள். மிக்கபுஜபலமுள்ளவர்களும் சிறந்த மஹாரதர்களுமான அவ்விருவர்களும் எதிர்த்து, இரண்டுமேகங்கள் ஜலத்தைப்பொழிவதுபோலப் பாணஸமூகங்களை நன்றாகப் பொழிந்தார்கள். அம்புகளால் நான்குபக்கத்திலும் அடிக்கப்பட்டவனும் சிறந்த வேகமுள்ளவனும் வீரனுமான அந்நகுலன் மிகுந்த மனக்களிப்புற்றவனாகித் தேரின்மீதேறி வேறுவில்லையெடுத்து அதிககோபங்கொண்ட யமன்போல யுத்தத்தில் நின்றான். அரசரே! ஜனநாதரே! சகோதரர்களான அவ்விருவர்களும் படிந்தகணுக்களுள்ள அம்புகளால் அந்நகுலனுடைய தேரைத் துண்டுதுண்டாகச் செய்வதற்கு முயன்றார்கள். பிறகு, நகுலன் அட்டஹாஸம்செய்துகொண்டு கூர்மையுள்ள நான்குபாணங்களால் ஸத்தியஸேனனுடைய நான்குகுதிரைகளையும் யுத்தத்தில் கொன்றான். ராஜேந்திரரே! பிறகு, பாண்டவன் பொற்புங்கமுள்ளதும் சாணையில்தீட்டியதுமான ஒரு நாராசத்தைப் பூட்டி ஸத்தியஸேனனுடைய வில்லைத் தறித்துவிட்டான். பிறகு, ஸத்தியஸேனனும் ஸுசர்மாவும் வேறுதேரின்மீது ஏறிக்கொண்டு வேறுவில்லையெடுத்துப்பாண்டவனை எதிர்த்துச்சென்றார்கள். மஹாராஜரே! பிரதாபசாலியான மாத்திரீபுத்திரன், பரபரப்பில்லாதவர்களான அவ்விருவர்களையும் இரண்டிரண்டம்புகளால் யுத்தமுனையில் அடித்தான். பிறகு, கோபங்கொண்டவனும் மஹாரதனுமான ஸுசர்மா உரக்கச் சிரித்துக்கொண்டு போரில் ஒருக்ஷுரப்ரத்தால் பாண்டவனுடைய பெரியவில்லை வெட்டினான். பிறகு, கோபமூண்ட நகுலன் வேறுவில்லைஎடுத்து ஸுசர்மாவை ஐந்து பாணங்களால் அடித்துக் கொடியை ஒருபாணத்தால் தறித்தான். பெரியவரே! அந்த நகுலன் ஸத்தியஸேனனுடைய வில்லையும் கையுறையையும் விரைவாகத் துண்டாக்கினான். பிறகு, யுத்தத்தில் ஜனங்கள் உரக்கக் கூச்சலிட்டார்கள். பிறகு, ஸத்தியஸேனன், (பகைவர்களுடைய) வேகத்தை நாசம்செய்கின்றதும் காரியபாரங்களுக்குச் சாதனமாயிருப்பதுமான வேறொருவில்லை எடுத்து, பாண்டுநந்தனனை அம்புகளால் நான்குபக்கத்திலும் மூடினான். பகைவீரர்களைக் கொல்பவனான நகுலன் அந்தப்பாணங்களைத் தடுத்து இரண்டுஇரண்டுபாணங்களால் ஸத்தியஸேனனையும் ஸுசர்மாவையும் அடித்தான். ராஜேந்திரரே! அவ்விருவரும் அந்த நகுலனைத் தனித்தனியே பாணங்களால் திருப்பி

அடித்தார்கள். இவனுடைய ஸாரதியையும் கூர்மையான அம்பு களால் துன்பமடையச்செய்தார்கள். கைப்பழக்கமுள்ளவனும் பிரதாபசாலியுமான ஸத்தியஸேனன் நகுலனுடைய தேரின் ஏர்க் காலையும் அவ்வாறே வில்லையும் இரண்டுபாணங்களால் தனித்தனி யாகத் துண்டித்தான். பிரபுவே! தேரில்வீற்றிருக்கின்ற அதிரத னான அந்த நகுலன் பொன்மயமான காம்புள்ளதும், மழுங்காத முனை யுள்ளதும், எண்ணெயிட்டுத் தீட்டப்பட்டதும், அதிகபளபளப் புள்ளதும், நாவினால் அடிக்கடி நக்கிக்கொள்கின்ற மஹாவிஷமுள்ள பெண்ணாகம் போன்றதும், தாழை மடல்போன்றதுமான ஒரு சக்தியாயுதத்தை எடுத்துத் தூக்கி யுத்தத்தில் ஸத்தியஸேனன் மீது எறிந்தான். வேந்தரே! அந்தச்சக்தியானது அவன்மார்பை அடைந்து நூறுகப்பிளந்தது. அந்த ஸத்தியஸேனனும் அறிவற்று உயிரையிழந்து தேரினின்று பூமியில் விழுந்தான். பிராதா கொல் லப்பட்டதைக் கண்டு கோபம்மூண்டவனான ஸுசர்மா, காலாளாக நிற்கின்ற பாண்டுநந்தனன்மீது விரைவாக அம்புகளைப் பொழிந் தான். கர்ணபுத்திரன் நான்குபாணங்களால் (நகுலனுடைய) நான்குகுதிரைகளையும் ஐந்துபாணங்களால் த்வஜத்தையும் அறுத்து, மூன்றுபாணங்களால் ஸாரதியையும் கொன்று, ஸிம்மநாதஞ்செய் தான். மஹாரதனான நகுலன் ரதத்தை இழந்திருப்பதைக்கண்டு, திரௌபதீபுத்திரனான ஸுதஸோமன் யுத்தத்தில் பிதாவைப் பாது காக்கவெண்ணி அவனை நோக்கி ஓடினான். பிறகு, பரதருள் சிறந்தவ னானநகுலன் ஸுதஸோமனுடைய அந்தத்தேரின்மீது ஏறிக்கொண்டு மலையின்மீதுள்ள சிங்கம்போல் விளங்கினான்; வேறு வில்லையெடுத்து ஸுசர்மாவை எதிர்த்துப் போரும் புரிந்தான். சிறந்த மஹாரதர்க ளான அவ்விருவர்களும் அந்த யுத்தத்தில் ஒருவரையொருவர் நெருங்கி அம்புமழைகளால் ஒருவரையொருவர் கொல்வதில் முயற்சி செய்தார்கள். பிறகு, கோபங்கொண்ட ஸுசர்மாவோ பாண்டவனை மூன்று பாணங்களாலும் ஸுதஸோமனை இருபது பாணங்களாலும் (முறையே) இருகைகளிலும் மார்பிலும் அடித்தான். மஹாராஜரே! பிறகு, சத்துருவீரர்களை அழிப்பவனும் வீரியமுள்ளவனுமான நகு லன் கோபங்கொண்டு அம்புமழைகளால் அந்த ஸுசர்மாவினுடைய எல்லாப் பக்கங்களையும் மூடினான். பிறகு, நகுலன் கூரியநுனியுள்ள தும் நன்றாகத் தீட்டப்பட்டதுமான அர்த்தசந்திர பாணத்தைக் கையிலெடுத்து (நாணிற்பூட்டிக்) காதுவரையிலிழுத்து யுத்தத்தில் கர்ணபுத்ரன்மீது எய்தான். அரசருள் சிறந்தவரே! எல்லாச்

ஸைனிகர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அந்த ஸுசர்மாவினுடைய தலையை அந்த அர்த்தசந்திரபாணத்தால் (அவனுடைய) சரீரத்தினின்று அறுத்துவிட்டான். அது ஆச்சரியம்போல இருந்தது. ராஜரே! மஹாபலசாலியான நகுலனால் கொல்லப்பட்ட அந்த ஸுசர்மா, கரையில்முளைத்ததும் நதியின்வேகத்தினால் பறித்துத் தள்ளப்பட்டதுமான பெரியமரம்போல் விழுந்தான். பரதருட் சிறந்தவரே! கர்ணபுத்திரவதத்தையும் நகுலனுடைய பராக்ரமத்தையும் கண்டு உம்முடைய சேனையானது பயத்தினால் விரைவாக ஓடியது. மஹாராஜரே! சூரனும் பிரதாபசாலியும் சேனாபதியும் சத்துருக்களை அடக்குகிறவனுமான மத்திரராஜன் யுத்தத்தில் அச்சேனையைப் பாதுகாத்தான். மஹாராஜரே! மத்திரநாதன் சேனையை நிலைநிறுத்தி அதிகமாகச் சிங்கநாதத்தையும் பயங்கரமான வில்லோசையையும் வெளியிட்டுக்கொண்டு பயமற்றவனாக நின்றான். ராஜரே! திடமான வில்லையுடையவனான மத்திரநாதனால் யுத்தத்தில் உம்மைச்சேர்ந்தவர்கள் பாதுகாக்கப்பட்டார்கள். அந்த யுத்தவீரர்கள் மனவருத்தத்தைவிட்டு நாற்பக்கத்திலும் அவர்களை எதிர்த்தார்கள். வேந்தரே! பெரிய வில்லாளியான மத்திரராஜனை நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டு பெரும்படையானது நான்குபக்கங்களிலும் யுத்தம்செய்ய விருப்பங்கொண்டு நின்றது. வீரர்களான ஸாத்யகியும் பீமஸேனனும் மாத்ரீபுத்திரர்களான நகுலஸஹதேவர்களும், அகார்யத்தில்வெட்கமுள்ளவரும் பகைவர்களையடக்குகின்றவருமான யுதிஷ்டிரரை முன்னிட்டுக்கொண்டும் யுத்தகளத்தில் நான்குபுறமும் சூழ்ந்துகொண்டும் சிங்கநாதஞ்செய்தார்கள்; தீவ்ரமான அம்பொலிகளையும் சங்கநாதங்களையும் பற்பல ஸிம்மநாதங்களையும் வெளியிட்டார்கள். அவ்வாறே, உம்மைச் சேர்ந்த எல்லோரும் மத்திரநாதனை விரைவாகச் சூழ்ந்துகொண்டு மிகுந்தகோபங்கொண்டவர்களாக மீண்டும் யுத்தம்செய்வதற்கு விருப்பமுற்றார்கள். பிறகு, மரணம் என்றைக்கும்இருப்பதாகவெண்ணிப் போர்புரிகின்ற உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் பிறர்களுக்கும் யுத்தமானது பயப்படுகிறவர்களுக்குப் பயத்தை விருத்திபண்ணிக்கொண்டு நடக்க ஆரம்பித்தது. அரசரே! முற்காலத்தில் தேவாஸுரயுத்தம் நடந்ததுபோலப் பயமற்றவர்களான வீரர்களுக்கு யமராஜ்யத்தை விருத்திசெய்கின்றதான அப்படிப்பட்டயுத்தம் நடந்தது. அரசரே! பிறகு, பாண்டுநந்தனனான அர்ஜுனன் யுத்தத்தில் ஸம்சப்தகர்களைக் கொன்று, அந்தக்கௌரவசேனையை எதிர்த்தான். அவ்வாறே, திருஷ்டத்யும்னனைத் தலைவ

ஞகக்கொண்ட எல்லாப்பாண்டவர்களும் கூர்மையான அம்புகளை எய்துகொண்டு அச்சேனையை எதிர்த்தோடினார்கள். பாண்டவர்களால் வியாபிக்கப்பட்ட கௌரவர்களுக்கு மதிமயக்கமுண்டாயிற்று. படைகளையாவது திசைகளையாவது மூலைத்திசைகளையாவது அவர்கள் அறியவில்லை. பாண்டவர்களால் பிரயோகிக்கப்பட்ட கூர்மையுள்ள பாணங்களால் நான்குபக்கங்களிலும் நிரப்பப்படுகின்ற கௌரவசேனையானது, நான்குபக்கத்திலும் தடுக்கப்பட்டதும் சிறந்தவீரர்கள் கொல்லப்பட்டதும் மிகவும் நாசஞ்செய்யப்பட்டதும் மஹாரதர்களான பாண்டுபுத்திரர்களால் கொல்லப்பட்டதுமாயிற்று. மன்னரே! அவ்வாறே, பாண்டவசேனையும் யுத்தத்தில் உமது புத்திரர்களால் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் நான்குபக்கத்திலும் அம்புகளால் நாசஞ்செய்யப்பட்டது. அதிக ஸந்தாபத்தை அடைந்தவையும் பரஸ்பரம் கொல்லப்படுகின்றவையுமான அவ்விருசேனைகளும் குழப்பமுற்று வர்ஷாகாலத்து இரண்டு நதிகள்போலக் கலக்கமுற்றனவாயின. ராஜேந்திரரே! பிறகு, அப்படிப்பட்ட மஹாயுத்தத்தில் உம்மைச்சேர்ந்தவர்களையும் பாண்டவர்களையும் மிகப்பெரிய பயம் வந்தடைந்தது.

---

## பத்தாவது அத்யாயம்.

## சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



### (ஸங்குல யுத்தம்.)

மஹாராஜரே! அப்பொழுது கூச்சலிடுகின்றவர்களும் பேசுகின்றவர்களுமான காலாட்களுடைய மஹாயுத்தத்தில் குழப்பமுற்றிருக்கிற அந்தப் படையானது ஒன்றினால் மற்றொன்று கொல்லப்பட்டு யுத்தவீரர்களும் யானைகளும் ஓட, குதிரைகளும் பலவாறு கொல்லப்பட, பற்பல ஆயுதங்களுடைய வீழ்ச்சியுடன்கூடியதும் பரஸ்பரம் எதிர்த்துப் போர்புரிகின்ற ரதிகர்களுடனும் யானைகளுடனுங்கூடியதும் யுத்தத்தில் ஸமர்த்தர்களுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணுகின்றதும் பயப்படுகிறவர்களுக்குப் பயத்தை விருத்திபண்ணுகின்றதும் எல்லாப் பிராணிகளையும் ஸம்ஹரிக்கின்றதும் பயங்கரமாயும் கோரமாயுமிருக்கின்றதும் அதிகமாக நாசத்தை உண்டுபண்ணுகின்றதுமான யுத்தத்தில், யுத்தவீரர்கள் பரஸ்பரம் வதம்செய்வதில் விருப்பமுள்ளவர்களாகப் பிரவேசித்து

உயிரைவாங்குகின்றதும் மஹாகோரமானதும் யமனுடைய ராஜ்யத்தை விருத்திபண்ணுகின்றதுமான யுத்தமென்கிற மிக்ககோரமான சூதாட்டமானது நடக்கையில், பாண்டவர்கள் உமது சேனையைக் கூர்மையுள்ள பாணங்களால் நாசஞ்செய்தார்கள். அவ்வாறே, உம்மைச்சேர்ந்த யுத்தவீரர்களும் பாண்டவவீரர்களைக் கொன்றார்கள். அரசரே! ஸூர்யோதயமாகி முற்பகலும் வந்து பயப்படுகிறவர்களுக்குப் பயத்தை உண்டுபண்ணுகின்ற அந்த யுத்தமானது அவ்வாறு நடந்துவருகையில், மஹாத்மாவான யுதிஷ்டிரரால் பாதுகாக்கப்பட்டிருக்கிறவர்களும் சஸ்திரங்களில் தேர்ச்சிபெற்றவர்களுமான பகைவீரர்கள், இறந்தால்தான் ஓய்வதென்று நிச்சயித்து உமது சேனையை எதிர்த்துப் போர்புரிந்தார்கள். பலசாலிகளும் கர்வமுள்ளவர்களும் ஆயுதங்களில் நல்லதேர்ச்சியுள்ளவர்களும் (பகைவர்களை) அடிப்பவர்களுமான பாண்டவர்களால் கௌரவசேனையானது, அக்னிபயத்தினால் மனக்கலக்கமடைந்த பெண்மான்போல வாடியது. சேற்றில் அமிழ்ந்த துர்ப்பலமான பசுவைப்போல வாடுகின்ற அச்சேனையைக் கண்டு அப்பொழுது சல்யன் அதனைமீட்க எண்ணங்கொண்டவனாகப் பாண்டுபுத்திரர்களைக்குறித்து எதிர்த்துச்சென்றான். மத்திரநாதன் மிக்க கோபங்கொண்டு உத்தமமான வில்லை எடுத்துக்கொண்டு யுத்தத்தில் கொல்லவிருப்பமுள்ளவர்களான பாண்டவர்களை எதிர்த்துச் சென்றான். பூபாலரே! யுத்தத்தில் ஜயத்தினால் பிரகாசிக்கின்ற பாண்டவர்களும் மத்ரராஜனைஎதிர்த்துக் கூர்மையுள்ள அம்புகளால் பிளந்தார்கள். பிறகு, மஹாரதனான மத்ரராஜன் கூர்மையுள்ள அனேக அம்புகளால், தர்மராஜர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, அந்தச்சேனையைப் பீடித்தான். பற்பல உருவங்களுள்ள நிமித்தங்கள் பலவாறு தோன்றின. பர்வதங்களுடன்கூடின பூமியும் சத்தத்தைவெளியிட்டுக்கொண்டுஅசைந்தது. தண்டசூலத்துடன் கூடியவைகளும் ஜ்வலிக்கின்ற நுனியுள்ளவைகளும் நாற்பக்கத்திலும் பிளவுபடுகின்றவைகளுமான உற்கைகள் ஸூர்யமண்டலத்தைத் தாக்கிக்கொண்டு ஆகாயத்தினின்று பூமியில் விழுந்தன. ஜனநாதரே! மிருகங்களும் எருமைக்கடாக்களும் பக்ஷிகளும் அப்பொழுது உம்முடையஸேனையைப் பலதடவை இடமாகச்சுற்றிவந்தன. *சுக்ரன்

* 'பூமிமுழுதும் அனுபவிக்கப்போகின்றவர்களான பாண்டவர்களுக்கு முதல்வரான தர்மநந்தனரை நோக்கிச் சுக்ரன் அங்காரகன் புதன் இந்தமூன்று கிரஹங்களும் ஏழாவது ஸ்தானத்தில் இருந்துகொண்டு பலத்தை உண்டுபண்ணுகின்றவைகளாயிருந்தன' என்பது பழையஉரையின் கருத்து.

அங்காரகன் புதன் இந்தமூன்று கிரகங்களும் பாண்டுபுத்திரர்களுக்குப் பின்புறத்திலும் கௌரவர்களுக்கு எதிரிலுமிருந்தன. சஸ்திரங்களுடைய நுனிகளில் ஜ்வாலை தோன்றியது. அது கண்களைக் கூசும்படிசெய்துகொண்டு பூமியில் விழுந்தது. காக்கைகளும் கோட்டான்களும் தலைகளிலும் த்வஜங்களிலும் அதிகமாக உட்கார்ந்தன. பிறகு, சேர்ந்து ஸஞ்சரிக்கின்ற வீரர்களுக்கு மிகஉக்ரமான அந்த யுத்தம் உண்டாயிற்று. அரசரே! அவ்வாறே, எல்லாச்சேனைகளும் நன்றாக எதிர்த்துச் சண்டையிட்டன. கௌரவராஜன் பாண்டவர்களுடைய சேனையை எதிர்த்து அடித்தான். தர்மாத்மாவான சல்யனோ, இந்திரன் மழையைப்பொழிவதுபோலக் குந்தீபுத்திரரான யுதிஷ்டிரர் மீது அம்புமழையைப் பொழிந்து, பீமஸேனன்மீதும் ஸ்வர்ணக்கட்டுக்களுள்ளவைகளும் சாணைக்கல்லில் தீட்டப்பட்டவைகளுமான அம்புகளைப்பொழிந்தான். மஹாபலசாலியான அந்தச்சல்யன் அவ்வாறே த்ரௌபதீபுத்திரர்களனைவரையும் பாண்டுநந்தனர்களான நகுலஸஹதேவர்களையும் திருஷ்டத்யும்னனையும் ஸாத்யகியையும் சிகண்டியையும் ஒவ்வொருவரையும் பப்பத்துப்பாணங்களால் அடித்தான். பிறகு, மாரிக்காலத்தில் இந்திரன் மழையைப்பொழிவது போலப் பாணமழையைப் பொழிந்தான். அரசரே! பிறகு, ப்ரபத்ரகர்களும் ஸோமகர்களும் சல்யனுடையஅம்புகளால் ஆயிரமாயிரமாக விழுந்தவர்களும் வீழ்த்தப்பட்டவர்களுமாகக் காணப்பட்டார்கள். சல்யனுடைய பாணங்கள், வண்டினங்கள் போலவும் விட்டிற்பூச்சிகளின் கூட்டங்கள் போலவும் மேகங்களிலிருந்து இடிகள் போலவும் விழுந்தன. அவனுடைய பாணங்களால் யானைகளும் குதிரைகளும் காலாட்களும் அவ்வாறே ரதிகர்களும் துன்பத்தை அடைவிக்கப்பட்டுச் சாய்ந்தனர்; சுழன்றனர்; அலறினர். மத்ரநாதன் பூதாவேசமுள்ளவன்போலக் கோபத்தினாலும் வல்லமையினாலும் யுத்தத்தில் காலத்தினாலுண்டுபண்ணப்பட்ட அந்தகன் போலப் பகைவர்களை (சரமாரியினால்) மூடினான். மஹா பலசாலியான மத்ரநாதன் மேகமுழக்கம்போன்ற முழக்கத்துடன் அட்டஹாஸம் செய்தான். அவனால் வதம்செய்யப்படுகின்ற அந்தப் பாண்டவர்களுடைய ஸேனையானது அஜாதசத்ருவும் குந்தீநந்தனருமான யுதிஷ்டிரரை நோக்கி ஓடியது. கைத்தேர்ச்சியுள்ள சல்யன் கூர்மையுள்ள நூற்றுக்கணக்கான பாணங்களால் அந்தச்சேனையை அடித்துப் பெரிய அம்புமழையினால் யுதிஷ்டிரரை அடித்தான். உத்தமஜாதிக் குதிரைகளோடு வருகின்ற அந்தச்சல்யனை அரசரான

யுதிஷ்டிரர், கோபங்கொண்டு, பெரிய யானையை அங்குசங்களால் தடுப்பதுபோலக் கூர்மையுள்ள பாணங்களால் தடுத்தார். அந்த யுதிஷ்டிரர்மீது சல்யன் கோரமானதும் ஸர்ப்பத்துக்கொப்பானது மான ஓர் அம்பைப் பிரயோகித்தான். அது மஹாத்மாவான யுதிஷ் டிரரை எதிர்த்து அடித்து வேகத்துடன் பூமியிலும் பாய்ந்தது. மஹாராஜரே! பின்பு, பகைவர்களைக் கொல்பவனும் சூரனுமான சல்யன்மீது கோபங்கொண்ட விருகோதரன் ஏழுபாணங்களையும் ஸஹதேவன் ஐந்து பாணங்களையும் திரௌபதீபுத்திரர்கள் அனேக பாணங்களையும் மேகங்கள் மலையின்மீது மழையைப் பொழிவது போலப் பொழிந்தார்கள். பிறகு, பார்த்தர்களால் நான்கு பக்கத்தி லும் தடுக்கப்படுகின்ற சல்யனைக்கண்டு க்ருதவர்மாவும் க்ருபரும் அதிக கோபங்கொண்டு எதிர்த்துச் சென்றனர். பிறகு, மஹாவீர்ய முள்ளவனான உலூகனும் ஸுபலனுடைய குமாரனான சகுனியும் மஹாபலசாலியான அஸ்வத்தாமாவும் உம்முடைய புத்திரர்களனை வரும் மெள்ள ஒன்றுகூடி யுத்தத்தில் சல்யனைப் பாதுகாத்தார்கள். கிருதவர்மா, அதிககோபங்கொண்ட பீமஸேனனை மூன்று பாணங்க ளால் அடித்துப் பெரியசரமாரியினால் தடுத்தான்; பிறகு, கோபங் கொண்டு, த்ருஷ்டத்யும்னனை அம்புமழைகளால் பீடித்தான். சகுனி த்ரௌபதீபுத்திரர்களையும், துரோணபுத்திரர் நகுலஸஹ தேவர்களையும் எதிர்த்தார்கள். யுத்தஞ்செய்பவர்களுள் சிறந்த வனும் உக்கிரமான தேஜஸுள்ளவனும் பலசாலியுமான துர் யோதனன் யுத்தத்தில் கேசவரையும் அர்ஜுனனையும் எதிர்த் துப் பாணங்களால் அடித்தான். பிரஜைகளுக்கு நாதரே! இவ் வண்ணமாக, உம்மைச்சேர்ந்தவர்களுக்குப் பகைவர்களோடு ஆங் காங்கு அதிகோரமும் ஆச்சர்யகரமுமான அநேகம் துவந்துவயுத்தங் கள் நடந்தன. கிருதவர்மா யுத்தத்தில் பீமனுடைய கரடிநிறமுள்ள குதிரைகளைக்கொன்றான். அந்தப்பாண்டுநந்தனன் குதிரைகள் கொல் லப்பட்ட ரதத்தினுடையமத்தியினின்று இறங்கிக் காலதண்டத்தைக் கையில்ஏந்தி யமன் போர்புரிவதுபோலக் கதாயுதத்தைக்கையில் எடுத் துக்கொண்டு போர்புரிந்தான். அந்தமந்திரநாதன் ஸஹதேவனுடைய குதிரைகளை அவனுக்கெதிரில் கொன்றான். பின்பு, ஸஹதேவன், சல்யனுடைய புத்திரனைக் கத்தியினால் கொன்றான். ஆசார்யரான கிருபரோ, மயங்காதவராகவும் முயற்சியுள்ளவராகவும் இருந்து கொண்டு மயங்காதவனும் சிறந்தமுயற்சியுள்ளவனுமான த்ருஷ்டத் யும்னனை எதிர்த்துப்போர்புரிந்தார். ஆசார்யபுத்திரரான அஸ்வத்தாமா

சிறிதுகோபங்கொண்டு சிரிக்கிறவர்போல வீரர்களான த்ரௌபதீ புத்திரர்கள் ஒவ்வொருவரையும் பப்பத்துப்பாணங்களால் அடித்தார். அவ்வாருகவே, யுத்தத்தில் *மறுபடியும் பீமஸேனனுடைய குதிரைகளையும் கொன்ருர். குதிரைகள் கொல்லப்பட்டவனும் மகாபலசாலியுமான அந்தப்பாண்டுநந்தனன், கோபத்துடன் ரதத்தினின்று விரைவாகக் கீழே இறங்கிக் காலன் தண்டத்தைத் தூக்கிஞற்போலக் கதையைக் கையில் தூக்கிக்கொண்டு க்ருதவர்மாவினுடைய குதிரைகளையும் ரதத்தையும் நொறுக்கினன். க்ருதவர்மாவோ அந்தத்தேரினின்று துள்ளிக்குதித்து விலகிச்சென்றுவிட்டான். வேந்தரே! சல்யனும் கோபமூண்டவனுக ஸோமகர்களையும் பாண்டவர்களையும் மிகத்துன்புறுத்தி மறுபடியுமே யுதிஷ்டிரரைக் கூர்மையுள்ள பாணங்களால் பீடித்தான். சிறந்த வீர்யமுள்ளவனுன பீமன் யுத்தத்தில் கோபங்கொண்டவனுக உதட்டை நன்ருகக்கடித்துக்கொண்டு அவனுடையநாசத்தின்பொருட்டு மனத்தில் நிச்சயஞ்செய்து, யமதண்டம்போன்றதும் முயல்கின்ற காலராத்திரிபோன்றதும் யானைகள், குதிரைகள், மனிதர்கள் இவர்களுடைய தேகங்களுக்குநாசத்தைஉண்டுபண்ணுகிறதும் பொற்பட்டங்களால் நாற்புறங்களிலும் மூடப்பட்டதும் எரிகின்ற குறைக்கொள்ளிபோன்றதும் முள்மயமாயிருக்கின்றதும் பெண்ணுகம்போல் அதிகஉக்கிரமானதும் வஜ்ராயுதத்துக்கு ஒப்பானதும் உருக்குமயமாயிருப்பதும் விரும்பப்பட்டிருக்கிற யுவதிபோலச் சந்தனக்குழம்பினுலும் காரகில்சாந்தினுலும் பூசப்பட்டதும் யமனுடைய நாக்குப்போல் ஊனீராலும் மாம்ஸத்தினுலும் பூசப்பட்டிருக்கிற மேனியையுடையதும் இந்திரனுடைய வஜ்ராயுதம்போல நன்குசப்திக்கின்ற அனேகம் மணிகளையுடையதும் சட்டையுரித்த ஸர்ப்பத்தின் உருவம்போன்ற உருவமுள்ளதும் யானையின் மதஜலங்களால் பூசப்பட்டதும் எல்லாப்பிராணிகளையும் பயமடையச்செய்கின்றதும் தன்னுடையபடைவீரர்களைக் களிக்கச்செய்கின்றதும் மனுஷ்யலோகத்தில் பிரஸித்திபெற்றதும் மலைகளின் சிகரங்களையும் பிளக்கின்றதுமானகதையைக் கையில்எடுத்தான். பலசாலியான குந்தீபுத்திரன், கைலாஸத்தில் மஹேசுவரருக்குத் தோழனும் மிக்க கோபங்கொண்டவனும் அளகாதிபதியுமான குபேரனைஎந்தக் கதையினுல் சண்டைக்கு அழைத்தானே,மஹாபலசாலியும் மிக்க

* இவன் திரும்ப வேறுரதத்தில் ஏறிக்கொண்டானென்று கொள்ளவேண்டும். அதற்காகவே 'வாஹஸ்வ' என்ற பதம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. அங்ஙனம் கொள்ளாவிடில் கூறியது கூறலாகும்.

தோள்வலியமைந்தவனும் கோபங்கொண்டவனுமான அந்தப்பீமன் த்ரௌபதிக்குப் பிரியத்தைச் செய்வதில் நிலைபெற்றவனாக அநேகர்களால் தடுக்கப்பட்டும் எந்தக்கதாயுதத்தினால் மந்தாரபுஷ்பங்களுக்காகக் குபேரனுடைய வாஸஸ்தானமான அளகாபுரியில் மாயாமயர்களும் கொழுப்புள்ளவர்களுமான அனேகயக்ஷர்களைக் கொன்றானோ, வஜ்ரங்களாலும் மணிகளாலும் ரத்னங்களுடைய ஸமூகங்களாலும் பலவர்ணமுள்ளதும் வஜ்ராயுதம்போல் உறுதியுள்ளதுமான அந்தக் கதையை எடுத்துக்கொண்டு யுத்தத்தில் சல்யனை எதிர்த்துச்சென்றான். யுத்தத்தில் ஸமர்த்தனான பீமன் பயங்கரமான சப்தத்தையுடைய அந்தக்கதையினால் மஹாவேகமுள்ள சல்யனுடைய நான்கு குதிரைகளையும் அடித்தான். பிறகு, வீரனான சல்யன் யுத்தத்தில் கோபங்கொண்டவனாகக் கர்ஜித்துக்கொண்டு (பீமனுடைய) வலியமார்பில் தோமரத்தை நாட்டினான். அது கவசத்தையுடைத்துக்கொண்டு சென்றது. விருகோதரனோ, கலங்காதவனாக அந்தத் தோமரத்தையே மேலேபிடுங்கி அப்பொழுது மத்ரராஜனுடைய ஸாரதியினுடையமார்பைப் பிளந்தான். கவசம் உடைக்கப்பட்ட அந்தஸாரதி மனம் மிகநடுங்கி ரக்தத்தைக் கக்கிக்கொண்டு பீமனுக்கு எதிரில் விழுந்தான். மத்ரராஜனோ, விலகிச்சென்றான். செய்ததற்குப் பிரதிசெய்ததைக்கண்டு, சல்யன் மனத்தில் ஆச்சர்யமுடையவனானான். தர்மாத்மாவான பீமன் கதையைக் கையிற்கொண்டு சத்துருவை எதிரில் நோக்கினான். பிறகு, சிரமமின்றிக் கார்யத்தைச் செய்கின்ற அந்தப்பீமனுடைய கோரமானசெய்கையை அந்தப்பார்த்தர்கள் யுத்தத்தில் கண்டு மனக்களிப்புற்று அவனைப் புகழ்ந்தார்கள்.

---

## பதினோராவது அத்யாயம்.

### சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



(சல்யனுக்கும் பீமனுக்கும் கதாயுத்தம்.)

அரசரே! சல்யன், விழுந்திருக்கிற ஸாரதியைக்கண்டு முட்களால் நிறைந்ததும் உருக்குமயமாயிருப்பதுமான கதையை விரைவாகக் கையிலெடுத்து மலைபோல அசைவற்றுநின்றான். ஜ்வலிக்கின்ற காலாக்னிபோன்றவனும், பாசத்தைக் கையிற்கொண்ட யமன் போன்றவனும், சிகரத்துடன்கூடிய கைலாஸம் போன்றவனும், வஜ்ராயுதத்தையுடைய இந்திரன்போன்றவனும், சூலாயுதத்தையுடைய

ருத்ரர்போன்றவனும் சக்கரத்தையுடைய திருமால்போன்றவனும், சக்தியையுடைய ஸுப்ரம்மண்யர் போன்றவனும், கானகத்திலுள்ள மதயானை போன்றவனுமான அந்தச் சல்யனைப் பீமன் பெரியகதாயுதத்தைக் கையிலெடுத்து வேகமாக எதிர்த்துச் சென்ருன். பிறகு, சங்கங்களுடைய ஒலியும் ஆயிரமாயிரமாகத் தூர்யங்களுடைய கோஷமும் ஊக்கத்தைவளரச்செய்கின்ற வீரர்களுடைய ஸிம்மநாதமும் தோன்றின. மதங்கொண்ட இரண்டுயானைகள்போன்ற அவ்விருவீரர்களையும் யுத்தவீரர்கள் நாற்புறத்திலும் (இருந்து)பார்த்தார்கள். உம்மைசேர்ந்தவர்களும் பிறர்களும்,'நல்லது!, நல்லது !' என்றுகொண்டாடினர்கள். யுத்தத்தில் பீமஸேனனுடைய வேகத்தை, மத்ரதேசாதிபதியான சல்யனையும் யதுகுலத்திலுதித்தவரான பலராமரையும்தவிர வேருெருவனும் தாங்கச் சக்தியுடையவனகான். அவ்வாறே, மஹாத்மாவான மத்ரநாதனுடைய கதையின் வேகத்தை யுத்தத்தில் வ்ருகோதரனைத் தவிர, வேறுமனிதன் ஸஹிக்கச் சக்தியுள்ளவனகான். கதையைக் கையிலெடுத்துச் சுழற்றுகின்ற அந்தமத்ரநாதனும் வ்ருகோதரனும் இரண்டெருதுகள்போலக் கர்ஜித்துக்கொண்டு மண்டலகதிகளோடு ஸஞ்சரித்தார்கள். புருஷஶ்ரேஷ்டர்களான அவ்விருவருக்கும் சுழல்போன்ற மண்டலாகாரமான மார்க்கங்களிலும் கதையைச் சுழற்றுதல்களிலும் யுத்தமானது ஏற்றத்தாழ்வில்லாமல் நடந்தது. புடம்போடப்பட்ட பொன்மயமானவையும் பளபளப்புள்ளவையும் அக்னிஜ்வாலைகள்போன்றவையுமான பூண்களாலே சுற்றிலும் கட்டப்பட்டிருக்கின்ற சல்யனுடைய அந்தக்கதையானது பயத்தைப் பெருக்குவதாயிற்று. அவ்வண்ணமே, மண்டலகதிகளில் ஸஞ்சரிக்கின்ற மஹாத்மாவான பீமனுடையகதையும் மின்னலுடன்கூடின மேகத்திற்குச் சமமாக விளங்கிற்று. மன்னரே! மத்ரராஜனல் கதையால் அடிக்கப்பட்ட பீமனுடைய அந்தக் கதையானது எரிக்கப்படுகிறதுபோல ஆகாயத்தில் அக்னிஜ்வாலைகளை உண்டுபண்ணியது. அவ்வாறே, பீமனல் கதையாலடிக்கப்பட்ட சல்யனுடைய கதையும் தணல்மழையைப் பொழிந்தது. அது ஆச்சர்யமாயிருந்தது. ஒருவரால்ஒருவர் கதையின் நுனிகளால் நன்ருகக் காயப்படுத்தப்பட்ட அவ்விருவரும் தந்தங்களால்(சண்டையிடுகிற)இரண்டு யானைகள் போலவும் கொம்புகளால் (சண்டையிடுகிற) இரண்டு மஹாவ்ருஷபங்கள்போலவும் விளங்கினர்கள். கதையாலடிக்கப்பட்டிருக்கிற அவயவங்களினல் ஒரு நொடிக்குள் ரக்தத்தால் நனைக்கப்பட்ட அவ்விருவரும் பூத்திருக்கிற இரண்டு பலாசமரங்கள்போலப்

பார்க்க மிகவும் இனிமையான காட்சியுள்ளவர்களானுர்கள். மத்ர ராஜனுடைய கதையினலே இடமாகவும் வலமாகவும் அடிக்கப்பட்ட மிக்க கைவன்மையுள்ள பீமஸேனன் மலைபோல அசைவற்று நின்ருன். அரசரே! அவ்வாறே, பீமனுடைய கதாவேகங்களால் அடிக்கடி அடிக்கப்படுகின்ற சல்யன், யானையால் பெரியமலை துன்பமடையாததுபோலத் துன்பமடையவில்லை. புருஷஶ்ரேஷ்டர்களான அந்த இரண்டுவீரர்களுடைய கதைகளின் வீழ்ச்சியாலுண்டாகும் சப்தமானது இரண்டுவஜ்ராயுதங்களின் சப்தம்போல எல்லாத்திக்குக்களிலும் கேட்கப்பட்டது. மஹாவீர்யமுள்ளவர்களான அவ்விருவரும் மேலே தூக்கப்பட்டிருக்கின்ற பெரிய கதையையுடையவர்களாகத் திரும்பி, மீண்டும் மத்யமார்க்கத்தில் நின்றுகொண்டு, வட்டமாக ஸஞ்சரித்தார்கள். பிறகு, மனிதர்களால் செய்வதற்கரிய காரியத்தைச் செய்கின்ற அவ்விருவர்களுக்கும் எட்டடி எதிர்த்துவந்து இரண்டுஇருப்புத்தடிகளாலே மிகுந்தமுயற்சியுடன் யுத்தம்நேர்ந்தது. அப்பொழுது, அவ்விருவர்களும் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு மண்டலகதிகளோடு ஸஞ்சரித்தார்கள். ஸமர்த்தர்களான அவ்விருவர்களும் அப்பொழுது யுத்தச்செய்கையிலுள்ள விசேஷங்களை வெளிப்படுத்திஞர்கள். சிகரங்களுடன்கூடிய இரண்டுமலைகள் போல் மேலே தூக்கப்பட்ட கதாயுதத்தையுடைய அவ்விருவீரர்களும் பரஸ்பரம் அடித்துக்கொண்டு மண்டலகதிகளில் ஸஞ்சரித்தார்கள். அருமையான யுத்தச்செய்கையில் ஸமர்த்தர்களும் யுத்தபூமியில் அசைவற்றுநிற்பவர்களுமான அவ்விருவர்களும் பரஸ்பரம் கோபத்தோடு கதாயுதங்களால் மிகஅடிக்கப்பட்டார்கள். வீரர்களான இருவரும் இந்திரனும் பலியும்போல ஒரேஸமயத்தில் கீழேவிழுந்தார்கள். இரண்டு சேனைகளிலுமுள்ள யுத்தவீரர்கள் அப்பொழுது 'ஆ ஆ' என்று அலறிஞர்கள். மர்மஸ்தானங்களில் நன்ருக அடிக்கப்பட்டவர்களானஅவ்விருவர்களும் மிகச்சோர்வடைந்தார்கள். பிறகு, க்ருபர் யுத்தத்தில் மத்ரர்களுள்சிறந்த சல்யனைத் தமது தேரின்மேல் ஏற்றிவைத்துக்கொண்டு யுத்தகளத்தினின்று விரைவாக வேறிடத்திற்குச் சென்ருர். பீமன் மதங்கொண்டவன்போல் மெய்ம்மறந்தவஞகவிருந்து, ஒருநிமிஷத்தில் மறுபடியும் எழுந்திருந்து கதையைக்கையிற்கொண்டு மத்ரநாதனைச் சண்டைக்கு அழைத்தான். பிறகு, பற்பல சஸ்த்ரங்களையுடைய உம்மைச்சேர்ந்த சூரர்கள் நானுவிதமான வாத்யங்களுடைய சப்தத்தோடு பாண்டவஸேனையை எதிர்த்துப் போர்புரிந்தார்கள். மஹாராஜரே! பிறகு, துர்யோதனனை முதன்

மையாகக்கொண்ட கௌரவ ஸேனாவீரர்கள் இரண்டுகைகளிலும் சஸ்திரங்களைத் தூக்கிக்கொண்டு பேரொலியுடனே எதிர்த்து விரைவாகச் சென்றார்கள். பிறகு, அந்தப் பாண்டுபுத்ரர்கள் அந்தச் சேனையைப் பார்த்துத் துர்யோதனனைக் கொல்லவேண்டுமென்ற விருப்பத்தோடு ஸிம்மநாதஞ் செய்துகொண்டு சென்றார்கள். பரதர்களுட் சிறந்தவரே! உம்முடைய புத்ரன் விரைவாக வருகின்ற அந்த வீரர்களுள் சேகிதானனை ஈட்டியினால் மார்பில் மிகவும் அடித்தான். அந்தச் சேகிதானன் உம்முடைய புத்ரனால் தள்ளப்பட்டும் இரத்த வெள்ளத்தால் நாற்புறமும் நனைக்கப்பட்டும் அதிகமாக மூர்ச்சையடைந்து தேர்நடுவில் விழுந்தான். மஹாரதர்களான பாண்டவவீரர்கள், சேகிதானன் கொல்லப்பட்டதைக்கண்டு, தனித்தனியாகச் சரமாரிகளைத் தடையில்லாமற் பொழிந்தார்கள். மஹாராஜரே! ஜயத்தால் ப்ரகாசிக்கின்ற பாண்டவர்கள் நாற்புறங்களிலும் பார்க்கத் தக்கவர்களாக உம்மைச்சேர்ந்த வீரர்களுடைய படைகளில் சஞ்சரித்தார்கள். க்ருபரும் க்ருதவர்மாவும் மஹாரதனான சகுனியும் மத்ரராஜனைமுன்னிட்டுக்கொண்டு தர்மராஜரை எதிர்த்துப் போர்புரிந்தார்கள். மஹாராஜரே! துர்யோதனன், பாரத்வாஜரைக் கொன்றவனும் அதிகமான வீர்யத்தையும் பராக்ரமத்தையுமுடையவனுமான த்ருஷ்டத்யும்னனை எதிர்த்துப் போர்புரிந்தான். அரசரே! அவ்வாறே, உம்முடைய புத்ரனால் ஏவப்பட்ட மஹாரதர்களான மூவாயிரம் திரிகர்த்தவீரர்கள் விஜயனை எதிர்த்துப் போர்புரிந்தார்கள். மன்னரே! வெற்றியில் உறுதியான எண்ணமுள்ளவர்களும் யுத்தத்தில் உயிரை இழக்கத் துணிந்தவர்களுமான உம்மைச்சேர்ந்த வீரர்கள், அன்னப்பறவைகள் பெரியதடாகத்தில் பிரவேசிப்பதுபோல் (போர்க்களத்தில்)ப்ரவேசித்துவிட்டார்கள். பிறகு, ஒருவரையொருவர் கொல்ல விரும்புகிறவர்களுக்கு ஒருவரையொருவர் கொல்லக்கூடியதும் ஒருவருக்கொருவர் பிரீதியைவிருத்திசெய்கின்றதுமான கோரமான யுத்தம் நடந்தது. வேந்தரே! சிறந்தவீரர்களுக்கு அழிவை உண்டுபண்ணுகின்ற அந்த யுத்தம் நடக்கவே, காற்றால் தூற்றப்பட்ட பூமியினுடைய புழுதியானது கோரமாக மேலேஎழும்பியது. அரசர்களுடைய பெயர்களைக் கேட்பதாலும் சொல்லுவதாலும் ஒருவரை ஒருவர் அறிந்துகொண்டோம். அப்பொழுது, வீரர்கள் பயமற்றவர்கள்போலப் போர்புரிந்தார்கள். புருஷஸ்ரேஷ்டரே! அந்தப் புழுதியானது ரக்தத்தினால் நன்றாகத் தணிக்கப்பட்டது. அந்தப் புழுதியானது அடக்கப்பட்டபொழுது, திசைகளும் நிர்மலமாயின. உம்மைச் சேர்ந்தவர்களுக்கும்

பகைவர்களுக்கும் அதிக கோரமும் பயங்கரமுமான யுத்தமானது அவ்வாறு நடந்துவருந் தருணத்தில் ஒருவனும் புறங்காட்டவில்லை. ஸ்வர்க்கத்தை அடைவதில் விருப்பமுள்ளவர்களான மனிதர்கள், யுத்தத்தில் ஜயத்தைவேண்டினவர்களும் பிரம்மலோகப் பிராப்தியைப் பிரதானமாக உடையவர்களுமாகி நல்லயுத்தத்தினால் பராக்கிரமத்தை வெளியிட்டார்கள். எஜமானனுடைய அன்னத்தைப் புஜித்ததினால் அவன்விஷயத்தில் தாங்கள் பட்டிருக்கிற கடனினின்று விடுபடுவதின்பொருட்டு அவன்கார்யத்தைச் செய்வதில் நிச்சயமுள்ளவர்களான யுத்தவீரர்கள் ஸ்வர்க்கத்தில் பற்றுதலுள்ள மனத்தையுடையவர்களாக அப்பொழுது யுத்தஞ்செய்தார்கள். மஹாரதர்கள் பற்பலவடிவமான சஸ்திரங்களைப்பிரயோகித்துக்கொண்டும் அன்யோன்யம் கர்ஜித்துக்கொண்டும் ஒருவரையொருவர் அடித்தார்கள். உம்முடைய சேனையிலும், அந்தப் பாண்டவர்களுடைய சேனையிலும் 'கொல்லுங்கள்; அடியுங்கள்; பிடியுங்கள்; அறையுங்கள்; வெட்டுங்கள்' என்கிற சொற்கள் கேட்கப்பட்டன. மஹாராஜரே! பிறகு, சல்யன் மஹாரதரும் தர்மநந்தனருமான யுதிஷ்டிரரைக் கொல்லக்கருதிக் கூர்மையுள்ள பாணங்களால் அடித்தான். மஹாராஜரே! உயிர்நிலைகளை அறிந்தவரான யுதிஷ்டிரர் சிரிக்கிறவர்போல் அவனுடைய மர்மஸ்தானங்களைக்குறித்துப் பதினான்குநாராசங்களைப் பிரயோகித்தார். மஹாபலசாலியான மத்ரநாதனும் பாணங்களால் பாண்டவரை நாற்புறத்திலும் தடுத்துக் கொல்லக்கருதி யுத்தத்தில் கோபங்கொண்டு கழுகிறகுகள் பூண்ட அநேக அம்புகளால் அடித்தான். மஹாராஜரே! பிறகு, மத்ரநாதன் எல்லாச்சேனைகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே படிந்த கணுக்களுள்ள ஓர் அம்பினால் யுதிஷ்டிரரை நன்றாக அடித்தான். மிக்ககோபங்கொண்டவரும் மஹாபலசாலியுமான தர்மராஜரும் மத்ரராஜனைக் கூர்மையானவைகளும் கழுகிறகுகளால் வேகமுள்ளவைகளாகச் செய்யப்பட்டவைகளுமான பாணங்களால் அடித்தார். மஹாரதரான தர்மராஜர் சந்திரஸேனனை எழுபதுபாணங்களாலும் ஸாரதியை ஒன்பதுபாணங்களாலும் த்ருமஸேனனை அறுபத்துநான்குபாணங்களாலும் கொன்றார். அரசரே! பிறகு, சல்யன் மஹாத்மாவான பாண்டவரால் சக்ரரக்ஷகன்கொல்லப்பட்டவுடன் இருபத்தைந்து சைத்யர்களைக் கொன்றான்; ஸாத்யகியை இருபத்தைந்து பாணங்களாலும் பீமஸேனனை ஐந்துபாணங்களாலும் மாத்ரீபுத்ரர்களைக் கூர்மையுள்ள நூறு பாணங்களாலும் யுத்தத்தில் அடித்தான். ராஜஸ்ரேஷ்டரே!

யுத்தத்தில் இவ்வண்ணம் ஸஞ்சரிக்கின்ற அந்த மத்ரநாதன்மீது யுதிஷ்டிரர் ஸர்ப்பங்கள்போன்ற கூர்மையுள்ள அம்புகளைப் பிர யோகம் செய்தார். குந்தீபுத்ரரான யுதிஷ்டிரர், யுத்தத்தில் நேரில் நிற்கின்ற அந்த மத்ரநாதனுடைய ரதத்தினின்று கொடியின் நுனி யை ஒரு பல்லத்தினாலே அறுத்தார். மஹாத்மாவான பாண்டு புத்ர ரால் அறுக்கப்பட்டு விழுகின்ற அவனுடையகொடியை அடித்துத் தள்ளப்பட்டிருக்கின்ற ஒருமலையின் சிகரத்தைப்போலக் கண்டோம். வீழ்ந்திருக்கும் கொடியையும் ஸந்நத்தராக நிற்கின்ற பாண்டவரை யும் கண்டு,மத்ரராஜன் மிக்கசினமுள்ளவனாகிச் சரமாரியைப்பொழிந் தான். அளவிடமுடியாத வன்மையுள்ளவனும் க்ஷத்திரியர்களுள் சிறந்தவனுமான சல்யன், வர்ஷதாரைகளைப் பொழிகின்ற மேகம் போலப் பாணவர்ஷத்தை க்ஷத்திரியர்களின்மீது பொழிந்தான். அவன் ஸாத்யகியையும் பீமஸேனனையும் பாண்டுநந்தனர்களான மாத்ரீபுத்ரர்களையும் ஒவ்வொருவரையும் ஐந்துஐந்து பாணங்களால் அடித்து யுதிஷ்டிரரையும் ஹிம்ஸித்தான். மஹாராஜரே! பிறகு, பாண்டவனுடைய மார்பில் பரவியிருக்கின்றபாணமயமான வலையை மேலேகிளம்புகின்ற மேகஸமூகத்தைப்போலக் கண்டோம். மஹா ரதனான சல்யன் யுத்தத்தில் அந்த யுதிஷ்டிரரின்மீது கோபங் கொண்டு நன்றாகப் படிந்தகணுக்களுள்ள அம்புகளால் திசைகளையும் மூலைத்திசைகளையும் நன்றாகமூடினான். பிறகு, பாணஸமூகத்தால் பீடிக்கப்பட்ட யுதிஷ்டிரராஜர் இந்திரனால் பீடிக்கப்பட்ட ஜம்பன் போலச் சல்யனால் வலிமைகுறைந்தவரானார்.

---

## பன்னிரண்டாவது அத்யாயம்.

### சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



(சல்யனுடைய பராக்கிரமவர்ணனை.)

பெரியவரே! தர்மராஜர் மத்திரராஜனால் துன்பப்படுத்தப் பட்ட தருணத்தில், ஸாத்யகியும் பீமஸேனனும் பாண்டுநந்தனர் களான மாத்ரீபுத்ரர்களும் யுத்தத்தில் ரதங்களால் நாற்புறத்திலும் சூழ்ந்துகொண்டு சல்யனைத் துன்புறுத்தினார்கள். அநேகமஹாரதர் களால் துன்பப்படுத்தப்படுகின்ற அஸஹாயனான அந்தச்சல்யனைக் கண்டு, 'நல்லது, நல்லது' என்கிற பெரிதானசப்தம் தோன்றிற்று. ஸித்தர்களும் அதிகஸந்தோஷத்தை உடையவர்களாயினர். சேர்ந்

திருக்கின்ற மஹரிஷிகளும் 'ஆச்சரியம்' என்றுகூறினர்கள். பீமஸேனன், பராக்கிரமவிஷயத்தில், சல்லியமென்ற ஆயுதம்போலிருக்கின்ற சல்யனை யுத்தத்தில் ஒருபாணத்தாலடித்து மீண்டும் ஏழு பாணங்களால்அடித்தான்.ஸாத்யகியும்தருமபுத்திரரைக்காக்கவேண்டுமென்கிறஎண்ணத்தால் இந்தமத்திரநாதன்மீது நூறுபாணங்களை இறைத்துப் பிறகு சிங்கநாதஞ்செய்தான். நகுலனும் ஸஹதேவனும் அந்தச்சல்யனை ஐவைந்து பாணங்களாலடித்து மறுபடியும் அவனை எவ்வேழுபாணங்களால் விரைந்துஅடித்தார்கள். பெரியவரே! சூரனும் யுத்தத்தில் முயற்சியுள்ளவனுமான அந்தச்சல்யன், அந்தமஹாரதர்களால் துன்பத்தையடைவிக்கப்பட்டவனுகக் கோரமானதும் (பகைவரின்) சேனையின் மிகுதியை அழிக்கின்றதும் சிறந்தவேகமுள்ளதுமான வில்லைஇழுத்து ஸாத்யகியை இருபத்தைந்து பாணங்களாலும், பீமஸேனனை எழுபதுபாணங்களாலும், அவ்வாறே நகுலனை ஏழுபாணங்களாலும் அடித்தான். பிறகு, அந்தச்சல்யன் விற்பிடித்த ஸஹதேவனுடைய அம்பையும் வில்லையும் ஒருபல்லத்தால் அறுத்து யுத்தத்தில் அந்தஸஹதேவனை இருபத்தொருபாணங்களால் அடித்தான். ஸஹதேவனே,யுத்தத்தில் வேறுவில்லை நாணேற்றிஅளவில்லாத தேஜஸுள்ள மாதுலனை ஸர்ப்பம்போன்ற வடிவமுள்ளவையும் ஜ்வலிக்கின்ற அக்னிபோன்றவையுமான ஐந்துபாணங்களால் நன்ருகஅடித்தான். படிந்தகணுக்களுள்ள ஒருபாணத்தால் யுத்தத்தில் அவனுடைய ஸாரதியை அடித்து மிக்ககோபமூண்டவனுக அவனை மறுபடியும் மூன்றுபாணங்களால் அடித்தான். பீமஸேனனே எழுபதுபாணங்களையும் அவ்வாறே ஸாத்யகியும் தருமராஜரும் ஒன்பதுபாணங்களையும் அறுபதுபாணங்களையும் சல்யனுடைய சரீரத்தில் பிரயோகித்தார்கள். மஹாராஜரே! பிறகு, அந்தமஹாரதர்களால் நன்குஅடிக்கப்பட்ட சல்யன், மலையானது தாதுரஸத்தைப் பெருக்குவதுபோல் அங்கங்களால் இரத்தத்தைப் பெருக்கினன். அரசரே! சல்யன் மஹாவில்லாளிகளான அவ்வனைவரையும் ஐந்து ஐந்துபாணங்களால் விரைவாக அடித்தான். அது ஆச்சரியமாயிருந்தது. பெரியவரே! சிறந்த மஹாரதனுன அந்தச்சல்யன், பிறகு, மற்ருெருபல்லத்தினல் தருமபுத்திரருடைய நாணேற்றப்பட்டிருக்கிறவில்லை யுத்தத்தில் துண்டித்தான். பிறகு, தருமநந்தனரான யுதிஷ்டிரர் வேருெருவில்லைக் கையில்எடுத்துச் சல்யனையும் குதிரைகளையும் ஸாரதியையும் துவசத்தையும் ரதத்தையும் அம்புகளால் நன்கு மறைத்துவிட்டார். யுத்தத்தில் தருமபுத்ரருடைய பாணங்

களால் மறைக்கப்பட்ட அந்தச்சல்யன், பிறகு, கூர்மையுள்ள பத்துப் பாணங்களால் யுதிஷ்டிரரை அடித்தான். பிறகு, ஸாத்யகியோ தருமபுத்திரர் பாணங்களால் பீடிக்கப்படவே, கோபமூண்டவனாகி, சூரனை மத்ரதேசாதிபதியை ஐந்துபாணங்களால் அடித்தான். அந்தச் சல்யன் ஒருக்ஷுரப்ரத்தினால் ஸாத்யகியினுடைய பெரியவில்லை வெட்டினான். பீமஸேனனைத் தலைவனாகக்கொண்ட அந்தப்பாண்டவ வீரர்களையும் மும்மூன்றுபாணங்களால் அடித்தான். மஹாராஜரே! ஸத்யவிக்ரமனான ஸாத்யகி அவன்மீது கோபங்கொண்டு, மஹாயுத்தத்தில் பொன்மயமான தண்டத்துடன்கூடின தோமரத்தைப் பிரயோகித்தான். சல்யனை யுத்தத்தில் கொல்லக்கருதிய பீமஸேனனும் நகுலனும் ஸஹதேவனும் தருமராஜரும் யுத்தத்தில் ஜ்வலிக்கின்ற ஸர்ப்பம்போன்ற நாராசத்தையும் சக்தியையும் மங்களகரமான கதையையும் சதக்னியையும் பிரயோகித்தார்கள். அந்த மத்திரராஜன் ஐந்துவீரர்களுடைய கைகளினின்றும் விடுபட்டு வேகத்துடன் வந்துகொண்டேயிருக்கின்ற அவ்வாயுதங்களை யுத்தத்தில் சஸ்திரஸமூகங்களால் தடுத்தான். யுத்தத்தில் கைப்பழக்கமுள்ளவனும் பிரதாபசாலியுமான சல்யன், ஸாத்யகியினால் பிரயோகிக்கப்பட்ட தோமரத்தைப் பல்லங்களால்வெட்டினான்; பீமஸேனனால் பிரயோகிக்கப்பட்டதும் பொற்கலன்பூண்டதுமான ஓர்அம்பை இரண்டாக வெட்டினான்; நகுலனாற் பிரயோகிக்கப்பட்டதும் பொற்காம்புள்ளதும் பயங்கரமாயிருப்பதுமான சக்தியை இரண்டாகத் துண்டாக்கினான். ஸஹதேவனால் விடப்பட்ட கதாயுதத்தையும் பாணஸமூகங்களால் தடுத்தான்; பாரதரே! பாண்டுபுத்திரர்கள் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே தர்மராஜருடைய அந்தச்சதக்னியை இரண்டுபாணங்களால் துண்டித்துச் சிங்கநாதமும் செய்தான். சினியின்பௌத்திரனைஸாத்யகி அந்தயுத்தத்தில் சத்துருவின் வெற்றியைப் பொறுக்கவில்லை. பிறகு, கோபமூண்டவனான அவன் வேறுவில்லையெடுத்து இரண்டுபாணங்களால் மத்திரநாதனை அடித்து ஸாரதியையும் மூன்றுபாணங்களால் அடித்தான். வேந்தரே! பிறகு, சல்யன் யுத்தத்தில் மிகுந்தகோபங்கொண்டவனாகப் பெரியயானைகளை மாவெட்டிகளால் அடிப்பதுபோல அவர்களனைவரையும் பத்துப்பாணங்களால் அடித்தான். பகைவர்களை அழிப்பவர்களான அந்தமஹாரதர்கள், யுத்தத்தில் மத்திரராஜனால் தடுக்கப்பட்டவர்களாகி, அவனுக்கு முன்நிற்கச் சக்தியற்றவர்களானார்கள். பிறகு, துரியோதனராஜன், சல்யனுடைய வல்லமையைக்கண்டு, பாண்டவர்களையும் பாஞ்சாலர்களையும் ஸ்ருஞ்

சயர்களையும், மாண்டவர்களாவே எண்ணினன். மஹாராஜரே! புருஷ ஸ்ரேஷ்டரே! அவ்விதமான மத்ரராஜனுடைய அந்த வல்லமை யானது, யுத்தத்தில் மனிதர்களால் ஸகிக்கமுடியாததாயிற்று. அர சரே! பிறகு, நீண்டகைகளுள்ளவனும் சிறந்தபிரதாபமுள்ளவனு மானபீமஸேனன்,மனத்தில்உயிரைவிடத்துணிந்து மத்திரநாதனோடு எதிர்த்துப் போராடினன். நகுலனும்ஸஹதேவனும் மஹாரதனை ஸாத்யகியும்அப்பொழுதுசல்யனை நான்குபுறத்திலும்சூழ்ந்துகொண்டு நாற்புறங்களிலும் பாணங்களை இறைத்தனர். மஹாரதனும் பிரதாப சாலியுமான அந்த மத்திரராஜன், சிறந்தவில்லாளிகளான நான்கு பாண்டவர்களால் சூழப்பட்டு அவர்களை எதிர்த்துப் போர்புரிந்தான். மன்னரே! அரசரானதருமநந்தனர் மஹாயுத்தத்தில் க்ஷுரப்ரத் தினல் மத்திரராஜனுடைய சக்ரரக்ஷகனை விரைவாகக் கொன் றூர். சூரனும் மஹாரதனுமான அந்தச் சக்ரரக்ஷகன் கொல்லப் படவே, பலசாலியான மத்திரராஜனும் ஸைனிகர்களை அம்புளால் மறைத்தான். அரசரே! பிறகு, தமது அந்தப்போர்வீரர்கள் சூழப் பட்டிருக்கின்றதைக்கண்டு தருமநந்தனரான யுதிஷ்டிரர், 'யுத்தத் தில், மஹிமைதங்கியதான அந்த மாதவருடைய வாக்கியமானது ஏன் உண்மையாகாது? யுத்தத்தில் கோபங்கொண்டவனை சல் யன் என் சேனையை நாசஞ்செய்வானே? நானும் என்ஸஹோதரர் களும் மஹாரதனை ஸாத்யகியும் பாஞ்சாலர்களும் ஸ்ருஞ்சயர்க ளும் மத்திரநாதனை எதிர்க்கச் சக்தியற்றவர்களாயினோமன்றோ? மஹாபலசாலியான மாதுலன் நம்மை இப்போதே கொல்வான். கோவிந்தருடைய வாக்கியம் உண்மையாவது எப்படி? இதென்ன?' என்று ஆலோசித்தார். பாண்டுவுக்கு மூத்தவரே! பிறகு, ரதங் களோடும் யானைகளோடும் குதிரைகளோடுங்கூடினபாண்டவர்கள் நாற் புறத்திலும் மத்திரராஜனைத் துன்புறுத்திக்கொண்டு நெருங்கினர் கள். பற்பலவிதமான சஸ்திரங்களுடைய கூட்டங்களால் நிறைந்த தும் நன்றாகப் பிரயோகிக்கப்பட்டதுமான ஆயுதவருஷத்தை மத்ர ராஜன், காற்றானது பெரியமேகங்களை நாசஞ்செய்வதுபோல யுத்தத் தில் நாசஞ்செய்தான். பிறகு, பொற்கட்டுக்களுள்ளதும் சல்யனல் பிர யோகிக்கப்பட்டதும் ஆகாயத்தையடைந்திருப்பதுமான அம்புச்சா மாரியை விட்டிற்பூச்சிகளின் கூட்டத்தைப்போலக் கண்டோம். மத் திரராஜனல் யுத்தமுனையில் பிரயோகிப்பட்டவையும் தொடர்ந்துவரு கின்றவையுமான அவ்வம்புகள் விட்டில்களுடையகூட்டங்கள்போலக் காணப்பட்டன. ஜனதிபரே! மத்திரராஜனுடையவில்லின்றுவிடுபட்ட

வையும் பொற்பணிகளுடன் கூடியவையுமான அம்புகளால் ஆகாயமானது இடைவெளியற்றதுபோல் ஆயிற்று. அந்த மஹாயுத்தத்தில் பெரியபாணாந்தகாரம் உண்டுபண்ணப்பட்டபோது, அங்கே பாண்டவருக்குள்ளாவது நம்மவருக்குள்ளாவது ஒன்றும் காணப்படவில்லை. பலசாலியான மத்திரராஜனால் லாகவத்தாற் பிரயோகிக்கப்பட்ட சரமாரிகளால் நிலைதவறும்படி செய்யப்படுகின்ற பாண்டவர்களுடைய அந்தச் சேனைக்கடலைக்கண்டு தேவர்களும் கந்தர்வர்களும் அஸுரர்களும் அதிகவியப்பை அடைந்தனர். பெரியவரே! அந்தச்சல்யனோ, நான்குபக்கங்களிலும் முயற்சியுள்ளவர்களாயிருக்கின்ற அவ்வீரர்களைப் பாணங்களால் மறைத்து, தருமராஜரையும் மூடிச் சிங்கம் போல அடிக்கடி கர்ஜித்தான். யுத்தத்தில் அந்தச்சல்யனால் மூடப்பட்ட அந்தப்பாண்டவர்களைச் சேர்ந்த மஹாரதர்கள் யுத்தத்தில் மஹாரதனான சல்யனை எதிர்த்துச் செல்வதற்கு அப்பொழுது சக்தியற்றவர்களானார்கள். தருமராஜரை முந்தியவராகக்கொண்டவர்களும் பீமஸேனனைத் தலைவனாகக்கொண்டவர்களுமான ரதிகர்கள், சூரனும் யுத்தத்தில் பிரகாசிக்கின்றவனுமான சல்யனை யுத்தத்தில் அடித்தார்கள்.

---

## பதின்மூன்றுவது அத்யாயம்.

## சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



### (ஸங்குல யுத்தம்.)

அர்ஜுனன், யுத்தத்தில் துரோணபுத்திரராலும் அவருடன் வருகின்றவர்களும் சூரர்களும் மஹாரதர்களுமான திரிகர்த்தவீரர்களாலும் அனேக அம்புகளால் அடிக்கப்பட்டான். மஹாராஜரே! அவன் துரோணபுத்திரரை மூன்று பாணங்களாலும் மற்றச் சிறந்த வில்லாளிகளை இரண்டிரண்டு பாணங்களாலும் அடித்து மறுபடியும் யுத்தத்தில் சரமாரிகளைப் பொழிந்தான். பரதர்களுட் சிறந்தவரே! பாணங்களால் முள்ளைப்போலத் தைக்கப்பட்டிருக்கின்ற அந்த உம்மைச்சேர்ந்த வீரர்களோ பார்த்தனை அணுகிக் கூர்மையுள்ள பாணங்களாலடிக்கப்பட்டிருந்தும், (அவனை) விட்டு விலகவில்லை. துரோணபுத்திரரைத் தலைவராகக்கொண்ட கௌரவ வீரர்கள் அர்ஜுனனைத் தேர்க்கூட்டத்தால் சூழ்ந்துகொண்டும் களிப்புடன் போராடிக்கொண்டும் விளங்கினார்கள். அரசரே!

சயர்களையும், மாண்டவர்களாவே எண்ணினன். மஹாராஜரே! புருஷ ஸ்ரேஷ்டரே! அவ்விதமான மத்ரராஜனுடைய அந்த வல்லமையானது, யுத்தத்தில் மனிதர்களால் ஸகிக்கமுடியாததாயிற்று. அரசரே! பிறகு, நீண்டகைகளுள்ளவனும் சிறந்தபிரதாபமுள்ளவனுமானபீமஸேனன், மனத்தில்உயிரைவிடத் துணிந்து மத்திரநாதனோடு எதிர்த்துப் போராடினன். நகுலனும்ஸஹதேவனும் மஹாரதனை ஸாத்யகியும்அப்பொழுதுசல்யனை நான்குபுறத்திலும்சூழ்ந்துகொண்டு நாற்புறங்களிலும் பாணங்களை இறைத்தனர். மஹாரதனும் பிரதாபசாலியுமான அந்த மத்திரராஜன், சிறந்தவில்லாளிகளான நான்கு பாண்டவர்களால் சூழப்பட்டு அவர்களை எதிர்த்துப் போர்புரிந்தான். மன்னரே! அரசரானதருமநந்தனர் மஹாயுத்தத்தில் க்ஷுரப்ரத்தினால் மத்திரராஜனுடைய சக்ரரக்ஷகனை விரைவாகக் கொன்றார். சூரனும் மஹாரதனுமான அந்தச் சக்ரரக்ஷகன் கொல்லப்படவே, பலசாலியான மத்திரராஜனும் ஸைனிகர்களை அம்புகளால் மறைத்தான். அரசரே! பிறகு, தமது அந்தப்போர்வீரர்கள் சூழப்பட்டிருக்கின்றதைக்கண்டு தருமநந்தனரான யுதிஷ்டிரர், 'யுத்தத்தில், மஹிமைதங்கியதான அந்த மாதவருடைய வாக்கியமானது ஏன் உண்மையாகாது? யுத்தத்தில் கோபங்கொண்டவனை சல்யன் என் சேனையை நாசஞ்செய்வானு? நானும் என்ஸஹோதரர்களும் மஹாரதனை ஸாத்யகியும் பாஞ்சாலர்களும் ஸ்ருஞ்சயர்களும் மத்திரநாதனை எதிர்க்கச் சக்தியற்றவர்களாயினேமன்றோ? மஹாபலசாலியான மாதுலன் நம்மை இப்போதே கொல்வான். கோவிந்தருடைய வாக்கியம் உண்மையாவது எப்படி? இதென்ன?' என்று ஆலோசித்தார். பாண்டுவுக்கு மூத்தவரே! பிறகு, ரதங்களோடும் யானைகளோடும் குதிரைகளோடுங்கூடினபாண்டவர்கள் நாற்புறத்திலும் மத்திரராஜனைத் துன்புறுத்திக்கொண்டு நெருங்கினர்கள். பற்பலவிதமான சஸ்திரங்களுடைய கூட்டங்களால் நிறைந்ததும் நன்றாகப் பிரயோகிக்கப்பட்டதுமான ஆயுதவருஷத்தை மத்ரராஜன், காற்றானது பெரியமேகங்களை நாசஞ்செய்வதுபோல யுத்தத்தில் நாசஞ்செய்தான். பிறகு, பொற்கட்டுக்களுள்ளதும் சல்யனால் பிரயோகிக்கப்பட்டதும் ஆகாயத்தையடைந்திருப்பதுமான அந்தச்சரமாரியை விட்டிற்பூச்சிகளின் கூட்டத்தைப்போலக் கண்டோம். மத்திரராஜனால் யுத்தமுனையில் பிரயோகிப்பட்டவையும் தொடர்ந்துவருகின்றவையுமான அவ்வம்புகள் விட்டில்களுடையகூட்டங்கள்போலக் காணப்பட்டன. ஜனதிபரே! மத்திரராஜனுடையவில்லின்றுவிடுபட்ட

வையும் பொற்பணிகளுடன் கூடியவையுமான அம்புகளால் ஆகாயமானது இடைவெளியற்றதுபோல் ஆயிற்று. அந்த மஹாயுத்தத்தில் பெரியபாணாந்தகாரம் உண்டுபண்ணப்பட்டபோது, அங்கே பாண்டவருக்குள்ளாவது நம்மவருக்குள்ளாவது ஒன்றும் காணப்படவில்லை. பலசாலியான மத்திரராஜனால் லாகவத்தாற் பிரயோகிக்கப்பட்ட சரமாரிகளால் நிலைதவறும்படி செய்யப்படுகின்ற பாண்டவர்களுடைய அந்தச் சேனைக்கடலைக்கண்டு தேவர்களும் கந்தர்வர்களும் அஸுரர்களும் அதிகவியப்பை அடைந்தனர். பெரியவரே! அந்தச்சல்யனோ, நான்குபக்கங்களிலும் முயற்சியுள்ளவர்களாயிருக்கின்ற அவ்வீரர்களைப் பாணங்களால் மறைத்து, தருமராஜரையும் மூடிச் சிங்கம்போல அடிக்கடி கர்ஜித்தான். யுத்தத்தில் அந்தச்சல்யனால் மூடப்பட்ட அந்தப்பாண்டவர்களைச் சேர்ந்த மஹாரதர்கள் யுத்தத்தில் மஹாரதனான சல்யனை எதிர்த்துச் செல்வதற்கு அப்பொழுது சக்தியற்றவர்களானார்கள். தருமராஜரை முந்தியவராகக்கொண்டவர்களும் பீமஸேனனைத் தலைவனாகக்கொண்டவர்களுமான ரதிகர்கள், சூரனும் யுத்தத்தில் பிரகாசிக்கின்றவனுமான சல்யனை யுத்தத்தில் அடித்தார்கள்.

---

## பதின்மூன்றுவது அத்யாயம்.

## சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



### (ஸங்குல யுத்தம்.)

அர்ஜுனன், யுத்தத்தில் துரோணபுத்திரராலும் அவருடன் வருகின்றவர்களும் சூரர்களும் மஹாரதர்களுமான திரிகர்த்தவீரர்களாலும் அனேக அம்புகளால் அடிக்கப்பட்டான். மஹாராஜரே! அவன் துரோணபுத்திரரை மூன்று பாணங்களாலும் மற்றச் சிறந்த வில்லாளிகளை இரண்டிரண்டு பாணங்களாலும் அடித்து மறுபடியும் யுத்தத்தில் சரமாரிகளைப் பொழிந்தான். பரதர்களுட் சிறந்தவரே! பாணங்களால் முள்ளைப்போலத் தைக்கப்பட்டிருக்கின்ற அந்த உம்மைச்சேர்ந்த வீரர்களோ பார்த்தனை அணுகிக் கூர்மையுள்ள பாணங்களாலடிக்கப்பட்டிருந்தும், (அவனை) விட்டு விலகவில்லை. துரோணபுத்திரரைத் தலைவராகக்கொண்ட கௌரவ வீரர்கள் அர்ஜுனனைத் தேர்க்கூட்டத்தால் சூழ்ந்துகொண்டும் களிப்புடன் போராடிக்கொண்டும் விளங்கினார்கள். அரசரே!

அவர்களால் எய்யப்பட்டதும் பொன்னினால் அலங்கரிக்கப்பட்டதுமான பாணங்கள் அர்ஜுனனுடைய தேரின் நடுவிடத்தை விரைவாக நிரப்பின. அவ்வாறே, மஹாவில்லாளிகளும் எல்லா வில்லாளிகளுள்ளும் சிறந்தவர்களுமான கிருஷ்ணார்ஜுனர்களை யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவர்களான கௌரவவீரர்கள், மிகுந்த உற்சாகமுடையவர்களாகிக் கோரமான பாணங்களால் அடித்தார்கள். பிரபுவே! அப்பொழுது, கூபரமும் தேருருளைகளும் மூக்கணையும் பூட்டுவார்களும் நுகத்தடியும் அநுகர்ஷமும் பாணமயமாகிவிட்டன. அரசரே! அந்தயுத்தத்தில் உம்மைச் சேர்ந்தவீரர்கள் பார்த்தன்விஷயத்தில் செய்ததான இப்படிப்பட்ட காரியமானது முன் நம்மால் பார்க்கப்பட்டதுமில்லை; கேட்கப்பட்டதுமில்லை. விசித்திரமான கட்டுக்களுடன்கூடின கூர்மையுள்ள அம்புகளால் நாற்புறத்திலும் அந்தத்தேரானது, புவியில் அனேகம்தீப்பந்தங்களால் நன்றாகவிளங்குகின்ற விமானம்போல விளங்கிற்று. மஹாராஜரே! பிறகு, அர்ஜுனன் படிந்தகணுக்களுள்ள அம்புகளை மேகமானது மழையை மலையின்மீது இறைப்பதுபோல அச்சேனையின் மீது இறைத்தான். யுத்தத்தில் பார்த்தனுடையபெயரால் அடையாளமிடப்பட்ட அம்புகளால் வதம்செய்யப்படுகின்ற அவர்கள் அப்படிப்பட்ட அர்ஜுனனைப் பார்ப்பவர்களாக (அனைத்தையும்) பார்த்தமயமாக எண்ணினார்கள். கோபத்தினால் இழுத்துவிடப்பட்ட அம்புகளாகிற ஜ்வாலைகளையுடையதும், வில்லினொலிகளாகிற காற்றுடன் கூடியதுமான பார்த்தனாகிற பெருந்தீயானது உம்முடையஸைனியமாகிற விறகை விரைவாக எரித்தது. பாரதரே! பாக்கியமுள்ளவரே! பூமியில்விழுகின்றசக்ரங்கள், நுகத்தடிகள், அம்புத்தூணிகள், கொடிகள், ரதங்கள், துவஜங்கள், மூக்கணைகள், அனுகர்ஷங்கள், திரிவேணுக்கள், அச்சுக்கள், பூட்டுவார்கள், கொறடாக்கள், குண்டலங்களையும் தலைப்பாகைகளையும் தரித்தவைகளாக விழுகின்றதலைகள், கைகள், தோள்கள், விசிறிகளுடன்கூடின குடைகள், மகுடங்கள் ஆகிய இவைகளின் குவியல்கள், பார்த்தனுடைய தேர் செல்லும்வழிகளில் எங்கும் காணப்பட்டன. பரதர்களுட்சிறந்தவரே! பூமியானது மாமிசங்களாலும் இரத்தங்களாலும் சேறுள்ளதாகவும் செல்லமுடியாத தோற்றமுள்ளதாகவும், பயப்படுகிறவர்களுக்குப் பயத்தைப்பெருக்குகிறதாகவும், சூரர்களுக்கு ஸந்தோஷத்தை விருத்திபண்ணுகின்றதாகவும் ருத்திரருடைய உத்யானம் போன்றதாகவும் இருந்தது. பகைவரைவாட்டுபவனான பார்த்தன்

ரதகுப்திகளுடன்கூடின இரண்டாயிரம் ரதங்களை யுத்தத்தில் நாசஞ்செய்து புகைதணிந்த நெருப்புப்போல ஜ்வலித்தான். அரசரே! பகவானான அக்நி ஜங்கமஸ்தாவரங்களான உலகத்தைக் கொளுத்திப் புகைதணிந்ததாகஎவ்விதம் காணப்படுமோ, அவ்விதமே குந்திபுத்திரனான தனஞ்சயனும் காணப்பட்டான். துரோணபுத்திரரோ, யுத்தத்தில் பாண்டவனுடைய பராக்கிரமத்தைக்கண்டு, உயர்ந்தகொடிமரத்துடன்கூடிய ரதத்தோடு பாண்டவனை எதிர்த்துத் தடுத்தார். வெண்ணிறமுள்ள குதிரையையுடையவர்களும் வில்லாளிகளுட் சிறந்தவர்களும் புருஷஸ்ரேஷ்டர்களுமான அவ்விருவர்களும் அப்பொழுது பரஸ்பரவதத்தில் விருப்பமுள்ளவர்களாக ஒருவரை ஒருவர் எதிர்த்தார்கள். மஹாராஜரே! பரதர்களுட் சிறந்தவரே! மாரிக்காலத்தில் மேகங்களினின்று எவ்வாறு மழை உண்டாகுமோ, அவ்வாறே அவ்விருவர்களிடமிருந்தும் மிகுந்தபயங்கரமான அம்புமழையானது உண்டாயிற்று. பரஸ்பரம் ஸ்பர்த்தையுள்ளவர்களாக அவ்விருவரும் கொம்புகளால் இரண்டுவிருஷபங்கள் கீறிக்கொள்வதுபோலப் படிந்த கணுக்களுடன்கூடின பாணங்களால் அப்பொழுது ஒருவரையொருவர் கீறிக்கொண்டார்கள். மஹாராஜரே! அவ்விருவர்களுக்கும் நெடுநேரம் யுத்தமானது ஸமமாக இருந்தது. அந்த யுத்தத்தில் கோரமான சஸ்திரங்களுடைய மோதுதல் மறுபடியும் உண்டாயிற்று. பாரதரே! பிறகு, அஸ்வத்தாமா பொற்கட்டுக்களுடன்கூடியவையும் நன்ருகத் தீட்டப்பட்டவையுமான பன்னிரண்டு பாணங்களால் அர்ஜுனனையும் பத்துப் பாணங்களால் வாஸுதேவரையும் அடித்தார். பிறகு, பீபத்ஸுவானவன் அட்டஹாஸஞ்செய்து, காண்டீவமென்கிற வில்லை நாணொலியிடச்செய்தான். பகைவர்களைத் தவிக்கச்செய்பவனான ஸவ்யஸாசி மஹாயுத்தத்தில் குருபுத்ரரான அஸ்வத்தாமாவை ஒரு முகூர்த்தகாலம் கௌரவித்து, பிறகு, அவரைக் குதிரைகளையும் ஸாரதியையும்இழந்த ரதத்தையுடையவராகச் செய்தான்; பிறகும், அவரை மெதுவாகவே அடிக்கடி அடித்தான். குதிரைகள் கொல்லப்பட்ட தேரில்வீற்றிருக்கின்ற துரோணபுத்திரர், உருக்கினாலாகியதும் பரிகம்போன்றதுமான உலக்கையைப் பாண்டுபுத்திரன்மீது பிரயோகித்தார். பகைவர்களை அழிப்பவனும் வீரனுமான பார்த்தன் விரைவாக வருகின்றதும் பொற்கட்டுக்களால் அலங்கரிக்கப்பட்டதுமான அவ்வுலக்கையை ஏழாகத் துண்டித்தான். மிக்க கோபமுள்ளவரான அந்த அஸ்வத்தாமா முஸலம் அறுக்கப்பட்ட

தைக்கண்டு சிறந்தமலையினுடைய சிகரம்போன்ற கோரமான பரிகாயுதத்தைக் கையிலெடுத்தார். யுத்தத்தில் ஸாமர்த்தியமுடையஅஸ்வத்தாமா பார்த்தனைக்குறித்து அந்தப்பரிகாயுதத்தை ப்ரயோகிக்கவும் செய்தார். கோபங்கொண்ட அந்தகன்போன்ற அந்தப்பரிகாயுதத்தைக்கண்டு பாண்டுநந்தனனான அர்ஜுனன் விரைவுடன் சிறந்த ஐந்துபாணங்களால் அடித்தான். பாரதரே! பெரும்போரில் பார்த்தனுடைய பாணங்களால் அறுக்கப்பட்ட பரிகாயுதமானது ஒலியால் ராஜஸ்ரேஷ்டர்களுடையமனத்தைப் பிளந்துகொண்டு பூமியில் விழுந்தது. பிறகு, பாண்டவன் வேறு மூன்றுபல்லங்களால் அஸ்வத்தாமாவைப் பிளந்தான். பலசாலியும் மிக்கதைர்யமுள்ளவனுமான பார்த்தனால் மிக அடிக்கப்பட்ட அந்த அஸ்வத்தாமா ஆண்மையில் நிலைபெற்றவராகி அப்பொழுது அசையவில்லை. அரசரே! பிறகு, அஸ்வத்தாமா மஹாரதனான ஸுரதன்மீது எல்லா க்ஷத்திரியர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பாணஸமூகங்களை இறைத்தார். பிறகு, பாஞ்சாலர்களுள் மஹாரதனான ஸுரதனே யுத்தத்தில் மேகத்தின் இடிமுழக்கம்போன்ற ஒலியுடன் கூடின ரதத்துடன் துரோணபுத்திரரையே எதிர்த்துச் சென்றான். அவன் ஸர்வபாரங்களையும் பொறுக்கக்கூடிய உறுதியான சிறந்த வில்லை இழுத்து நெருப்புக்கும் பாம்புக்குமொப்பான அம்புகளால் துரோணபுத்திரரை அடித்தான். பிறகு, கோபமுள்ளவனும் எதிர்த்துவருகின்றவனும் மஹாரதனுமான அந்த ஸுரதனைப்பார்த்து யுத்தத்தில் துரோணபுத்திரர் தடியாலடிக்கப்பட்ட ஸர்ப்பம்போலக் கோபித்தார். துரோணகுமாரர், புருவங்களை முக்கோணமாக நெறித்துக்கொண்டும் இரண்டுகடைவாய்களையும் நக்கிக்கொண்டும் ஸுரதனை ஏறஇறங்கப்பார்த்து ரோஷத்தினால் வில்லிலுள்ள நாணை உருவிக்கொண்டும் யமதண்டம்போன்ற பிரகாசமுடையதும் கூர்மையுள்ளதுமான ஒரு நாராசத்தைப் பிரயோகித்தார். அதிகவேகமுள்ள அந்த நாராசமானது இந்திரனால் விடப்பட்ட இடியானது பூதலத்தைப் பிளந்துசெல்வதுபோல அவன்இருதயத்தைப்பிளந்து பூமியில் பிரவேசித்துவிட்டது. வஜ்ரத்தால் பிளக்கப்படுகிற மலையின் கொடுமுடியானது கீழேவிழுவதுபோல நாராசத்தால் அடிக்கப்பட்ட அந்தஸுரதன் பூமியில் * விழுந்தான். அந்தவீரன் கொல்லப்பட்டவுடன், சிறந்த பிரதாபமுள்ளவரும் ரதிகர்களுள் உத்தமருமான

* துரோணபர்வம் 608-ம்பக்கம் 30-வது வரியில், 'கொன்றார்' என்பதை 'அடித்தார்' என்று மாற்றிக்கொள்க.

துரோணபுத்திரர் அந்த ரதத்தின்மீது விரைவாகஏறினர். மஹாராஜரே! பிறகு, யுத்தத்தில் ஸம்சப்தகர்களால் சூழப்பட்டவரும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவருமான அஸ்வத்தாமா ஸந்நத்தராயிருந்துகொண்டு அர்ஜுனனோடு போர்புரிந்தார். அந்த ரணகளத்தில் ஸூர்யன் நடுப்பகலை அடைந்திருக்கும்பொழுது அர்ஜுனனுக்குப் பகைவர்களோடு, யமனுடையராஜ்யத்தை விருத்திபண்ணுகின்றதான பெரும்போர் நடந்தது. அந்தயுத்தத்தில், அர்ஜுனன் ஒருவனாகவே இருந்துகொண்டு ஒரேஸமயத்தில் பலவீரர்களோடு அவர்களின் பராக்ரமத்தைக்கண்டு போர்புரிந்ததை ஆச்சர்யமாகக்கண்டோம். இந்திரனுக்கு முற்காலத்தில் பெரிதான அஸுரசேனையோடு பெரும் போர் நேர்ந்ததுபோல அர்ஜுனனுக்குப் பகைவர்களோடு பெரும் போர் உண்டாயிற்று.

---

## பதினன்காவது அத்யாயம்.

## சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



(ஸங்குலயுத்தம்.)

மஹாராஜரே! துரியோதனனும் பார்ஷதனை திருஷ்டத்யும்னனும் அம்புகளாலும் சக்திகளாலும் நிறைந்திருக்கின்ற மிக்கபெரிதான யுத்தத்தை நடத்தினர்கள்; வேந்தரே! பிறகு, கார்காலத்தில் மேகங்களினின்றும் நாற்புறத்திலும் நீர்த்தாரைகள் விழுவதுபோல ஆயிரமாயிரமாகச் சரதாரைகளைப் பொழிந்தனர். துர்யோதனனும், துரோணரைக்கொன்றவனும் உக்கிரமான பாணங்களையுடையவனுமான திருஷ்டத்யும்னனை விரைவாகச்செல்லும் ஐந்துபாணங்களால் அடித்து மறுபடியும் ஏழுபாணங்களால் அடித்தான். பலசாலியும் மிக்கவலிமையுள்ளவனுமான திருஷ்டத்யும்னனோ, யுத்தத்தில் எழுபதுபாணங்களால் அரசனைத் துன்பப்படுத்தினன். பரதருட்சிறந்தவரே! அரசன் துன்புறுத்தப்பட்டதைக்கண்டு, ஸகோதரர்கள் பெரியசேனையுடன் பார்ஷதனைச் சூழ்ந்துகொண்டார்கள். அதிரதர்களான அந்தச்சூரர்களால் நான்குபுறமும் நன்குசூழப்பட்ட அந்தத் திருஷ்டத்யும்னன் யுத்தத்தில் அஸ்திரலாகவத்தை வெளிப்படுத்திக்கொண்டு ஸஞ்சாரஞ்செய்தான். சிகண்டியானவன் ப்ரபத்திரகர்களுடன்கூடினவனாக வில்லாளியான கிருதவர்மாவையும் மஹாரதரான க்ருபரையும் எதிர்த்துச்

சண்டைசெய்தான். அரசரே! பிராணனைப் பந்தயமாகவைத்து ஆடுகின்ற சூதாகியபோரில் பிராணனை இழக்கின்றவர்களான வீரர்களுக்கு மிக்ககோரமாயும் அதிகப்பெரிதாயுமுள்ள சண்டையானது அவ்விடத்திலும் நேர்ந்தது. சல்யன் அம்புமாரிகளைஎல்லாத்திசைகளிலும் பொழிந்துகொண்டு, ஸாத்யகியும் பீமஸேனனும் உள்ளிட்ட பாண்டவர்களைத் துன்புறுத்தினான். ராஜேந்திரரே! அவ்வாறே, சல்யன், யுத்தத்தில் யமன்போன்ற பராக்ரமத்துடன்கூடினவர்களும் இரட்டையருமான அந்த நகுலஸஹதேவர்களை வீர்யத்தாலும் அஸ்திர பலத்தாலும் எதிர்த்துப் போராடினான். அந்தப்பெரும்போரில் சல்யனுடைய பாணங்களால் தூரத்தப்பட்ட பாண்டவவீரர்களுள் சில மஹாரதர்கள் ரக்ஷகனை அடையவில்லை. பிறகு, தருமராஜர் மிக உபத்ரவிக்கப்பட்டபொழுது, சூரனும் மாத்ரீகுமாரனுமான நகுலன் வேகத்துடன் மாதுலனான சல்யனை எதிர்த்து விரைவாகச் சென்றான். பகைவீரர்களைக்கொல்லும் நகுலன் சிரித்துக்கொண்டு யுத்தத்தில் வீரனான அந்தச் சல்யனை (ப்பாணங்களால்) மூடி முழுதும் உருக்குமயமானவையும் சிற்பியால் சாணையிடப்பட்டவையும் தங்கமயமான கட்டுக்களுடன்கூடியவையும் வில்லாகும் யந்திரத்தினின்று விடப்பட்டவையுமான பத்துப்பாணங்களால் மார்பில் அடித்தான். மாதுலனான சல்யனோ, மருமகனான அந்த நகுலனால் பீடிக்கப்பட்டுப் படிந்தகணுக்களுள்ள பாணங்களால் அவனைத் துன்பஞ்செய்தான். பிறகு, யுதிஷ்டிரராஜரும் பீமஸேனனும் ஸாத்யகியும் மாத்ரீபுத்திரனான ஸஹதேவனும் மத்ரராஜனுக்கருகில் விரைவாகச் சென்றார்கள். பகைவர்களை வெல்பவனும் சேனாபதியுமான சல்யன் வேகத்துடன் வருகின்றவர்களும் திசைகளையும் திக்கோணங்களையும் தேரொலிகளால் நிரப்புகின்றவர்களும் பூமியை நடுங்கச்செய்கின்றவர்களுமான அவ்வீரர்களைச் சண்டையில் எதிர்த்தான். பெரியவரே! மத்திரநாதன் யுத்தத்தில் யுதிஷ்டிரரை மூன்றம்புகளாலும் பீமஸேனனை ஐந்து சரங்களாலும் ஸாத்யகியை நூறு பாணங்களாலும் ஸஹதேவனை மூன்று கணைகளாலும் அடித்துப் பின்பு மஹாத்மாவான நகுலனுடைய பாணங்களுடன் கூடிய வில்லை ஓர் க்ஷுரப்ரத்தால் நடுவில் வெட்டினான். பிறகு, மஹாரதனான மாத்ரியின்புத்திரன் சல்லியனுடைய பாணங்களால் வெட்டப்பட்ட அந்தவில்லை எறிந்துவிட்டு வேறுவில்லை எடுத்துப் பாணங்களால் மத்ரராஜனுடைய தேரை வேகமாக நிரப்பினான். யுதிஷ்டிரரும் ஸஹதேவனும் அந்த மத்ரநாதனைப் பத்துப்பத்துப்

பாணங்களால் மார்பிலேயே அடித்தார்கள். ஸாத்யகியும் பீமஸேனனும் அந்தமத்ரராஜனை எதிர்த்துஓடிக் கழுகிறகுகள்பூண்ட அறுபது பாணங்களாலும் பத்துப்பாணங்களாலும் அடித்தார்கள். பிறகு, மத்ரராஜன் கோபங்கொண்டு ஸாத்யகியை ஒன்பது பாணங்களால் அடித்துப் படிந்தகணுக்களுள்ள எழுபதுபாணங்களால் மறுபடியும் அடித்தான். பெரியவரே! பிறகு, சல்யன் இந்த ஸாத்யகியினுடைய அம்புடன்கூடியவில்லைக் கைப்பிடியில் வெட்டி, நான்குகுதிரைகளையும் யுத்தத்தில் யமனிடம் அனுப்பினன். மஹாரதனான மத்ரராஜன் ஸாத்யகியைத் தேரையிழந்தவனாகச்செய்து நூறுபாணங்களால் அவனை நாற்புறங்களிலும் அடித்தான். குருகுலத்திலுதித்தவரே! மத்திரநாதன் கோபங்கொண்டு மாத்ரீபுத்திரனையும் பாண்டவனான பீமஸேனனையும் யுதிஷ்டிரரையும் பத்துப்பத்துப் பாணங்களால் அடித்தான். பார்த்தர்கள் ஒன்றுசேர்ந்தும் அந்தச்சல்யனை யுத்தத்தில் மிஞ்சவில்லையென்னும் ஆச்சரியகரமான மத்திரராஜனுடைய ஆண்மையை அந்தஇடத்தில் கண்டோம். பிறகு, உறுதியான வல்லமையுள்ள ஸாத்யகி வேறு இரதத்தின்மீதேறிக்கொண்டு, பீடிக்கப்பட்டவர்களும் மத்ரராஜனுக்கு வசப்பட்டவர்களுமான பாண்டவர்களைக் கண்டு மத்ரதேசாதிபனைக்குறித்துப் பலாத்காரமாக வேகத்துடன் எதிர்த்துச்சென்றான். சண்டையில் ஸமர்த்தனான சல்யன், வருகின்ற அவனுடைய தேரைக்கண்டு மதம்பிடித்த ஒருயானையானது மதம்பிடித்தயானையை எதிர்ப்பதுபோல இரதத்தினலேயே எதிர்த்துச்சென்றான். சூரனான அந்தஸாத்யகிக்கும் மத்திரதேசாதிபதிக்கும் நெருக்கமாக நடந்த அந்தச்சண்டையானது ஆச்சர்யகரமான காட்சியுள்ளதாக இருந்தது. இது பூர்வகாலத்தில் சம்பராஸுரனுக்கும் தேவராஜனுக்கும்நடந்த யுத்தம்போலிருந்தது. ஸாத்யகி, யுத்தத்தில்நிற்கின்ற மத்திரராஜனைக்கண்டு பத்துப்பாணங்களால் அடித்து, 'நில்,நில்' என்றுங் கூறினன். மத்திரராஜனோ,மஹாத்மாவான அந்த ஸாத்யகியால் மிகஅடிக்கப்பட்டு விசித்திரமானகட்டுக்களுள்ள கூரிய அம்புகளால் அவனைத் திருப்பியடித்தான். பிறகு, மஹாவில்லாளிகளான பார்த்தர்கள், ஸாத்யகியை எதிர்த்துப்போர்புரிகின்றவனும் மாதுலனுமான மத்ரராஜனைக் கொல்லவேண்டுமென்ற விருப்பத்தினல் தேர்களுடன் விரைவாக எதிர்த்தார்கள். பிறகு, சிங்கம்போலக் கர்ஜித்துக்கொண்டு போர்புரிகின்ற சூரர்களுடைய கைகலந்ததும் இரத்தவெள்ளத்துடன்கூடினதுமான சிறந்தயுத்தமானது நடந்தது. மஹாராஜரே! இறைச்சியில் விருப்பங்கொண்ட சிங்

கங்கள்போல யுத்தத்தில் கர்ஜிக்கின்ற அந்தச்சூரர்களுக்கு ஒருவரையொருவர் வையும் வார்த்தைகள் உண்டாயின. அவர்களுடைய ஆயிரக்கணக்கான பாணஸமூகங்களால் பூமியானது எல்லாப்பக்கத்திலும் நிரம்பியதாயிற்று. அப்பொழுது, ஆகாயமும் உடனே பாணமயமாயிற்று. அந்தச்சல்யனால் நாற்புறத்திலும் வேகமாகப் பாணாந்தகாரமானது உண்டுபண்ணப்பட்டது. மஹாத்மாக்களால் விடப்பட்ட பாணங்களால் மேகத்தின் நிழல்போன்ற நிழல் உண்டாயிற்று. வேந்தரே! அந்தச்சமயத்தில் சட்டையுரித்த பாம்புகள்போலப் பளபளப்பானவையும் எறியப்பட்டவையும் பொன்கட்டுக்களுடன்கூடியவையுமான பாணங்களால் திசைகள் பிரகாசித்தன. பகைவர்களை நாசஞ்செய்பவனும் சூரனுமான சல்யன் ஒருவனாயிருந்துகொண்டு யுத்தத்தில் அனேகர்களோடு போர்புரிந்தான்; அந்தச்சமயத்தில் மிக்கஆச்சர்யத்தைச் செய்தான். மத்திரராஜனது கைகளினின்று விடப்பட்டவைகளும் கழுகினிறகுகளால் வேகம் உண்டுபண்ணப்பட்டவைகளும் வந்து விழுந்துகொண்டிருப்பவைகளுமான கோரமுள்ள அம்புகளால் பூமியானது நாற்பக்கமும் பரப்பப்பட்டது. அரசரே! முற்காலத்தில் அஸுரர்களுக்கு நாசத்தையுண்டுபண்ணிய மஹாயுத்தத்தில் இந்திரனுடைய தேர் எவ்வாறு ஸஞ்சரித்ததோ, அவ்வாறே இம்மஹாயுத்தத்திலும் சல்யனுடையதேர் ஸஞ்சரித்ததைக் கண்டோம்.

---

## பதினைந்தாவது அத்யாயம்.

### சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



(சல்யனுக்கும் யுதிஷ்டிரருக்கும் யுத்தம்.)

பிரபுவே! பிறகு, மத்ரராஜனை முன்னிட்டுக்கொண்டிருக்கிற உமதுசேனையானது யுத்தத்தில் பார்த்தர்களை மீண்டும் அதிகவேகத்துடன் எதிர்த்துவந்தது. பீடிக்கப்பட்டவர்களும் வேகமாக ஓடுகின்றவர்களும் யுத்தத்தில் கடுமையான வல்லமையுள்ளவர்களுமான உம்மைச்சேர்ந்தவரனைவரும் மிகுதியாயிருப்பதால் க்ஷணத்திற்குள் பார்த்தர்களைக் குழப்பிவிட்டார்கள். மஹாராஜரே! சண்டையில் அடிக்கப்படும் அந்தப்பாண்டவர்கள், கிருஷ்ணனும் அர்ஜுனனும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே ஒருநிமிஷமும் நிலைபெறவில்லை. பிறகு, தனஞ்சயன் கோபங்கொண்டு காலாட்களுடன்கூடிய கிருபர்





மீதும் கிருதவர்மாவின்மீதும் பாணஸமூகத்தை வாரியிறைத்தான். ஸஹதேவனோ ஸேனையுடன்கூடின சகுனியின்மீது அம்புகளை நிரப்பினான். நகுலன் பக்கத்தில் நின்றுகொண்டு மத்திரராஜனை எதிர்த்துப் போராடினான். திரௌபதீபுத்திரர்களும் மற்ற அரசர்களும் அனேக வீரர்களைத் தடுத்தனர். பாஞ்சாலராஜகுமாரனான சிகண்டியும் அஸ்வத்தாமாவைத் தடுத்தான். பீமஸேனனோ, கதாயுதத்தைக் கையிலேந்தி அரசனான துரியோதனனைத் தடுத்தான். குந்தீபுத்திரரான யுதிஷ்டிரர் ஸைன்யத்துடன்கூடின சல்யனை எதிர்த்தார். பிறகு, யுத்தங்களினின்று திரும்பாதவர்களான உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் பிறர்களுக்கும் ஆங்காங்கு தொடர்ச்சியான யுத்தம் ஏற்பட்டது. சல்யன் ஒருவனாகவே பாண்டவர்களைச் சேர்ந்த எல்லா வீரர்களையும் எதிர்த்துப் போர்புரிந்தானென்னும் மிகப்பெரியதான சல்யனுடைய செய்கையை அந்த யுத்தத்தில் பார்த்தோம். அப்பொழுது, சல்யன் யுதிஷ்டிரருடையசமீபத்தில் குரூரமான சனியென்ற கிரகமானது சந்திரன்பக்கத்தில் காணப்படுவதுபோலக் காணப்பட்டான். சல்யன் யுதிஷ்டிரராஜரை ஸர்ப்பங்களுக்கொப்பான அம்புகளால் பீடித்து மீண்டும் பீமனைநோக்கி எதிர்த்துவந்து சரமாரிகளைப் பொழிந்தான். அவனுடைய அந்த லாகவத்தையும் அஸ்திரங்களில் தேர்ச்சியையும் கண்டு, பகைவர்களுடைய படைகளும் உம்முடைய படைகளும் புகழ்ந்தன. சல்யனால் பீடிக்கப்படுகின்ற பாண்டவர்கள் மிகக் காயப்படுத்தப்பட்டவர்களாக யுதிஷ்டிரர் அழைத்துக் கொண்டிருக்கும்பொழுதே யுத்தத்தை விட்டு ஓடிவிட்டார்கள். மத்திரராஜனால் பாண்டவஸேனைகள் வதம் செய்யப்படுகையில், பாண்டுபுத்திரரும் தருமராஜருமான யுதிஷ்டிரர் கோபத்திற்கு வசப்பட்டார். பிறகு, மஹாரதரான அவர் ஆண்மையைமேற்கொண்டு,'ஜயமாவது உண்டாகட்டும்; அல்லது, வதமாவது நேரட்டும்' என்று மனத்தில் உறுதி செய்துகொண்டு மத்திரராஜனை அடித்தார். அவர், எல்லாப் பிராதாக்களையும் வாஸுதேவரையும் அழைத்து, 'கௌரவர்நிமித்தமாக யுத்தத்தில் பீஷ்மர், துரோணர், கர்ணன் இவர்களும் மற்றஅரசர்களும் பராக்கிரமத்தை வெளியிட்டு நாசமடைந்தார்கள். நீங்கள் பங்குக்குத் தக்கபடியும் உற்சாகத்திற்குத் தக்கபடியும் ஆண்மையை வெளியிட்டீர்கள். மஹாரதனான இந்தச் சல்யனொருவன் என்னுடைய பங்காக மிகுத்தப்பட்டிருக்கிறான். அப்படிப்பட்ட யான் இப்பொழுது யுத்தத்தினால் மத்திரராஜனை வெல்ல விரும்புகிறேன். அந்த விஷயத்தில் என் மனத்திலுள்ளவை முழுமையும் உங்களுக்குச் சொல்லு

கிறேன். என் சக்ரரக்ஷகர்களும் வீரர்களும் இந்திரனாலும் வெல்ல முடியாதவர்களும் யுத்தத்தில் சூரர்களால் ஸம்மதிக்கப்பட்டவர்களும் நன்மதிப்புக்குத் தகுந்தவர்களும் ஸத்தியஸந்தர்களுமான மாத்ரீபுத்திரர்களிருவரும் யுத்தத்தில் க்ஷத்ரியதருமத்தை முன்னிட்டவர்களாக மாதுலனை எனக்காக நன்றாக எதிர்த்துப் போர்புரியவேண்டும். என்னையாவது சல்யன் யுத்தத்தில் கொல்வான்; அல்லது நானாவது அவனைக்கொல்வேன். உங்களுக்கு மங்களமுண்டாகுக. உலகத்திலுள்ள வீரர்களே! இவ்விதமான இந்த உறுதிமொழியை அறிந்திருங்கள். அரசர்களே! (இந்தச்சல்யனை) என்னுடைய பங்கென்று நிச்சயித்து ஜயத்தின்பொருட்டோ அபஜயத்தின்பொருட்டோ இப்பொழுது க்ஷத்திரிய தருமத்தை முன்னிட்டு மாதுலனை அவனோடு நான் போர்புரியப்போகிறேன். என்னுடைய ரதத்தில், சாஸ்திரமுறைப்படி ரதத்தை ஸித்தம் செய்கின்றவர்களால் அதிகமான சஸ்திரமும் எல்லா உபகரணங்களும் சீக்கிரமாகக் கூட்டிவைக்கப்படட்டும். ஸாத்யகியானவன் தென்பக்கத்துச் சேனையையும், அவ்வாறே திருஷ்டத்யும்னன் வடபுறமுள்ள சேனையையும் பாதுகாக்கட்டும். இப்பொழுது, பிருதாபுத்திரனான தனஞ்சயன் எனக்குப் பின்புறத்தை ரக்ஷிக்கிறவனாகட்டும். சஸ்திரதாரிகளுட் சிறந்தவனான பீமஸேனன் இப்பொழுது எனக்கு முந்திச் செல்லுகிறவனாகட்டும். இப்படிச்செய்தால், மஹாயுத்தத்தில் நான் சல்யனைவிட மேற்பட்டவனாவேன்' என்றுகூறினார். இவ்வாறு கூறியதைக் கேட்டவர்களும் அரசனுக்குப் பிரியத்தை விரும்புகிறவர்களுமான பாண்டவர்கள் அப்பொழுது அவ்வாறே செய்தார்கள். பிறகு, மறுபடியும் பாஞ்சாலர்களும் ஸோமகர்களும் விசேஷமாக மாத்ஸ்யர்களுமான போர்வீரர்களுக்கு அப்பொழுது யுத்தத்தில் அதிக ஊக்கம் ஏற்பட்டுவிட்டது. யுத்தத்தில் அந்தத் தருமராஜருடைய பிரதிஜ்ஞையையும் புகழ்ந்தார்கள். பிறகு, சங்கங்களையும் பேரிகளையும் மிருதங்கங்களையும் நூறு நூறாக ஒலித்தார்கள். பாஞ்சாலர்கள் சிங்கநாதங்களையும் வெளியிட்டனர். அந்தக் குருபுங்கவர்களான (பாண்டவ வீரர்கள்) பரபரப்புள்ளவர்களாக ஸந்தோஷத்தினாலுண்டான பெரிய அட்டஹாஸத்தோடு வேகத்துடன் கூடிய மத்ரராஜனை எதிர்த்துச்சென்றார்கள். யானையின் மணிகளின் ஓசையாலும் சங்கங்களுடைய நாதத்தாலும் பெரிய தூர்யவாத்தியத்தின் ஒலியாலும் பூமியை எதிரொலியிடும்படி செய்தார்கள். அவர்களனைவர்களையும் உமதுபுத்திரனான துரியோதனனும் வீரியசாலியான மத்திரராஜனும் அனேகம் பெரிய

மேகங்களை உதயாஸ்தகிரிகளிரண்டும் தாங்குவதுபோலத் தாங்கினார்கள். யுத்தத்தில் புகழ்பெற்றவனான சல்யனே, பகைவர்களை அடக்குபவரான தர்மராஜர்மீது இந்திரன் சம்பரன்மீது சரமாரியைப் பொழிந்ததுபோலப் பொழிந்தான். அவ்வாறே, உதாரமான மனத்தையுடைய குருராஜரும் அழகியவில்லைக் கையிற்பிடித்துப் பற்பலவிதமான துரோணரது உபதேசங்களைக் காண்பித்துக்கொண்டு விசித்திரமாயும் சுறுசுறுப்பாயும் அழகாயும் அம்புமழைகளைப் பொழிந்தார். யுத்தத்திற் சஞ்சரிக்கின்ற இந்தத்துரியோதனனுக்குத் தீமையை விளைவிக்கக் கூடிய ஸமயத்தை ஒருவனும் காணவில்லை. புஜிக்கத்தக்க மாம்ஸத்தில் விருப்பமுள்ள இரண்டு புலிகள்போல யுத்தத்தில் பராக்கிரமத்தை வெளியிடுகின்ற அவ்விரண்டு வீரர்களும் பற்பலபாணங்களால் ஒருவரையொருவர் காயப்படும்படி அடித்துக்கொண்டார்கள். பீமனே, யுத்தத்தில் ஸமர்த்தனான உமதுபுத்திரனோடு எதிர்த்தான். பாஞ்சாலராஜகுமாரனும் ஸாத்யகியும் பாண்டுநந்தனர்களான மாத்ரீகுமாரர்களும் நாற்புறத்திலும் (சூழ்ந்துகொண்டு) சகுனியை முதன்மையாகக்கொண்ட வீரர்களை எதிர்த்தார்கள். அரசரே! உமதுதுராலோசனையால் உண்டான (இக்கலகத்தில்) ஜயத்தில் விருப்பமுள்ளவர்களான உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் பகைவர்களுக்கும் அப்பொழுது மறுபடியுமே கைகலந்த யுத்தம் நேர்ந்தது. துரியோதனனே யுத்தத்தில் கட்டளையிட்டு, வணங்கின கணுக்களுள்ள பாணத்தால் சுவர்ணத்தாலலங்கரிக்கப்பட்ட பீமனுடைய துவஜத்தைக் குறிவைத்துஅடித்து அதனைத் துண்டாக்கினான். அழகியகாட்சியுள்ளதும் மனத்தைக்கவர்கின்றதுமான அந்தச் சிங்கக்கொடியானது பீமஸேனன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பெரிதான மணிகளுடைய ஸமூகத்தோடு விழுந்தது. அரசனான சல்யன், சிறந்த யானையினது துதிக்கை போன்றதும் விசித்திரமாயுள்ளதுமான இவனுடையவில்லைக் கூர்மையுள்ள ஒரு க்ஷுரத்தினால் மறுபடியும் அறுத்தான். வில்லறுக்கப்பட்டவனும் காந்தியுள்ளவனுமான அந்தப் பீமஸேனன் தன்வல்லமையை வெளிப்படுத்தி உம்முடையகுமாரனை ரதசக்தியினால் மார்பில் அடித்தான். உமது குமாரன் இரதத்தின் மத்தியில் உட்கார்ந்தான். அவன் மூர்ச்சையடையவே, மறுபடியும் விருகோதரன் தேர்ப்பாகன்தலையை அப்பொழுது ஒரு க்ஷுரப்ரத்தினால் சரீரத்தினின்று தள்ளினான். பாரதரே! ஸாரதி கொல்லப்பட்ட குதிரைகள் அவனுடைய தேரை இழுத்துக்கொண்டு திசைகளில் ஓடின. அரசரே! அப்பொழுது, 'ஆ! ஆ!'

என்னும் ஒலி உண்டாயிற்று. மஹாரதரான துரோணபுத்திரரும் கிருபரும் கிருதவர்மாவும் ரக்ஷிப்பதற்காக உமது குமாரனை நெருங்கக் கருதி அவனுக்கு எதிர்முகமாக ஓடினார்கள். அந்தச்சேனையானது நிலை குலைந்திருக்கும் தருணத்தில் பயந்தவர்களான அவனுடைய அந்தக் காலாட்களை அர்ஜுனன் வில்லில் நாணொலியெழுப்பி அம்புக ளால் கொன்றான். யுதிஷ்டிரரோ, கோபங்கொண்டு தந்தவர்ணமுள்ள வைகளும் மனோவேகமுள்ளவைகளுமான குதிரைகளைத் தாமே நடத்திக்கொண்டு மத்திரநாதனை எதிர்த்தார். மனஅடக்கமுள்ள யுதிஷ்டிரர் முதலில் மெதுவாகவிருந்து பிறகு அப்பொழுது உக்கிர ரானார். அந்த ஆச்சரியத்தை அப்போது குந்தீபுத்திரரான அவரிடத் தில் கண்டோம். புரட்டி விழிக்கப்பட்ட கண்களையுடையவரும் கோபத்தால் கம்பமுள்ளவருமான குந்தீபுத்திரர் யுத்தவீரர்களைக் கூர்மையுள்ள பாணங்களால் லக்ஷம் லக்ஷமாகத் துண்டித்தார். ராஜரே! தலைவரான அந்தப்பாண்டவர் எந்தஎந்தச்சேனையை எதிர்த் தாரோ அந்தஅந்தச்சேனையை, உத்தமமான வஜ்ரங்களால் மலைகளைத் தள்ளுவதுபோலப் பாணங்களால் தள்ளினார். பலசாலியான குந்தீ நந்தனர் ஒருவராகவே இருந்துகொண்டு காற்று மேகங்களைத் தள்ளு வதுபோலக் குதிரைகளோடும் ஸாரதிகளோடும் த்வஜங்களோடும் ரதங்களோடுங்கூடின அனேக ரதிகர்களைக் கீழேதள்ளி விளையாடினார்; (யுகாந்தகாலத்தில்) கோபங்கொண்ட ருத்திரர் பிராணிகளை நொறுக்கு வதுபோல மேலேஏறியிருக்கிற வீரர்களுடன்கூடின குதிரைகளையும் காலாட்களையும் யுத்தத்தில் ஆயிரம்விதமாக நொறுக்கினார். அவர் சரமாரிகளால் யுத்தரங்கத்தை நாற்பக்கத்திலும் சூன்யமாகச்செய்து மத்ரநாதனை எதிர்த்து ஓடி, 'நில், நில்' என்றும் சொன்னார். யுத்தத்தில் பயங்கரமான செய்கையுள்ள அந்தயுதிஷ்டிரருடைய அந்தச்செய்கை யைக்கண்டு உம்மைச் சேர்ந்தவர்களனைவரும் பயந்தார்கள். சல்ய னோ இந்த யுதிஷ்டிரரை எதிர்த்துச்சென்றான். பிறகு, அவ்விரு வரும் மிக்க கோபங்கொண்டவர்களாகச் சங்கங்களை ஊதி அப்பொ ழுது ஒருவரையொருவர் சண்டைக்கழைத்து வெருட்டிக்கொண்டு எதிர்த்தார்கள். சல்யனோ சரமாரியினால் பாண்டவரைப் பீடித்தான். குந்தீநந்தனரும் மத்ரராஜனைச் சரமாரிகளால் நிரப்பினார். அரசரே! அப்பொழுது, அவ்விருவரும் கழுகிறகுகளடர்ந்த பாணங்களால் நாற் புறத்திலும் நிறைக்கப்பட்டவர்களாகக் காணப்பட்டார்கள். இரத்தம் பெருகுகின்ற சூரர்களான மத்ரநாதனும் யுதிஷ்டிரரும் கானகத்தில் பூத்திருக்கிற இலவும் பலாசும்போல விளங்கினார்கள். மஹாபலசாலி

களும் பிராணனைப் பந்தயம்வைத்து விளையாடுகிறவர்களும் பிரகா சிப்பவர்களும் கெட்டமதங்கொண்டவர்களுமான அவ்விருவர்களை யும் எல்லாச்சேனைகளுங்கண்டு அவ்விருவருள் ஜயத்தை நிச்சயிக்க வில்லை. பாரதரே! அந்த யுத்தரங்கத்திலுள்ள யுத்தவீரர்களுக்கு 'யுதிஷ்டிரர் மத்ரராஜனைக் கொன்று இப்பொழுது பூமியை அனு பவிப்பார்' என்றாவது அல்லது 'சல்யன் பாண்டவரைக்கொன்று துர்யோதனனுக்குப் பூமியைக் கொடுப்பான்' என்றாவது இவ்வித மான நிச்சயம் உண்டாகவில்லை. போர்புரிகின்ற யுதிஷ்டிரருக்கு எல்லாம் பிரதக்ஷிணமாகியது. பிறகு, சல்யன் யுதிஷ்டிரர்மீது அனேகபாணங்களை விரைவாகப் பிரயோகித்தான்; கூரியமுனையுள்ள ஒருபாணத்தினால் அவருடைய வில்லையும் அறுத்தான். அவர் வேறுவில்லை எடுத்துச் சல்யனை முந்நூறுபாணங்களால் அடித்து அவனுடைய வில்லையும் ஒரு க்ஷுரத்தினால் அறுத்தார். பிறகு, கணுக்கள் படிவாயுள்ள பாணங்களால் அவனுடைய நான்கு குதி ரைகளையும், மிகத்தீட்டப்பட்ட நுனியுடன்கூடின இரண்டு அம்புகளால் அவனுடைய இருபக்கத்திலுமுள்ள இரண்டு ஸாரதி களையும் கொன்று, பிறகு, பிரகாசிக்கின்றதும் துவைந்ததும் கூர்மையுள்ளதுமான ஒருபல்லத்தினால் எதிரிலிருக்கின்ற அந்தச் சல்யனுடைய த்வஜத்தையும் அறுத்தார். பகைவர்களை அடக்குகிற வரே! பிறகு, துர்யோதனனுடைய அந்தப்படையானது நன்றாக முறிய அடிக்கப்பட்டது. பின்பு, துரோணபுத்திரர், அவ்வாறுசெய் யப்பட்டிருக்கிற சல்யனைநோக்கி ஓடி அவனைத் தமதுரதத்தின்மீது ஏற்றிவைத்துக்கொண்டு விரைவுடன் ஓடினார். பிறகு, யுதிஷ்டிரர் ஒருமுகூர்த்தகாலத்தில் *அவர்களை அடித்துக் கர்ஜிக்குமளவில் பல சாலியான மத்ரநாதன்சென்று, சாஸ்திரமுறைப்படி ஏற்படுத்தப் பட்டிருப்பதும் நிர்மலமானதும் பெரியமேகம்போலக் கர்ஜிக்கின் றதும், ஸன்னத்தமான யந்திரங்களுடனும் உபகரணங்களுடனுங் கூடியதும் சத்துருக்களுக்கு மயிர்க்கூச்சத்தை உண்டுபண்ணு கிறதுமான வேறு ஒருதேரின்மீது ஏறிக்கொண்டு சிறந்தவேகமுள்ள வேறு ஒருவில்லைக் கையிலெடுத்து யுதிஷ்டிரரைப் பிளந்து ஸிம் மம்போலக் கர்ஜித்தான். பிறகு, நினைக்கமுடியாதபலத்துடன் கூடியவனும் க்ஷத்திரியர்களுள் சிறந்தவனுமான அந்தச் சல்யன் மேகம் மழைபொழிவதுபோலச் சரமாரியை க்ஷத்திரியர்களின்மீது பொழிந்தான். அவன் ஸாத்யகியைப் பத்துப்பாணங்களாலும் பீம

* வேறுபாடம்.

ஸேனனை மூன்றுபாணங்களாலும் ஸஹதேவனை மூன்று பாணங்களாலும் அடித்து யுதிஷ்டிரரையும் பீடித்தான். அவன், குதிரைகளுடனும் ரதங்களுடனும் ஏர்க்கால்களுடனுங்கூடின அந்தஅந்த மற்ற மகாவில்லாளிகளைக் கொள்ளிக்கட்டைகளால் யானைகளைத் துன்புறுத்துவதுபோலப் பாணங்களால் துன்புறுத்தினன். ரதிகர்களுள் சிறந்தவனான அவன், யானைகளையும் யானைகளின்மீது ஏறியிருப்பவர்களையும் குதிரைகளையும் குதிரையின்மீது ஏறிச்செல்லுகின்றவர்களையும் ரதிகர்களையும் ரதங்களையும் நாசஞ்செய்தான். ஆயுதங்களுடன்கூடின கைகளையும் கொடிகளையும் விரைவாகத் துண்டாடினன். தர்ப்பங்களால் யாகவேதியைப் பரப்புவதுபோல யுத்தவீரர்களால் பூமியைப் பரப்பப்பட்டதாகச் செய்தான். அவ்வாறு, பகைவர் படைகளை நாசஞ்செய்கிறவனும் உயிரைவாங்குகின்ற மிருத்யுவைப் போன்றவனுமான அந்தச்சல்யனைப் பாண்டவர்களும் பாஞ்சாலர்களும் ஸோமகர்களும் மிக்ககோபங்கொண்டு சூழ்ந்துகொண்டார்கள்.

---

## பதினாறுவது அத்யாயம்.

### சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



**(யுதிஷ்டிரர் சல்யனையும் அவன் தம்பியையும் கொன்றது.)**

பயங்கரமான வலிமையமைந்த அரசரோடு எதிர்த்திருக்கிற அந்தச்சல்யனைப் பீமஸேனனும் சினியினுடைய பேரனான ஸாத்யகியும் புருஷஸ்ரேஷ்டர்களான மாத்ரீபுத்ரர்களும் நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்ட பிறகு, ஒருவரையொருவர் யுத்தத்திற்காக அழைத்தார்கள். மன்னரே! பிறகு, ஆண்மையிற் சிறந்தவர்களான சூரர்கள், யுத்தம்செய்பவர்களுள் சிறந்த அரசனான சல்யனை யுத்தத்தில் எதிர்த்து அவனை நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டு யுத்தத்தில் உக்ரமானவேகமுள்ள கூரியபாணங்களால் அடித்தார்கள். பீமஸேனனாலும் மாத்ரீபுத்ரர்களான நகுலஸஹதேவர்களாலும் ஸாத்யகியினாலும் ரக்ஷிக்கப்பட்டிருக்கின்ற அரசரான தர்மநந்தனர் மத்ரநாதனைக் கடியவேகமுள்ள பாணங்களால் மார்பில் அடித்தார். பிறகு, யுத்தத்தில் உம்மைச்சேர்ந்த ரதிகர்களின் கூட்டங்களும் மிக்கசிறப்புற்றவர்களான எல்லாயுத்தவீரர்களும் தங்களுக்கெதிரில் மத்ரராஜன் பாணங்களால்பீடிக்கப்பட்டிருக்கிறதைக்கண்டு துரியோதனனுடைய அநுமதியினால் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு,

மத்திரர்தலைவனான சல்யன் யுத்தத்தில் யுதிஷ்டிரரை ஏழுபாணங்களால் விரைவாக எதிர்த்தடித்தான். ராஜரே! மஹாத்மாவான யுதிஷ்டிரரும் கைகலந்தயுத்தத்தில் ஒன்பதுபாணங்களால் அந்தச்சல்யனை அடித்தார். மஹாரதர்களான மத்ரநாதனும் யுதிஷ்டிரரும் அப்பொழுது யுத்தத்தில் காதுவரையில் இழுத்துப் பிரயோகிக்கப்பட்டவைகளும் எண்ணெயிட்டுத் தீட்டப்பட்டவைகளுமான அம்புகளால் ஒருவரையொருவர் மூடினார்கள். பிறகு, மஹாரதர்களும் மஹாபலசாலிகளும் பகைவர்களால்ஜயிக்கமுடியாதவர்களும் அரசர்களுள் சிறந்தவர்களுமானஅவ்விருவரும் ஒருவருக்கொருவர் துன்பம் விளைவிக்கக்கூடிய ஸமயத்தை நோக்கிக்கொண்டு யுத்தத்தில் விரைவாக அம்புகளால் மிகவும் அடித்தார்கள். ஒருவர்மீது ஒருவர் அம்புத்திரள்களைப் பொழிகிறவர்களும் மஹாத்மாக்களுமான அந்த மத்ரநாதன் யுதிஷ்டிரர் இவ்விருவர்களுடைய நாணொலியும் தலத்வனியும், மஹேந்திரனுடைய வஜ்ராயுதம் இடி இவற்றினுடைய சப்தத்திற்கு நிகரானசப்தத்தை உடையனவாயிருந்தன. அவ்விருவரும் பெருங்காடுகளில் மாம்ஸத்தில் பேராவல்கொண்ட இரண்டுபுலிக்குட்டிகள்போல விளங்கிக்கொண்டு ஸஞ்சரித்தார்கள். யுத்தத்தில், கொழுப்புடையவர்களான அவ்விருவரும் யானைகளுள் சிறந்தவையும் கொம்புள்ளவையுமான இரண்டு யானைகள்போல அடித்துப் பிளந்துகொண்டார்கள். பிறகு, பலவானான மத்ரநாதன் பயங்கரமான பலத்தையுடைய வீரரான யுதிஷ்டிரரைப் பலாத்காரமாகச் சூரியனுக்கும் அக்னிக்கும் ஸமமான ஒளிபொருந்திய ஓர் அம்பினால் மார்பில் அதிகவேகமாக அடித்தான். அரசரே! பிறகு, மஹாத்மாவும், கௌரவர்களுள்சிறந்தவருமான யுதிஷ்டிரரும் அதிகமாக அடிக்கப்பட்டு நன்றாகப் பிரயோகிக்கப்பட்ட பாணத்தினால் மத்ரநாதனை அடித்தார்; ஸந்தோஷத்தையும் அடைந்தார். பிறகு, ஆயிரம் கண்களையுடைய இந்திரனுடைய பிரபாவம்போன்ற பிரபாவமுள்ளவனும் அரசர்களுளெல்லாம் உத்தமனுமான சல்யன், பின்பு ஒரு முகூர்த்த காலத்திற்குள் பிரஜ்ஞையை அடைந்து, கோபத்தினால் கண்கள் சிவந்து, விரைவாக ஒருபாணத்தால் யுதிஷ்டிரரை அடித்தான். பிறகு, மஹாத்மாவான தர்மநந்தனர் கோபத்தினால் வேகமுள்ளவராக ஒன்பதுபாணங்களால் சல்யனுடைய மார்பையும் ஸ்வர்ணமயமான கவசத்தையும் பிளந்து வேறு ஆறுபாணங்களாலும் அடித்தார். பிறகு, மத்ரநாதன் மேன்மைபெற்றவில்லை இழுத்துப் பாணங்களைப் பிரயோகித்தான். அவ்வாறே, இரண்டுபாணங்களால்

குருபுங்கவரும் வேந்தருமான யுதிஷ்டிரருடைய வில்லை வெட்டி ஞன். மஹாத்மாவான தர்மராஜர், பிறகு, யுத்தத்தில் மிக்ககோரமா யும் புதிதாயுமிருக்கிற வேறு ஒருவில்லைஎடுத்து மஹேந்திரன் நமுசியை அடித்ததுபோல முனைகூர்மையாயுள்ள பாணங்களால் நாற்பக்கங்களிலும் சல்யனை அடித்தார். பிறகு, மிக்கதைர்யசாலி யான சல்யனும் ஒன்பதுபாணங்களால் யுதிஷ்டிரராஜர் பீமன் இவர்க ளுடைய பொன்மயமான நல்லகவசங்களைவெட்டிப் புஜங்களையும் பிளந்தான்; பின்பு, அக்னிக்கும் சூரியனுக்கும் நிகரான காந்தியுள்ள வேறுக்ஷுரத்தினல் அரசருடையவில்லை முறித்தான். அந்தக் கிருப ரும் ஆறுபாணங்களால் யுதிஷ்டிரருடைய ஸாரதியையே கொன்று எதிரில் சென்றார். மஹாத்மாவான சல்யனும் நான்கு பாணங்களால் அவருடைய குதிரைகளைக் கொன்றான். குதிரைகளைக்கொன்று, அரசரான தர்மநந்தனருடைய போர்வீரர்களுக்கு நாசத்தையும் உண்டுபண்ணினன். ஆச்சர்யகரமானதும் மற்றவர்களால் செய்ய முடியாததும் மிகவும் சகிக்கமுடியாததுமான நிகரற்ற கார்யத்தைச் செய்த அரசனை அந்தச்சல்யனைப்பார்த்து முரசத்தைக்கொடியாகக் கொண்ட அந்தத்தர்மநந்தனர், 'இதென்ன! உபேந்திரரான ஸ்ரீ வாஸுதேவருடையசொல்லானது ஊழின்வலியினல் இப்பொழுது வீணகிறது. 'யுத்தத்தில் சல்யனைக்கொல்' என்றன்றோ அப்பொழுது அவர் கூறினர். லோகநாதருடைய வசனமானது வேறுவிதமாகாதே' என்று துயரத்தினல் சிந்தித்தார். அரசனைசல்யன் அவ்வாறுசெய்த வுடன், மிக்கவலிமையமைந்த பீமஸேனன், வேகமுள்ள ஒருபாணத்தி னல் அந்த மத்ரநாதனுடையவில்லை அறுத்து இரண்டு பாணங்களால் அவனை அதிகமாக அடித்தான். அவ்வாறே, அதிக கோபங்கொண்ட பீமஸேனன் வேறு ஒருபாணத்தினல் அவனுடைய ஸாரதியின் தலை யைத் திடமான ஸந்திகளுள்ள இடையுடன்கூடின சரீரத்தினின்று கவர்ந்தான்; அவன் குதிரைகளையும் மிக்கவிரைவாகக்கொன்றான். யுத் தத்தில் அதிகவேகமுள்ளவனகவும் நிகரற்றவனகவும் ஸஞ்சரிக்கின்ற அந்தமத்ரநாதன்மீது எல்லாவில்லாளிகளுக்கும் தலைவரான பீமனும் அவ்வாறே மாத்ரீபுத்ரனை ஸஹதேவனும் நூறுபாணங்களை இறைத் தார்கள். அந்தப்பாணங்களால் மயங்கச்செய்யப்பட்ட சல்யனைக்கண்டு பீமன் அம்புகளால் அவனுடைய கவசத்தைப் பிளந்தான். பீமஸேன னல் கவசம் அறுக்கப்பட்டவனும் மஹாபலசாலியுமான அந்தமத்ர நாதன் ஆயிரம்நக்ஷத்திரப்ரதிமைகளுள்ளகேடகத்தையும் கத்தியை யும்எடுத்துக்கொண்டு ரதத்தினின்றுதுள்ளிக்குதித்துக்குந்தீபுத்ரரை

எதிர்த்து ஓடினன். பயங்கரமான பலத்துடன்கூடின அந்தச்சல்யன் நகுலனுடைய தேரின் ஏர்க்காலே வெட்டிப் பிறகு யுதிஷ்டிரரை எதிர்த்தோடினன். பிறகு, பாய்கின்றவனும் கோபமுள்ளவனும் யமன்போல் வருகின்றவனுமான அந்தச்சல்யராஜனைத் திருஷ்டத்யும்னனும் திரௌபதீபுத்திரர்களும் சிகண்டியும் ஸாத்யகியும் விரைவாகச் சூழ்ந்துகொண்டார்கள். பின்பு, மஹாத்மாவான பீமன், உமது சேனையின்மத்தியில் அதிக ஸந்தோஷத்துடன் கர்ஜித்துக்கொண்டு அந்தச்சல்யனுடைய நிகரற்ற கேடகத்தை ஒன்பது பாணங்களால் அறுத்துப் பல்லங்களால் கத்தியையும் கைப்பிடியில் வெட்டினன். பீமனுடைய அந்தச்செய்கையைக்கண்டு ஸந்தோஷமுள்ளவர்களும் பாண்டவ சேனுவீரர்களுள் சிறந்தவர்களுமான கூட்டமான ரதிகர்கள் மிக்க கர்வங்கொண்டு ஸிம்மநாதம் செய்தார்கள். சந்திரனுக்கு ஒப்பான சங்கங்களையும் ஊதினர்கள். அதிபயங்கரமான அந்தச் சப்தத்தினலே அவமதிக்க முடியாத அந்தச் சேனையானது அப்பொழுது அவ்வாறு தாபத்தை அடைவிக்கப்பட்டதும் வேர்வையுற்றதும் ரக்தத்தால் நனைக்கப்பட்ட அங்கங்களையுடையதும் பிரஜ்ஞையற்றதும் துயரமுற்றதும் ஆயிற்று. பாண்டவசேனையிலுள்ள போர்வீரர்களுள் தலைவர்களான பீமன்முதலான வீரர்களாலே விரைவாக முறியஅடிக்கப்பட்ட அந்தமத்ரராஜன், ஒரு மானுக்காகச்செல்லுகின்ற ஸிம்மம் போல வேகத்துடன் யுதிஷ்டிரருக்கு எதிராகச்சென்முன். குதிரைகளும் ஸாரதிகளும் கொல்லப்பெற்றவரும் சினத்தோடு விளங்குகின்றவரும் அக்னிபோலப் பிரகாசிக்கின்றவருமான அந்தத்தர்மராஜர், மத்ரதேசாதிபதியைக்கண்டு விரைவாகப் படையுடன் அந்தச் சத்துருவை நன்முக எதிர்த்தார். குதிரைகளும் பாகனும் கொல்லப்பெற்ற அந்தத்தர்மராஜர் ரதத்திலே இருந்துகொண்டு கோவிந்தருடைய வாக்கியத்தை விரைவாகச் சிந்தித்துச் சக்தியைக் கையிலெடுத்துச் சல்யனுடைய நாசத்தின்பொருட்டுப் புத்தியைச் செலுத்தினர். மஹாத்மாவான யுதிஷ்டிரர், அப்படிப்பட்ட சல்யனுடைய செய்கையையுங்கண்டு தம்முடைய பாகமாக மிகுந்திருப்பவனை அவனுடையவதத்தில் மனத்தைச் செலுத்தி, உபேந்திரரான கண்ணபிரான் உரைத்தபடியே செய்யலானர். அந்தத் தர்மராஜர் இரத்தினங்கள்இழைத்த பொற்காம்புள்ளதும் பொன்னல் பிரகாசிக்கின்றதுமான ஒரு சக்தியைக் கையிலெடுத்தார்; ஜ்வலிக்கின்ற இரண்டு கண்களையும் விரைவாகப் புரட்டிவிழித்து மனத்தில் மிக்ககோபங்கொண்டு மத்ரராஜனை நன்கு பார்த்தார். அரசரே!

பரிசுத்தமான சித்தமுள்ளவரும் பாபமற்றவரும் அரசருமான தர்ம நந்தனரால் உற்றுப் பார்க்கப்பட்ட மத்ரராஜன் சாம்பலாகாமலிருந் தானென்பது எனக்கு ஆச்சரியமாகத் தோற்றுகிறது. பிறகு, மஹா பலசாலியும் கௌரவர்களுள் சிறந்தவருமான தர்மராஜர், அழகிய உக்ரமான தண்டத்துடன்கூடியதும் உத்தமமான ரத்னங்களால் ஜ்வலிக்கின்றதும் நல்லஒளிபொருந்தினதுமான சக்தியை அதிவேகத் துடன் மத்ரநாதன்மீது பிரயோகித்தார். பிறகு, அவரால் பலத்து டன் பிரயோகிக்கப்பட்டதும் ஜ்வலிக்கின்றதும் நெருப்புப் பொறிகளு டன்கூடியதும் வேகமாக வருகின்றதுமான அந்தச்சக்தியை யுகாந்த காலத்தில் ஆகாயத்தினின்று (கீழே) விழுகின்ற பெரிய குறைக் கொள்ளியைப்போல எல்லாக்கௌரவர்களும் ஒன்றுசேர்ந்து கண் டார்கள். முயற்சியுள்ள தர்மராஜர் யுத்தத்தில் காலராத்திரிபோன்ற தும் பாசத்தைக் கையிற்கொண்ட யமனைவளர்த்த தாய்போன்ற உக்ர ரூபமுள்ளதும் பிரம்மதண்டத்திற்கொப்பானதும் வீணாகாததுமான அந்தச்சக்தியை ப்ரயோகித்தார். அவர் சந்தனங்களாலும் பூமாலைகளா லும் சிறந்தஆசனங்களாலும் பானங்களாலும் போஜனங்களாலும் பாண்டுபுத்திரர்களால் பிரயத்தனத்துடன் பூஜிக்கப்பட்டதும், பிரளய காலநெருப்புக்கு நிகரானதும், ஜ்வலிக்கின்றதும், அதர்வாங்கிரஸர் களால் உண்டுபண்ணப்பட்ட உக்ரஸ்வரூபமான பிசாசுபோன்றதும், ஈஸ்வரர்நிமித்தமாக விஸ்வகர்மாவினால் உண்டுபண்ணப்பட்டதும், பகைவர்களுடைய உயிரையும் தேகத்தையும் உணவாகக்கொண்ட தும், பூமியையும் ஆகாயத்தையும் ஸ்வர்க்கத்தையும் ஜலத்தையும் ஆதாரமாகக்கொண்டபிராணிகளைப் பலாத்காரமாகக் கொல்வதற்குத் திறமையுள்ளதும்,மணிகளுடனும் கொடிகளுடனும்கூடியதும்,ரத்ன மயமாயும் வஜ்ரமயமாயுமுள்ள பூஷணங்களையுடையதும், வைடூர்யக் கற்களால் சித்திரிக்கப்பட்டதும்,பொற்காம்புள்ளதும், விஸ்வகர்மாவி னால் நியமத்தோடு முயற்சியினால் சிருஷ்டிக்கப்பட்டதும், ப்ரம்ம த்வேஷிகளுக்கு நாசத்தையுண்டுபண்ணுகின்றதும், வீணாகாததும், பலத்தாலும் பிரயத்தனத்தாலும் தடையற்ற வேகத்துடன் கூடியது மான அந்தச்சக்தியைக் கோரமான மந்திரங்களாலும் நிரப்பி அப் பொழுது மத்திரநாதனைக் கொல்வதன்பொருட்டுப் பக்ஷிகளுடைய வழியினால் பிரயோகித்தார். 'இந்தமத்திரராஜன் மாண்டான்' என்று கர்ஜித்துக்கொண்டும் குரோதத்தினால் நர்த்தனம் செய்கின்றவர் போலிருந்துகொண்டும், ருத்திரர் அந்தகாஸுரன்மீது உயிரை வாங்குகிற பாணத்தைப் பிரயோகித்ததுபோல, மிக்கதிடமான

தும் அழகிய அகங்கையையுடையதுமான கையை நீட்டிப் பிரயோகித்தார். மத்ரனை நாசஞ்செய்யுங்காலத்தில், கிரணஸமூகங்களால் பிரகாசிக்கின்ற காந்திமண்டலத்துடன்கூடின தர்மநந்தனருக்கு, முற்காலத்தில் முப்புரத்தை நாசஞ்செய்யுந் தருணத்தில் ருத்திரருக்கிருந்ததுபோன்ற ரூபம், அப்பொழுது உண்டாயிற்று. அர்ஜுனனுக்கு மூத்தவரான யுதிஷ்டிரர், மடக்கி வளைக்கப்பட்டிருக்கின்ற கைகளையுடையவரும் ஸந்தியாகாலத்தில்விளையாட்டையுடையவரும் மெல்லியதாயும் வட்டமாயுமுள்ள இடையையுடையவரும் அகன்ற மார்பையுடையவரும் பகவானுமான ஹரர்போல எவ்விதத்திலும் (பிறரால்) பார்க்கவும் முடியாதவரானார். யுதிஷ்டிரரால் முழுவல்லமையுடன் பிரயோகிக்கப்பட்டதும் தடுக்க முடியாத வீர்யத்துடன் கூடியதுமான அந்தச் சிறந்த சக்தியை நன்றாக ஹோமஞ்செய்யப்பட்ட நெய்த்தாரையை அக்னி ஏற்றுக்கொள்வதுபோலச் சல்யன் ஏற்றுக்கொள்வதில் மனக்களிப்புற்றான். அந்தச்சக்தியானது, அந்தச் சல்யனுடைய நிர்மலமான கவசத்தைப் பிளந்து அவ்வாறே விசாலமான மார்பையும் பிளந்து தடையற்றதாக அரசனுடைய விசாலமான கீர்த்தியையும் கவர்ந்துகொண்டு ஜலம் பூமியில்பிரவேசிப்பதுபோல் பிரவேசித்தது. அந்தச் சல்யன், மூக்கினின்றும் கண்களினின்றும் காதுகளினின்றும் வாயினின்றும் வெளியில்வருகின்றதும் அதிகமாகப் பெருகுகின்றதும் காயங்களினின்று உண்டானதுமான ரக்தத்தினால் சரீரம் நன்றாக நனைக்கப்பட்டவனாகி ஸுப்ரம்மண்யரால் அடிக்கப்பட்ட க்ரௌஞ்சமென்கிற பெருமலைபோலானான். குருநந்தனரால் நன்றாகப் பிளக்கப்பட்டிருக்கிற கவசத்தையுடையவனும் மஹேந்திரனுடைய வாகனத்துக்குஒப்பானவனும் மஹாபலசாலியுமான சல்யன் வஜ்ரத்தினால் அடிக்கப்பட்ட மலையினுடைய சிகரம்போல இருகைகளையும் விரித்துக்கொண்டு * பூமியில் விழுந்தான். பிறகு, அந்த மத்ரராஜன் உயரஎடுத்து நிறுத்தப்பட்டிருந்து கீழே தள்ளப்பட்ட இந்திரத்வஜம்போலத் தர்மராஜருக்கு எதிரில் இருகைகளையும் விரித்துக்கொண்டு கீழேவிழுந்தான். அவ்வாறு, எல்லா அங்கங்களும் பிளக்கப்பட்டவனும் ரக்தத்தினால் நனைக்கப்பட்டவனும் புருஷஸ்ரேஷ்டனுமான அந்தச்சல்யன், தன்மேல் விழுகின்றநாயகன் அன்புள்ளவளான நாயகியினால் மார்பில் தாங்கப்படுவதுபோலப் பூமிதேவியினால் அன்புடன் எதிர்கொண்டு ஏற்றுக்கொள்ளப்பட்ட

* ஒரு சொல் விடப்பட்டது.

வன்போலானன். பிரபுவான அவன் பிரியையான மனைவியைப்போலப் பூமியை நெடுநேரமனுபவித்து எல்லாஅங்கங்களாலும் நன்ருகக் கட்டிக்கொண்டுநன்ருகத்தூங்குகிறவன்போலானன். தர்மாத்மாவான தர்மநந்தனரால் தர்மயுத்தத்தில் கொல்லப்பட்ட சல்யன், யாகத்தில் நன்ருகவிருத்தியடைந்து * உத்ஸர்ஜனஞ்செய்யப்பட்டுத்தணிந்திருக்கிற அக்னிபோலானன். சக்தியினல் மார்பு பிளக்கப்பட்டவனும் புரட்டித்தள்ளப்பட்டிருக்கிற ஆயுதங்களுடனும் த்வஜத்துடனுங்கூடியவனுமான மத்ரநாதன் உயிரை இழந்தவனுயிருந்தபோதும், லக்ஷ்மியானது அவனை விடவேயில்லை. பிறகு, யுதிஷ்டிரர் இந்திரவிற்போலப்ரகாசிக்கின்ற வில்லை எடுத்துக்கொண்டு கருடன் ஸர்ப்பங்களைக் கொல்லுவதுபோல யுத்தத்தில் பகைவர்களைக் கொன்ருர். மிக்க கூர்மையுள்ள பல்லங்களால் சத்துருக்களுடைய தேகங்களை ஒருக்ஷணத்திற்குள் நாசஞ்செய்தார். பிறகு, அவருடைய பாணஸமூகங்களால் நான்கு பக்கத்திலும் சூழப்பட்ட உம்முடைய போர்வீரர்கள், கண்கள் மூடப்பட்டவர்களும் அன்யோன்யம் அதிகமாகப் பீடிக்கப்பட்டவர்களும், தேகங்களால் ரத்தத்தைப் பெருக்குகின்றவர்களும் சஸ்திரங்களையும் ஆயுதங்களையும் உயிரையும் இழந்தவர்களுமாக நாசத்தை அடைந்தார்கள்.

பிறகு, சல்யன் மாண்டவுடன், எல்லாக்குணங்களாலும் தமையனுக்கு ஒப்பானவனும் யௌவனமுள்ளவனுமான மத்ரராஜனுடைய இளையசகோதரன் ரதத்துடன் பாண்டுநந்தனரை எதிர்த்தான். கொல்லப்பட்டிருக்கிற பிராதாவின்விஷயத்தில் மரியாதையைச்செய்ய எண்ணங்கொண்டவனும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவனும் ஆண்மையிற்சிறந்தவனுமான அவன் விரைவுடன் அநேகநாராசங்களால் (தர்மராஜரைப்) பிளந்தான். தர்மராஜர் விரைந்து ஆறுபாணங்களால் அவனை அடித்து அவனுடையவில்லையும் கொடியையும் இரண்டுக்ஷுரங்களால் வெட்டினர். பிறகு, ஜ்வலிக்கின்றதும் மிக்கதிடமானதும் கூர்மையுள்ளதுமான ஒருபல்லத்தினல் எதிரில் நிற்கின்ற அவனுடையதலையைக் கொய்தார். குண்டலங்களுடன்கூடிய அவனுடையதலையானது ரதத்தினின்று விழுவது, (ஒருவன்) புண்ணியம் குறைந்து ஸ்வர்க்கத்தினின்றுநழுவிவிழுவதுபோலக் காணப்பட்டது. தலை அறுக்கப்பட்டதும் ரக்தத்தால் அங்கங்கள் நனைக்கப்பட்டதும் ரதத்தினின்று கீழேவிழுந்ததுமான அவனுடைய சரீரத்தைக்கண்டு சேனையானது

* காரியம் நிறைவேறியபின் தனதிடம்செல்லும்படி அனுப்புவது.

கலேந்துஓடியது. விசித்திரமான கவசத்துடன்கூடின அந்த மத்ர ராஜனுடைய இளேயஸகோதரன் கொல்லப்படவே, கௌரவர்கள், 'ஆ! ஆ!' என்று கூவிக்கொண்டு எதிர்த்துச்சென்ருர்கள். சல்ய னுடைய இளேயஸகோதரன் கொல்லப்பட்டதைக் கண்டு உம்மைச் சேர்ந்தவர்கள், பாண்டவரிடத்தினின்று உண்டான பயத்தினுல், அப்பொழுது உயிரில் ஆசையற்றவர்களும் கலேந்து ஓடினவர்களு மாகி மிக நடுங்கினுர்கள். பரதர்களுள்சிறந்தவரே! அவ்வாறு, சிதறி ஓடினவர்களான அந்தக் கௌரவர்களேச் சினியினுடைய பேரனுன ஸாத்யகி பாணங்களே இறைத்துக்கொண்டு எதிர்த்தான். அரசரே! எதிர்த்து வருகின்றவனும் மஹாவில்லாளியும் எவ்விதத்தாலும் பொறுக்கமுடியாதவனும் நெருங்கமுடியாதவனுமான அந்தஸாத்யகி யைக் கிருதவர்மா விரைவுடன் பயமற்றவனுக எதிர்த்தான். மஹா பலசாலிகளும் விருஷ்ணிகுலத்தில் தோன்றியவர்களும் சிறந்த குதி ரைகளேயுடையவர்களுமானக்ருதவர்மாவும்ஸாத்யகியுமாகியஅவ்விரு வர்களும் பலத்தினுல் அதிகரித்திருக்கின்ற இரண்டுசிங்கங்கள்போல எதிர்த்தார்கள். ஸூர்யனுக்குச் சமமான ஒளிபொருந்திய அவ்விரு வரும் சூரியகிரணங்கள்போல நிர்மலமான காந்தியுள்ள பாணங்களால் ஒருவரை ஒருவர் மூடினுர்கள். விற்களின்மார்க்கங்களில் பலத்துடன் பிரயோகிக்கப்பட்ட விருஷ்ணிவீரர்களுடைய ஆகாயத்தில்செல்லு கின்ற பாணங்களேச் சீக்கிரமாகச் செல்லுகின்ற விட்டிற்பூச்சிகளேப் போலக் கண்டோம். க்ருதவர்மா ஸாத்யகியைப் பத்துப்பாணங்களால் அடித்து அவனுடைய குதிரைகளேயும் மூன்றுபாணங்களால் அடித் துப் படிந்தகணுக்களுள்ள ஒருபாணத்தினுல் அவனுடைய வில்லே யும் துண்டாக்கினுன். சைனேயன் அறுக்கப்பட்ட சிறந்த அந்த வில்லே எறிந்துவிட்டு மேகம்போலச் சப்திக்கின்ற வேறு ஒருவில்லே வேகத்தோடு எடுத்தான். எல்லா வில்லாளிகளுள்ளும் உத்தமனுன ஸாத்யகி அந்தச் சிறந்த வில்லேயெடுத்து க்ருதவர்மாவைப் பத்துப் பாணங்களால் மார்பில் அடித்தான்; பிறகு, அவனுடைய தேரி னுடைய ஏர்க்காலேயும் வெட்டி நன்கு பிரயோகிக்கப்பட்ட பல்லங் களால் குதிரைகளேயும் இருபக்கத்திலுமுள்ள இரண்டு ஸாரதி களேயும் விரைவாகக் கொன்ருன். பிரபுவே! மிக்க வீர்யமுடைய வரும் சரத்வானுடைய குமாரருமான கிருபர், கிருதவர்மா ரதத் தை இழந்திருப்பதைக் கண்டு விரைவாகத் தமது ரதத்தில் ஏற்றி வைத்துக்கொண்டு யுத்தபூமியை விட்டு விலகிச்சென்ருர். அரசரே! மத்ரராஜன் கொல்லப்பட்டுக் கிருதவர்மாவும் ரதத்தைஇழக்கவே, துர்

யோதனனுடைய சேனைமுழுதும் யுத்தத்தைவிட்டுத் திரும்பியது. சேனையிலுண்டான புழுதியினால் மூடப்பட்டிருக்குந் தருணத்தில், தன்னைச்சேர்ந்தவர்களும் பிறர்களும் அறியப்படவில்லை. பெரும் பான்மையாக வீரர்கள் கொல்லப்பட்ட சேனையானது பயந்து புறங் காட்டியது. புருஷஸ்ரேஷ்டரே! பிறகு, அவர்கள் பூமியிலிருந்து உண்டான புழுதியை ஒருமுகூர்த்தகாலத்திற்குள் பற்பல ரக்தவெள் ளத்தால் தணிந்ததாகக் கண்டார்கள். பிறகு, துர்யோதனன் தன்சேனை பக்கத்தில் முறிய அடிக்கப்பட்டிருப்பதைக் கண்டு, வேகத் தோடுவருகின்ற எல்லாப்பார்த்தர்களையும் ஒருவனாகவே தடுத்தான். துர்யோதனன் பாண்டவர்களையும் பார்ஷதனை த்ருஷ்டத்யும்னனை யும் எவ்விதத்தினாலும் தோல்வியடைவிக்க முடியாதவனான ஆநர்த்த தேசாதிபதியையும் ரதத்துடன்கூடியவர்களாகக்கண்டு கூர்மையுள்ள பாணங்களால்தடுத்தான். பகைவர்கள், வருகின்றயமனைப்போல் அந்தத் துர்யோதனனை எதிர்க்கவில்லை. பின்பு, க்ருதவர்மாவும் வேறு ரதத்தின் மீதேறிக்கொண்டு திரும்பினான். பிறகு, மஹாரதரான யுதிஷ்டிர ராஜர் நான்கு பாணங்களால் கிருதவர்மாவினுடைய குதிரைகளை விரைவாகக் கொன்றார். நன்றாகத்தீட்டப்பட்ட இரண்டு பல்லங் களால் க்ருபமரையும் அடித்தார். பிறகு, அரசரானயுதிஷ்டிரரால் குதிரைகள்கொல்லப்பட்டவனும் தேரினை இழந்தவனுமாகச்செய்யப் பட்ட அந்தக்கிருதவர்மாவை அஸ்வத்தாமா தம்முடையதேரில் ஏற்றிக்கொண்டு யுதிஷ்டிரரைவிட்டு விலகச்செய்தார். பிறகு, சாரத்வதரானகிருபர் ஆறுபாணங்களால் யுதிஷ்டிரரைத் திருப்பி யடித்தார்; அவருடைய குதிரைகளையும் கூர்மையான எட்டுப்பாணங் களால் அடித்தார். மகாராஜரே! பாரதரே! புத்திரர்களுடன் கூடின உம்முடைய துராலோசனையால் இவ்வாறாக இந்த யுத்த சேஷம் நடந்தது. பெரிதான வில்லைத்தாங்கிய அந்தச் சல்யன் யுத்தமத்தியில் குருபுங்கவரான யுதிஷ்டிரரால் கொல்லப்படவே, அவன் கொல்லப்பட்டதைக் கண்டு பார்த்தர்கள் ஒன்றுசேர்ந்து மிக்க மகிழ்ச்சியுற்றுச் சங்கங்களை முழக்கினார்கள். முற்காலத்தில், விருத்திரனைக்கொன்றபோது தேவர்கள் இந்திரனைத் துதித்ததுபோல அந்தப்பார்த்தர்கள் யுத்தத்தில் யுதிஷ்டிரரைப்புகழ்ந்தார்கள். பூமியை நாற்பக்கத்திலும் ஒலியிடும்படி செய்துகொண்டு பற்பல வாத்திய கோஷங்களை வெளியிட்டார்கள்.

---

## பதினேழாவது அத்யாயம்.

## சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



(ஸங்குல யுத்தம்.)

பிறகு, சல்யன் கொல்லப்பட்டவுடன், மத்ரராஜனுடன் வந்திருந்த எழுநூறு தேர்வீரர்களும் பெரியசேனையினின்று ஓடிவிட்டார்கள். துர்யோதனனோ மலைபோன்ற யானையின்மீதேறிக்கொண்டும் குடைபிடிக்கப்படுகின்றவனும் சாமரங்களால் வீசப்படுகின்றவனுமாயிருந்துகொண்டும் 'போகவேண்டாம்; போகவேண்டாம்' என்று மத்ரர்களைத் தடுத்தான். துர்யோதனனால் அடிக்கடி தடுக்கப்படுகின்ற அந்த வீரர்கள் யுதிஷ்டிரரைக் கொல்லஎண்ணங்கொண்டவர்களாகப்பாண்டவர்களுடையசேனையில்புகுந்தார்கள். மஹாராஜரே! அந்தச்சூரர்களோ யுத்தஞ்செய்வதில் மனத்தைச்செலுத்திப் பெரிதான வில்லொலியை உண்டுபண்ணிக்கொண்டு பாண்டவர்களோடு போர்புரிந்தார்கள். பிறகு, மகாரதனை பார்த்தன், சல்யன் கொல்லப்பட்டானென்பதையும் மத்ரராஜனுக்குப் பிரீதியைச் செய்வதில் முயற்சியுள்ளவர்களான மத்ரகர்களைச் சார்ந்த மகாரதர்களால் தர்மபுத்திரர் துன்பப்படுத்தப்படுகிறாரென்பதையும் கேட்டு, காண்டீவமென்கிற வில்லை நாணொலியிடும்படி செய்துகொண்டும் தேரினொலியினால் எல்லாத் திசைகளையும் நிரப்பிக்கொண்டும் வந்தான். பிறகு, அர்ஜுனனும் பீமனும் பாண்டுநந்தனர்களான நகுலஸஹதேவர்களும் ஆண்மையிற்சிறந்த ஸாத்யகியும் த்ரௌபதீபுத்திரர்களனைவரும் த்ருஷ்டத்யும்னனும் சிகண்டியும் பாஞ்சாலர்களும் ஸோமகர்களோடுகூடி யுதிஷ்டிரரைப் பாதுகாக்க எண்ணங்கொண்டவர்களாக நாற்புறத்திலும் (கௌரவஸேனையைச்) சூழ்ந்துகொண்டார்கள். புருஷஶ்ரேஷ்டர்களான பாண்டவர்களால் நான்குபக்கத்திலும் சூழப்பட்ட அந்தக் கௌரவஸேனாவீரர்கள் மகரங்கள் கடலைக்கலக்குவதுபோல அந்தச் சேனையைக் கலக்கினார்கள். பெருங்காற்றுக்கள் மரங்களை நடுங்கச்செய்வதுபோல உம்மைச் சேர்ந்தவர்கள் (பாண்டவ சேனையை) நடுங்கவும் செய்தார்கள். அரசரே! கீழ்காற்றினால்கலக்கப்படுகிற மகாநதியான கங்கைபோலக் கௌரவசேனையினால் பாண்டவசேனையானது அப்பொழுது கலக்கப்பட்டதும், மிக்கபலசாலிகளான அனேக மகாரதர்கள் பெரிய சேனையைத் தடுத்துக்கொண்டு, 'அரசனான யுதிஷ்டிரன் எங்கே இருக்கிறான்?

சூரர்களான அவனுடைய பிராதாக்களுள் ஒருவரேனும்இங்குகாணப் படவில்லை' என்று அச்சமயத்தில் கூச்சலிட்டார்கள். பிறகு, இவ் வாறு சொல்லுகின்ற சூரர்களான அந்த மத்ரராஜனுடைய படை வீரர்களை த்ருஷ்டத்யும்னனும் ஸாத்யகியும் மஹாரதர்களான த்ரௌ பதீபுத்திரர்களனைவரும் சிறந்த வீரர்களான பாஞ்சாலர்களும் மஹா ரதனை சிகண்டியும் ஸாத்யகியும் எதிர்த்து நாசஞ்செய்தார்கள். யுத்தத்தில் உம்மைச்சேர்ந்தவர்களில் சிலர் பகைவர்களால் துண்டாக் கப்பட்ட சக்கரங்களால் கொல்லப்பட்டவர்களும் சிலர் வெட்டப் பட்ட பெரிய த்வஜங்களால் கொல்லப்பட்டவர்களுமாகக் காணப்பட் டார்கள். மன்னரே! பாரதரே! நாற்பக்கத்திலும் உம்முடைய புத்திரனால் தடுக்கப்பட்ட யுத்தவீரர்கள் யுத்தத்தில் பாண்டவர்களைக் கண்டு வேகத்துடன் (யுத்தத்தைவிட்டு விலகிச்) சென்றார்கள். துர் யோதனனும் அந்த வீரர்களை ஸமாதானஞ்செய்துகொண்டு தடுத் தான். அச்சமயத்தில் துர்யோதனனுடைய ஆணையை மஹாரதர் கள் ஒருவரும் பின்பற்றவில்லை. மஹாராஜரே! பிறகு, காந்தாரராஜனு டைய குமாரனை சகுனி, சொல்லத்தக்கவனை துர்யோதனனைப்பார் த்து, 'பாரத! நாம் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே மத்ரவீரர்க ளுடைய படையானது ஏன்கொல்லப்படுகிறது? யுத்தத்தில் நீ நிற்கும் பொழுது இச்செய்கையானது தகாதது. எல்லோராலும் ஒன்றுசேர் ந்து யுத்தஞ்செய்யப்படவேண்டு மென்றன்றோ ஸங்கேதம் செய்யப் பட்டது. அரசே! (ஸங்கேதத்தை) நினைத்துக்கொண்டேயிருக்கிற நீ யாதுகாரணத்தினால்கொல்லுகின்றவர்களைப்பொறுத்துக்கொண்டிருக் கிறாய்' என்கிற வசனத்தை உரைத்தான். துர்யோதனன், 'என்னால் முன்புதடுக்கப்பட்ட இந்தவீரர்கள் என்சொற்படி நடக்கவில்லை. பாண் டவசேனையை எதிர்த்தவர்களான இவர்கள் எல்லோரும் நாசஞ்செய் யப்பட்டார்கள்' என்றுமறுமொழிஉரைத்தான். சகுனி, 'வீரர்கள் யுத் தத்தில் ரோஷமுள்ளவர்களாக எஜமானனுடையகட்டளையைஅனுஷ் டிக்கவில்லை. இவர்கள்விஷயத்தில் கோபத்தை நன்கு பாராட்ட வேண்டும். உபேக்ஷை பண்ணுவதற்கு இது ஸமயமன்று. இந்த ஸமயத்தில் நாமெல்லாரும் ஒன்றுசேர்ந்து குதிரைகளோடும் ரதங் களோடும் யானைகளோடும் மத்ரராஜனை அனுசரித்துச் சென்றவர் களான பெரிய வில்லாளிகளை ரக்ஷிப்பதற்காகச் செல்வோம். அர சனே! அதிகமுயற்சியினால் ஒருவரைஒருவர் ரக்ஷித்துக்கொள்வோம்' என்றுகூறினன். இவ்வண்ணம்எல்லோரும்ஆலோசித்துப் போர்வீரர் கள் இருக்குமிடம் சென்றார்கள். இவ்வாறுசொல்லக்கேட்ட துர்யோ

தனராஜன், அப்பொழுது பெரும்படையினால் சூழப்பட்டவனாகி ஸிம்ம நாதத்தினால் பூமியை நடுங்கச்செய்பவன்போலச் சென்றான். பாரதரே! 'கொல்லுங்கள், குத்துங்கள், பிடியுங்கள், அடியுங்கள், வெட்டுங்கள்' என்கிற சப்தமானது இடைவிடாமல் உம்முடைய படையில் தோன்றியது. பாண்டவர்களோ, யுத்தத்தில் ஒன்றுசேர்ந்திருக்கிற மத்ரராஜனுடைய துணைவீரர்களைக்கண்டு அவர்களுடைய படைவரிசையின் நடுவிடத்தை அடைந்து அவர்களை எதிர்த்தார்கள். அரசரே! மத்ரராஜனுடைய துணைவீரர்கள் யுத்தத்தில் ஒரு முகூர்த்தத்திற்குள் கைச்சண்டைசெய்து மாண்டவர்களாகக்காணப்பட்டார்கள். பிறகு, புறப்பட்டுச் சென்றவர்களான நம்மவர்களுள் வேகமுடையவர்களான மத்ரர்கள் கொல்லப்பட்டார்கள். பகைவர்கள் ஒன்றுகூடி மகிழ்ச்சியுற்றுக் கலகலவென்னும் சப்தத்தைச்செய்தார்கள். பிறகு, (யுத்தரங்கத்தில்) நான்குபக்கங்களிலும் தலையில்லா முண்டங்கள் எழுந்து துள்ளுகின்றவைகளாகக் காணப்பட்டன. சூர்யமண்டலத்தினுடைய மத்தியிலிருந்து பெரிதான உற்கையும் வீழ்ந்தது. யுத்தபூமியானது, நொறுக்கப்பட்ட நுகத்தடிகளையும் அச்சுக்களையுமுடைய ரதங்களாலும் கொல்லப்பட்ட மகாரதர்களாலும் வீழ்த்தப்பட்ட குதிரைகளாலும் மூடப்பட்டதாகியது. மஹாராஜரே! அந்த யுத்தரங்கத்தில் காற்றுப்போன்றவைகளும் நுகங்களிற் பூட்டப்பட்டவைகளுமான குதிரைகளால் யுத்தவீரர்கள் ஆங்காங்கு இழுக்கப்பட்டார்கள். யுத்தபூமியில் சில குதிரைகள் நொறுங்கின சக்ரங்களுடன்கூடிய ரதங்களை இழுத்துச் சென்றன. சில குதிரைகள் ரதத்தினது பாதியை இழுத்துக்கொண்டு பத்துத்திசைகளிலும் சுற்றின. சிலகுதிரைகள் பூட்டாம்வார்களுடன் ஆங்காங்கு காணப்பட்டன. கீழே விழுந்திருக்கின்ற புருஷஸ்ரேஷ்டர்களான ரதிகர்கள் புண்யங்கள் தீர்ந்தகாலத்தில் ஆகாயத்தினின்று நழுவிவிழுந்த ஸித்தர்கள்போலக் காணப்பட்டார்கள். மத்ரநாதனைப் பின்தொடர்ந்து வந்திருந்த வீரர்கள் கொல்லப்பட்டபின்னும் வெற்றியில் பேராவலுள்ளவர்களும் அடிக்குந்திறமையுள்ளவர்களுமான மஹாரதர்களான பார்த்தர்கள் எதிர்த்துவருகின்ற நம்மவர்களைப் பார்த்து, சங்கநாதங்களுடன் கலந்திருக்கின்ற பாணங்களின் சப்தங்களையும் ஸிம்மநாதங்களையும் வெளியிட்டுக்கொண்டு வேகத்தோடு எதிர்த்தார்கள். அஸ்திரவித்தையில் நல்ல தேர்ச்சிபெற்றவர்களும் நன்கு அடிக்குந்தன்மையுடையவர்களுமான பார்த்தர்கள் மீண்டும் நம்மை எதிர்த்து விற்களை அசைத்துக்கொண்டு ஸிம்மநாதங்களை வெளியிட்டார்கள். பிறகு, பெரிதான மத்ரராஜ

னுடைய படையானது கொல்லப்பட்டதையும் யுத்தத்தில் சூரனான மத்ரராஜன் தள்ளப்பட்டதையுங்கண்டு துர்யோதனனுடைய சேனை முழுவதும் மறுபடியும் புறங்கொடுப்பதாயிற்று. மகாராஜரே! ஜயத்தினால் பிரகாசிப்பவர்களும் உறுதியான விற்களையுடையவர்களுமான பாண்டவர்களால் கொல்லப்படுகின்ற கௌரவசேனையானது பரபரப்புள்ளதாகவும் பயமுறுத்தப்பட்டதாகவும் திசைகளில் ஓடியது.

---

## பதினெட்டாவது அத்யாயம்.

### ச ல் ய வ த பா ர் வ ம். (தொடர்ச்சி.)



### (ஸங்குல யுத்தம்.)

வெல்லமுடியாதமஹாரதனான மத்ரராஜன்யுத்தத்தில்கொல்லப்படவே, உம்மைச்சேர்ந்தவர்களும் உம்முடையபுத்திரர்களும் பெரும்பான்மையாகப் புறங்காட்டினவர்களானார்கள். மஹாராஜரே! ஆழ்ந்ததும் அக்கரை இல்லாததுமான பெருங்கடலில் கப்பல் உடைந்தவுடன் வியாபாரிகள் கரையை அடைவதற்கு விரும்புவதுபோல, மகாபலசாலியும் சூரனுமானமத்ரராஜன் கொல்லப்படவே நாதனற்றவர்களும் பாணங்களால் மிகக்காயப்படுத்தப்பட்டவர்களுமான கௌரவர்கள் நாதனைவிரும்பினவர்களாயிருந்துகொண்டு ஸிம்மத்தினால் ஹிம்ஸிக்கப்பட்டமிருகங்கள்போலப் பயந்தார்கள். அஜாதசத்துருவினால் நடுப்பகலில் ஜயிக்கப்பட்டநாங்கள் கொம்பொடிந்த காளைகள்போலவும் தந்தம்முறிந்த யானைகள்போலவும் யுத்தத்தினின்றுதிரும்பி ஓடினோம். அரசரே! சல்யன்கொல்லப்படவே, உமதுயுத்தவீரர்களில் ஒருவனுக்காவது சேனைகளைநிறுத்துவதற்கும் பராக்கிரமத்தைவெளியிடுவதற்கும் புத்தியுண்டாகவில்லை. மன்னரே! பீஷ்மரும் த்ரோணரும் கொல்லப்பட்டு ஸூதபுத்ரனான கர்ணனும் வீழ்த்தப்படவே, நம்முடைய போர்வீரருக்கு எப்படிப்பட்ட துக்கமும் பயமும் உண்டாயினவோ அப்படிப்பட்ட துக்கமும் பயமும் நம்மைச்சேர்ந்தவர்களுக்கு மறுபடியுமே உண்டாயின. வேந்தரே! மஹாரதனான சல்யன் கொல்லப்படவே, உம்முடையயுத்தவீரர்கள் ஜயத்தில் ஆசையை இழந்தார்கள். அரசரே! சிறந்தவீரர்கள் கொல்லப்பெற்றவர்களும் அதிகமாக நாசம் செய்யப்பட்டவர்களும் கூர்மையுள்ள அம்புகளால் அறுக்கப்பட்டவர்களுமான அந்தயுத்தவீரர்கள் மத்ரராஜன்கொல்லப்படவே, பயத்தால் ஓடினார்கள். சிலமஹாரதர்கள் குதிரைகளின்

மீதும் சிலர் யானைகளின்மீதும் சிலர் ரதங்களின்மீதும் ஏறிக்கொண்டு வேகத்துடன் ஓடினார்கள். அவ்வாறே, காலாட்களும் ஓடினார்கள். சல்யன் கொல்லப்பட்டவுடனே, மலைபோன்ற சரீரமுடையவைகளும் அடிக்கும் திறமையுடையவைகளுமான இரண்டாயிரம் யானைகள் மாவெட்டிகளாலும் கட்டைவிரல்களாலும் தூண்டப்பட்டவைகளாக ஓடின. பரதஸ்ரேஷ்டரே! உம்மைச்சேர்ந்த அந்தவீரர்கள் யுத்தகளத்தினின்று திசைகளில் ஓடினார்கள். ஓடுகின்றஅவர்களைப் பெருமூச்சுவிடுபவர்களும் பாணங்களால் அடிக்கப்பட்டவர்களுமாயிருப்பதைக் கண்டோம். அதிகமாக முறிய அடிக்கப்பட்டவர்களும் கொல்லப்பட்டவர்களும் ஊக்கத்தை இழந்தவர்களும் தோல்வி அடைவிக்கப்பட்டவர்களுமான அவர்களைக்கண்டு, பாஞ்சாலர்களும் பாண்டவர்களும் ஜயத்தில் விருப்பமுள்ளவர்களாக எதிர்த்தார்கள். பாணங்களுடைய சப்தங்களும் மிகுதியான ஸிம்மநாதங்களும் சூரர்களால் ஊதப்படுகின்ற பயங்கரமான சங்கங்களுடைய ஒலியும் தோன்றின. பயத்தினால் ஓடுகின்ற கௌரவசேனையைக்கண்டு பாஞ்சாலர்கள் பாண்டவர்களுடன் சேர்ந்து ஒருவரோடு ஒருவர் பேசிக்கொண்டார்கள். 'ஸத்தியத்தில் உத்ஸாகமுள்ளவரும் சத்துருக்கள் கொல்லப்பெற்றவருமான யுதிஷ்டிரர் இன்று அரசராகிவிட்டார். இன்று துர்யோதனன் விளங்குகின்ற அரசச்செல்வத்தினால் விடுபட்டான். ஜனநாதரான திருதராஷ்டிரர் இன்று புத்திரன் கொல்லப்பட்டானென்பதைக்கேட்டுப் பிரஜ்ஞையை இழந்து பூமியில் விழுந்து துன்பத்தை அடையப்போகிறார். இன்று, பீபத்ஸு எல்லாவில்லாளிகளுள்ளும் ஸமர்த்தனென்பதை அறிவார். பாவத்தைச் செய்தவரும் கெட்டபுத்தியுடையவருமான அந்தத்திருதராஷ்டிரர் இப்பொழுது தம்மைநிந்தித்துக் கொள்வார். ஹிதத்தைஉரைக்கின்றவரான விதுரருடைய வசனத்தை இப்பொழுது ஸத்யமாக நினைக்கட்டும். அரசர் இன்றுமுதல் பார்த்தனுக்கு வேலைக்காரன்போலிருந்துகொண்டு,பாண்டவர்களால்எந்தத்துக்கம் அடையப்பட்டதோ அந்தத்துக்கத்தை அறியட்டும். அரசர் இன்று கிருஷ்ணனுடைய மாஹாத்ம்யத்தை அறியட்டும்; இன்று யுத்தத்தில் அர்ஜுனனுடைய வில்லின் ஒலியைக் கோரமானதென்றறியட்டும். அரசர் யுத்தத்தில் அர்ஜுனனுடைய அஸ்திரபலமனைத்தையும் இருகைகளுடைய பலத்தையும் பீமனால் புத்திரர்களுடைய கோரமான வதத்தையும் கேட்கப்போகிறார். இந்திரனால் சம்பரன் கொல்லப்பட்டதுபோல (பீமனால்) துர்யோதனன் யுத்தத்தில் கொல்லப்பட்டிருக்குந் தருணத்

தில் மஹாத்மாவான பீமனுடைய கோரமான பலத்தை இன்று அறியப் போகிறார். பீமஸேனனால் துச்சாஸனனைக் கொல்லும் விஷயத்தில் அப்பொழுது எந்தச்செய்கை செய்யப்பட்டதோ அதனை உலகத்தில் மகாபலசாலியான பீமனைத்தவிர வேறு எவன் செய்வான்? தேவர்களால்கூடச் சிறிதும் ஸஹிக்கமுடியாத மத்ரராஜன் கொல்லப்பட்டதைக்கேட்டுப் பாண்டவர்களுள் மூத்தவரான யுதிஷ்டிரருடைய பராக்கிரமத்தை இப்பொழுது அறியட்டும். காந்தாரர்களுள் எல்லாவிதத்திலும் வீரனான சகுனி கொல்லப் பட்ட பிறகு, மாத்ரீபுத்திரர்கள் யுத்தத்தில் எவ்விதத்திலும் பொறுக்கமுடியாதவர்களென்று இன்று அறியப்போகிறார். எவர்களுக்குத் தனஞ்சயனும் ஸாத்யகியும் பீமஸேனனும் பார்ஷதனான த்ருஷ்டத்யும்னனும் த்ரௌபதீபுத்திரர்கள் ஐவரும் மாத்ரீபுத்திரர்களான நகுல ஸஹதேவர்களும் சிகண்டியும் சிறந்த வில்லாளியும் அரசருமான யுதிஷ்டிரரும் போர்வீரர்களோ அவர்களுக்கு ஏன் ஜயம் உண்டாகாது? ஜகந்நாதனும் ஜநார்த்தனனுமான கிருஷ்ணன் எவர்களுக்கு நாதனோ எவர்களுக்குத் தர்மம் ஆதாரமோ அவர்களுக்கு எப்படி ஜயமுண்டாகாமலிருக்கும்? ஸர்வலோகநாதனும் இந்திரியங்களுக்கு நியந்தாவுமான ஹரி எவர்களுக்கு நாதனோ அவர்களுக்கே லாபம்; அவர்களுக்கே ஜயம். அவர்களுக்கு அவமானம் எங்கிருந்து உண்டாகும்? ஸத்யத்துக்கும் கீர்த்திக்கும் நிதியாயிருக்கிற ஹ்ருஷீகேசன் எவருக்கு எப்பொழுதும் நாதனோ அந்தக் குந்தீபுத்திரரான யுதிஷ்டிரரைத்தவிர வேறு எவன் யுத்தத்தில் பீஷ்மரையும் துரோணரையும் கர்ணனையும் மத்ரராஜனையும் அவ்வாறே நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் வீரர்களான மற்றஅரசர்களையும் ஜயிப்பதற்குச் சக்தியுள்ளவன்?' என்று அவர்கள் இவ்வாறுசொல்லிக்கொண்டும் அதிக ஸந்தோஷத்தோடும் அதிகஉத்ஸாகத்தோடுங்கூடியும் நன்றாகமுறிய அடிக்கப்பட்ட உம்மைச்சேர்ந்தயுத்தவீரர்களைப் பின்தொடர்ந்து சென்றார்கள். வீர்யசாலியான தனஞ்சயன் தேர்ப்படையை எதிர்த்தான். மாத்ரீபுத்ரர்கள்இருவரும் மஹாரதனான ஸாத்யகியும் சகுனியை எதிர்த்தார்கள். பீமஸேனனிடத்தினின்று உண்டான பயத்தினால் பீடிக்கப்பட்டவர்களும்ஓடுகின்றவர்களுமான அவர்களனைவரையும் பார்த்துஅப்பொழுது துர்யோதனன் ஆச்சர்யமடைந்தவன்போல இருந்துகொண்டு பாகனைப்பார்த்து, 'வில்லைக் கையில் பிடித்திருக்கிற என்னைப் பார்த்தன் தாண்டிச்செல்லுகிறான். எல்லாச்சேனைகளுக்கும் பின்புறத்தில் மெள்ளக் குதிரைகளை ஓட்டு. குந்தீபுத்திரன், பின்புறத்

தில் போர்புரிகின்றனென்னே, பெருங்கடலானது கரையைமீரு ததுபோல மீறுவதற்கு ஸமர்த்தனுகான். ஸம்சயமில்லே. ஸூத ! பாண்டவர்களால் எதிர்த்துத் துரத்தப்படுகிற பெரும்படையைப் பார். நாற்புறத்திலும் மேலே எழுந்திருக்கிற இந்த ஸைன்யத்தின் புழுதியையும் பார். கோரமும் பயங்கரமுமாகப் பலவாறுஉண்டா கின்ற ஸிம்மநாதங்களேயும் கேள். ஸூத! ஆதலால், மெள்ளச் செல்வாயாக. பின்பக்கத்தைப் பாதுகாப்பாயாக. நானும் யுத்தத் தில் நின்று பாண்டவர்களும் தடுக்கப்பட்டார்களேயாகில் என்னு டைய சேனேயானது பராக்கிரமத்தோடு மறுபடியும் விரைவாகத் திரும்பும்' என்று சொன்னுன். சூரனுன உமது புத்திரனுக்கேற்ற தான அந்த வசனத்தைக்கேட்டு ஸாரதியானவன் பொன்னலங்காரங் களால் நன்கு மூடப்பட்ட குதிரைகளே மெள்ள நடத்திஞன். யானேகளாலும் குதிரைகளாலும் ரதிகர்களாலும் விடுபட்டவர்களும் சரீரத்தை (யுத்தத்தில்) விடத்துணிந்தவர்களுமான காலாட்கள் இரு பத்தோராயிரம் பேர்கள் யுத்தத்துக்காக நின்ருர்கள். பற்பல தேசங் களிலுண்டானவர்களும் பற்பலவிதமான வர்ணங்களமைந்த ஆடை களேயுடையவர்களுமான போர்வீரர்கள் அப்பொழுது பெரிதான கீர்த் தியை விரும்பினவர்களாக ஆயத்தமாக நின்ருர்கள். அச்சமயத்தில் வருகின்றவர்களும் மகிழ்ச்சியுள்ளவர்களுமான அவர்களுக்குக் கோர மான காட்சியுள்ளதும் பயங்கரமாயிருப்பதும் மிக்கபெரிதுமான யுத்தமானது பரஸ்பரம் உண்டாயிற்று. அரசரே! அப்பொழுது (துரி யோதனன்) பீமஸேனனேயும் பார்ஷதனுன திருஷ்டத்யும்னனேயும் பல தேசத்துவீரர்களேயும் சதுரங்கஸேனேயிஞல் தடுத்தான். யுத்தத் தில் மற்றக்காலாட்களோ மகிழ்ச்சியுள்ளவர்களும் வீரலோகத்தை அடைய எண்ணங்கொண்டவர்களுமாகி ஸிம்மநாதம்செய்து கை களேத்தட்டிக்கொண்டு பீமனேயே எதிர்த்தார்கள். கோபங்கொண்டவர் களும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவர்களுமான கௌரவர்கள் பீமஸேனனே எதிர்த்துக் கர்ஜித்தார்கள்; வேறு பேச்சுப் பேசவில்லே. அவர்கள் யுத்தத்தில் நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டு பீமனே அடித்தார்கள். யுத்தத்தில் அடிக்கப்படுகின்றவனும் காலாட்களுடைய கூட்டங்களால் சூழப்பட்டவனுமான அந்தப்பீமன் மைனுகபர்வதம் போல அவ்விடத்திலிருந்து அசையவில்லே. மஹாராஜரே ! பாண்ட வனுடைய மஹாரதத்தைத் தடுப்பதற்கு முயல்கின்றவர்களும் குரோதமுள்ளவர்களுமான அந்தவீரர்கள் மற்ற யுத்தவீரர்களேயும் தடுத்தார்கள். பீமன் நாற்புறங்களிலும் யுத்தஸன்னத்தர்களாக நிற்

கின்ற கௌரவவீரர்களால் அப்பொழுது கோபமூட்டப்பட்டான். அந்தப் பீமன் ரதத்தினின்று விரைவாக இறங்கிக் காலாளாக நின்ருன். அவன் பொன்னல் மூடப்பட்டிருக்கிற பெரிதான கதையைக் கையில்எடுத்துக்கொண்டு காலதண்டத்தைக் கையில்கொண்ட அந்தகன்போல உம்மைச்சேர்ந்த யுத்தவீரர்களைக் கொன்ருன். பலசாலியான அவன், ரதங்களாலும் குதிரைகளாலும் விடுபட்டிருக்கிற அந்த இருபத்தோராயிரம் காலாட்களையும் கதாயுதத்தினுல் அடித்தான். ஸத்யபராக்கிரமனுன பீமன் அந்தப் புருஷர்களுடைய படையைக் கொன்று த்ருஷ்டத்யும்னனை முன்னிட்டுக்கொண்டு காலவிளம்பமின்றிக் காணப்பட்டான். கொல்லப்பட்டு ரக்தத்தினுல் நனைக்கப்பட்டிருக்கிற காலாட்கள், நன்ருகப் பூத்தவையும் காற்றினுல் முறிக்கப்பட்டவையுமான கர்ணிகாரமரங்கள்போலப் பூமியில் சாய்ந்தார்கள். பற்பல சஸ்திரங்களையுடையவர்களும் பற்பலகுண்டலங்களை அணிந்தவர்களும் பற்பல தேசங்களிலிருந்து வந்திருப்பவர்களுமான பற்பலஜாதியைச் சேர்ந்தவர்கள் அந்த யுத்தத்தில் கொல்லப்பட்டார்கள். அறுக்கப்பட்டதும் கொடித்துணிகளாலும் கொடிகளாலும் நன்ருக மூடப்பட்டதுமான காலாட்களுடைய பெரும்படையானது ரௌத்ரமாகவும் கோரரூபமுள்ளதாகவும் பயங்கரமாகவும் விளங்கிற்று. யுதிஷ்டிரரைத் தலைவராகக் கொண்ட மஹாரதர்கள் ஸைன்யத்துடன் கூடியவர்களாக மிக்க தைரியமுள்ளவனும் உமது புத்திரனுமான துரியோதனனை எதிர்த்தோடினுர்கள். அவர்களனைவரும் பெரிய விற்களையுடையவர்களான உம்மைச் சேர்ந்தவீரர்களைப் புறங்காட்டினவர்களாகக்கண்டுபேரலைகள்கரையை எதிர்க்காததுபோல உம்முடையபுத்திரனை எதிர்க்கவில்லை. பார்த்தர்கள் ஒன்றுசேர்ந்து துர்யோதனன் ஒருவனை மிஞ்சுவதற்குச் சக்தியற்றவர்களானுர்களென்னும் ஆச்சர்யகரமான உமதுபுத்திரனுடைய ஆண்மையைக் கண்டோம். (பாணங்களால்) மிகக்காயப்படுத்தப்பட்டதும் ஓட எண்ணங்கொண்டு சிறிதுதூரம் சென்றதுமான தன்படையைப்பார்த்து, துரியோதனன் உரைக்கலானுன். "(ஸைனிகர்களே!) எவ்விடத்தை அடைந்திருந்தால் உங்களைப் பாண்டவர்கள் கொல்லமாட்டார்களோ அப்படிப்பட்ட இடத்தைப் பூமியிலாவது மலைகளிலாவது நான் காணவில்லை. நீங்கள் ஓடுவதினுல் யாதுபயன்? இவர்களுடையசேனையோசிறிதேஇருக்கிறது. கிருஷ்ணர்ஜுனர்களும் அதிகமாகக்காயப்படுத்தப்பட்டிருக்கிருர்கள். இந்தச்சமயத்தில் ஓடாமல எல்லோரும் நிற்போமேயானுல் ஜயம் நிச்சயமாக நமக்குஉண்டா

கும். அடிக்கப்பட்டவர்களாகவும் ஓடுகின்றவர்களாகவுமிருக்கின்ற உங்களை, இன்னுதவற்றைச்செய்யப்பெற்ற பாண்டவர்கள் பின்தொடர்ந்துகொல்வார்கள். யுத்தத்தில் நமக்கு வதமே சிறந்தது. இவ்விடத்தில் வந்திருக்கிற க்ஷத்திரியர்களனைவரும் என்வசனத்தைக் கேட்பார்களாக. யமன் சூரனையும் பயந்தவனையும் எப்பொழுதும்கொல்லுகிருனுதலால் மூடனுனாலும் க்ஷத்திரியனுன எந்தமனிதன்தான் போர்புரியமாட்டான்? கோபங்கொண்டவனுன பீமஸேனனுக்கு எதிரில் நிற்பது நமக்குப் புகழ்தரத்தக்கது. யுத்தத்தில் நேரும் மரணமானது ஸுகதரம். வியாதி மூப்பு முதலானவைகளால் நேரிடும்மரணமானது துக்ககரமானது. மனிதன் வீட்டிலேயேயிருந்தாலும் ஒருஸமயத்தில் அவசியம் சாகவேவேண்டும். க்ஷத்திரியதர்மத்தோடு போர்புரிகிறவனுக்கு இந்தமரணமானது பழமையாயுள்ளது. கொல்லுகிறவன் இவ்வுலகில் ஸுகத்தை அடைகிருன். கொல்லப்பட்டவன் பரலோகஞ்சென்று பெரும்பயனைப் பெறுகிருன். கௌரவர்களே! ஸ்வர்க்கத்தை அடைவதற்கு யுத்ததர்மத்தைவிடச் சிறந்ததான வழி இல்லை. யுத்தத்தில் கொல்லப்பட்டவன் அதிசீக்கிரமாக அப்படிப்பட்ட உலகங்களை அடைகிருன்' என்ருன். அரசர்கள் அவனுடைய அந்த வசனத்தைக் கேட்டுப் புகழ்ந்து மீண்டும் *ஆததாயிகளான பாண்டவர்களை எதிர்த்து வந்தார்கள். அப்பொழுது ஜயத்தில் பேராவலுள்ளவர்களும் அதிக கோபமுள்ளவர்களும் பகைவர்களை நன்ருக அடிக்குந்திறமையுள்ளவர்களுமான பார்த்தர்கள், வியூகம் வகுக்கப்பட்ட சேனையுடன்கூடியவர்களாக அவர்களனைவரும் எதிர்த்து வரும்பொழுதே விரைவாக எதிர்த்தார்கள். வீர்யமுள்ளவனை தனஞ்சயன் மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்ற காண்டீவமென்கிற வில்லை ஒலியுடன் அசைத்துக்கொண்டு ரதத்தோடு யுத்தத்தில் (கௌரவர்களை) எதிர்த்தான். முயற்சியுள்ளவர்களான மாத்ரீபுத்திரர்களும் மகாபலசாலியான ஸாத்யகியும் மகிழ்ச்சியுற்றுச் சகுனியையும் உம்முடைய படையையும் வேகத்துடன் எதிர்த்தார்கள்.

---

* கொடியவர்கள்; கொல்லுந்தன்மையுள்ளவர்கள்.

## பத்தோன்பதாவது அத்யாயம்.

## சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



### (ஸாத்யகி ஸால்வனைக் கொன்றது.)

சேனைகள் (யுத்தத்திற்காகத்) திரும்பினவுடன், மிலேச்சர்களுடைய கூட்டத்துக்குத் தலைவனான ஸால்வன், அதிககோபங்கொண்டு மதப்பெருக்குள்ளதும் பர்வதம்போன்றதும் கொழுப்புள்ளதும் ஐராவதம்போல்விளங்குவதும் பகைவர்களுடைய கூட்டத்தை நாசஞ் செய்கின்றதுமான மிக்க பெரிய யானையின்மீதேறிக்கொண்டு பாண்டவர்களுடைய பெரும்படையை எதிர்த்துச்சென்றான். அரசரே! பெரியஉருவமுடையதும் *பத்ரகுலத்தில் பிறந்ததும் திருதராஷ்டிர புத்திரனால் எப்பொழுதும் நன்றாகப் பூஜிக்கப்பட்டதும் சாஸ்திரங்களின்நிச்சயத்தை அறிந்தவர்களால் யுத்தங்களில் எப்பொழுதும் அரசனுக்குரிய வாகனமாக ஏற்படுத்தப்பட்டதுமான அந்தயானையின்மீது ஏறி ராஜஸ்ரேஷ்டனான ஸால்வன் ஐராவதத்தின்மீது ஏறிப் பயத்தை உண்டுபண்ணிக்கொண்டு அஸுரர்களுடைய ஸமூகத்தை அதிகமாக நொறுக்குகின்ற இந்திரன்போலவும் காலையில் உதயபர்வதத்திலிருக்கிறஸூர்யன்போலவும் பிரகாசித்தான். மன்னரே! அவன் அப்படிப்பட்ட சிறந்த யானையினால் ஒன்று சேர்ந்திருக்கிற பாண்டவர்களை எதிர்த்துக் கூர்மையுள்ளவையும் வேகத்தால் மஹேந்திரனுடைய வஜ்ரத்துக்கு ஒப்பானவையும் மிக்க கோரமாயுள்ளவையுமான பாணங்களால் பிளந்தான். ராஜரே! முற்காலத்தில் தைத்யர்கள், வஜ்ரதரனான இந்திரனுடைய அவகாசத்தைக் காணாததுபோல மஹா யுத்தத்தில் பாணங்களைப் பிரயோகிக்கின்றவனும் ரணவீரர்களை யமனுடைய ஆலயத்துக்கு அனுப்புகின்றவனுமான ஸால்வனுடையஅவகாசத்தைத் தன்னைச்சேர்ந்தவர்களாவது பிறர்களாவது காணவில்லை. ஒன்றாக இருந்தும் ஆயிரமாக ஸமீபத்தில் ஸஞ்சரிக்கின்றதும் மஹேந்திரனுடைய யானைபோன்றதுமான அந்த நிகரில்லாத யானையை நாற்பக்கத்திலும் அந்தப்பாண்டவர்களும் ஸோமகர்களும் ஸ்ருஞ்சயர்களும் கண்டார்கள். மிகத்துரத்தப்படுகின்ற பகைவர்களுடைய படையானது, நாற்புறங்களிலும் பிணங்களுக்கு ஒப்பாக விளங்கியது. அப்பொழுது, யுத்தத்தில் பயத்தினால் ஒன்றொன்று அதிகமாகத் துகைக்கப்படுகின்ற அச்சேனையானது நிலை

---

* யானையின் ஓர் வகுப்பு; துரோணபர்வம் 431-ம்பக்கம் குறிப்பிற்காண்க.

பெறவேயில்லை. பிறகு, அந்த அரசனால் வேகமாக முறிய அடிக்கப்பட்ட பாண்டவர்களைச்சேர்ந்த அந்தப்பெரும்படையானது அந்தச் சிறந்த கஜத்தினுடைய வேகத்தைத்தாங்கச் சக்தியற்றதாக நான்குதிக்குக்களிலும் விரைவாக ஓடியது. அதிகவேகமுள்ள ராஜாவான ஸால்வனால் முறிய அடிக்கப்பட்ட அந்தச்சேனையை யுத்தத்திலுள்ள உம்மைச்சேர்ந்த சிறந்த அந்த எல்லாயுத்தவீரர்களும்பார்த்து, அந்த அரசனைக் கௌரவித்தார்கள்; சந்திரனுக்கொப்பான சங்கங்களையும் ஊதினார்கள். பிறகு, ஸந்தோஷத்தினால் வெளியிடப்படும் சங்கமுழக்கத்துடன் கூடின கௌரவர்களுடைய ஸிம்மநாதத்தைக் கேட்டுப் பாண்டவர்களுக்கும் ஸ்ருஞ்சயர்களுக்கும் ஸேனாதிபதியான பாஞ்சாலராஜபுத்திரன் கோபத்தினால் பொறுக்கவில்லை. பிறகு, இந்திரனோடு யுத்தஞ்செய்யும்போது இந்திரனுடைய வாகனமான ஐராவணமென்கிற சிறந்த யானையை ஜம்பன் எதிர்த்ததுபோல வலிமைமிக்கவனான த்ருஷ்டத்யும்னன் ஜயமடைவதின்பொருட்டு விரைவுடன் அந்தயானையை எதிர்த்துச்சென்றான். அரசரே! ராஜஸிம்மனான ஸால்வன் யுத்தத்தில் விரைவாக எதிர்த்துவருகின்ற அந்தப்பாஞ்சாலபுத்திரனைக்கண்டு அவனைக்கொல்வதின்பொருட்டு அந்தயானையை விரைவாகத் தூண்டினான். அந்தத்திருஷ்டத்யும்னன், விரைவாக எதிர்த்துவருகின்ற அந்தச்சிறந்தயானையை அக்னிபோன்ற பாணங்களாலும் கருமானால் சாணைபிடிக்கப்பட்டவையும் கூர்மையுள்ளவையும் ஜ்வலிக்கின்றவையும் உக்கிரமான வேகமுள்ளவையுமான சிறந்த மூன்றுநாராசங்களாலும் அடித்தான். பிறகு, மஹாத்மாவான பாஞ்சாலராஜகுமாரனை அவன் வேறு ஐந்நூறு உத்தமநாராசங்களைக் கும்பஸ்தலத்தில் பிரயோகித்தான். யுத்தத்தில்அவைகளால் அடிக்கப்பட்ட அந்தச்சிறந்தயானையானது அப்பொழுது திரும்பி அதிவேகத்துடன் ஓடியது. ஸால்வன், விரைவாகஅடித்து ஓட்டப்படுகின்ற அந்தச்சிறந்தயானையை ஈட்டிகளாலும் மாவெட்டிகளாலும்திருப்பிப் பாஞ்சாலராஜனுடைய புத்திரனைக் குறித்துக்காட்டி வேகமாகத் தூண்டினான். விரைவாகவருகின்ற அந்தயானையைக்கண்டு வீரனான த்ருஷ்டத்யும்னன் பயத்தினால் அங்கங்கள் சோர்ந்தவனாகித் தன் ரதத்தினின்று சீக்கிரமாகவே ஒரு கதையைக் கையில்எடுத்துக் கொண்டு பூமியில் குதித்தான். அந்தப் பெரிய யானையானது பொன்னால் அலங்கரிக்கப்பட்ட அங்கங்களுடன் கூடிய அந்த ரதத்தைக் குதிரைகளோடும் ஸாரதியோடும் உடனே நொறுக்கித் துதிக்கையினால் தூக்கிக் கர்ஜித்துக்கொண்டு ரணபூமியின் தரையில் அடித்

துப்பொடிசெய்தது. அப்பொழுது, அந்தச் சிறந்தயானையினால் பிடிக்கப்பட்ட அந்த த்ருஷ்டத்யும்னனைக்கண்டு வேகத்துடன் பீமனும் சிகண்டியும் சினியினுடைய பேரனான ஸாத்யகியும் விரைவாக அந்த யானையை எதிர்த்தோடி, நாற்புறத்திலும் தாக்குகின்ற அந்த யானையினது வேகத்தைப் பாணங்களால் விரைவாகத் தடுத்தார்கள். ரதிகர்களால் அந்த யானையானது தடுக்கப்பட்டது. அவர்களால் தடுக்கப்பட்ட அந்த யானையானது யுத்தத்தில் நிலைதவறியது. பிறகு, அரசனான ஸால்வன், ஸூர்யன் நாற்பக்கங்களிலும் கிரண ஸமூகத்தைப் பரப்புவதுபோலப் பாணங்களை வர்ஷித்தான். அந்தப் பாணங்களால் அடிக்கப்படுகின்ற தேர்க்கூட்டங்கள் ஒன்று சேர்ந்து ஆங்காங்கு ஓடின. அரசரே! ஸால்வனுடைய அச்செய்கையைப் பாஞ்சாலபுத்திரர்களனைவரும் ஸ்ருஞ்சயர்களும்கண்டு, ஆ! ஆ! என்னும் சப்தங்களால் யுத்தகளத்தை ஒலியிடும்படி செய்தார்கள். புருஷஸ்ரேஷ்டர்கள் யானையை நான்குபக்கத்திலும் தடுத்தார்கள். பாரதரே! சூரனும் பகைவர்களை நாசஞ்செய்பவனும் வீரனுமான பாஞ்சால புத்திரனே சுறுசுறுப்புள்ளவனாகி மலையின்சிகரம்போன்ற கதையை எடுத்துப் பரபரப்புடன் யானையை வேகத்தோடு பின்தொடர்ந்தான். பிறகு, சிறந்தவேகமுள்ளவனான பாஞ்சாலராஜகுமாரன் கதையை நன்றாகச் சுழற்றிக்கொண்டு மலைபோல விளங்குகின்றதும் மதத்தைப் பெருக்குகின்றதும் மேகம்போலப் பிரகாசிக்கின்றதுமான அதனை அதிகமாக அடித்தான். மலைபோல் விளங்குகின்ற அந்த யானையானது மத்தகம் பிளக்கப்பட்டதாகி, உடனே வீரிட்டு இரத்தத்தை வாயினின்று மிகுதியாகக்கக்கிக்கொண்டு பூகம்பத்தினால் அசையும் மலைபோல விழுந்தது. அப்பொழுது அந்த உத்தம யானையானது, தள்ளப்பட்டு உமது புத்திரனுடைய சேனை ஆ! ஆ! என்று அலறவே, சினிகளுள்சிறந்தவனும் உத்தம வீரனுமான ஸாத்யகி கூர்மையுள்ள ஒரு பல்லத்தினால் ஸால்வராஜனுடைய தலையை அறுத்தான். ஸாத்வதனான ஸாத்யகியினால் யுத்தத்தில் தலையறுக்கப்பட்ட அந்த ஸால்வன், சிறந்த யானையோடு கூடவே இந்திரனால் பிரயோகிக்கப்பட்ட வஜ்ராயுதத்தினால் பிளந்து தள்ளப்பட்ட மிகப்பெரிய மலையின்சிகரம்போலப் பூமியில் விழுந்தான்.

---

## இருபதாவது அத்யாயம்.

## சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



### (ஸாத்யகி கிருதவர்மாவை வென்றது.)

யுத்தத்தில் தேர்ச்சியுள்ளவனும் சூரனுமான அந்தஸால்வன் கொல்லப்படவே, காற்றின்வேகத்தினுல் பெருமரம்நாசஞ்செய்யப்படுவதுபோல உம்முடையசேனையானது நாசஞ்செய்யப்பட்டது. மகாரதனும் சூரனும் மகாபலசாலியுமான க்ருதவர்மா முறியஅடிக்கப்பட்டிருக்கிற அந்தஸேனையைக்கண்டு யுத்தத்தில் சத்துருஸேனையைத் தாக்கினுன். மன்னரே! யுத்தத்தில் மலைபோல் ஸ்திரமாகநிற்பவனும் பாணங்களை இறைப்பவனுமான கிருதவர்மாவை யுத்தத்தில்கண்டு அந்தச்சூரர்கள் திரும்பினுர்கள். மகாராஜரே! பிறகு, மரணம்வரையில் திரும்புவதில்லைஎன்றுநிச்சயித்துத் திரும்பிவந்தவர்களானகௌரவர்களுக்குப்பாண்டவர்களோடு யுத்தம் நடக்கஆரம்பித்தது. அச்சமயத்தில், ஒருவனுகஇருந்துகொண்டு அணுகமுடியாததானபாண்டவஸேனையைத்தடுத்ததாகிய ஆச்சர்யகரமானயுத்தமானது கிருதவர்மாவுக்குப்பகைவர்களோடுநேர்ந்தது.செய்யமுடியாதகார்யம்செய்யப்படவே, மிக்கஸந்தோஷமுள்ளவர்களும் ஒருவருக்கொருவர் நண்பர்களுமான வீரர்களுடைய மிக்கபெரிதானஸிம்மநாதமானது ஆகாயத்தைஅளாவியதாகியது. பரதர்களுள்சிறந்தவரே! சினியின்பௌத்திரனும் மிக்கதோள்வலியமைந்தவனுமான ஸாத்யகியானவன் அந்தச்சப்தத்தினுல் பயந்தவர்களான பாஞ்சாலர்களைப் பாதுகாத்தான். அந்தஸாத்யகி மகாபலமுள்ளக்ஷேமதூர்த்திஎன்கிற அரசனை எதிர்த்துக் கூர்மையுள்ள ஏழுபாணங்களால் அவனை யமனுடையவீட்டிற்கு அனுப்பினுன். வருகின்றவனும் நீண்டகைகளையுடையவனும் கூர்மையான பாணங்களை அதிகமாக இறைக்கின்றவனுமான அந்தச்சினிபுங்கவனைப் புத்திமானுன கிருதவர்மா வேகத்தோடெதிர்த்தான். விற்பிடித்தவர்களும் ரதிகர்களுள் சிறந்தவர்களும் உத்தமமான சஸ்திரங்களைத் தரித்தவர்களுமான அவ்விருவீரர்களும் இரண்டுஸிம்மங்கள்போலக் கர்ஜித்துக்கொண்டு ஒருவரையொருவர் எதிர்த்தார்கள். பாஞ்சலர்களுடன்கூடின பாண்டவர்களும் யுத்தவீரர்களும் மற்றச்சிறந்த அரசர்களும் புருஷஶ்ரேஷ்டர்களான அவ்விருவர்களுடைய சண்டையையும் பார்ப்பவர்களாக ஏற்பட்டார்கள். விருஷ்ணிகளுள்ளும் அந்தகர்களுள்ளும்மஹாரதர்களான அவ்விருவர்களும் அதிக ஸந்தோஷமுள்ள இர

ண்டியானைகள்போலஒருவரையொருவர் நாராசங்களாலும்வத்ஸதந்தங்களாலும்அடித்தார்கள். க்ருதவர்மாவும்சினிகளுள்சிறந்தவனனஸாத்யகியுமாகிய இவ்விருவரும் பற்பலமார்க்கங்களில்ஸஞ்சரித்துக்கொண்டு அம்புமழைகளால்ஒருவரையொருவர் அடிக்கடி மூடினார்கள். விற்களுடையவேகத்தினாலும் பலத்தினாலும் அதிகமாகப்பிரயோகிக்கபட்ட இரண்டு விருஷ்ணிவீரர்களுடைய பாணங்களையும் ஆகாயத்தில் விரைந்துசெல்லுகின்ற விட்டிற்பூச்சிகளைப்போலக் கண்டோம். ஹ்ருதிகனுடையகுமாரனை க்ருதவர்மாவானவன் ஸத்யமான செய்கையுடன் கூடினவனும் நிகரில்லாதவனுமான ஸாத்யகியை எதிர்த்துக் கூர்மையுள்ள நான்கு பாணங்களால் அவனுடைய நான்கு குதிரைகளையும் அடித்தான். நீண்டகைகளையுடையவனை அந்தஸாத்யகி ஈட்டியினால் குத்தப்பட்ட யானைபோல மிக்ககோபம்கொண்டவனாகச் சிறந்த எட்டுப் பாணங்களாலே கிருதவர்மாவை அடித்தான். பிறகு, கிருதவர்மா நன்றாக இழுத்துவிடப்பட்டவைகளும் சாணையில் தீட்டப்பட்டவைகளுமான மூன்றுபாணங்களால் ஸாத்யகியை அடித்து ஒருபாணத்தினால் அவனுடையவில்லை வெட்டினான். சினிகளுள் சிறந்தவனை ஸாத்யகி, அறுக்கப்பட்ட அந்தச் சிறந்தவில்லை எறிந்துவிட்டுப்பாணங்களுடன்கூடின வேறுவில்லை வேகமாக எடுத்தான். எல்லாவில்லாளிகளுள்ளுஞ் சிறந்தவனும் மஹாவீர்யமுள்ளவனும் மஹாபலசாலியும் அதிரதனுமான ஸாத்யகி கோபங்கொண்டு கிருதவர்மாவினால் தன்னுடையவில் வெட்டப்பட்டதைப் பொறுமல் விற்களுள் சிறந்த அந்தவில்லை எடுத்துச் சீக்கிரமாக நாணேற்றிக் கிருதவர்மாவை விரைவாக எதிர்த்தான். பின்பு, சினிபுங்கவன் மிக்ககூர்மையுள்ள பத்துப்பாணங்களால் கிருதவர்மாவினுடைய ஸாரதியையும் குதிரைகளையும் கொடியையும் அடித்தான். அரசரே! பெரியவரே! பிறகு,பெரிதான வில்லையுடையவனும் மஹாரதனுமான கிருதவர்மா, குதிரைகளும் ஸாரதியும் கொல்லப்பெற்றதும் பொன்னாலலங்கரிக்கப்பட்டதுமான ரதத்தைப்பார்த்து அதிகரோஷத்தினால் கவரப்பட்டவனாகச் சினிபுங்கவனைக்கொல்ல எண்ணங்கொண்டு சூலத்தைப் புஜவேகத்தினால் எறிந்தான். ஸாத்யகி யுத்தத்தில் அந்தச்சூலத்தைக் கூர்மையுள்ள பாணங்களால் பிளந்து பொடிசெய்து கிருதவர்மாவை மயக்குபவன்போலத் தள்ளினான். பிறகு, வேறு ஒரு பல்லத்தினால் கிருதவர்மாவை மார்பிலடித்தான். அஸ்திரங்களில் நல்ல பயிற்சியுள்ளவனை யுயுதானனால் நல்ல யுத்தத்தில் குதிரைகளும் ஸாரதியும் கொல்லப்பட்டவனை கிருதவர்மா பூமியை அடைந்தான்.

இரண்டு ரதிகர்களுக்கும் நேர்ந்தசண்டையில் வீரனான அந்தக் கிருத வர்மா ஸாத்யகியினால் ரதத்தைஇழந்தவனாகச் செய்யப்பட்டவுடன், எல்லாவீரர்களுக்கும் மிக அதிகமான பயம்உண்டாயிற்று. சத் துருக்களை அடக்குபவரே! ராஜரே! கிருதவர்மா ஸாரதியும் குதி ரைகளும் கொல்லப்பட்டவனும் ரதத்தைஇழந்தவனுமாகச் செய் யப்படவே, உம்முடைய புத்திரர்களுக்கும் அதிகமான வியஸன முண்டாயிற்று. கிருதவர்மாவினுடைய குதிரைகளும் ஸாரதியும் கொல்லப்பட்டதைக்கண்டு கிருபர் சினிபுங்கவனான ஸாத்யகியைக் கொல்ல எண்ணங்கொண்டு அவனை எதிர்த்து ஓடினார். அவர் எல்லா வில்லாளிகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே தோள் வலிமிக்க அந்தக்கிருதவர்மாவை ரதத்தின்மத்தியில் ஏற்றிவைத்துக் கொண்டு யுத்தரங்கத்தினின்று விரைவாக வேறிடத்திற்குக் கொண்டு சென்றார். அரசரே! ஸாத்யகியும் உறுதியாகநின்று கிருதவர்மா ரதத்தை இழந்தவனாகச் செய்யப்படவே, துர்யோதனனுடைய சேனை முழுவதும் மீண்டும் திரும்பிச்சென்றது. சேனையிலுண்டான புழுதியினால் மூடப்பட்டவர்களான பகைவர்கள் அதை அறிந்தார் களில்லை. அரசரே! துர்யோதனராஜனைத்தவிர உம்மைச்சேர்ந்த வர்கள் விரைவாக ஓடிவிட்டார்கள். துர்யோதனனோ முறியஅடிக் கப்பட்ட தன்னுடைய படையைச் சமீபத்தில் கண்டு வேகத் துடன் அவர்களுக்கு எதிரில் சென்றான்; ஒருவனாகவேயிருந்து கொண்டு அனைவர்களையும் விரைவாகத் தடுத்தான். பெரியவரே! கோபமுள்ளவனும் அவமதிக்க முடியாதவனுமான துர்யோதனன் எல்லாப்பாண்டவர்களின்மீதும் பார்ஷதனான த்ருஷ்டத்யும்னன் மீதும் சிகண்டியின்மீதும் த்ரௌபதீபுத்திரர்கள்மீதும் பாஞ்சாலர் களுடைய கூட்டங்களின்மீதும் கேகயர்களின்மீதும் ஸோமகர்களின் மீதும் ஸ்ருஞ்சயர்களின்மீதும் பரபரப்பின்றிக் கூர்மையுள்ள அம்பு களால் இறைத்தான். மஹாபலசாலியானஉம்முடையபுத்திரன்முயற்சி யுள்ளவனாக யுத்தத்தில்நின்றான். யாகத்தில் மந்திரங்களால் பரிசுத்த மான பெருநெருப்பானது பிரகாசிப்பதுபோலத் துர்யோதனராஜன் யுத்தத்தில் எல்லாஇடத்திலும் பிரகாசித்துக்கொண்டிருந்தான். மனி தர்கள் ம்ருத்யுவை எதிர்க்காததுபோல யுத்தத்தில் அந்தத்துர் யோதனனைப் பகைவர்கள் எதிர்க்கவில்லை. பிறகு, கிருதவர்மா வேறு ரதத்தின்மீது ஏறிக்கொண்டு வந்தான்.

---

## இருபத்தோராவது அத்யாயம்.

## சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



### (ஸங்குல யுத்தம்.)

மஹாராஜரே! ரதத்திலிருப்பவனும் ரதிகர்களுள் சிறந்தவனுமான உம்முடைய புத்திரனே, எவ்விதத்திலும் ஸஹிக்கமுடியாத பிரதாபசாலியான ருத்திரர்போல் யுத்தத்தில் விளங்கினன். அவனுடைய ஆயிரக்கணக்கானபாணங்களால் பூமியானது நன்றாகமூடப்பட்டதாகியது; வர்ஷதாரைகளால் பர்வதங்களை நனைப்பதுபோலப் பாணங்களால்பகைவர்களை நனைத்தான். பாண்டவர்களின் ஸேனாஸமுத்திரத்தில் பாணங்களால் காயப்படுத்தப்படாத மனிதனும் யானையும் குதிரையும் ரதமும்இல்லை. அரசரே! பாரதரே! யுத்தத்தில் எந்தஎந்த யுத்தவீரனைப்பார்க்கிறேனோ அவனவன்உம்முடையபுத்திரனால் பாணங்களால் நிறைக்கப்பட்டவனானன். சேனையானது அதனால் மேலே எழுப்பிவிடப்பட்ட தூளியினால் எவ்வாறு மூடப்பட்டதோ அவ்வாறே மகாத்மாவான அவனுடைய பாணங்களாலும் நன்றாக மூடப்பட்டதாகக் காணப்பட்டது. அரசரே! யுத்தபூமியானது, ஹஸ்தலாகவமுள்ளவனும் வில்லாளியுமான துர்யோதனனால், பாணமயமாக்கப்பட்டதைக்கண்டோம். ஆயிரக்கணக்கான உம்மைச்சேர்ந்த அந்த யுத்தவீரர்களிலும் சத்துருவீரர்களிலும் துர்யோதனனுக்கு ஸமமான மனிதன் இல்லையென்பது என்னுடைய எண்ணம். பாரதரே! 'பார்த்தர்கள் ஒன்றுசேர்ந்தும்,ஒருவனாகஇருந்த துர்யோதனனைஎதிர்க்கவில்லை' என்னும் உமது புத்திரனுடைய ஆச்சர்யகரமான வல்லமையை அந்த யுத்தரங்கத்தில் கண்டோம். பரதர்களுள் சிறந்தவரே! துர்யோதனன் யுத்தத்தில் யுதிஷ்டிரரை நூறுபாணங்களாலும் பீமஸேனனை எழுபதுபாணங்களாலும்ஸஹதேவனை ஐந்துபாணங்களாலும்நகுலனை அறுபத்துநான்கு பாணங்களாலும் த்ருஷ்டத்யும்னனை ஐந்துபாணங்களாலும் த்ரௌபதீபுத்திரர்களை ஐந்துஐந்து பாணங்களாலும் ஸாத்யகியை மூன்றுபாணங்களாலும் அடித்தான். பெரியவரே! ஸஹதேவனுடைய வில்லை ஒருபல்லத்தினால் துண்டாக்கினன். பிரதாபசாலியான மாத்ரீபுத்திரன், அறுக்கப்பட்ட அந்தவில்லை எறிந்துவிட்டுப் பெரிதான வேறுவில்லை எடுத்துக்கொண்டு அரசனை எதிர்த்துச் சென்றான்; பிறகு, துர்யோதனனை யுத்தத்தில் பத்துப்பாணங்களால் அடித்தான். பிறகு, வீரனும் பெரிதான வில்லையுடையவனுமான நகுலனே கோரரூபமுள்ள ஒன்பதுபாணங்களால் அரசனை

அடித்து ஸிம்மநாதத்தையுஞ் செய்தான். ஸாத்யகி கணுக்கள்படிவாயுள்ள ஓர் அம்பினல் அரசனை அடித்தான். த்ரௌபதீபுத்திரர்கள் எழுபத்துமூன்று பாணங்களாலும் தர்மராஜர் ஐந்துபாணங்களாலும் பீமஸேனன் எண்பதுபாணங்களாலும் அரசனுன துர்யோதனனை அடித்தார்கள். மஹாராஜரே! மஹாத்மாக்களால் பிரயோகிக்கப்பட்ட பாணக்கூட்டங்களால் நாற்பக்கத்திலும் சூழப்பட்ட துர்யோதனன் எல்லா ஸைன்யங்களும் பார்த்துக்கொண்டிருக்கும் தருணத்தில், சிறிதும்அசையவேயில்லை.தைர்யசாலியான துர்யோதனனுடைய லாகவத்தினுலும் மிக்கதிறமையினுலும் வீர்யத்தினுலும் (வியப்புற்ற) எல்லா அரசர்களும் (அவனை) எல்லாப்பிராணிகளையும் மீறினவனுகக் கண்டார்கள். ராஜேந்திரரே! கவசமணிந்தவர்களான கௌரவஸேனுவீரர்களோ,சிறிதும் அவகாசத்தைக் காணுதவர்களாக வேந்தனை நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். எதிர்த்து வருகின்ற அந்த வீரர்களுடையகோரமாயும் நெருங்கியதாயுமுள்ளசப்தமானது மாரிக்காலத்தில் பொங்குகின்ற ஸமுத்திரத்தினுடைய சப்தம்போலத் தோன்றியது. மிகப்பெரிய வில்லையுடையவர்களான அந்தவீரர்கள்,யுத்தத்தில் பகைவர்களால்ஜயிக்கக்கூடாத அரசனை அடைந்து,கொல்லும்விருப்பமுள்ள பாண்டவர்களை எதிர்த்தார்கள். யுத்தத்தில் கோபங்கொண்ட அஸ்வத்தாமா பீமஸேனனைத்தடுத்தார். மஹாராஜரே! எல்லாத்திசைகளிலும் பிரயோகிக்கப்பட்ட அவ்விருவருடைய பாணங்களாலும் யுத்தத்தில் வீரர்களாவது திக்குக்களாவது அவ்வாறே திக்கோணங்களாவது அறியப்படவில்லை. பாரதர்களால் பொறுக்கமுடியாதவர்களும் குரூரமான செய்கையையுடையவர்களும் நாண்கயிறு மோதுவதினுல் கடினமான தோலையுடையவர்களும் செய்ததற்குப் பிரதிசெய்வதில் விருப்பமுள்ளவர்களுமான அவ்விருவரும் எல்லாத்திசைகளையும் பயப்படும்படி செய்துகொண்டு அதிகோரமாக யுத்தஞ் செய்தார்கள். வீரனுன சகுனியோ, யுத்தத்தில் யுதிஷ்டிரரைப் பீடித்தான். பிரபுவே! ஸுபலனுடைய புத்திரன் அந்த யுதிஷ்டிரருடைய நான்கு குதிரைகளையும் கொன்று எல்லாச்சேனைகளையும் நடுங்கும்படி செய்துகொண்டு உரக்க ஸிம்மநாதஞ்செய்தான். இந்த ஸமயத்தில் பிரதாபசாலியான ஸஹதேவன் ஜயிக்கப்படாதவரும் வீரருமான அரசரை யுத்தத்தில் ரதத்தினுல் வேறு இடத்துக்குக் கொண்டுபோனுன். பிறகு, எல்லாவில்லாளிகளுள்ளும் சிறந்தவரும் தர்மநந்தனருமான யுதிஷ்டிரர் வேறு ரதத்திலேறிக்கொண்டு சகுனியை ஒன்பது பாணங்களாலடித்து மீண்டும் ஐந்துபாணங்களால் அடித்துப் பெரிய

நாதத்தையும் வெளியிட்டார். பெரியவரே! அந்த யுத்தமானது ஆச்சர்யகரமும்மிக்ககோரமும் பார்க்கிறவர்களுக்குப் ப்ரீதியை உண்டு பண்ணுகிறதும் ஸித்தர்களாலும்சாரணர்களாலும் அடையப்பட்டது மாயிற்று. அளவிடமுடியாத பலத்துடன்கூடின உலூகனை சிறந்த வில்லாளியும்யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவனுமானநகுலன்மீது பாணவர்ஷங்களை நாற்பக்கத்திலும்வர்ஷித்தான். அவ்விதமே சூரனை நகுலனும் யுத்தத்தில் ஸௌபலனை சகுனியின் புத்திரனைப் பெரிய சரமாரியினால் நாற்புறத்திலும் தடுத்தான். வீரர்களும் குலபுத்திரர் களும் மகாரதர்களும் செய்ததற்குப் பிரதிசெய்வதில் விருப்பமுள்ள வர்களுமான அவ்விருவர்களும் அந்தயுத்தத்தில் போர்புரிந்து கொண்டு காணப்பட்டார்கள். அரசரே! அவ்வாறே, சத்துருக் களைத் தவிக்கச்செய்பவனை சைனேயன் யுத்தத்தில் இந்திரன் பலி யை எதிர்த்து யுத்தஞ்செய்ததுபோலக் கிருதவர்மாவை எதிர்த்துப் போர்புரிந்துகொண்டு விளங்கினான். துர்யோதனன், யுத்தத்தில் த்ருஷ்டத்யும்னனுடைய வில்லைவெட்டிப் பிறகு வெட்டப்பட்ட வில்லையுடையவனை அந்த த்ருஷ்டத்யும்னனைக் கூர்மையுள்ள பாணங்களால் அடித்தான். திருஷ்டத்யும்னனும், யுத்தத்தில் உத்தம மான ஆயுதத்தையெடுத்து எல்லாவில்லாளிகளும் பார்த்துக்கொண் டிருக்கும்பொழுதே அரசனோடு போர்புரிந்தான். பாரதர்களுள் சிறந் தவரே! மதப்பெருக்குள்ள காட்டிலுள்ள இரண்டு மதயானைகளுக் குப் போர்நடப்பதுபோல யுத்தகளத்தில் அவ்விருவருக்கும் பெரும் போர் நடந்தது. சூரரான கௌதமரோ யுத்தத்தில் கோபங்கொண்டு மகாபலசாலிகளான த்ரௌபதீபுத்திரர்களைப் படிந்தகணுக்களுள்ள அனேகபாணங்களால் அடித்தார். சேதனனுக்கு இந்திரியங்களோடு யுத்தம்நேர்வதுபோல அந்தக்கௌதமருக்கு (ஐந்து) த்ரௌபதீபுத்தி ரர்களோடும் மிக்ககோரமும் (எவ்விதத்தினாலும்) தடுக்கமுடியாத தும் வரம்புகடந்ததுமான யுத்தம்நேர்ந்தது. இந்திரியங்கள் மூர்க்கர் களைப் பீடிப்பதுபோல அவர்களும் அவரைப் பீடித்தார்கள். அவ ரும் அவர்களைக்குறித்து அதிககோபமுள்ளவராக யுத்தத்தில் எதிர் த்து யுத்தம்செய்தார். பாரதரே! பிரபுவே! தேகமுடையவர் களுக்கு இந்திரியங்களோடு யுத்தம் நடப்பதுபோல் அவருக்கு அவர்களோடு ஆச்சர்யகரமான யுத்தம் கிளம்பிக்கிளம்பி நடந் தது. மனிதர்கள் மனிதர்களோடும் யானைகள் யானைகளோடும் குதிரைகள் குதிரைகளோடும் ரதிகர்கள் ரதிகர்களோடும் எதிர் த்துப் போர்புரிந்தார்கள். ஜனநாதரே! மறுபடியும், ஸங்குல

மாயும் மிக்ககோரமாயுமுள்ள யுத்தம் ஏற்பட்டது. பிரபுவே! மஹாராஜரே!'இஃது ஆச்சர்யகரமானது; இது கோரமானது; இது பயங்கரமானது' என்று சொல்லக்கூடிய கோரமான அனேகயுத்தங்கள் நடந்தன. சத்துருக்களை அடக்குகிறவர்களான அவர்கள் யுத்தத்தில் ஒருவரையொருவர் எதிர்த்து விசேஷித்து ஸிம்மநாதஞ்செய்தார்கள்; மஹாயுத்தத்தில் எதிர்த்துக் கொல்லவும் கொன்றார்கள். அவர்களுடைய வாகனங்களால் மேலேஎழுப்பப்பட்ட புழுதியானது மிகுதியாகக்காணப்பட்டது. அரசரே! காற்றினாலும்ஓடுகின்றகுதிரைகளாலும் குதிரைவீரர்களாலும் மேலேஎழுப்பப்பட்டிருப்பதும் தேருருளைகளின் நுனியினாலும் யானைகளுடையமூச்சுக்களாலும் மேலே எழும்பியிருக்கின்றதுமான புழுதியானது ஸந்தியாகாலத்து மேகம் போல நெருக்குண்டு சூரியனுடையமார்க்கத்தைஅடைந்தது. அந்தத் தூளியோடுசேர்ந்த சூரியன் ஒளியைஇழந்தவனாகச் செய்யப்பட்டான். பூமியானது நன்றாகமறைக்கப்பட்டது. மஹாரதர்களானஅந்தச் சூரர்களும் மூடப்பட்டார்கள். பரதர்களுள் உத்தமரே! யுத்தபூமியானது வீரர்களுடையரக்தத்தினால் நனைக்கப்படவே, ஒருமுகூர்த்த காலத்தில் நாற்புறத்திலும் புழுதியானது அடங்கிவிட்டது. பிறகு, கோரமான காட்சியுடன்கூடினதும் அடர்ந்திருப்பதுமான அந்தப் புழுதியானது தணிந்துவிட்டது. பாரதரே! பின்பு, நான் த்வந்துவ யுத்தங்களை மறுபடியுங் கண்டேன். அந்தயுத்தமானது பலத்துக்குத் தக்கபடியும் மேன்மைபெற்ற வீரர்களுக்குத்தக்கபடியும் நடுப்பகலில் அதிபயங்கரமாக நடந்தது. ராஜேந்திரரே! அந்தயுத்தரங்கத்தில் கவசங்களுடைய ஒளிகள் அதிகப்பிரகாசமுள்ளவைகளாகக் காணப்பட்டன. யுத்தத்தில் விழுகின்றபாணங்களுடைய சப்தமும் மலையில் எரிக்கப்படுகின்ற பெருமூங்கிற்காட்டினுடைய சப்தம்போல நெருக்கமாகத்தோன்றியது.

---

## இருபத்திரண்டாவது அத்யாயம்.

## சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



(ஸங்குல யுத்தம்.)

அப்பொழுது மிக்ககோரமாயும் பயங்கரமாயுமிருக்கிற யுத்தமானது நடந்துவருகையில், அந்தயுத்தத்தில் உமது புத்திரனுடையசேனையானது பாண்டவர்களால் முறியஅடிக்கப்பட்டது.

மஹாரதர்களான உம்முடைய குமாரர்கள் அவர்களனைவர்களையும் பிரயத்னமின்றித் தடுத்துப் பாண்டவர்களுடைய படையோடு போர் புரிந்தார்கள். யுத்தவீரர்கள் உம்முடைய புத்திரனுக்கு ஜயத்தை விரும்பி விரைவாகத் திரும்பினார்கள். அவர்கள் திரும்பினவுடனே உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் பகைவர்களுக்கும் தேவாஸுரயுத்தத்திற்கு ஒப்பானதும் மிக்கபயங்கரமுமான இவ்விதயுத்தம் நடந்தது. உம்மைச்சேர்ந்தவர்களுள்ளும் பிறர்களுள்ளும் ஒருவனும் புறங்கொடுக்கவில்லை; அனுமானத்தினாலும் பரஸ்பரம் ஸங்கேதங்களாலும் யுத்தஞ்செய்தார்கள். ஒருவரை ஒருவர் தாக்கிப் போர்புரிகின்ற அந்த வீரர்களுக்குப் பெரியநாசமுண்டாயிற்று. பிறகு, யுதிஷ்டிரராஜர் அதிக குரோதத்தையடைந்து, ராஜஸமூகங்களுடன்கூடின தார்த்தராஷ்டிரர்களை யுத்தத்தில் ஜயிக்கஎண்ணங்கொண்டு பொற்புங்கமுள்ளவைகளும் சாணைக்கல்லில் தீட்டப்பட்டவைகளுமான மூன்றுபாணங்களால் சாரத்வதரையடித்து நான்குபாணங்களால்மங்களகரமானகிருதவர்மாவினுடைய குதிரைகளை அடித்தார். அஸ்வத்தாமாவோ புகழுள்ளவனை கிருதவர்மாவை யுத்தரங்கத்தைவிட்டு வேறுஇடத்திற்குக் கொண்டுபோனார். பிறகு, சாரத்வதர் எட்டுப்பாணங்களால் யுதிஷ்டிரரைத் திருப்பியடித்தார். பிறகு, துர்யோதனராஜன், யுத்தத்தில் எழுநூறுரதங்களைத் தர்மநந்தனரும் ராஜாவுமான யுதிஷ்டிரரிருக்குமிடத்துக்கு அனுப்பினான். மனோவேகமும் வாயுவேகமுமுள்ள அந்த ரதங்கள் ரதிகர்களோடுகூடியனவாக யுத்தத்தில் குந்தீபுத்திரரான யுதிஷ்டிரருடைய ரதத்தைநோக்கி எதிர்த்துச்சென்றன. மகாராஜரே! அவர்கள் நாற்புறத்திலும் யுதிஷ்டிரரைச் சூழ்ந்துகொண்டு மேகங்கள் சூரியனை மூடுவதுபோலப் பாணங்களால் கண்ணுக்குப்புலப்படாதவராகச் செய்தார்கள். குருவீரர்களால் அவ்வாறு சூழப்பட்டிருக்கிற அந்தத் தர்மராஜரைக்கண்டு மிக்ககோபங்கொண்டவர்களான சிகண்டிமுதலான ரதிகர்கள் பொறுக்கவில்லை. பிறகு, அவர்கள் குந்தீபுத்திரரான யுதிஷ்டிரரைக் காப்பதற்காகச் சிறந்த குதிரைகளுடன் சேர்ந்தவைகளும் கிண்கிணிகளுடைய ஸமூகங்களால் நாற்பக்கத்திலும் சூழப்பட்டவைகளுமானரதங்களோடுவந்தார்கள். பிறகு, பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் யமனுடையராஜ்யத்தை விருத்திபண்ணுகின்றதும் பயங்கரமானதும் ரக்தஜலத்துடன்கூடியதுமான யுத்தம் நடந்தது. பாண்டவர்கள் பாஞ்சாலர்களுடன்சேர்ந்து ஆததாயிகளான கௌரவர்களுடைய எழுநூறு ரதிகர்களைக்கொன்று மீண்டும் அவர்களை எதிர்த்துத் தடுத்தார்கள். அச்சமயத்தில் உம்முடைய

புத்திரனுக்குப் பாண்டவர்களோடு பெரும்போர் நடந்தது. அப்படிப் பட்டயுத்தம், பார்க்கப்பட்டதுமில்லை; கேட்கப்பட்டதுமில்லை. பெரியவரே! அப்பொழுது, நாற்புறங்களிலும் வரம்புகடந்த யுத்தமானது நடக்கவும், உம்மைச்சேர்ந்தவீரர்களும் பகைவர்களும் வதஞ்செய்யப் படவும், யுத்தவீரர்கள் சிறந்தசங்கங்களை ஊதிக்கொண்டு அதிகமாகச் சப்தத்தை உண்டுபண்ணவும், வில்லாளிகளுடைய பேரிரைச்சல்களாலும் ஸிம்மநாதங்களாலும் கர்ஜித்தலாலும் யுத்தமும் அதிகப்படவும்; மர்மஸ்தானங்கள் பிளக்கப்படவும், ஜயத்தில் பேராவலுடையவர்களான யுத்தவீரர்கள்ஓடவும், பூமியில் சோகத்தினுடையஉத்பத்திக்குக் காரணமான ஸம்ஹாரமானது நாற்புறத்திலும் உண்டாகவும், அனேக உத்தம ஸ்திரீகளுடைய * கூந்தல் வகிர்ந்து முடித்தலொழியவும், வரம்புகடந்ததும் மிக்க பயங்கரமாயுள்ளதுமான மகாயுத்தம் நடந்து வரவும், † பிராணிகளுடைய விநாசத்தின்பொருட்டு மிக்கபயங்கரமான உத்பாதங்கள் தோன்றின. பர்வதங்களுடனும் காடுகளுடனும் கூடின பூமியானது சப்தித்துக்கொண்டு நடுங்கியது. அரசரே! தடிகளுடனும் எரிகொள்ளிகளுடனும் நான்குபக்கத்திலும் இறைக்கப்படுகின்ற உற்கைகள் சூரியமண்டலத்தைத் தொட்டுக்கொண்டு ஆகாயத்தினின்று பூமியில் விழுந்தன. பரற்கற்களை வர்ஷிக்கின்ற சுழல் காற்றுக்களும் தாழ்ந்துவீசின; யானைகள் கண்ணீர்சொரிந்தன; அதிகமாக நடுங்கவும்நடுங்கின. மிக்க பயங்கரமாயும் கோரமாயுமிருக்கிற இந்த உத்பாதங்களை அலக்ஷயம்செய்து, க்ஷத்திரியர்கள் மனவருத்தத்தை விட்டவர்களும் மிக்கமுயற்சியுள்ளவர்களும் ஸ்வர்க்கத்தை அடைவதில் விருப்பமுள்ளவர்களும், அழகியதும் பரிசுத்தமுமான குருக்ஷேத்திரத்தில் மீண்டும் யுத்தத்திற்காக நின்றார்கள். பிறகு, காந்தாரராஜனுடையகுமாரனை சகுனியானவன், 'எதிரில்நின்று போர்புரியுங்கள். பின்புறத்தினின்று பாண்டவர்களைக் கொல்லுகிறேன்' என்று கூறினன். பிறகு, (யுத்தத்திற்குச்) சென்ற நம்மவருள் பலசாலிகளான மத்ரதேசத்து யுத்தவீரர்கள் ஸந்தோஷத்துடன் 'கலகல' வென்று சப்தித்தார்கள். பகைவர்களும் அப்படியே செய்தார்கள். அஸ்திரங்களில் நல்ல தேர்ச்சியுள்ளவர்களும் அணுகமுடியாதவர்களுமான சத்துருவீரர்கள் மீண்டும் நம்மைநாடி விற்களை அசைவுறும்படி செய்துகொண்டு பாணவர்ஷங்களைப் பொழிந்தார்கள். பிறகு, அந்த யுத்தத்தில் அப்பொழுது பகைவர்களால் நாசஞ்செய்யப்பட்ட மத்ரராஜனுடைய சேனையைக்

* வேறுபாடம். † இரட்டித்தலால் ஒருசொல் விடப்பட்டது.

கண்டு துர்யோதனனுடைய சேனையானது மறுபடியும் திரும்பி ஓடுவதாகியது. பிறகு, பலசாலியான காந்தாரராஜனே, (வீரர்களைப் பார்த்து), 'தர்மத்தை அறியாதவர்களே! திரும்புங்கள்; யுத்தஞ் செய்யுங்கள்; ஓடுவதினால் உங்களுக்கு யாதுபயன்?' என்கிற வசனத்தை மறுபடியும் உரைக்கலானான். பரதர்களுள் சிறந்தவரே! காந்தாரராஜனுக்கு விசாலமான ஈட்டிகளால் யுத்தஞ்செய்கின்ற சிறந்த வீரர்களுடன்கூடின பதினாயிரம் குதிரைகளால் நிறைந்த படையானது இருந்தது. அந்தப்பலத்தினால் வல்லமையை வெளியிட்டு ஜனங்களுடைய நாசமானது நடந்துவருகையில்(காந்தாரர்கள்) கூர்மையுள்ள அம்புகளால் பின்புறத்தில் பாண்டவர்களுடையபடையைத் துன்பப்படுத்தினார்கள். மஹாராஜரே! மிகப் பெரிதான அந்தப்பாண்டவசேனையானது, காற்றினால் மேகம் சிதறஅடிக்கப்படுவதுபோல நான்குபக்கத்திலும் சிதற அடிக்கப்பட்டுத் தோல்வியை அடைந்தது. பிறகு, யுதிஷ்டிரர் ஸமீபத்தில் முறியஅடிக்கப்பட்டிருக்கிற தம்முடைய ஸேனையைக்கண்டு மனக்கலக்கமற்றவராக மஹாபலசாலியான ஸஹதேவனைப்பார்த்து, 'பாண்டுநந்தன! கெட்ட புத்தியுள்ள ஸுபலபுத்திரனான இந்தச் சகுனி கவசம்பூண்டு நம்முடைய பின்பக்கத்தைப்பீடித்து இதோ சேனைகளை நாசம் செய்கிறான். பார். நீ த்ரௌபதீகுமாரர்களுடன் போ. ஸுபலனுடைய குமாரனான சகுனியை வதம்செய்வாயாக. தோஷமற்றவனே! நான் பாஞ்சாலர்களோடுகூடித் தேர்ப்படையை எரிக்கப்போகிறேன். எல்லாயானைகளும் குதிரைகளும் மூவாயிரம்காலாட்களும் உன்னுடன் செல்லட்டும். (அவைகளாலும்) அவர்களாலும் சூழப்பட்டவனாகிச் சகுனியைக்கொல்' என்று ஏவினார். பிறகு, விற்களைக் கையில் கொண்டவீரர்கள்ஏறிய எழுநூறுயானைகளும் ஐயாயிரம் குதிரைகளும் வீர்யமுள்ளவனான ஸஹதேவனும் மூவாயிரம் காலாட்களும் த்ரௌபதீபுத்திரர்களனைவர்களும், யுத்தத்தில் கெட்டமதங்கொண்ட சகுனியை யுத்தத்தில் எதிர்த்துச்சென்றார்கள். அரசரே! பிறகு, ஜயத்தில் பேராசையுள்ளவனும் பிரதாபசாலியுமான சகுனி, பாண்டவர்களை எதிர்த்து (அவர்களை) மீறிச் சேனையைப் பின்புறத்தில் நாசஞ்செய்தான். வேகமுள்ளவர்களான பாண்டவர்களைச்சேர்ந்த குதிரைவீரர்களோ கோபங்கொண்டவர்களாக அந்தரதிகர்களை மீறிச் சகுனியின் படையில் புகுந்தார்கள். சூரர்களான அந்தக் குதிரை வீரர்கள் அந்தஸமயத்தில் யுத்தரங்கத்தின்மத்தியில் நிலைபெற்றுநின்றார்கள். சகுனியின் பெரும்படையின்மீது சரமாரிகளை இறைத்

தார்கள். மன்னரே! உம்முடையதுராலோசனையினால் ஓங்கப்பட்டிருக்கிற கதாயுதங்களையும் ஈட்டிகளையுமுடையதும் சிறந்தமனிதர்களால் அடையப்பட்டதுமான பெரியயுத்தமானது நடக்க ஆரம்பித்தது. நாணொலிகள் ஓய்ந்தன. ரதிகர்கள் பார்த்துக்கொண்டிருந்தார்கள். தம்மைச்சேர்ந்தவர்களுக்கோ பிறர்களுக்கோ வேற்றுமை காணப்படவில்லை. பரதர்களுள் சிறந்தவரே! கௌரவர்களும் பாண்டவர்களும் சூரர்களுடைய கைகளால் பிரயோகிக்கப்பட்டிருக்கிற சக்தியாயுதங்களுடைய வீழ்ச்சியை (ஆகாயத்தினின்று) நக்ஷத்திரங்களுடைய வீழ்ச்சியைப்போலக் கண்டார்கள். வேந்தரே! ஆங்காங்கு விழுகின்ற பளபளப்பான ரிஷ்டிகளால் ஆகாயம் மூடப்பட்டு மிகவிளங்கிற்று. அரசரே! பரதர்களுள் சிறந்தவரே! அப்பொழுது நான்கு பக்கங்களிலும் விழுகின்ற ப்ராஸாயுதங்களுடைய உருவமானது, ஆகாயத்தில் விட்டிற்பூச்சிகளுடைய உருவம்போலிருந்தது. குதிரைகள் எல்லா அங்கங்களும் உதிரத்தினால் நனைக்கப்பட்டவைகளாக, அடித்துப் புரட்டித் தள்ளப்பட்டிருக்கிற ஸாரதிகளுடன் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் நான்குபக்கத்திலும் விழுந்தன. குதிரைகள் ஒன்றையொன்று தாக்கி ஒன்றினால் மற்றொன்று நொறுக்கப்பட்டவைகளாகவும் நன்றாகக் காயமுண்டுபண்ணப்பட்டவைகளாகவும் வாய்களால் இரத்தத்தைக் கக்குகின்றவைகளாகவும் காணப்பட்டன. பிறகு, சேனையினால் உண்டான புழுதியினால் சூழப்பட்டதும் கோரமாயுள்ளதுமான இருளானது உண்டாயிற்று. பகைவர்களை அடக்குபவரே! அரசரே! புழுதி நன்கு சூழ்ந்துகொள்ளவே, அவ்விடத்தினின்று அந்தக் குதிரைகளும் மனிதர்களும் ஓடுவதைக்கண்டேன். சிலமனிதர்கள், ரக்தத்தை மிகுதியாகக்கக்கிக்கொண்டு பூமியில் விழுந்தார்கள். வேறு சில மனிதர்கள் ஒருவரையொருவர் தலைமயிர்களைப் பற்றிஇழுத்துக்கொண்டு அசைவதற்கும் சக்தியற்றுக்கிடந்தார்கள். மிக்கபலசாலிகளான சிலர் குதிரைகளின்மீதிருந்து இழுக்கப்பட்டு, மல்லர்கள்போல ஒருவரை ஒருவர் எதிர்த்துத் தாக்கிக்கொன்றார்கள். இந்த யுத்தத்தில் உயிர்துறந்த அனேகர் குதிரைகளால் இழுக்கப்பட்டார்கள். வெற்றியில் விருப்பமுள்ளவர்களும் சூரர்களென்று செருக்குக்கொண்டவர்களுமான மற்ற அனேகமனிதர்கள் ஆங்காங்கு பூமியில் விழுந்தவர்களாகக் காணப்பட்டார்கள். யுத்தபூமியானது ரக்தத்தினால் நனைக்கப்பட்டவர்களும் கைகளறுக்கப்பட்டவர்களும் தலைமயிரிழுக்கப்பட்டவர்களுமான வீரர்களால் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும்

வியாபிக்கப்பட்டதாகக் காணப்பட்டது. மேலே ஏறியிருக்கின்ற வீரர்களுடன் கொல்லப்பட்டிருக்கிற குதிரைகளால் மூடப்பட்ட அந்த யுத்தபூமியில் ஒருகுதிரையினுலாவது நெடுந்தூரம் செல்லமுடியவில்லை. அரசரே! பிறகு, ஸுபலபுத்திரனுன அந்தச்சகுனி, ரக்தத்தினுல் நனைக்கப்பட்ட ஸன்னஹங்களுடன்கூடியவர்களும் சஸ்திரங்களைக் கையிற்பிடித்தவர்களும் ஆயுதங்களையுடையவர்களும் கோரமான பற்பலஆயுதங்களால் ஒருவரை ஒருவர் கொல்வதில் விருப்பமுற்றவர்களுமான வீரர்களால் மிகநெருங்கியதும் பெரும்பான்மையாகப்படைவீரர்கள் கொல்லப்பட்டதுமான யுத்தத்தில் ஒருமுகூர்த்தகாலம் யுத்தஞ்செய்தபிறகு, மிகுந்திருக்கிற ஆறுயிரம் குதிரைகளுடன் அந்த யுத்தரங்கத்தினின்று ஓடினுன். அவ்வாறே, பாண்டவர்களுடைய படையும் ரத்தத்தினுல்நனைக்கப்பட்டதும் களைப்படைந்தவாகனங்களுள்ளதுமாக மிகுந்திருக்கிற ஆறுயிரம் குதிரைகளுடன் ஓடியது. மிகநெருங்கியபெரியயுத்தத்தில்உயிரை இழக்கத்துணிந்தவர்களும் ரக்தத்தினுல் நனைக்கப்பட்டவர்களுமான பாண்டவர்களுடைய குதிரைவீரர்கள், ரதங்களோடு யுத்தம்செய்வதும்இயலாததாயிருக்க, பெரியயானைகளோடுபோர்புரிவது எவ்விதம் இயல்வதாகும்? ரதங்கள் ரதங்களையே எதிர்த்துச்செல்லட்டும். யானைகளும் யானைகளை எதிர்க்கட்டும். சகுனி திரும்பிச்சென்று தன்னுடைய படையையடைந்து நிலைபெற்று நின்றுவிட்டான். அரசனை அவன் யுத்தம்செய்வதற்கு மறுபடியும் திரும்பிவரப்போகிறதில்லை' என்று சொன்னூர்கள். பிறகு, அந்த த்ரௌபதீபுத்திரர்களும் மதங்கொண்ட பெரிய யானைகளும், மகாரதனும் பாஞ்சாலராஜகுமாரனுமான திருஷ்டத்யும்னன் இருக்குமிடத்திற்குச் சென்றூர்கள்.

குருவம்சத்திலுதித்தவரே! தூளியாகிற மேகமானது கிளம்பியிருக்கையில், ஒருவனுன ஸஹதேவனும் யுதிஷ்டிரராஜரிருக்குமிடத்துக்குச் சென்றூன். பிறகு, அவர்கள் யுத்தத்திற்காகச் சென்றிருக்கும்ஸமயத்தில் மறுபடியும் ஸுபலனுடையகுமாரனுகியசகுனி கோபங்கொண்டு த்ருஷ்டத்யும்னனுடைய படையை விலாப்பக்கத்தில் அடித்தான். ஒருவரையொருவர் கொல்வதில் விருப்பமுற்றவர்களான உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் பிறர்களுக்கும் பிராணனில் ஆசையைவிட்டுக் கைகலந்தஅந்தயுத்தமானது மறுபடியும் நடந்தது. அரசரே! வீரர்களெதிர்க்குமிடமான அந்த யுத்தரங்கத்தில் அந்தவீரர்கள் ஒருவரையொருவர் பார்த்தார்கள். நூறுநூறுகவும் ஆயிரமாயிரமாகவும் யுத்தவீரர்கள் நாற்புறத்தினின்றும் வந்தார்கள்.

உலகத்திலுள்ள ஜனங்களுக்கு நாசத்தை யுண்டுபண்ணுகிற அந்தயுத்தத்தில் வாள்களால் வெட்டப்படுகின்ற தலைகளுடைய பெரிய சத்தமானது, விழுகின்ற பனம்பழங்களுடைய சத்தம்போலத் தோன்றியது. அரசரே! வெட்டப்பட்டு உயிர்துறந்து பூமியில் வீழ்கின்ற சரீரங்கள், ஆயுதங்களையுடையகைகள், தொடைகள் இவைகளுடைய கடகடவென்னும் ஒலியானது, மிகப்பெரிதும் மயிர்க்கூச்சலை உண்டுபண்ணுகின்றதுமாயிற்று. கூர்மையுள்ள சஸ்திரங்களால் உடன்பிறந்தார்களையும் பிள்ளைகளையும் நண்பர்களையும் கொல்லுகின்ற யுத்தவீரர்கள், மாம்ஸத்தைக்குறித்துப் பக்ஷிகள் வருவதுபோல நாற்புறத்தினின்றும் வந்தார்கள். ஒருவரோடொருவர் கோபங்கொண்டவர்களான யுத்தவீரர்கள் ஒருவரைஒருவர் எதிர்த்து, 'நான் முன்னே; நான் முன்னே' என்று ஆயிரமாயிரமாகக் கொன்றார்கள். வேகமுள்ள கதிவிசேஷத்தினால் ஆஸனத்தினின்று நழுவினவர்களும் உயிரை இழந்தவர்களுமான தம்மீதுள்ள வீரர்களுடன் குதிரைகள் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் நான்குபக்கங்களிலும் ஸஞ்சரித்தன. அரசரே! துடிக்கின்றவைகளும் எதிர்த்து அடித்து நொறுக்கப்பட்டவைகளும் விரைவாகச்செல்லும் தன்மையுள்ளவைகளுமான குதிரைகளுடைய கனைத்தலும், யுத்தஸன்னத்தர்களும் கர்ஜிக்கின்றவர்களுமான வீரர்களுடைய முழக்கமுந் தோன்றின. மன்னரே! உம்முடைய துராலோசனையினால் பிறர்களுடைய மர்மஸ்தானங்களைப்பிளக்கின்ற வீரர்களுடைய சக்திகளாலும் ரிஷ்டிகளாலும் ஈட்டிகளாலும் நெருங்கின சப்தம் உண்டாயிற்று. உம்மைச்சேர்ந்தவர்கள், சிரமத்தினால் மூடப்பட்டவர்களும் கோபமுள்ளவர்களும் களைத்த வாகனங்களையுடையவர்களும் தாகித்தவர்களும் கூர்மையுள்ள சஸ்திரங்களால் விசேஷமாகக் காயப்படுத்தப்பட்டவர்களுமாக எதிர்த்துநின்றார்கள். இந்தயுத்தத்தில் ரக்தத்தினுடைய நாற்றத்தினால் மதங்கொண்டவர்களும் புத்தியைஇழந்தவர்களுமான அனேகவீரர்கள் பிறர்களையும் தன்னைச்சேர்ந்தவர்களையும்அருகில்வரவரக் கொன்றார்கள். அரசரே! ஜயத்தில் விருப்பமுள்ள அனேக அரசர்கள் பாணமழைகளால் சூழப்பட்டு உயிர்துறந்து பூமியில்விழுந்தார்கள். செந்நாய்களுக்குங் கழுகுகளுக்கும் நரிகளுக்கும் ஆனந்தத்தையுண்டுபண்ணுகின்ற குழப்பமான சண்டையுடன்கூடின பகலில், உம்முடைய புத்திரன் பார்த்துக்கொண்டிருக்கும்போதே, கோரமான சேனையின் நாசமானது நேர்ந்தது. வேந்தரே! ரணகளமானது மனிதர்களுடைய சரீரங்களாலும் குதிரைகளுடைய சரீரங்களாலும்

நன்ருக மறைக்கப்பட்டதும் ரக்த ஜலத்திஞல் பற்பல நிறமுள்ள தும் பயப்படுகிறவர்களுக்குப் பயத்தை விருத்திபண்ணுகிறதும் ஆகி யது. பாரதரே! உம்மைச்சேர்ந்தவர்களும் பாண்டவர்களைச்சேர்ந்த வர்களும் கத்திகளாலும் பட்டஸங்களாலும் சூலங்களாலும் அடிக் கடி அடித்துக்கொண்டவர்களாகி யுத்தத்தைவிட்டுத் திரும்பவே யில்லை. யுத்தவீரர்கள் பிராணனுள்ளவரையில் சக்திக்குத் தக்கபடி பகைவர்களை அடித்து வாய்களால் உதிரத்தைக் கக்கிக்கொண்டு நாற்புறத்திலும் விழுந்தார்கள். தலையில்லாமுண்டமானது ரக்தத்தி ஞல் நனைந்திருக்கின்ற கூர்மையுள்ள கத்தியைக் கையில்பிடித்துக் கொண்டும் தலையை மயிர்களில் பிடித்துக்கொண்டும் நிற்பதாகக் காணபட்டது. நராதிபரே! அவ்வாறு அனேகம் உடற்குறைகள் எழுந்திருக்கவே, அப்படிப்பட்ட ரக்தநாற்றத்திஞல் போர்வீரர்கள் மயக்கமுற்ருர்கள். பிறகு, சப்தமானது தணியவே, சகுனி மிச்சமிருக் கிற சில குதிரைகளுடன் பாண்டவர்களுடைய பெரும்படையை எதிர்த்து நின்ருன். பிறகு, ஜயத்தில் பேராவலுள்ளவர்களான பாண்ட வர்கள் விரைவுடன்எதிர்த்து ஓடிஞர்கள். யுத்தத்தினுடைய அக்கரை யை அடைய எண்ணங்கொண்டவர்களான காலாட்களும்யானைகளும் குதிரைவீரர்களும் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு இந்தச் சகுனியை நடுவில் நிற்கவைத்து நான்கு பக்கத்திலும் சூழ்ந்துகொண்டு பற்பல விதமான சஸ்திரங்களால் அடித்தார்கள். நாற்புறங் களிலும் நன்ருக எதிர்த்து, விரைவாக வருகின்ற அந்தப் பாண்டவஸேஞவீரர்களைக் கண்டு உம்மைச் சேர்ந்த ரதிகர்களும் குதிரைகளும் காலாட்களும் யானைகளும் எதிர்த்தன. சில காலாட்கள் கால்களாலும் முஷ்டிகளாலும் ஒருவரை ஒருவர் கொன் ருர்கள். பிறகு, யுத்தத்தில் சூரர்கள் சஸ்திரங்கள் அற்றவர்களாகி விழுந்தார்கள். புண்யம் குறைந்ததஞல் ஆகாயத்தில் விமானங்களி னின்று நழுவிவிழுகின்ற ஸித்தர்கள்போல ரதங்களினின்று ரதிகர் களும் யானைகளினின்று யானைவீரர்களும் கீழே விழுந்தார்கள். இவ் வண்ணமாக மஹாயுத்தத்தில் ஸன்னத்தர்களான மற்றப் போர்வீரர் கள் பரஸ்பரம் தந்தைகளையும் உடன்பிறந்தார்களையும் தோழர்களை யும் புத்திரர்களையும் கொன்ருர்கள். பரதர்களுள் சிறந்தவரே! அதிக பயங்கரமாயிருக்கின்ற அந்த ஸமயத்தில் ஈட்டிகளாலும் கத்திகளா லும் பாணங்களாலும் நெருங்கிய யுத்தமானது இவ்வண்ணம் வரம்பு கடந்ததாகியது.

---

## இருபத்துமூன்றுவது அத்யாயம்.

## சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



(அர்ஜுனன் துர்யோதனனை நிந்தித்து அவனுடைய சேனையை நாசம்செய்தது.)

பாண்டவர்களால் *சேனையானது நாசம்செய்யப்பட்டுச் சிறிது மிகுந்திருக்கவே, சகுனியானவன் ஏழாயிரம் குதிரைகளோடுதிரும்பி அருகில்வந்தான். அந்தச்சகுனி, சேனையினிடம்வந்து, 'பகைவர்களை அடக்கும் திறமையுள்ளவர்களே! நீங்கள் ஸந்தோஷமுள்ளவர்களாக அடிக்கடி போர்புரியுங்கள்' என்று யுத்தத்தில் தன்னைச்சேர்ந்த வீரர்களைவிரைவாக ஏவிக்கொண்டு, அச்சமயத்தில்க்ஷத்திரியர்களைநோக்கி, 'மஹாபலசாலியான துர்யோதனராஜன் எங்கு இருக்கிறான்?' என்று வினவினான். பரதகுலத்தில் பிறந்தவர்களுள் உத்தமரே! சகுனியினுடைய அந்தவார்த்தையைக்கேட்டு (அரசர்கள்) அந்தச் சகுனியைப் பார்த்து, 'அரசனே! மஹாபலசாலியான அந்தக்கௌரவவேந்தன் யுத்தமத்தியில் நிற்கிறான். எவ்விடத்தில் மிகப்பெரியதும்பூர்ணசந்திரனுக்குஒப்பான ஒளிபொருந்தியதுமான அந்தக்குடைஇருக்கிறதோ, எவ்விடத்தில் கவசங்களையணிந்தவர்களும் ஆயுதங்களையுடையவர்களுமான அந்த ரதிகர்கள்நிற்கின்றார்களோ, எவ்விடத்தில்மேகத்தின் இடிமுழக்கத்திற்கு ஒப்பான இடைவிடாதஇந்தச்சத்தம் உண்டாகிறதோ, அவ்விடத்திற்குவிரைவாகச்செல். அரசனே! அவ்விடத்தில்குருகுலத்தில் பிறந்தவனான துர்யோதனனைப் பார்ப்பாய்' என்றுகூறினார்கள். நராதிபரே! அப்பொழுது அந்த யுத்தவீரர்களால் இவ்வாறு உரைக்கப்பட்ட ஸுபலபுத்ரனான சகுனி, யுத்தத்தில் ஆச்சரியமாகப் போர்புரிகின்ற வீரர்களாலே நான்கு பக்கத்திலும் சூழப்பட்டவனாக உம்முடைய புத்ரனிருக்குமிடம் சென்றான். ப்ரஜைகளுக்கு நாதரே! பிறகு, தேர்ப்படையில் ஸன்னத்தனாக நிற்கின்ற துர்யோதனனைக்கண்டு அந்தச்சகுனி அதிக ஸந்தோஷமுற்றுத் தன்னைக் காரியத்தை நிறைவேற்றியவன்போல எண்ணி உம்மைச் சேர்ந்த எல்லா ரதிகர்களையும் ஸந்தோஷிக்கச்செய்துகொண்டு துர்யோதனராஜனைப் பார்த்து இந்தவாக்கியத்தை உரைக்கலானான். 'அரசனே! தேர்ப்படையை நாசம்செய். குதிரைகளெல்லாம் என்னால் ஜயிக்கப்பட்டன. யுத்தத்தில் உயிரைவிடாமல் யுதிஷ்டிரனை ஜயிப்பதற்கு ஸாத்

---

* ஒருசொல் விடப்பட்டது.

யப்படாது. பாண்டவனால் பாதுகாக்கப்பட்ட அந்தத் தேர்ப்படை யானது கொல்லப்பட்ட பிறகு, இந்த யானைகளையும் காலாட்களையும் அவ்வாறே மற்றவர்களையும் கொல்வேன்' என்றான். ஜயத்தில் பேரா வலுள்ளவர்களான உம்மைச் சேர்ந்த வீரர்கள் அந்தச் சகுனியி னுடைய வார்த்தையைக்கேட்டு மகிழ்ச்சியுற்றவர்களாகப் பாண்டவர் களுடைய சேனையை விரைவாக எதிர்த்துச் சென்றார்கள். கத்தி களைக் கையில் பிடித்துக்கொண்டும் விற்களை எடுத்து அவை களை உதறிக்கொண்டும் வீரர்கள் ஸிம்மநாதம் செய்தார்கள். வேந்தரே! பிறகு, நாண்கயிறுகளின் ஓசையும் தலத்வனியும் நன்றாக எய்யப்படும் பாணங்களுடைய மிக்க பயங்கரமான சப்த மும் மறுபடியும் தோன்றின. விற்களைப் பிடித்து ஸமீபத்தில் நிற்கின்ற அந்த ஜனங்களைக் கண்டு குந்தீபுத்திரனான தனஞ்சயன் தேவகீபுத்திரரான ஸ்ரீ வாஸுதேவரைப் பார்த்து, 'மாதவரே! அவஸரப்படாமல் குதிரைகளை ஓட்டும். இந்தச்சேனைக்கடலில் புகுவீ ராக. இப்பொழுது கூர்மையான அம்புகளாலே பகைவர்களை நாசம் செய்யப்போகிறேன். ஜனார்த்தனரே! ஒருவரை ஒருவர் எதிர்த்து நடந்துவருகின்ற இந்தப்பெரும்போருக்கு இன்றோடு பதினெட்டுத் தினம் ஆயின. மஹாத்மாக்களான இந்த வீரர்களுடைய சேனையா னது முடிவற்றதாயிருந்து இப்பொழுது யுத்தத்தில் நாசத்தை அடைந்துவிட்டது. அதிர்ஷ்டம் எப்படிப்பட்டதென்பதைப்பாரும். மாதவரே! அச்சுதரே! ஸமுத்திரத்திற்குச்சமமான துர்யோதன னுடைய படையானது நம்மை எதிர்த்து ஆவின் குளப்படிக்குச் சமமாயிற்று. மாதவரே! பீஷ்மர் கொல்லப்பட்டவுடனே ஸமா தானம் உண்டாகுமென்று எனக்கு எண்ணமுண்டாயிற்று. அதிக மூர்க்கனும் மூடனுமான தார்த்தராஷ்டிரன் அதைச் செய்யவில்லை. மாதவரே! நன்மையானதும் உண்மையுள்ளதுமான பீஷ்மரால் உரைக்கப்பட்ட வாக்கியத்தையும் புத்தியற்ற துர்யோதனன் அனுஷ் டிக்கவில்லை. பூமிக்குப்பதியான அந்தப்பீஷ்மரும் அடிக்கப்பட்டுச் சாய்ந்தபிறகு, யுத்தம் நடைபெற்ற காரணத்தைமாத்திரம் நான் அறியேன். சந்தனுவின் புதல்வரான பீஷ்மர் சாய்ந்தபிறகு, மீண் டும் யுத்தஞ்செய்தவர்களான அந்தத்தார்த்தராஷ்டிரர்களை எல்லாக் காரணத்தாலும் மூடர்களென்றும் மிகவும் மூர்க்கர்களென்றும் எண்ணுகிறேன். பிறகு, பிரம்மஜ்ஞானிகளுள் சிறந்தவரான த்ரோண ரும் ராதாபுத்ரனான கர்ணனும் விகர்ணனும் கொல்லப்பட்டபிறகும் யுத்தமானது தணியவில்லை. இந்தச்சேனை சிறிது மிகுந்தும், புருஷர்

களுள்சிறந்தவனான ஸூதபுத்ரனும் புத்ரர்களோடுவிழும்படிசெய்யப் பட்டும், யுத்தமானது தணியவில்லை. வீரனான சுருதாயுவும் மகத தேசாதிபனான ஜலஸந்தனும் அரசனான ஶ்ருதாயுதனும் கொல்லப் பட்டிருந்தும்அனர்த்தம்தணியவில்லை.ஜனார்த்தனரே! பூரிஶ்ரவஸும் சல்யனும் ஸால்வனும் அவந்திதேசத்து வீரர்களும் மாளவும் கஷ்ட மானயுத்தமானது தணியவில்லை. ஜயத்ரதனும் ராக்ஷஸனான அலாயு தனும் பாஹ்லீகனும் ஸோமதத்தனும் உயிர்துறந்தும் அனர்த்தம் தணியவில்லை. சூரனான பகதத்தனும் மிக்க பயங்கரனான காம்போ ஜனும் துச்சாஸனனும் மாண்டுபோயும் ஸங்கடகரமான யுத்தம் தணியவில்லை. கோவிந்தரே ! வெவ்வேறு மண்டலாதிபதிகளும் பல சாலிகளும் சூரர்களுமான மன்னர்கள் யுத்தத்தில் கொல்லப்பட்ட தைக்கண்டும் யுத்தம் தணியவில்லை. பீமஸேனனால் சேனைத்தலைவர் கள் தள்ளப்பட்டதைக்கண்டும் மதிமயக்கத்தினாலோ பேராசையினா லோ யுத்தம் தணியவில்லை. யுத்தத்தில் இந்தஸேனையானது சிறந்த வீரர்கள் கொல்லப்பட்டும் அதிகமாக அழிக்கப்பட்டும் அலம்பலன் கொல்லப்பட்டும் இருப்பதைக்கண்டும், பகையானது தணியவில்லை. கொல்லப்பட்டிருக்கிற பிராதாக்களையும் தோழர்களையும் அம்மான் களையும் புத்திரர்களையும்கண்டும் யுத்தம் தணியவில்லை. ராஜகுலத் தில் பிறந்தவனும் அதிலும் குருவம்சஸ்தர்களுள் பிறந்தவனுமான துர்யோதனனைத்தவிர வேறுஎவன் நிஷ்பிரயோஜனமான பெரும் பகையை விளைவித்துக்கொள்வான் ? அறிவுமழுக்கமில்லாதவனும் நன்மைதீமைகளை அறிந்தவனும் பண்டிதனுமான எந்தமனிதன், பகைவன் குணங்களாலும் பலத்தினாலும் சௌர்யத்தினாலும் தன்னை மீறினவனென்று தெரிந்திருந்தும் யுத்தம்செய்வான்? பாண்டவர் களோடு ஸமாதானத்தை உத்தேசித்து உம்மாலேயே ஹிதவசனம் உரைக்கப்பெற்றும் அந்தத் துர்யோதனனுடையமனம் எப்படியா யிற்று? அவன் பிறருடைய வசனத்தை எவ்விதம் கேட்பான்? எவனால், சந்தனுவின் குமாரரான பீஷ்மரும் துரோணரும் விதுர ரும் வைரம்தணிக்க (முயன்று) அவமதிக்கப்பட்டார்களோ அவ னுக்கு இப்பொழுது மருந்துஎது? ஜனார்த்தனரே! எவன் மூர்க்கஸ்வ பாவத்தினால் பிராயம்முதிர்ந்த பிதாவையும் ஹிதமானவார்த்தை யைச்சொல்லுகின்றவளும் ஹிதத்தைவிரும்புகின்றவளுமான மாதா வையும்அவமதித்து நிராகரித்தானோ அவனுக்கு எவனுடையவசனம் ருசிக்கும் ? ஜனார்த்தனரே! இவன் குலத்தை அழிக்கவே பிறந்தவன். இது வெளிப்படை. அரசரே! இவனுடைய செய்கையும் நீதியும் அவ்

விதமாகக் காணப்படுகின்றன். அச்சுதரே! நம்முடைய ராஜ்யத்தை இவன் கொடுக்கப்போகிறதில்லையென்பது என்னுடைய எண்ணம். ஐயா! உயிரோடு திருதராஷ்டிரபுத்திரனான துர்யோதனன்பாகத்தைக் கொடுக்கமாட்டான். துர்ப்புத்தியுள்ள துர்யோதனனுக்குப்பிராணன் எதுவரையிலிருக்கிறதோ அதுவரையில்குற்றமில்லாத உங்கள்விஷயத்தில் பாதகத்தைச்செய்வானென்று மகாத்மாவான விதுரர் பலமுறை எனக்குச்சொன்னர். மாதவரே! உண்மையையறிந்தவரான விதுரர் 'யுத்தத்தைத்தவிர வேறுவிதத்தினால் (இந்தத் துர்யோதனன்) ஜயிக்க ஸாத்தியப்படமாட்டான்' என்றுஎன்னைநோக்கி எப்பொழுதும் சொல்லிக்கொண்டிருந்தார். மகாத்மாவான அந்தவிதுரர்சொல்லிய வசனப்படியே துராத்மாவான துர்யோதனனுடையஎல்லாமுயற்சியையும் இப்பொழுது அறிகிறேன். கெட்டபுத்தியுள்ளவனான எந்தத்துர்யோதனன் பரசுராமரிடத்தினின்று யதார்த்தமாயும் பத்யமாயுமிருக்கின்ற வசனத்தைக்கேட்டு அவமதித்தானே அவன் நிச்சயமாக நாசத்தினுடையமுனையில்நிற்கிறான். துர்யோதனன்பிறந்தவுடனேயேஅனேக ஸித்தர்களால், 'துராத்மாவானஇந்தத்துர்யோதனனை அடைந்து க்ஷத்ரியஜாதி நாசமடையப்போகிறது' என்றுசொல்லப்பட்டதன்றோ? ஜனார்த்தனரே! அவர்களுடைய அப்படிப்பட்ட வசனமானது நிச்சயமான சொல்லாக ஏற்பட்டுவிட்டது. துர்யோதனன்நிமித்தமாக அரசர்கள் அதிகமாக நாசத்தைஅடைந்துவிட்டார்களன்றோ? மாதவரே! அப்படிப்பட்டநான்இப்பொழுதுஎல்லாயுத்தவீரர்களையும் யுத்தத்தில்வதம் செய்யப்போகிறேன். க்ஷத்திரியர்கள் சீக்கிரம் கொல்லப்பட்டுப் பாசறை சூன்யமாகச்செய்யப்பட்டால் இவன் தானழிவதின்பொருட்டு நம்மோடு சண்டைசெய்வதில் விருப்பமுள்ளவனாவான். மாதவரே! வைரமானது அந்தச்சண்டையோடு முடிவாகுமென்று அனுமானத்தால் நிச்சயிக்கிறேன். விருஷ்ணிவம்சத்திலுதித்தவரே! நான் என்னுடைய அறிவினால் ஆராயுங்கால், விதுரருடையவாக்கியத்தினாலும் துராத்மாவான துர்யோதனனுடைய செய்கையினாலும் இது இவ்விதமென்று காண்கிறேன். வீரரே! ஆதலால், சேனையைக்குறித்துச் செல்லும். மிக்கபுஜபலமுள்ளவரே! கூர்மையுள்ள பாணங்களால் யுத்தத்தில்துர்யோதனனையும் இவனுடையசேனையையும்கொல்லப்போகிறேன். மாதவரே! த்ருதராஷ்டிரபுத்திரனான துர்யோதனன்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே துர்ப்பலமான இந்தச்சேனையைக்கொன்று தர்மராஜருக்கு இப்பொழுது க்ஷேமத்தை உண்டுபண்ணப்போகிறேன்' என்றான். ஸவ்யஸாசி அவ்வாறுசொல்லியதைக் கேட்டவரும்

கடிவாளத்தைக் கையில்பிடித்தவருமான வாஸுதேவர் பகைவர்களு டைய அந்தப் பெரும்படையில் பலத்தினால் பயமில்லாதவராகப் பிரவேசித்தார். பெரும்புகழுள்ளவரான கோவிந்தர், சக்திகளாகிற முட்களால் நெருங்கியதும் கதாயுதங்களும் பரிகங்களுமாகிற கற்களுடன்கூடியதும் ரதங்களும் யானைகளுமாகிற பெரியமரங் களுள்ளதும் குதிரைகளும் காலாட்களுமாகிற கொடிகளால் நாற் புறத்திலும் சூழப்பட்டதும் கோரமாயிருப்பதுமான வில்மயமான காட்டில் பிரவேசித்து உயர்ந்தகொடியுள்ள ரதத்துடன் அந்த விற் காட்டில் ஸஞ்சரித்தார். அரசரே! தாசார்ஹரால் தூண்டப் பட்ட அந்த வெள்ளைக்குதிரைகள் யுத்தத்தில் அர்ஜுனனைச் சுமந்து கொண்டு எல்லாத்திசைகளிலும் காணப்பட்டன. பிறகு, சத்துருக் களைத் தவிக்கச்செய்பவனான ஸவ்யஸாசி மேகம் நீர்த்தாரைகளைப் பொழிவதுபோலக் கூர்மையுள்ள அனேகபாணங்களை இறைத்துக் கொண்டு யுத்தத்தில் ரதத்துடன் சென்றான். யுத்தத்தில் ஸவ்யஸாசியி னால் பாணங்களால் தடுக்கப்படுகின்றவைகளும் கணுக்கள்படிந்துள்ள வைகளுமான அம்புகளுடைய சப்தமானது பெரிதாகத்தோன்றியது. காண்டீவத்தினால் பிரயோகிக்கப்பட்டவைகளும் இந்திரனுடைய வஜ்ராயுதம்போலத் தாக்குபவைகளுமான பாணங்கள் கவசங்களில் தடைப்படாமல் பூமியில் விழுந்தன. அரசரே! யுத்தத்தில் பாணங்கள் மனிதர்களையும் யானைகளையும் குதிரைகளையும்கொன்றுகொண்டும் கூச்சலிட்டுக்கொண்டும் விட்டில்கள்போல விழுந்தன. காண்டீவத்தி னால் செலுத்தப்பட்டபாணங்களால் எல்லாம்மூடப்பட்டதாகியது. யுத்தத்தில் திக்குக்களாவது திக்கோணங்களாவது அறியப்படவில்லை. பார்த்தனுடையபெயர்களால் அடையாளமிடப்பட்டவைகளும் பொற் கட்டுள்ளவைகளும் தைலமிட்டுத்தீட்டப்பட்டவைகளும் கருமானால் சாணையில் நன்குதீட்டப்பட்டவைகளுமான அம்புகளால் உலகமனை த்தும் நிரம்பினதாயிற்று. நெருப்பினால் யானைகள் சுடப்படுவதுபோ லப் பார்த்தனால் எரிக்கப்படுகின்றவர்களும் கூர்மையுள்ளபாணங்க ளால் வதஞ்செய்யப்படுகிறவர்களும் பயங்கரர்களுமான அந்தவீரர் கள் பார்த்தனைவிட்டுவிலகவில்லை. பாணங்களையும் விற்களையும் தரிக் கின்றவனும் ஸூர்யன்போல ஜ்வலிக்கின்றவனுமானபார்த்தன் ஜ்வ லிக்கின்ற நெருப்பானது உலர்ந்தகாட்டைஎரிப்பதுபோல யுத்தவீரர் களை யுத்தத்தில் எரித்தான். காட்டின்நடுவில் காடுகாப்போரால் வைக் கப்பட்டதும் நன்றாகமூண்டதும் ஜ்வலிக்கின்றதும் அதிகதாபமுள்ள துமான தீயானது மிக்கஒலியுள்ளதாக அதிகமரங்களுள்ளதும் உலர்

ந்த கொடிகளடர்ந்ததுமான உலர்ந்தகாட்டைக்கொளுத்துவதுபோல நாராசங்களுடைய ஸமூகத்தினால் (பகைவர்களை) மிகத்தவிக்கச்செய் பவனும் பாணங்களுடைய ஜ்வாலையுடன் கூடியவனும் நானாவிதமாக வும் குரூரமாகவுமுள்ளதேஜஸுடன்கூடியவனும் கோபமுள்ளவனும் வேகமுள்ளவனுமான அந்தஅர்ஜுனன் பலத்தினால்உம்முடையபுத்தி ரனதுசேனை அனைத்தையும் எரித்தான். நன்றாகப்பிரயோகிக்கப்பட்ட வைகளும் உயிரைவாங்குகின்றவைகளும் பொற்கட்டுள்ளவைகளு மான அந்த அர்ஜுனனுடைய அம்புகள் கவசங்களில் தடைப்பட வில்லை. மனிதன்மீதோ குதிரையின்மீதோ சிறந்த யானையின் மீதோ இரண்டாவது பாணத்தை அர்ஜுனன் பிரயோகித்தானில்லை. அந்த அர்ஜுனன் ஒருவனே மஹாரதர்களுடைய படையில் பிரவே சித்து வஜ்ராயுதத்தைக் கையில்பிடித்த இந்திரன் அஸுரர்களைக் கொல்வதுபோலப் பற்பல உருவத்துடனும் ஆக்ருதியுடனுங்கூடிய பாணங்களால் உமது புத்திரனுடைய சேனையைக் கொன்றான்.

---

## இருபத்துநான்காவது அத்யாயம்.

### ச ல் ய வ த பா ர் வ ம். (தொடர்ச்சி.)



(த்ருஷ்டத்யும்னனால் தோல்வியடைவிக்கப்பட்ட துர்யோதனன் குதிரையின்மீதேறிக்கொண்டு ஓடியதும், அஸ்வத்தாமா முதலானவர்கள் அவனைத் தேடியதும்.)

**தனஞ்சயன்,** யுத்தம் செய்கின்றவர்களும் முயல்கின்றவர்களும் ரணகளத்தினின்று திரும்பாதவர்களுமான சூரர்களுடைய எண்ணத் தைக் காண்டீவத்தினால் வீணாகச்செய்தான். இந்திரனுடைய வஜ்ரா யுதம்போலத் தாக்குவனவும் பொறுக்கமுடியாதனவும் அதிக தேஜ ஸுள்ளனவுமான பாணங்களைப் பிரயோகிக்கின்றவனான அர்ஜுனன் நீர்த்தாரைகளை வர்ஷிக்கின்ற மேகம்போலக் காணப்பட்டான். பர தர்களுள் சிறந்தவரே! கிரீடியினால் வதஞ்செய்யப்பட்ட அந்தச் சேனையானது, உமது புத்திரன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே யுத்தத்தினின்று விரைந்து ஓடியது. மற்றவர்கள் தந்தையர்களை யும் உடன்பிறந்தார்களையும் தோழர்களையும் இழந்து ஓடினார்கள். அரசரே! சில தேர்கள், குதிரைகள் கொல்லப்பட்டவைகளாயின. அவ்வண்ணமே, சில தேர்கள், பாகர் கொல்லப்பட்டவைகளாயின. சிலதேர்கள், அச்சு நுகம் சக்கரம் மூக்கணை இவைகள் ஒடிக்கப்பட்ட வைகளாயின. சிலர்களுடைய பாணங்கள் குறைந்துபோயின. அவ்

வாறே, சிலர் பாணங்களால்பீடிக்கப்பட்டார்கள். சிலர் அடிக்கப்படாமலே பயத்தினல் பீடிக்கப்பட்டவர்களாகி ஒரேஸமயத்தில் ஓடினுர்கள். பெரும்பான்மையாக உறவினர் கொல்லப்பட்ட சிலர், புத்திரர்களை அழைத்துக்கொண்டு ஓடினுர்கள். மற்றவர்கள் தகப்பன்மார்களை அழைத்தார்கள். வேறுசிலர் தோழர்களை அழைத்தார்கள். புருஷஸ்ரேஷ்டரே! வேந்தரே! சிலர் பந்துக்களையும் பிராதாக்களையும் அவ்வாறே ஸம்பந்திகளையும் விட்டுவிட்டுஆங்காங்கு ஓடினுர்கள். இந்த யுத்தத்தில் பார்த்தனுடைய பாணங்களால் அடிக்கப்பட்டவர்களும் மகாரதர்களுமான அனேகமனிதர்கள் அதிகமாக அடிக்கப்பட்டு மதிமயக்கமுற்றவர்களாகவும் பெருமூச்சுவிடுகின்றவர்களாகவும் காணப்பட்டார்கள். மற்றவர்கள் அவர்களை ரதத்தின்மீதேற்றிவைத்து ஒருமுகூர்த்தகாலம் களைப்பாறச் செய்து, தாமும் களைப்புத்தெளிந்து தாகந்தணிந்து மீண்டும் யுத்தத்திற்காகப் புறப்பட்டார்கள். யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவர்களான சிலர் உமது புத்திரனுடைய கட்டளையை நிறைவேற்றுவதற்காக அவர்களை விலக்கிவிட்டு யுத்தஞ்செய்ய எண்ணங்கொண்டு மறுபடியுமே சென்றுர்கள். பரதர்களுள் சிறந்தவரே!சிலர் தண்ணீரைக்குடித்துவாகனத்தைக் களைப்பாறச் செய்தும் சிலர் கவசங்களைப் பூட்டிக்கொண்டும் மற்றவர்கள் ஸஹோதரர்களையும் சிலர் புத்திரர்களையும் சிலர் தந்தையர்களையும் தேறுதலடையச்செய்து பாசறையில் இருத்தியும் மீண்டும் யுத்தம்செய்வதில் விருப்பமுள்ளவர்களானுர்கள். அரசரே! சிலர் ரதங்களைச்சித்தம்செய்து பிரதானர்களை அதிக்கிரமிக்காமல் பாண்டவர்களுடைய படையைச்சூழ்ந்துகொண்டு மறுபடியும் யுத்தம் செய்வதில் விருப்பமுற்றுர்கள். கிண்கிணிகளுடைய ஸமூகங்களால் நாற்பக்கத்திலும் நன்குமூடப்பட்ட அந்தச்சூரர்கள் மூவுலகங்களையும் ஜயிப்பதில் முயற்சியுள்ள தைத்யர்கள்போலவும் தானவர்கள்போலவும் விளங்கினுர்கள். சிலர் பொன்னல் அலங்கரிக்கப்பட்ட தேர்களோடு விரைவாகவந்து பாண்டவர்களுடைய படைகளில் த்ருஷ்டத்யும்னனை எதிர்த்துப் போர்புரிந்தார்கள். பாஞ்சாலராஜகுமாரனுனத்ருஷ்டத்யுமனனும் மஹாரதனுன சிகண்டியும் நகுலகுமாரனுன சதாநீகனும் தேர்ப்படையுடன் போர்புரிந்தார்கள்.கடுஞ்சினமுள்ள பாஞ்சாலராஜகுமாரனே, பிறகு, மிக்ககோபம்கொண்டவனுகப் பெரியஸேனையினுல் சூழப்பட்டு உம்மைச் சேர்ந்தவர்களைக் கொல்லுவதன்பொருட்டு முயற்சிசெய்து எதிர்த்துச்சென்றுன். பாரதரே! பிறகு, உம்முடைய புத்ரனுன துர்யோதனன் எதிர்த்துவருகின்ற அந்தத்ருஷ்டத்யும்னன்

மீது அனேகபாணஸமூகங்களைப் பிரயோகித்தான். அரசரே! பிறகு, விற்பிடித்திருக்கின்ற உம்முடைய புத்ரன் த்ருஷ்டத்யும்னனை விரைவாகப்பிளக்குந் தன்மையுள்ள அனேகம் நாராசங்களாலும் அர்த்த நாராசங்களாலும் வத்ஸதந்தங்களாலும் கருமானல் சாணைபிடிக்கப் பட்டபாணங்களாலும் நான்கு குதிரைகளையும்கொன்று இரண்டுகை களிலும்மார்பிலும் அடித்தான். ஈட்டியினல்குத்தப்பட்ட யானைபோல அதிகமாக அடிக்கப்பட்ட சிறந்தவில்லாளியான அந்த த்ருஷ்டத்யும் னன்அந்தத்துர்யோதனனுடையநான்குகுதிரைகளையும்பாணங்களால் மிருத்யுவினிடம் அனுப்பி அவனது ஸாரதியின் தலையை ஒருபல்லத் தினலே சரீரத்தினின்றும் கொய்தான். பிறகு, பகைவர்களை அடக்கு பவனன துர்யோதனராஜன் தேரழிக்கப்பட்டவனுகிக் குதிரையின் மீது ஏறிக்கொண்டு (யுத்தத்தைவிட்டு) சிறிது தூரம் விலகிச்சென் ருன். மஹாராஜரே! மஹாபலசாலியான உம்முடையபுத்ரனனவன் வீரர்கள் நாசம் பண்ணப்பட்டிருக்கிற தன்படையைக்கண்டு சகுனி யிருக்கிற அவ்விடம்சென்ருன். பிறகு, ரதங்கள் நாசம்செய்யப்பட் டவுடன், மூவாயிரம் பெரிய யானைகள் ரதிகர்களான பாண்ட வர்களனைவர்களையும் நான்குபக்கத்திலும் சூழ்ந்துகொண்டன. பார தரே! மஹாராஜரே! யுத்தத்தில் யானைப்படையினல் சூழப்பட்ட அந்த ஐந்து வீரர்களும் நக்ஷத்திரகணங்களால் சூழப்பட்ட கிரகங் கள்போலப் பிரகாசித்தனர். மஹாராஜரே! பிறகு, அஸ்திரசஸ்தி ரங்களில் நல்லதேர்ச்சியுள்ளவனும் நீண்டகைகளையுடையவனும் வெண்மையான குதிரைகளையுடையவனும் வாஸுதேவரை ஸாரதி யாகக்கொண்டவனுமான அர்ஜுனன் ரதத்தோடேயே கிளம்பினன். பர்வதங்களுக்கொப்பான அந்த யானைகளால் நாற்புறத்திலும் சூழப் பட்ட அந்த அர்ஜுனன், பளபளப்புள்ளவைகளும்கூர்மையுள்ளவை களுமான நாராசங்களால் யானைப்படையை எதிர்த்துச்சண்டை செய்தான். அந்தயுத்தத்தில் பெரிய யானைகளை ஸவ்யஸாசியினல்ஒரு பாணத்தினலேயேகொல்லப்பட்டவைகளும்விழுந்தவைகளும் வீழ்த் தப்படுகின்றவைகளும்பிளக்கப்பட்டவைகளுமாகக் கண்டோம். மத யானைக்கொப்பானவனும் பலசாலியுமானபீமஸேனனே அந்தயானை களைக்கண்டு கையினல் பெரியகதையை எடுத்துக்கொண்டு ரதத்தி னின்று விரைவாகக் கீழேதள்ளிக்குதித்து, தண்டாயுதத்தைக்கை யில்கொண்ட அந்தகன்போல எதிர்த்துவந்தான். கதையைக்கையில் எடுத்தவனும் பாண்டவர்களுள்மகாரதனுமான அந்தப்பீமனைக்கண்டு உம்மைச்சேர்ந்தபோர்வீரர்கள் பயந்தார்கள்; ஜலமலங்களையும் பெருக்

கினார்கள். விருகோதரன் கதையைக் கையில்கொண்டவுடனே, சேனை முழுவதும் அதிகபயத்தை அடைந்தது. பீமஸேனனால் கதையினால் மத்தகம் பிளக்கப்பட்டவைகளும் கீழே தள்ளப்பட்டவைகளும் ஓடுகின்றவைகளுமான பர்வதத்துக்கு ஒப்பானயானைகளைக் கண்டோம். அந்தயானைகள் பீமஸேனனுடையகதையினால் அடிக்கப்பட்டவைகளாக ஓடின. சிறகுகள்வெட்டப்பட்ட மலைகள்போலத் துன்பக்குரலை வெளியிட்டுக்கொண்டு கீழேவிழுந்தன. கும்பஸ்தலமுடைந்து அங்குமிங்குமோடுகின்றவைகளும் கீழே விழுகின்றவைகளுமான அனேகயானைகளைப்பார்த்து உம்முடைய வீரர்கள் பயந்தார்கள். அதிககோபங்கொண்ட யுதிஷ்டிரரும் மாத்ரீகுமாரர்களான நகுல ஸஹதேவர்களும் யானையின்மிதேறிப் போர்புரிகின்ற யுத்தவீரர்களைக் கழுகிறகுகள் பூட்டிய கூர்மையுள்ளபாணங்களால் அடித்தார்கள். மஹாராஜரே! திருஷ்டத்யும்னனோ, உமதுபுத்ரன் யுத்தத்தில் அரசனைத் தோல்வியடையச்செய்து குதிரையின்மீதேறிக்கொண்டு விலகிச்செல்லவே, யானைகளால் சூழப்பட்ட எல்லாப்பாண்டவர்களையும்கண்டு விரைவாக அருகில் ஓடிவந்தான். பாஞ்சாலராஜகுமாரனான த்ருஷ்டத்யும்னன் யானைகளைக் கொல்லஎண்ணங்கொண்டு சென்றான். தேர்ப்படையில் பகைவர்களை அடக்குந்திறமையுள்ள துர்யோதனனைக் காணமல் அஸ்வத்தாமாவும் கிருபரும் ஸாத்வதனான கிருதவர்மாவும் 'துர்யோதனன் எவ்விடம்சென்றான்?' என்று அங்குள்ள க்ஷத்திரியர்களை வினவினார்கள். நடந்துவருகின்றதும் ஜனங்களுக்குஅழிவுமான யுத்தத்தில் அரசனான உம்முடைய புத்திரனைக் காணாதவர்களும் மாண்டவனாக எண்ணினவர்களுமான அந்த மஹாரதர்கள், முகத்தில் ஒளியை இழந்தவர்களாக உம்முடைய புத்திரனைப்பற்றி வினவினார்கள். சிலர், 'ஸாரதிகொல்லப்பட்டவுடனே ஸஹிக்கமுடியாத பாஞ்சாலராஜனுடைய அந்தப்படையை விட்டுவிட்டுச் சகுனி இருக்குமிடத்துக்குச்சென்றான்' என்றார்கள். ஆயுதங்களால் அதிகமாக அடிக்கப்பட்டிருக்கிற அங்குள்ள மற்றக்ஷத்திரியர்கள், 'துர்யோதனனால் செய்யத்தக்கது என்னஇருக்கின்றது? அவன் உயிரோடிருந்தால் பார்ப்பீர்கள். எல்லோரும் ஒன்றுசேர்ந்து போர்புரியுங்கள். அரசன் உங்களுக்கு, என்னசெய்யப்போகிறான்?' என்றார்கள். காயப்படுத்தப்பட்ட சரீரங்களையுடையவர்களும் பெரும்பான்மையாக வாகனங்கள்கொல்லப்பட்டவர்களுமான அந்தக்ஷத்திரியர்கள் பாணங்களால் நன்றாகப்பீடிக்கப்பட்டவர்களாயிருந்துகொண்டு, 'நம்மைச்சூழ்ந்திருக்கும் இந்தச்சேனைமுழுவதையும் நாம்கொல்வோம்.

இந்தப் பாண்டவர்களனைவரும் யானைகளைக்கொன்றுகொண்டு ஸமீபத்தில் நெருங்கிவிட்டார்கள்' என்று தெளிவில்லாமல்சொன்னார்கள். சூரர்களும் திடமானவிற்களையுடையவர்களுமான மஹாபலசாலியான அஸ்வத்தாமாவும் கிருபரும் கிருதவர்மாவும், அவர்களுடைய வசனத்தைக்கேட்டுத் தேர்ப்படையை விட்டுவிட்டு ஸஹிக்கமுடியாத பாஞ்சாலராஜனுடைய அந்தப்படையைப்பிளந்துகொண்டு சகுனிஇருக்குமிடத்துக்குச் சென்றார்கள். அரசரே! அவர்கள் சென்றபிறகு, திருஷ்டத்யும்னனைத் தலைவனாகக்கொண்ட பாண்டவர்கள் உம்மைச் சேர்ந்தவர்களைக் கொன்றுகொண்டு வந்தார்கள். அதிகஉத்ஸாஹத்துடன்வருகின்ற அந்தமஹாரதர்களைக்கண்டு அப்பொழுது பராக்கிரமசாலிகளான வீரர்கள் உயிரில் ஆசையைவிட்டவர்களானார்கள். உம்முடையசேனையானது பெரும்பாலும் ஒளிஇழந்தமுகத்துடன் கூடிய வீரர்களுள்ளதாயிற்று. அரசரே! ஆயுதங்கள் குறைந்தவர்களும் நாற்புறத்திலும் சூழப்பட்டிருப்பவர்களுமான அவர்களை நான் கண்டு, என்னுடையஉயிரில் ஆசையைவிட்டு, நானே ஐந்தாமவனாக நின்று * மூன்றங்கங்களுள்ள சேனையுடன்சேர்ந்து பாஞ்சாலனுடைய சேனையோடு போர்புரிந்தேன். எந்தஇடத்தில் கிருபர் இருந்தாரோ அந்தஇடத்தில் நின்று (போர்புரிந்து) நாங்கள் ஐந்துபேர்களும் கிரீடியினுடைய பாணங்களால் பீடிக்கப்பட்டவர்களாகி அதிபயங்கரனாக இருக்கிறதிருஷ்டத்யும்னனைக்குறித்து விரைவாக எதிர்த்துச்சென்றோம். அவ்விடத்தில் பெரும்போர் நடக்கவில்லை. அவனால் நாங்களனைவர்களும் ஜயிக்கப்பட்டோம்; பிறகு, யுத்தத்தினின்று ஓடிவிட்டோம். பிறகு, அருகில் நெருங்கிவருகிற மஹாரதனை ஸாத்யகியைக் கண்டேன். வீரனான ஸாத்யகி நானூறுரதங்களுடன் யுத்தத்தில் என்னை எதிர்த்தான். களைத்தவாகனங்களையுடைய திருஷ்டத்யும்னனிடத்தினின்று அதிகப்பிரயாஸத்தினால் நான்விடுபட்டுப் பாவியானவன் நரகத்தில்விழுவதுபோல் ஸாத்யகியினுடைய படையில் விழுந்தேன். அவ்விடத்தில் அதிக பயங்கரமாயும் கோரமாயுமிருக்கிற யுத்தமானது, ஒருமுகூர்த்த காலம் நடந்தது. மிக்கதோள்வலியமைந்த ஸாத்யகியோ என்னுடைய பரிவாரத்தைக்கொன்று, மூர்ச்சையுடன் பூமியில் விழுந்திருக்கிற என்னை உயிரோடு பிடித்தான். பிறகு, ஒருமுகூர்த்தத்திற்குள்ளாகப் பீமஸேனனால் கதையினாலும் அர்ஜுனனால் நாராசங்களாலும் அந்தயானைப்படையானது அடிக்கப்பட்டது.

---

* 'வ்யங்கே' என்பது வேறுபாடம். 'அங்கங்கள் குறைந்த' என்பது பொருள்.

நாற்புறங்களிலும் நொறுக்கப்பட்டவைகளும் மலைபோன்றவைகளு மான பெரிய யானைகளால் பாண்டவர்களுக்கு வழியானது நன்கு செல்லக்கூடாமலிருந்தது. மஹாராஜரே! பிறகு, மஹாபலசாலி யான பீமஸேனன் பெரிய யானைகளைத் தூரத்தில் இழுத்துத்தள்ளிப் பாண்டவர்களுக்கு ரதமார்க்கத்தை ஏற்படுத்தினான். அஸ்வத்தாமா வும் கிருபரும் ஸாத்வதனான கிருதவர்மாவும், பகைவர்களைச் சிக்ஷிப் பவனும் மஹாரதனும் அரசனுமான உமது புத்திரனைத் தேர்ப்படை யில் காணாமல் தேடினார்கள். ஜனங்களுக்கு க்ஷயம் நடந்துவருங்கா லத்தில், நம்முடைய ஸேனாவீரர்கள் அரசனைக்காணாததினால் மன வருத்தமுற்றுப் பாஞ்சாலராஜகுமாரனை விட்டுவிட்டுச் சகுனி இருக்குமிடத்துக்குச் சென்றார்கள்.

---

## இருபத்தைந்தாவது அத்யாயம்.

## சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)

(பீமன் மிகுந்திருக்கிற துர்யோதனனுடைய இளைய ஸஹோதரர்களைக்கொன்றது.)



பாரதரே! பாண்டுபுத்திரனான பீமஸேனனால் யுத்தத்தில் அந்தயானைப்படையானது கொல்லப்பட்டு ஸேனையும் கொல்லப்பட வே, ஸஞ்சரிப்பவனும் பகைவர்களை அடக்குபவனுமான பீமஸேன னைத் தண்டத்தைக்கையில்கொண்டவனும் உயிரைவாங்குகின்ற வனும் கோபங்கொண்டவனுமான அந்தகனைப்போலக் கண்டோம். அரசரே! குருவம்சத்திலுதித்தவனும் உம்முடையபுத்திரனுமான துர்யோதனன் காணப்படாமல்போகவே, மாண்டவர்கள்போக மிகுந் திருப்பவர்களும் ஸகோதரர்களுமான உம்முடையபுத்திரர்கள் யுத் தத்தில் ஒருங்குகூடியவர்களாகிப் பீமஸேனனைக்குறித்து அருகில் ஓடினார்கள். ஸ்ருதர்வா, ஸஞ்சயன், ஜயத்ஸேனன், ஸ்ருதாந்தகன், துர்விமோசனகன், அவ்விதமே பலசாலியான துர்விஷஹன், துர்மர் ஷணன், ஸுஜான், ஜைத்ரதன், பூரிபலன், ரவி என்கிற இந்தஉமது புத்திரர்கள் ஒன்றுசேர்ந்து நாற்புறங்களிலும் பீமஸேனனை எதிர்த் தோடி எல்லாத்திக்குக்களிலும் தடுத்தார்கள். மஹாராஜரே! பிறகு, பீமன் மீண்டும் தன்ரதத்தில் ஏறிக்கொண்டு உமதுபுத்திரர்களுடைய மர்மஸ்தானங்களில் கூர்மையுள்ள பாணங்களைப் பிரயோகித்தான். மஹாயுத்தத்தில் பீமனால் (பாணங்களால்) சிதற அடிக்கப்படுகின்ற

உமது அந்தப் புத்திரர்கள் பெருங்காற்றுக்கள் யானையைத் தாக்குவது போலப் பீமஸேனனை அணுகித் தாக்கினார்கள். பிறகு, யுத்தத்தில் கோபங்கொண்ட பீமன் துர்மர்ஷணனுடைய தலையை ஒரு க்ஷுரப்ரத்தினால் அறுத்துப் பூமியில் சீக்கிரமாக விழும்படி செய்தான். பிறகு, மஹாரதனான பீமன் எல்லாக்கவசங்களையும் உடைக்குந் தன்மையுள்ள வேறு ஒரு பல்லத்தினால் உமது புத்திரனான ஸ்ருதாந்தகனைக் கொன்றான். பகைவர்களை அடக்குகிறவனான பீமன் பிறகு சிரிப்பவன்போல ஒரு நாராசத்தினால் குருவம்சத்தில் உதித்தவனான ஜயத்ஸேனனை அடித்துத் தேரினடுவினின்று கீழே தள்ளினான். ராஜரே! அவன் ரதத்தினின்று பூமியில் விழுந்து உடனே மரித்தான். பெரியவரே! பிறகு, கோபங்கொண்ட ஸ்ருதர்வாவோ கழுகிறகு பூண்டவைகளும் படிந்த கணுக்களுள்ளவைகளுமான நூறுபாணங்களால் பீமனை அடித்தான். பிறகு, யுத்தத்தில் கோபங்கொண்ட பீமன், ஜைத்ரன் பூரிபலன் ரவி இம்மூவரையும் விஷத்திற்கும் அக்னிக்குமொப்பான மூன்று பாணங்களால் அடித்தான். அடிக்கப்பட்ட அந்தமஹாரதர்கள் வஸந்தகாலத்தில் புஷ்பங்கள் நிறைந்ததும் வெட்டப்பட்டதுமான பலாசவிருக்ஷங்கள்போல ரதங்களினின்று பூமியில் விழுந்தார்கள். பிறகு, பகைவர்களைத் தவிக்கச் செய்பவனான பீமன் தீக்ஷ்ணமான வேறு ஒரு பல்லத்தினால் துர்விமோசனனைக்கொன்று யமனிடம் அனுப்பினான். அடிக்கப்பட்டவனும் ரதிகர்களுள் சிறந்தவனுமான அந்தத் துர்விமோசனன் மலையின் சிகரத்தில் உண்டான மரமானது காற்றினால் முறிக்கப்பட்டுக் கீழே வீழ்வதுபோலத் தன்ரதத்தினின்று பூமியில் விழுந்தான். பிறகு, யுத்தத்தில் பீமன் உம்முடையபுத்திரனான துஷ்ப்ரதர்ஷனையும் ஸுஜாதனையும் படைமுகத்தில் ஒவ்வொருவரையும் இரண்டு இரண்டு பாணங்களால் கொன்றான். ரதிகர்களுள்சிறந்தவர்களான அவ்விருவரும் பாணங்களால் அடிக்கப்பட்ட அங்கங்களுடன் பூமியில் விழுந்தார்கள். பிறகு, பீமன் யுத்தத்தில் எதிர்த்துவருகின்ற உம்முடைய குமாரனான துர்விஷஹனை யுத்தகளத்தில் கண்டு அவனை ஒரு பல்லத்தினால் கீழேவிழும்படி செய்தான். எல்லா வில்லாளிகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அவன் கொல்லப்பட்டு வாகனத்தினின்று விழுந்தான். யுத்தத்தில் ஒருவனால் பலபிராதாக்கள் கொல்லப்பட்டதைக் கண்டு ஸ்ருதர்வா கோபத்துக்கு வசப்பட்டவனாகிப் பொன்னாலலங்கரிக்கப்பட்ட மிக்க பெரிதான வில்லை அசைவுறும்படி செய்துகொண்டும் விஷத்துக்கும் நெருப்

புக்குமொப்பான அநேகம்பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டும் பீமனை எதிர்த்தான். மன்னரே! அந்த ஶ்ருதர்வாவோ மஹாயுத்தத்தில் பாண்டவனுடைய வில்லை வெட்டிப் பின்பு வில் அறுக்கப்பட்ட அந்தப்பீமன்மீது இருபதுபாணங்களை இறைத்தான். பிறகு, மிக்கபலசாலியானபீமஸேனன் வேறுவில்லைஎடுத்து உம்முடைய புத்திரன்மீது (பாணங்களை) இறைத்தான்; 'நில், நில்' என்றும் சொன்னான். முற்காலத்தில் யுத்தத்தில் ஜம்பனுக்கும் இந்திரனுக்கும் யுத்தம்நடந்ததுபோல அவ்விருவருக்கும் ஆச்சர்யகரமாயும் பயங்கரமாயுமுள்ள பெரும்போர் நடந்தது. அந்தயுத்தத்தில் பிரயோகிக்கப்பட்டவைகளும் யமதண்டத்துக்கு ஒப்பானவைகளும் கூர்மையுள்ளவைகளுமான அவ்விருவர்களுடைய பாணங்களால் பூமிமுழுமையும் ஆகாயமும் திக்குக்களும் திக்கோணங்களும் நன்றாகமூடப்பட்டன. வேந்தரே! பிறகு, சுருதர்வா, அதிககோபங்கொண்டு யுத்தத்தில் வில்லையெடுத்து அம்புகளால் பீமஸேனனை இரண்டுகைகளிலும் மார்பிலும் அடித்தான். மஹாராஜரே! வில்லாளியான உம்முடையபுத்திரனால் நன்றாக அடிக்கப்பட்ட அந்தப்பீமன் கோபங்கொண்டவனாகப் பர்வகாலத்தில் பெருங்கடல் கலங்குவது போலக் கலங்கினான். பெரியவரே! பிறகு, பீமன் கோபத்தினால் மூடப்பட்டவனாகிப் பாணங்களால் உமது புத்திரனுடையஸாரதியையும் நான்கு குதிரைகளையும் யமனுடையவீட்டுக்குஅனுப்பினான். அளவிடமுடியாத மனோதைர்யமுள்ள பீமன், ரதத்தைஇழந்த அந்த ஶ்ருதர்வாவைக்கண்டு தன்கைத்தேர்ச்சியைக் காண்பித்துக்கொண்டு இறகுகளால் விரைவாகச்செல்லுகின்ற பாணங்களை இறைத்தான். வேந்தரே! ரதத்தை இழந்த ஶ்ருதர்வா கத்தியையும் கேடகத்தையும் கையில் எடுத்தான். பிறகு, பாண்டவன் கத்தியையும் அநேக சந்திரப்பிரதிமைகளுடன்கூடியதும் ஒளிபொருந்தியதுமானகேடகத்தையும் கையில் எடுக்கின்ற அந்தஶ்ருதர்வாவினுடைய தலையை ஒரு க்ஷுரப்ரத்தினால் உடலிலிருந்துஅறுத்துத்தள்ளினான். பிறகு, மஹாத்மாவான பாண்டவனால் க்ஷுரப்ரத்தினால் தலை அறுக்கப்பட்ட சுருதர்வாவினுடைய உடலானது பூமியை எதிரொலியிடும்படிசெய்துகொண்டு தன்னுடையரதத்தினின்று விழுந்தது. அந்தவீரன் விழுந்தவுடனே, உம்மைச்சேர்ந்தவர்கள் பயத்தினால் மோஹித்தவர்களும் போர்புரிய எண்ணங்கொண்டவர்களுமாக யுத்தத்தில் பீமனைஎதிர்த்தோடினார்கள். பிரதாபசாலியான பீமஸேனன், மாண்டதுபோக மிச்சமிருக்கிற ஸேனாஸமுத்திரத்தினின்று தன்னைநோக்கி விரைவாகவரு

கின்றவர்களும் கவசம்பூண்டவர்களுமான அந்தவீரர்களை எதிர்த்தான். அவர்களோ அவனை எதிர்த்து நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு,(பகைவர்களால்) சூழப்பட்ட பீமன், இந்திரன் அஸுரர்களைத் துன்புறுத்துவதுபோல உம்மைச்சேர்ந்த அவர்களனைவர்களையும் கூர்மையானபாணங்களால் துன்புறுத்தினான். பிறகு, ரதகுப்திகளுடன்கூடின ஐந்நூறுமஹாரதங்களை நாசஞ்செய்து மீண்டும் யுத்தத்தில் எழுநூறு யானைப்படையையும் கொன்றான். அவன் உத்தமமான பாணங்களால் லக்ஷம்காலாட்களையும் எண்ணூறு குதிரைகளையும் கொன்று பிரகாசித்தான். பிரபுவே! குந்தீபுத்திரனான பீமஸேனனே யுத்தத்தில் உம்முடையபுத்திரர்களைக்கொன்று தன்னைக் கிருதார்த்தனாகவும் தன்ஜன்மாவை ஸபலமாகவும் எண்ணினான். நராதிபரே! அவ்வண்ணம் போர்புரிகின்றவனும் உம்மைச்சேர்ந்தவர்களைக்கொல்லுகின்றவனுமான அந்தப்பீமஸேனனை உம்முடைய போர்வீரர்கள் பார்ப்பதற்குஞ் சக்தியற்றவர்களானார்கள். பீமன் எல்லாக்கௌரவர்களையும் ஓடும்படிசெய்து அந்தக்காலாட்களையும் கொன்று,பிறகு பெரியயானைகளைப் பயமடையும்படி செய்துகொண்டு இருகைகளாலும் சத்தத்தை உண்டுபண்ணினான். மஹாராஜரே! பெரும்பான்மையாகப் போர்வீரர்கள்கொல்லப்பட்ட உம்முடைய படையானது கொஞ்சம் மிகுந்ததாகித் தீனமானஸ்திதியை அடைந்தது.

---

## இருபத்தாறுவது அத்யாயம்.

## சல்யவதபர்வம். (தொடர்ச்சி)

(கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்வாதமும்,ஸங்குலயுத்தமும், பீமன் ஸுதர்சனனைக் கொன்றதும்.)

மஹாராஜரே! மாண்டவர்கள்போக மிகுந்தவர்களான துர்யோதனனும் உம்முடைய குமாரனான * ஸுதர்சனும் அப்பொழுது யுத்தத்தில் குதிரைகளின் நடுவில் நின்றார்கள். பிறகு, குதிரைகளின் நடுவிலிருக்கின்ற துர்யோதனனைக்கண்டு தேவகீநந்தனர் குந்தீபுத்ரனான தனஞ்சயனைப்பார்த்து,'அர்ஜுன! பகைவர்கள்,பெரும்பான்மையாகக் கொல்லப்பட்டார்கள். நமது பந்துக்கள் ரக்ஷிக்கப்பட்டார்கள். சினிபுங்கவனான இந்த ஸாத்யகியும் ஸஞ்சயனைப் பிடித்துக்கொண்டு திரும்பிவிட்டான். பாரத! நகுலனும் ஸஹதேவனும் யுத்தத்தில் துணை

* இவனே ஸுதர்சனன்.

வீரர்களுடன்கூடின பாவிகளான தார்த்தராஷ்டிரர்களோடு சண்டை செய்து களைத்துவிட்டார்கள். கிருபர், கிருதவர்மா, மகாரதரான த்ரோணபுத்திரர் இம்மூவர்களும் துர்யோதனனைத் தாண்டி நிற்கின்றார்கள். இதோ பாஞ்சாலராஜகுமாரன் எல்லாப்பிரபத்ரகர்களுடனும் துர்யோதனனுடைய ஸேனையைக் கொன்று அதிக காந்தியோடு விளங்கிக்கொண்டு நிற்கிறான். குந்தீநந்தன! இதோ துர்யோதனன் குடைபிடிக்கப் பெற்று அடிக்கடி நம்மை நோக்கிக்கொண்டு குதிரைகளின் மத்தியில் இருக்கிறான்; எல்லாச்சேனையையும் எதிரணி வகுத்துக்கொண்டு யுத்தமத்தியில் (போர்புரிவதற்காக) நிற்கிறான். இவனைக் கூரிய பாணங்களால் கொன்று க்ருதக்ருத்யனாகப்போகிறாய். பகைவர்களை அடக்குகிறவனே! கொல்லப்பட்ட யானைப்படையையும் வந்திருக்கிற உன்னையுங் கண்டு இவர்கள் ஓடுமுன்னரே துர்யோதனனை ஸம்ஹாரம்செய்வாயாக. அப்பா! 'சீக்கிரம் இங்குவர வேண்டும்' என்றுசொல்வதின்பொருட்டு ஒருவன் பாஞ்சாலராஜகுமாரனை திருஷ்டத்யும்னனை நோக்கிச்செல்லவேண்டும். களைத்த ஸேனையுடன்கூடினவனும் எதிரிகளுக்குத் தீங்கிழைத்தவனுமான இந்தத்திருஷ்டத்யும்னன் விடுபடமாட்டான். திருதராஷ்டிரபுத்திரன் யுத்தத்தில் உன்னுடையஸேனை அனைத்தையும் கொன்று பாண்டுவின்குமாரர்களை ஜயிக்கப்பட்டவர்களாகவே எண்ணிப் பெரிய ரூபத்தைத் தரிக்கிறான். பாண்டவர்களால் பீடிக்கப்பட்டும் கொல்லப்பட்டுமிருக்கிற தன்ஸேனையைக்கண்டு அரசன் நிச்சயமாகத் தன்னுடையவதத்தின்பொருட்டே யுத்தத்திற்காக வரப்போகிறான்'என்றார். இவ்வாறு உரைக்கக்கேட்ட பல்குனனே,கிருஷ்ணனைப்பார்த்து'மாதவரே! திருதராஷ்டிரபுத்திரர்களனைவரும் பீமனால் கொல்லப்பட்டார்கள். எந்தஇருவர் இங்குஇருக்கிறார்களோ அவர்களும் இப்பொழுதே இருக்கப்போகிறதில்லை. கோவிந்தரே! பீஷ்மர் கொல்லப்பட்டார். துரோணரும் கொல்லப்பட்டார். சூரியகுமாரனை கர்ணனும் கொல்லப்பட்டான். மத்ரதேசாதிபதியான சல்யனும் கொல்லப்பட்டான். ஜயத்ரதனும் கொல்லப்பட்டான். ஜநார்த்தனரே! ஸுபலனுடையகுமாரனை சகுனியினுடைய ஐந்நூறுகுதிரைகளும்இருநூறுரதங்களும் நூற்றுக்குமேல்பட்டயானைகளும் மூவாயிரம்காலாட்களும் மிகுந்திருக்கிறார்கள். மாதவரே! அஸ்வத்தாமா, கிருபர், திரிகர்த்தாதிபதியான ஸுசர்மா, உலூகன், சகுனி, ஸாத்வதனனகிருதவர்மா, (இவர்களடங்கிய) இந்தச்சேனைதான் தார்த்தராஷ்டிரனுக்கு மிகுந்திருப்பதாயிற்று. காலத்தினால் பூமியில் நிச்சயமாக ஒரு

வனும் விடப்படுவதில்லை. அவ்வாருக, ஸைன்யம்கொல்லப்பட்டிருக்கையில் துர்யோதனன் நிற்பதைப்பாரும். மஹாராஜாவானயுதிஷ்டிரர் இன்றைத்தினம் பகைவர்கள்அழிக்கப்பெற்றவராகப்போகிருர். இச்சமயத்தில் பகைவர்களுள் ஒருவனுவது என்னிடத்தினின்று விடுபடமாட்டானென்று நினைக்கிறேன். கோவிந்தரே! மதத்தினுல் அதிகரித்திருக்கின்ற எவர்கள் இன்று யுத்தத்தை விடுகிருர்களில்லையோ, அவர்கள் தேவர்களாக இருந்தாலும் அவர்களனைவர்களையும் கொல்வேன். கூர்மையானபாணங்களால் இன்று காந்தாரதேசத்தரசனுடைய புத்திரனுன சகுனியைக்கொன்று அரசருக்கு யுத்தத்திலுண்டான நீண்டவிழிப்பைப் போக்கப்போகிறேன். கெட்ட நடையுள்ள சகுனி, கபடத்தினுல் எந்த ரத்தினங்களை ஸபையில் சூதாட்டத்தில் கவர்ந்தானே அவைகளை நான் மீண்டும் கைப்பற்றுகிறேன். யுத்தத்தில் பாண்டவர்களால் பர்த்தாக்களும் புத்திரர்களும் கொல்லப்பட்டார்கள் மன்பதைக்கேட்டு ஹஸ்தினுபுரத்திலிருக்கிற எல்லாஸ்திரீகளும் என்னுடைய சக்தியை இன்று அறியப்போகின்ருர்கள். மாதவரே! இன்று கார்யம்அனைத்தும் முடிவுபெறப்போகின்றது. இன்று துர்யோதனன் விளங்குகின்ற ஸம்பத்தையும் உயிரையும் இழக்கப்போகிருன். கேசவரே! விருஷ்ணிவம்சத்திலுதித்தவரே! பயத்தினுல் என்னுடைய யுத்தத்தினின்று விலகாமல் போவானேயாகில், பரமமூடனுன துர்யோதனனைக் கொல்லப்பட்டவனென்றே அறிவீராக. பகைவர்களை அடக்குகிறவரே! இந்தக் குதிரைக்கூட்டமானது, என்னுடைய நாணொலியையும் தலத்வனியையும் ஸஹிப்பதற்குப் போதுமானதிறமையுள்ளதன்று. இதோ கொல்லப்போகிறேன். செல்லும்' என்றுமொழிந்தான். அரசரே! கீர்த்திமானுன பாண்டவன் இவ்வாறுசொல்லக்கேட்ட தாசார்ஹரோ, துர்யோதனனுடையஸேனையைக்குறித்துக் குதிரைகளை ஓட்டினுர். பெரியவரே! அந்தப்படையைக்கண்டு மகாரதர்களானபீமஸேனன், அர்ஜுனன், ஸஹதேவன் இம்மூவரும் ஸன்னத்தர்களாகத் துர்யோதனனைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணத்தினுல் ஸிம்மநாதத்துடன்சென்ருர்கள். ஒன்றுசேர்ந்து வேகத்துடனே விற்களைக்கையிலேந்தியவர்களும்கொல்லும்விருப்பமுள்ளவர்களுமான அந்தப்பாண்டவர்களனைவர்களையும்பார்த்து யுத்தத்தில் சகுனி எதிர்த்துச்சென்ருன். உம்முடையபுத்ரனுன சுதர்சனன் பீமஸேனனை எதிர்த்தான். ஸுசர்மாவும் சகுனியும் கிரீடியுடன் போர்புரிந்தார்கள். உமது புத்ரன் குதிரையின் மேல்ஏறிக்கொண்டு ஸஹதேவனை எதிர்த்தான். அரசரே! பிறகு, உம்

முடையபுத்ரன் முயற்சியுடனே ஸஹதேவனுடைய தலையில் விரைவாகப் பிராஸத்தினால் அடித்தான். உம்முடைய புத்ரனால் அடிக்கப்பட்ட அந்த ஸஹதேவன் ரத்தத்தால் எல்லா அங்கங்களும் நனைக்கப்பட்ட ஸர்ப்பம்போலச் சீறிக்கொண்டு ரதமத்தியில் உட்கார்ந்தான். பிரஜாநாதரே! பிறகு, ஸஹதேவன் பிரஜ்ஞையையடைந்து அதிக கோபம்கொண்டவனாகத் துர்யோதனன்மீது கூர்மையான அம்புகளை மிகுதியாகப்பொழிந்தான். குந்தியின் புதல்வனும் தனஞ்சயனுமான அர்ஜுனனும் யுத்தத்தில் வல்லமையை வெளியிட்டுக் குதிரைகளின் முதுகுகளினின்று சூரர்களுடைய தலைகளை அறுத்தான். பார்த்தன் அப்பொழுது அந்தப்படையை அநேகபாணங்களால்நாசஞ்செய்தான்; எல்லாக்குதிரைகளையும் கீழேவிழும்படிசெய்து திரிகர்த்தவீரர்களுடைய ரதங்களைநோக்கிச் சென்றான். பிறகு, மஹாரதர்களான அந்தத் திரிகர்த்தவீரர்கள் ஒன்றுசேர்ந்தவர்களாகி அர்ஜுனன்மீதும் வாஸுதேவர்மீதும் சரமாரிகளை இறைத்தார்கள். மிக்கபுகழுள்ளவனான பாண்டுநந்தனன் ஒரு க்ஷுரப்ரத்தினால் ஸத்யகர்மாவை அடித்து, பிறகு, அவனுடைய ரதத்தினது மூக்கணையை வெட்டினான். பிரபுவே! மிக்க புகழுள்ளவனான அர்ஜுனன், சாணையில் தீட்டப்பட்ட ஒரு க்ஷுரப்ரத்தினால் ஸத்யகர்மாவினுடைய பிரகாசமுள்ள குண்டலங்களை அணிந்த தலையை விரைவாகவெட்டினான். அரசரே! பிறகு, பசியுடனிருக்கின்ற ஒருஸிம்மமானது காட்டில் மானை எவ்வாறு கவர்ந்துகொள்ளுமோ அவ்வாறே யுத்தவீரர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே ஸத்யேஷுவைக் கவர்ந்துகொண்டான். பிறகு, பார்த்தன் அந்தஸுசர்மாவை மூன்று பாணங்களால் அடித்து ஸ்வர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்ற அந்த எல்லாரதங்களையும் அடித்து நாசஞ்செய்தான். பிறகு, அவன் விரைபவனாகி நெடுங்காலமாக நன்குமறைத்துவைக்கப்பட்டிருந்த கடுமையான கோபமாகிறவிஷத்தை வெளியில் கக்கிக்கொண்டு ப்ரஸ்தலாதிபதியான ஸுசர்மாவை நோக்கிச் சென்றான். பாரதர்களுள் சிறந்தவரே! அர்ஜுனன் அந்தப்ரஸ்தலாதிபதியை நூறுபாணங்களால் நிரப்பிப் பிறகு வில்லாளியான அவனுடையகுதிரைகளை அடித்தான். பிறகு, பார்த்தன் யமதண்டத்திற்கு ஒப்பான ஓர் அம்பை அப்பொழுது எடுத்துச் சிரித்துக்கொண்டு ஸுசர்மாவைக் குறித்து விரைவாகப்பிரயோகித்தான். வில்லாளியும் கடுஞ்சினத்தினால் ஜ்வலிக்கின்றவனுமான அந்த அர்ஜுனனால் தொடுக்கப்பட்ட அந்தஅம்பானது யுத்தத்தில் ஸுசர்மாவைஅடைந்து மார்பைப்

பிளந்தது. மஹாராஜரே! அவன் உயிர்துறந்து எல்லாப்பாண்டவர்களையும் ஸந்தோஷிக்கச்செய்துகொண்டும் உம்மைச்சேர்ந்தவர்களைத் துன்பமுறும்படி செய்துகொண்டும் பூமியில்வீழ்ந்தான். அர்ஜுனன் ஸுசர்மாவை யுத்தத்தில்கொன்று மஹாரதர்களான அவனுடைய குமாரர்கள் எழுவரையும் எண்மரையும் முப்பதின்மரையும் அம்புகளால் நாசஞ்செய்தான். பிறகு, மஹாரதனான அர்ஜுனன், ஸுசர்மாவுடன் வந்திருக்கின்ற காலாட்களனைவரையும் கூர்மையுள்ளபாணங்களால் கொன்று, கொல்லப்பட்டதுபோக மிகுந்திருக்கின்ற பாரதசேனையை எதிர்த்துச்சென்றான். அரசரே! பீமனோ யுத்தத்தில் கோபமுற்றுச் சிரித்துக்கொண்டே உமது புத்ரனான ஸுதர்சனனைப் பாணங்களால் கண்ணிற்குப்புலப்படாமலிருக்கும்படிசெய்தான். பிறகு, அட்டஹாஸத்துடன்கூடியவனும் கோபமுள்ளவனுமான பீமன் அவனுடையதலையை உடலிலிருந்து அறுத்தான். அந்தஸுதர்சனன் மிக்ககூர்மையுள்ள ஒருக்ஷுரப்ரத்தினால் அடிக்கப்பட்டுப் பூமியில்விழுந்தான். அந்தவீரன் கொல்லப்பட்டவுடனே, அவனுடன்வந்திருந்த அவனுடையகாலாட்கள் பற்பல அம்புகளை இறைத்துக்கொண்டு யுத்தத்தில் பீமனைச் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு, வ்ருகோதரன் இந்திரனுடைய வஜ்ராயுதத்திற்கும் இடிக்கும் ஸமமாகத் தாக்குகின்ற கூர்மையுள்ளபாணங்களை உம்முடையபடையின்மீது நாற்புறத்திலும் இறைத்தான். பரதர்களுள்சிறந்தவரே! பிறகு, பீமன் ஒருக்ஷணத்திற்குள் அதனைநாசம் செய்தான். பாரதரே! அவைகள் நாசம்பண்ணப்படும்பொழுது, மஹாரதர்களான ஸேனாபதிகள் பீமஸேனனைஎதிர்த்துப் போர்புரிந்தார்கள். அந்தப்பாண்டவன் அவர்களனைவர்கள்மீதும் கோரமான பாணங்களை இறைத்தான். வேந்தரே! அவ்வாறே உம்மைச்சேர்ந்தவர்களும், மஹாரதர்களான பாண்டவவீரர்களை நாற்பக்கத்திலும் பெரியஅம்புமழையுடன் சூழ்ந்துநின்றார்கள். சத்ருக்களுடன் யுத்தம்செய்ய விருப்பமுள்ள பாண்டவர்களுடையவையும் யுத்தத்தில் பாண்டவவீரர்களுடன் போர்புரியவிருப்பமுள்ள உம்மைச்சேர்ந்த வீரர்களுடையவையுமான அந்தச் சேனைகளெல்லாம் மனக்குழப்பமுற்றிருந்தன. மன்னரே! இரண்டுசேனைகளிலும் அப்பொழுது அந்தயுத்தரங்கத்தில் ஒருவராலொருவர் அடிக்கப்பட்டவர்களான யுத்தவீரர்கள் பந்துக்களைப்பற்றித் துக்கித்துக்கொண்டு கீழே விழுந்தார்கள்.

---

## இருபத்தேழாவது அத்யாயம்.

## சல்யவதபர்வம். (தொடர்ச்சி.)



(ஸஹதேவன் சகுனியையும் உலூகனையும் கொன்றது.)

அரசரே! யானைகளுக்கும், குதிரைகளுக்கும், மனிதர்களுக்கும் அழிவையுண்டுபண்ணுகின்ற அந்த யுத்தமானது நடந்துவருகையில், ஸுபலனுடைய குமாரனான சகுனி ஸஹதேவனை எதிர்த்தான். பிறகு, பிரதாபசாலியான ஸஹதேவன், விரைவாக எதிர்த்துவருகின்ற அந்தச் சகுனியின்மீது சீக்கிரமாகச் செல்லுகின்ற விட்டில்கள்போன்ற பாணஸமூகங்களைப் பிரயோகித்தான். வேந்தரே! ஸஹதேவன் யுத்தத்தில் உலூகனைப் பத்துப்பாணங்களால் அடித்தான். மஹாராஜரே! சகுனியும் பீமனை மூன்றுபாணங்களால் அடித்துக் கூர்மையுள்ளதொண்ணூறுபாணங்களைஸஹதேவன்மீதுஇறைத்தான். அரசரே! அந்தச்சூரர்கள் யுத்தத்தில் ஒருவரையொருவர் எதிர்த்துக் கூர்மையுள்ளவைகளும், கழுகிறகுகளால் வேகமுள்ளவைகளாகச்செய்யப்பட்டவைகளும், தங்கக்கட்டுக்களுள்ளவைகளும், சாணைக்கல்லில் தீட்டப்பட்டவைகளும், காதுவரையில்இழுத்துவிடப்பட்டவைகளுமான பாணங்களால் அடித்தார்கள். பிரஜாநாதரே! அவர்களுடைய விற்களிலுள்ள நாண்கயிறுகளால் விடப்பட்ட சரமாரியானது, திசைகளை மேகம் நீர்த்தாரைகளால் மறைப்பதுபோல எல்லாத்திசைகளையும் மறைத்தது. பாரதரே! பிறகு, அதிகபலசாலிகளான பீமனும் ஸஹதேவனும் யுத்தகளத்தில் கோபங்கொண்டவர்களாகித் துன்பத்தை உண்டுபண்ணிக்கொண்டு யுத்தத்தில் ஸஞ்சரித்தார்கள். பரதகுலத்திலுதித்தவரே! அவ்விருவர்களாலும் அனேகபாணங்களால் மூடப்பட்ட உம்முடைய அந்தச்சேனையானது ஆங்காங்கு அந்தகாரத்துடன்கூடின ஆகாயம்போலாகியது. அரசரே! நாற்புறங்களிலும் விரைவாக ஓடுகின்றவைகளும் அம்புகளால் மூடப்பட்டவைகளும் கொல்லப்பட்ட அனேகவீரர்களை இழுத்துச்செல்லுகின்றவைகளுமான குதிரைகளால் அந்த அந்த இடத்தில் வழி உண்டுபண்ணப்பட்டது. பெரியவரே! வீரர்களுடன்கூடவே கொல்லப்பட்டிருக்கிற குதிரைகளுடைய உடைக்கப்பட்ட கவசங்களாலும் வெட்டப்பட்ட ஈட்டிகளாலும் ரிஷ்டிகளாலும் கத்திகளாலும் ப்ராஸங்களாலும் கோடாலிகளாலும் சக்திகளாலும் மூடப்பட்ட பூமியானது புஷ்பங்களால் மூடப்பட்டது

போலப் பற்பல வர்ணமுள்ளதாயிற்று. மஹாராஜரே! அந்த யுத்தத்தில் போர்வீரர்கள் கோபத்துடன் ஒருவரையொருவர் எதிர்த்துப் பரஸ்பரம் அடித்துக்கொண்டு ஸஞ்சரித்தார்கள். மஹாராஜரே! புரட்டிவிழிக்கப்பட்ட கண்களுள்ளவைகளும் ரோஷத்தினால் உதடுகளை நன்றாகக்கடித்திருப்பவைகளும் குண்டலங்களுடன்கூடியவைகளும் தாமரைமலர்களின் தாதுக்களுக்கு ஸமமாயிருப்பவைகளுமான முகங்களாலும், அறுக்கப்பட்டவைகளும் சிறந்தயானையினுடைய துதிக்கைபோன்றவைகளும் தோள்வளைகளோடும் கவசங்களோடும் கத்திகளோடும் ஈட்டிகளோடும் கோடாலிகளோடும்கூடியவைகளுமான புஜங்களாலும் யுத்தபூமி மூடப்பட்டது. பிரபுவே! யுத்தத்தில் அறுக்கப்பட்டவையும் எழுந்திருந்து கூத்தாடுகின்றவையுமான வேறு சில தலையில்லாமுண்டங்களால் ரணபூமியானது இறைச்சிதின்னும் பிராணிகளுடைய கூட்டங்களால் மறைக்கப்பட்டதும் அச்சத்தை விளைப்பதுமாகியது. மஹாயுத்தத்தில் சேனை சிறிது மிகுந்திருக்கவே, பாண்டவர்கள் மகிழ்ச்சியடைந்து கௌரவ வீரர்களை யமனுடையவீட்டுக்கு அனுப்பினார்கள். இச்சமயத்தில் பிரதாபசாலியும் சூரனுமான சகுனி ப்ராஸத்தினால் ஸஹதேவனுடைய தலையில் நன்றாக அடித்தான். மஹாராஜரே! அவன் நிலைகுலைந்து ரதத்தின் மத்தியில் உட்கார்ந்தான். பாரதரே! பிரதாபசாலியான பீமஸேனன், ஸஹதேவன் அவ்விதநிலைமையில்இருப்பதைக்கண்டு அதிக கோபங்கொண்டு எல்லா ஸைன்யங்களையும் தடுத்தான். பகைவர்களைஅடக்குகிறவனான அந்தப் பீமஸேனன் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் நாராசங்களால் (அவைகளைப்) பிளந்தான்; பிளந்து, ஸிம்மநாதத்தையும் செய்தான். அந்தச்சப்தத்தினால் நடுக்கமடைந்தவர்களும் குதிரைகளையும் யானைகளையுமுடையவர்களுமான சகுனியினுடைய உதவிவீரர்களனைவர்களும், உடனேபயந்துஓடினார்கள். அந்தஸைனிகர்கள் சிதற அடிக்கப்பட்டதைக்கண்டு அரசனான துர்யோதனன், 'தர்மங்களை அறியாதவர்களே! திரும்புங்கள்; யுத்தம்செய்யுங்கள். ஓடுவதினால் உங்களுக்கு யாது பயன்? எவன் தைர்யமுள்ளவனாக யுத்தத்தில் புறங்காட்டாமல் பிராணனை விடுகிறானோ அவன் இந்தஉலகத்தில் கீர்த்தியைப்பெற்று மரித்தும் நல்லஉலகங்களை அடைகிறான்' என்று கூறினான். அரசனால் இவ்வாறுசொல்லப்பட்ட அந்தச்சகுனியின் உதவிவீரர்கள், மரணம் நிச்சயமாயிருப்பதாக எண்ணிப் பாண்டவர்களை எதிர்த்தார்கள். ராஜேந்திரரே! அந்தயுத்தத்தில் எல்லாத்திக்குக்களிலும் கலக்கப்பட்ட

கடல்போல நிலைதவறிஓடுகின்ற வீரர்களால் அதிபயங்கரமான சப்தம் உண்டுபண்ணப்பட்டது. மஹாராஜரே ! பிறகு, அந்தச்சகுனியினுடைய படைவீரர்களை எதிரிற்கண்டு பாண்டவர்கள் விஜயத்தில் முயற்சியுள்ளவர்களாக எதிர்த்தார்கள். அரசரே ! (பகைவர்களால்) வெல்லமுடியாதவனான ஸஹதேவன் மறுபடியும் தேறுதலடைந்து சகுனியைப்பத்துப்பாணங்களாலும் அவனுடையகுதிரைகளைமூன்று பாணங்களாலும்அடித்துச்சிரித்துக்கொண்டு சகுனியினுடையவில்லையும் பாணங்களால் வெட்டினான். பிறகு, யுத்தத்தில் கெட்டமதங்கொண்ட சகுனி வேறுவில்லை எடுத்து நகுலனை அறுபதுபாணங்களாலும் பீமனை ஏழுபாணங்களாலும் அடித்தான். மஹாராஜரே ! உலூகனும் யுத்தத்தில் பிதாவைப்பாதுகாக்க எண்ணிப் பீமனை ஏழுபாணங்களாலும் ஸஹதேவனை எழுபதுபாணங்களாலும் அடித்தான். பீமஸேனன் அந்தஉலூகனை யுத்தத்தில் ஒன்பது பாணங்களாலும் சகுனியை அறுபத்துநான்குபாணங்களாலும் பக்கத்திலிருப்பவர்களை மும்மூன்றுபாணங்களாலும் அடித்தான். பீமனால் எண்ணெயிட்டுத்தீட்டப்பட்ட நாராசங்களால் அடிக்கப்படுகின்ற அந்தவீரர்கள் கோபங்கொண்டு, மின்னலுடன்கூடின மேகங்கள் நீர்த்தாரைகளால் பர்வதத்தை மூடுவதுபோல் யுத்தத்தில் ஸஹதேவனைச் சரமாரிகளால் மூடினார்கள். மஹாராஜரே ! பிறகு, சூரனும் பிரதாபசாலியுமான ஸஹதேவன் எதிர்த்துவருகின்றஉலூகனுடைய தலையை ஒருபல்லத்தினால் கவர்ந்தான். அந்த உலூகன் ஸஹதேவனால் (கீழே) தள்ளப்பட்டு, ரக்தத்தினால் நாற்புறத்திலும் நனைக்கப்பட்ட எல்லாஅங்கங்களுடனும் கூடியவனாக யுத்தத்தில் பாண்டவர்களை மகிழ்வித்துக்கொண்டு ரதத்தினின்று பூமியைஅடைந்தான். அந்தயுத்தத்தில் புத்திரன் கொல்லப்பட்டதைக்கண்டு சகுனி கண்ணீரோடுகூடிய குரலுள்ளவனாகப் பெருமூச்சுவிட்டு விதுரருடைய சொல்லை நினைத்துக்கொண்டு ஒருமுகூர்த்தகாலம் ஆலோசித்துக் கண்களில் நீர்ததும்பப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு ஸஹதேவனை எதிர்த்து மூன்றுபாணங்களால் அடித்தான். மஹாராஜரே ! பிரதாபசாலியான ஸஹதேவன் சகுனியினால்விடப்பட்ட அந்தப்பாணங்களைப் பாணஸமூகங்களால்விலக்கி யுத்தத்தில் (அவனுடைய)வில்லையுந்துண்டாக்கினான். ராஜேந்திரரே ! வில்அறுக்கப்பட்டவுடனே, ஸுபலனுடைய புத்திரனான சகுனி அப்பொழுது பெரியகத்தியைஎடுத்து ஸஹதேவன்மீது பிரயோகித்தான். பிரஜைகளுக்கு நாதரே ! விரைவாக வருகின்றதும் கோரஸ்வரூபமுள்ளதுமான அந்தச்சகுனியினு

டைய கத்தியை ஸஹதேவன் யுத்தத்தில் நகைத்துக்கொண்டு இரண் டாகத்துண்டாக்கினன். கத்தி இரண்டாகத்துண்டாக்கப்பட்டதைக் கண்டு ஒருபெரிய கதாயுதத்தையெடுத்து ஸஹதேவன்மீது பிரயோ கித்தான். அதுவும் வீணாகிப் பூமியில்விழுந்தது. பிறகு, சகுனி அதிககோபங்கொண்டு அதிககோரரூபமுள்ளதும் தோன்றியிருக்கிற காலராத்திரிபோன்றதுமான ஒருசக்தியைப் பாண்டவன்மீது பிர யோகித்தான். யுத்தத்தில் விரைவாகவருகின்ற அந்தச்சக்தியை ஸஹதேவன் நகைத்துக்கொண்டே பொன்னாலலங்கரிக்கப்பட்ட பாணங்களால் மூன்றாகத் துண்டாக்கினன். பொன்னணிகளுடன் கூடிய அந்தச் சக்தியானது மூன்றாகத் துண்டாக்கப்பட்டு ஆகாயத் தினின்று சிதறி மின்னல்போல் ஜ்வலித்துக்கொண்டு பூமியில் விழுந் தது. துண்டாடப்பட்ட சக்தியையும் பயத்தினால் பீடிக்கப்பட்ட சகுனியையும் கண்டு பயமுண்டாகவே, சகுனியுடன் கூடினவர் களாக உம்மைச் சேர்ந்தவர்களனைவரும் ஓடினார்கள். பிறகு, ஜயத் தோடு விளங்குகின்ற பாண்டவர்களால் பெரிய ஆரவாரஞ்செய்யப் பட்டது. பிறகு, உம்மைச்சேர்ந்தவர்களனைவரும் பெரும்பான்மை யாகப் புறங்காட்டினவர்களானார்கள். பிரதாபசாலியான மாத்ரீபுத்தி ரன், அந்தத் தார்த்தராஷ்டிரர்கள் மனவருத்தமுற்றதைக் கண்டு, யுத்தத்தில் அனேக ஆயிரம்பாணங்களால் அவர்களை வேறுஇடம் போகவிடாமல் தடுத்தான். பிறகு, புஷ்டியுள்ள காந்தாரதேசத்துக் குதிரைப்படைகளால் காப்பாற்றப்பட்டவனும் ஜயத்தில்உறுதியுள்ள வனும் யுத்தரங்கத்தில் சென்றுகொண்டிருப்பவனுமான சகுனியை ஸஹதேவன் நெருங்கினன். அரசரே! ஸஹதேவன், அந்தச் சகுனி யை மிகுந்திருக்கிற அம்சமாகஎண்ணி உறுப்புக்கள் பொன்னா லமைக்கப்பெற்ற தேரோடு எதிர்த்துச் சென்றான். கோபங்கொண் டவனான அந்த ஸஹதேவன் சகுனியை எதிர்த்துச்சென்று மிக்க பெரிதான வில்லில் நாண்கயிற்றைப்பூட்டி உறுதியாக நாணொலி செய்துகொண்டு கழுகிறகுகள் பூண்டவைகளும் சாணையில் தீட்டப் பட்டவைகளுமான அம்புகளால் பெரியயானையைத் தோட்டிகளால் அடிப்பதுபோல அதிகமாக அடித்தான். மேதாவியான ஸஹதேவன் நினைக்கும்படி செய்கின்றவன்போல அந்தச்சகுனியைப் பார்த்து, 'க்ஷத்திரியதர்மத்தில் நிலைபெற்று யுத்தஞ்செய். ஆண்பிள்ளையா யிரு. ஏ! மூட! கெட்டபுத்தியுள்ளவனே! ஸபையில்பாச்சிகைகளைக் கையில் எடுத்துக்கொண்டு அப்பொழுது பேசினையன்றோ? அந்தச் செய்கையின் பயனை இப்பொழுது அடைவாயாக. எவர்கள்

முற்காலத்தில் எங்களைப் பார்த்துப் பரிஹஸித்தார்களோ அந்தத் துராத்மாக்கள் கொல்லப்பட்டார்கள். குலத்துக்குக் கொள்ளி யான துர்யோதனனும் அவனுக்கு மாதுலனான நீயும் மிகுந் திருக்கிறீர்கள். நன்றாக அடிக்கக்கூடிய தடியினால் பழத்தை மரத்தினின்று அடித்துத் தள்ளுவதுபோல க்ஷுரத்தினால் உன் தலையை இப்பொழுது அறுத்துக் கீழே தள்ளப்போகிறேன்' என்று நிந்தித்துக் கூறினான். மஹாராஜரே! மஹாபலசாலியும் யுத் தத்தில் திறமைவாய்ந்தவனுமான ஸஹதேவன் இவ்வாறுசொல்லி விட்டு அதிகக்ரோதமுள்ளவனாக வேகத்தோடு அவனை எதிர்த்துச் சென்றான். பகைவர்களால் எவ்விதத்தினாலும், அவமதிக்கத்தகாதவ னும் யுத்தவீரர்களுக்குத் தலைவனுமான ஸஹதேவன் எதிர்த்துச் சென்று வில்லைத் திடமாக இழுத்துக் குரோதத்தினால் மிகவிளங்கிக் கொண்டு சகுனியைப் பத்துப்பாணங்களாலும் அவனுடைய குதிரை களை நான்கு பாணங்களாலும் அடித்து, குடையையும் கொடியையும் வில்லையும்வெட்டி, ஸிம்மம்போலக் கர்ஜித்தான். ஸஹதேவனால் கொடியும் வில்லும் குடையும் அறுக்கப்பட்டசகுனி, அனேகபாணங் களால் எல்லாமர்மஸ்தானங்களிலும் அடிக்கப்பட்டவனாகச் செய்யப் பட்டான். மஹாராஜரே! பிறகு, ப்ரதாபசாலியான ஸஹதேவன் மறுபடியும் அணுகமுடியாத சரமாரியைச் சகுனியின்மீது பிரயோ கித்தான். பிறகு, கோபங்கொண்ட ஸுபலனுடையபுத்திரனான சகுனி யுத்தத்தில் மாத்ரீபுத்திரனான ஸஹதேவனைப் பொன்னணியணிந்த பிராஸத்தினால் கொல்லஎண்ணி ஒருவனாகவே சீக்கிரமாக எதிர்த் தான். மாத்ரீபுத்ரன் உயர எடுக்கப்பட்ட அவனுடைய அந்தப்ராஸத் தையும் மிகஉருட்சியாயுள்ள இருகைகளையும் யுத்தமுனையில் மூன்று பல்லங்களால் ஒரேஸமயத்தில் அறுத்து யுத்தமத்தியில் விரைவாக உரக்கக்கர்ஜித்தான். பிறகு, சுறுசுறுப்பாகக் கார்யங்களைச்செய்பவ னான ஸஹதேவன் அவதானத்துடன் பிரயோகிக்கப்பட்டதும் பொற் கட்டுக்களமைந்ததும் திடமானஉருக்கினால்செய்யப்பட்டதும்கவசங் களையெல்லாம் உடைத்து அப்புறம் செல்லுகின்றதுமான ஒருபல்ல த்தினால் அவனுடைய தலையைச் சரீரத்தினின்று அறுத்தான். ஸுபல னுடைய புத்திரனானசகுனி யுத்தத்தில் பாண்டவனால் நன்கு எய்யப் பட்டதும் ஸ்வர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்டதும் ஸூர்யன்போலப் பிரகாசிக்கின்றதுமான ஒருபாணத்தினால் தலைஅறுக்கப்பட்டுப் பூமி யில்விழுந்தான். கோபங்கொண்ட அந்தப் பாண்டுநந்தனன் கௌரவர் களுடைய அநியாயத்திற்கு எது மூலமோ அந்தச்சகுனியினுடைய

தலையை வேகமுள்ளதும் தங்கக்கட்டுக்களுள்ளதும் சாணையில் தீட்டப்பட்டதுமான ஒரு பாணத்தினல் அறுத்தெறிந்தான். வீரனை ஸஹதேவன், நன்ருக உருண்டவடிவமுள்ள இருகைகளையும் அறுத்தான். அரசரே! பிறகு, இரத்தத்தினல் நனைக்கப்பட்டதும் மிகமுக்க முற்றதும் கோரரூபமுள்ளதுமான காந்தாரராஜனுடைய தலையானது உத்தமமான ரதத்தினின்று கீழேவிழுந்தது. தலை அறுக்கப்பட்டவனும் பூமியில்படுத்திருப்பவனும் உதிரத்தினல் நனைக்கப்பட்ட சரீரத்தையுடையவனுமான சகுனியைப்பார்த்து உம்மைச்சேர்ந்த யுத்தவீரர்கள் பயத்தினல் பலம்போனவர்களாகி, ஆயுதங்களைப் பிடித்தவர்களாயிருந்தும் திக்குக்களில் ஓடினர்கள். முறிய அடிக்கப்பட்ட ரதிகர்களும் குதிரைகளும் யானைகளும் காலாட்களும், கௌரவர்களோடுகூடி வாய் வறண்டவர்களாகவும் பிரஜ்ஞையற்றவர்களாகவும் காண்டீவத்தினது சத்தத்தினல் நன்ருக அடிக்கப்பட்டவர்களாகவும் பயத்தினல் பீடிக்கப்பட்டவர்களாகவும் ஓடினர்கள். பாரதரே! பிறகு, யுத்தத்தில் அதிக ஸந்தோஷமுள்ளவர்களான கேசவருடன்கூடின பாண்டவவீரர்கள் ரதத்தினின்று சகுனியை விழும்படி செய்து உத்ஸாஹத்துடன் ஸைனிகர்களை ஸந்தோஷிக்கச்செய்துகொண்டு சங்கங்களை முழக்கினர்கள். யுத்தத்தில் அந்த ஸஹதேவனைக்கண்டு அனைவர்களும், 'வீர! வஞ்சனைசெய்கின்றவனும் மஹாபலசாலியுமான சகுனி புத்திரனுடன் யுத்தத்தில் உன்னல் பாக்கியத்தினல் கொல்லப்பட்டான்' என்று சொல்லிப் புகழ்ந்தார்கள்.

**சல்யவதபர்வம் முற்றிற்று.**

---

## இருபத்தெட்டாவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம்.



(மிகுந்திருக்கிற ஸேனையையும் பாண்டவர்கள் கொன்றதும், துர்யோதனன் ஓடநிச்சயித்ததும்.)

மஹாராஜரே! பிறகு, சகுனியை அனுஸரித்து வந்திருக்கிற வீரர்கள், கோபங்கொண்டவர்களாக யுத்தத்தில் உயிரைவிடத் துணிந்து பாண்டவர்களைச் சூழ்ந்துகொண்டார்கள். ஸஹதேவனுடைய ஜயத்தில் முயற்சியுள்ள அர்ஜுனனும், தேஜஸ்வியும் கோபமுள்ள ஸர்ப்பம்போன்ற காட்சியுள்ளவனுமான பீமஸேனனும், அவர்களை

எதிர்த்தார்கள். தனஞ்சயன், சக்திகளையும் ரிஷ்டிகளையும் ப்ராஸங்களையும் கையில் கொண்டவர்களும் ஸஹதேவனைக் கொல்ல எண்ணங் கொண்டவர்களுமான அவர்களுடைய எண்ணத்தைக் காண்டீவத்தினால் வீணாகச் செய்தான். அவன், எதிர்த்து ஓடிவருகின்ற யுத்தவீரர்களுடைய ஆயுதங்களைப்பிடித்த கைகளையும் தலைகளையும் குதிரைகளையும் பல்லங்களால் அறுத்தான். ஸஞ்சரிக்கின்றவனும் உலகத்தில் ஒப்பற்ற வீரனுமான ஸவ்யஸாசியினால் அடிக்கப்பட்ட அந்தக்குதிரைகள் உயிரை இழந்து பூமியில் விழுந்தன. பிறகு, உம்முடையபுத்திரனான துர்யோதனராஜன் தன்னுடைய சேனையின் நாசத்தைக்கண்டு, கோபமூண்டு, கொல்லப்பட்டவைகள் போக மிகுந்திருக்கிற அனேக ரதக்கூட்டங்களையும் யானைகளையும் குதிரைகளையும் நாற்புறங்களிலுமிருக்கிற காலாட்களையும் ஒன்று சேர்ந்துத் துக்கத்தில் அமிழ்ந்தவர்களான அனைவர்களையும் பார்த்து இந்த வார்த்தையை உரைக்கலானான். 'ஸ்நேஹிதருத்துக்களுடைய கூட்டத்துடன் கூடின எல்லாப் பாண்டவர்களையும் நாசஞ்செய்து சேனையுடன்கூடின பாஞ்சால ராஜகுமாரனான திருஷ்டத்யும்னனையும் யுத்தத்தில் அணுகி எதிர்த்துக்கொன்று சீக்கிரமாகத் திரும்புங்கள்' என்றான். யுத்தத்தில் அடங்காதமதங்கொண்டவர்களான அவர்கள் உமது புத்ரனுடைய வசனத்தைத் தலையினால் ஏற்றுக்கொண்டு அவனுடைய கட்டளையினால் யுத்தத்தில் பார்த்தர்களை எதிர்த்தார்கள். பாண்டவர்கள் பெரும்போரில் விரைவாக எதிர்த்துவருகின்றவர்களும் கொல்லப்பட்டவர்கள்போக மிகுந்திருப்பவர்களுமான அவர்களின்மீது ஸர்ப்பம்போன்ற பாணங்களை இறைத்தார்கள். பரதர்களுள் சிறந்தவரே! அந்தச்சேனையானது யுத்தத்தையடைந்து மஹாபலசாலிகளால் ஒரு முகூர்த்தகாலத்தில் வதஞ்செய்யப்பட்டது; ரக்ஷகனை அடையவில்லை. கவசம்பூண்ட அந்தச்சேனையானது பயத்தினால் ஓடுவதாகி நிலைபெறவில்லை. நான்குபக்கங்களிலும் ஓடுகின்ற குதிரைகளால் சேனையில் உண்டுபண்ணப்பட்ட புழுதியினால் யுத்தரங்கமானது மூடப்பட்டிருக்குந்தருணத்தில், யுத்தத்தில் திக்குக்களாவது திக்குக்கோணங்களாவது அறியப்படவில்லை. பாரதரே! பிறகு, அநேக ஜனங்கள் பாண்டவர்களுடைய சேனையினின்று புறப்பட்டு யுத்தத்தில் உம்மைச் சேர்ந்தவர்களை ஒருமுகூர்த்த காலத்திற்குள் எதிர்த்து அடித்தார்கள். பாரதரே! பிறகு, உம்முடைய அந்தச் சேனையானது மிகுதி இல்லாததாகியது. பாரதரே! பிரபுவே! ஒன்றுகூடியிருக்கிற உமது புத்திரனுடைய அப்படிப்பட்ட பதினோர்அக்ஷௌஹிணிகள்

பாண்டவர்களாலும் ஸ்ருஞ்சயர்களாலும் யுத்தத்தில் கொல்லப்பட்டன. அரசரே! மஹாத்மாக்களான உம்மைச்சேர்ந்த அந்த அனேக அரசர்களில் மிகவும் காயப்படுத்தப்பட்டவனை துரியோதனன் ஒருவனே காணப்பட்டான். மஹாராஜரே! பிறகு, எல்லா யுத்தவீரர்களாலும் விடுபட்டவனும் சேனைகளையும் வாகனங்களையும் இழந்தவனுமான துர்யோதனன், எல்லாத்திசைகளையும் சூன்யமான பூமியையும் கண்டும், யுத்தத்தில் ஸந்தோஷமுள்ளவர்களும் எல்லாவிதத்தினுலும் ஸித்திபெற்றவர்களும் எல்லாப் பக்கங்களிலும் கர்ஜிக்கின்றவர்களுமான பாண்டவர்களைப் பார்த்தும், மஹாத்மாக்களான அந்தப் பாண்டவ வீரர்களுடைய பாணசப்தத்தினுலுண்டான பேரொலிகளையும் கேட்டும் மதிமயக்கமடைந்து ஓடுவதில் எண்ணங்கொண்டான்" என்று கூறினன்.

---

## இருபத்தோன்பதாவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



(பாண்டவர்களால் ஸஹாயர்கள் கொல்லப்பட்ட துர்யோதனன் கதாயுதத்தை எடுத்துக்கொண்டு மடுவுக்குச்சென்றதும், ஸஞ்சயனைக் கொல்ல முயன்ற ஸாத்யகியை வியாஸர் தடுத்ததும், துரியோதனன் ஸஞ்சயன் வழியாகத் தந்தைக்குச் செய்தி அனுப்பி மடுவிலிறங்கி ஜலஸ்தம்பனம் செய்ததும், அஶ்வத்தாமாமுதலியோர் துரியோதனன் மடுவிலிறங்கியதுகேட்டுப் புலம்பிப் பாசறைக்கு மீண்டதும், வேலைக்காரர்கள் முதலியவர்களும் யுயுத்ஸுவும் ராஜபத்னிகளை நகருக்கழைத்துச் சென்றதும்.)

திருதராஷ்டிரன், "ஸூத! என்னுடைய சேனையானது கொல்லப்பட்டுப் பாசறையானது மிச்சமில்லாததாகச் செய்யப்பட்டபொழுது பாண்டவர்களுடைய சேனையில் எது மிகுதிஇருந்தது? ஸஞ்சய! நீ ஸமர்த்தனன்றோ? வினவுகின்ற எனக்கு இதனைச்சொல்வாயாக. கர்வமுள்ளவனும் பூமிக்கு நாதனும் ஸஹாயமில்லாதவனும் என் குமாரனுமான அந்தத்துர்யோதனன் அப்படிப்பட்ட சேனையின் நாசத்தைக்கண்டு என்னசெய்தானென்பதையும் எனக்குஉரைப்பாயாக" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானன்.

"அரசரே! யுத்தத்தில் த்ருஷ்டத்யும்னன் எந்தப்பாண்டவர்களுடைய பெரும்படையை அடைந்து ஸன்னத்தனாக நின்றானே

அந்தப்படையில் இரண்டாயிரம்ரதங்களும் எழுநூறுயானைகளும் ஐயாயிரம்குதிரைகளும் பதினாயிரம்காலாட்களும் மிகுந்திருந்தன. பரதர்களுள் சிறந்தவரே! பிறகு, ரதிகர்களுள்சிறந்தவனும் ஏகாகியும் அரசனுமான துர்யோதனன், யுத்தத்தில் உதவியாயிருப்பவன் ஒருவனையும் காணவில்லை. பரதர்களுள்சிறந்தவனான அவன் தன்னுடையசேனை அழிந்ததையும் பகைவர்கள் கர்ஜிக்கின்றதையும் கண்டு மதிமயக்கத்தால் நன்கு கவரப்பட்டவனானான்; கொல்லப்பட்ட தன்னுடைய குதிரையைவிட்டுப்பயந்து கீழ்த்திசையைநோக்கி ஓடினான். பதினோர் அக்ஷௌஹிணிசேனைக்கு நாதனாக இருந்தவனும் பராக்ரமமுள்ளவனும் உம்முடைய குமாரனுமான துர்யோதனன் கதாயுதத்தை எடுத்துக்கொண்டு காலால்நடந்து ஒரு மடுவைக்குறித்துப் புறப்பட்டான். பிறகு, துர்யோதனராஜன் கால்களாலேயே சிறிதுதூரம் சென்று தார்மிகரும் புத்திசாலியுமான விதுரருடைய வசனத்தை நினைத்தான். பேரறிவாளரான விதுரர் நமக்கும் எல்லா க்ஷத்திரியர்களுக்கும் நேர்ந்திருக்கிற இந்தப் பெரியவிசனத்தை நிச்சயமாக முந்தியே கண்டறிந்தார். அரசரே! சேனையின் நாசத்தைக்கண்டு துக்கத்தினால் மனம் மிகவாட்டப்பட்டவனும் அரசனுமான துரியோதனன் பதினோர்அக்ஷௌகிணிசேனைக்கு நாதனாயிருந்தும் இப்பொழுது இவ்வாறு சிந்தையுள்ளவனாகவும் மடுவில்பிரவேசிக்க எண்ணங்கொண்டவனாகவும் மிக்கவிசனத்தை அடைந்தான். தெய்வமானது அதிகபலமுள்ளதன்றோ? மஹாராஜரே! திருஷ்டத்யும்னனை முன் செல்பவனாகக்கொண்ட பாண்டவர்களோ மிக்ககோபமுற்றவர்களாக உமதுபடையைநோக்கி எதிர்த்து விரைவாகச்சென்றார்கள். சக்திகளையும் ரிஷ்டிகளையும் ஈட்டிகளையும் கையிற்கொண்டவைகளும் நேரில் கர்ஜிக்கின்றவைகளுமான சேனைகளுடைய எண்ணத்தை அர்ஜுனன் காண்டீவத்தினால் வீணாகச்செய்தான். மந்திரிகளோடும் உறவினர்களோடும்கூடின அந்தப்படைகளைக் கூர்மையுள்ளபாணங்களால் கொன்று, வெண்ணிறமுள்ள குதிரைகள் பூட்டிய ரதத்திலிருந்துகொண்டு அர்ஜுனன் மிகவிளங்கினான். குதிரைகளோடும் ரதங்களோடும் யானைகளோடுஞ் சகுனிகொல்லப்பட்டவுடன், உம்முடையபடையானது வெட்டப்பட்டபெருங்காடுபோலாயிற்று. அரசரே! துர்யோதனனுடைய அனேகலக்ஷக்கணக்கான படையில் வீரரான துரோணபுத்ரரையும் அவ்வாறே க்ருதவர்மாவையும் கௌதமகுமாரரான க்ருபரையும் அரசனான உமது குமாரனையும் தவிர வேறு ஒரு மஹாரதன் உயிரோடிருப்பவனாகக் காணப்பட

வில்லை. த்ருஷ்டத்யும்னனே என்னைப்பார்த்துச் சிரித்துக்கொண்டு ஸாத்யகியைநோக்கி, 'இவனைப்பிடிப்பதினால் யாதுபயன்? இவன் உயிரோடிருப்பதினால் பிரயோஜனமில்லை' என்றுகூறினான். த்ருஷ்டத்யும்னனுடைய வசனத்தைக்கேட்டு அப்பொழுது மஹாரதனான ஸாத்யகி கூர்மையானகத்தியைஎடுத்து என்னைக்கொல்வதற்குமுயன்றான். மஹாப்ராஜ்ஞரான ஸ்ரீ வ்யாஸர் அவனருகில்வந்து 'ஸஞ்சயனை உயிரோடு விட்டுவிடு; இவனை எவ்விதத்தினாலும் கொல்லலாகாது' என்றுசொன்னார். வியாஸருடையவசனத்தைக்கேட்டு, சினியின் பேரனான ஸாத்யகி என்னை விட்டுவிட்டு, பிறகு, கைகளைக்குவித்துக் கொண்டு, 'ஸஞ்சய! க்ஷேமமாகச்செல்' என்று சொன்னான். அரசரே! அவனால் அனுமதிகொடுக்கப்பட்ட நான் கவசத்தைக் கழற்றி வைத்து சஸ்திரத்தையிழந்து ரக்தத்தினால் நனைக்கப்பட்டு ஸாயங்காலத்தில் நகரத்தைக்குறித்துப் புறப்பட்டுவந்த அந்தவழியில், ஒருகுரோசதூரம் ஓடினவனும் கதையைக் கையில்பிடித்து நிற்பவனும் நன்றாக அடிக்கப்பட்டவனும் தனியாயிருப்பவனுமான துர்யோதனனைக் கண்டேன். அவன் கண்களில் நீர்ததும்ப என்னைப்பார்ப்பதற்குச் சக்தியற்றவனானான். அவ்விதம் தீனனாக இருக்கிறஎன்னைப் பார்த்துவிட்டுப் பக்கத்தில் பார்த்தான். துக்கிக்கின்றவனும் யுத்தத்தில் ஏகாகியாயிருப்பவனுமான அந்தத் துர்யோதனனைக்கண்டு நானும் அதிகதுக்கத்தினால் மூடப்பட்டவனாக ஒரு முகூர்த்தகாலம் பேசுவதற்குச் சக்தியற்றவனானேன். அரசரே! பூமிக்குநாதரே! எவனால் ஆயிரம் ரத்னங்களிழைத்த கிரீடங்களுடன்கூடியவர்களான பட்டாபிஷேகம்செய்யப்பெற்ற மன்னர்களிடமிருந்து கப்பம்முழுவதும் வாங்கப்பட்டுத் தன்அரண்மனையில் கொண்டுவரப்பட்டதோ, எவன்நிமித்தமாக முற்காலத்தில் கர்ணன் ஒருவனால் நான்குஸமுத்திரங்களையும் கடைசிஎல்லையாகக்கொண்டதும் ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டதுமான பூமியானது கப்பங்கொடுக்கும்படி செய்யப்பட்டதோ, எவனுடைய கட்டளையானது கர்ணனாலேயே அயல்நாடுகளில் பரவச்செய்யப்பட்டதோ, ஆணை செலுத்துபவனும் அரசனுமானஎவனுக்குச் சஸ்திரங்களில் சிரமம் உண்டாகவில்லையோ,எவன்ஹஸ்தினபட்டணத்திலிருந்துகொண்டே ஐசுவர்யத்தினால் குபேரனையும் மதிக்காமல் ராஜ்யத்தைக்ஷேமமாயும் பகைவர்களில்லாததாயும் பரிபாலித்துவந்தானோ, எவனுக்கு ஒரு மாளிகையினின்று மற்றொருமாளிகைக்குச்செல்வதற்கும்அவ்வாறே தேவாலயப்பிரதேசத்தில்செல்வதற்கும் வழியானது பொன்னாலமைக்

கப்பட்டிருந்ததோ, பூமிக்குஇறைவனுன எவனுடையபிரயாணகாலத்தில் தனிகர்களுடையவீடுகள் கொடித்துணிகளால் ஸூர்யகிரணங்கள் மறைக்கப்பெற்றனவும் உயரஎடுத்துக்கட்டப்பட்ட தோரணங்களால் பிரகாசிக்கின்றனவும் ஆயினவோ, * இந்திரனுக்கொப்பானவனும் பலசாலியுமான எந்தத்துர்யோதனன் ஐராவதத்துக்கு ஒப்பான சிறந்தயானையின்மீதேறிக்கொண்டு அளவற்றசெல்வத்தோடு செல்வானே, அந்தத்துரியோதனன் எல்லாஅங்கங்களும் மிகக்காயப்படுத்தப்பட்டுக் கால்களாலேயே தரையில் தனியாகநிற்பதைக்கண்டு எனக்கு அதிகமான வருத்தம்உண்டாயிற்று. பூமிக்குநாதரே! ஜகந்நாதனை இப்படிப்பட்ட அந்தத் துர்யோதனனுக்கும் இப்பொழுது நிகரில்லாத ஆபத்து உண்டாகிவிட்டது. விதியே மிகவலிதன்றோ? பிறகு, அப்பொழுது என்னைப்பிடித்தது, வியாஸருடையகிருபையினுல் உயிரோடு யுத்தத்தினின்று விடுதலடைந்தது, இவை எல்லாவற்றையும் அந்தத் துர்யோதனனிடம் நான் சொன்னேன். அவன் ஒரு முகூர்த்தகாலம்போல் ஆலோசித்துப் பின்பு தெளிவையடைந்து, பிறகு தன்னுடைய பிராதாக்களைப்பற்றியும் எல்லாச்சேனைகளைப் பற்றியும் என்னை வினவினுன். அஃது அனைத்தையும் நேரில்கண்டவனுன நான் எல்லாப்பிராதாக்களும் கொல்லப்பட்டார்களென்பதையும் சேனைமுழுதும் நாசஞ்செய்யப்பட்டதென்பதையும் அந்தத் துர்யோதனனுக்குச் சொன்னேன். அரசரே! கிருஷ்ணத்வைபாயனர் போருக்குப் புறப்பட்ட ஸமயத்தில் என்னைநோக்கி, ‘உன்னைச்சேர்ந்தவர்களில் மூன்று ரதிகர்கள்தாம் மிகுதியாக இருக்கப்போகிறுர்கள்’ என்று கூறினர். உம்முடைய புத்ரனுன அந்தத்துர்யோதனன் பெருமூச்சுவிட்டு அடிக்கடி ஆலோசித்து என்னைக்கையினுல்தொட்டுக் கூறலானுன். ‘ஸஞ்சய! இந்தயுத்தத்தில் உன்னைத்தவிர வேறு ஒருவன் உயிரோடிருக்கவில்லை. உன்னைத்தவிர இரண்டாமவனை இச்சமயத்தில் நான் காணவில்லை. பாண்டவர்கள் துணைவர்களுடன் சேர்ந்திருக்கின்றுர்கள். ஸஞ்சய! பிரபுவும் அறிவேகண்ணகவுடையவருமான திருதராஷ்டிரராஜரிடம், ‘உமது புத்திரனுன துர்யோதனன் மடுவில்பிரவேசித்துவிட்டான்’ என்று சொல். பாண்டவர்களால் ராஜ்யமானது கவர்ந்துகொள்ளப்பட்டிருக்கும் தருணத்தில், அப்படிப்பட்ட நண்பர்களாலும் புத்திரர்களாலும் பிராதாக்களாலும் விடப்பட்டவனுன என்னைப்போன்றவன் எவன்தான் உயிரோடிருப்பான்? மஹாயுத்தத்தினின்று நானும் விடுபட்டேனென்

* ஒருசொல் விடப்பட்டது.

பதையும் அதிகமாகக் காயப்படுத்தப்பட்டிருக்கின்ற நான் ஒருவருக்கும் தெரியாமல் தண்ணீர் நிறைந்த இந்தமடுவில் உயிரோடு மறைந்திருக்கிறேனென்பதையும் இந்த எல்லா விஷயங்களேயும் உரைப்பாயாக' என்றான். மஹாராஜரே! இவ்வாறு சொல்லிவிட்டு அந்தப்பெரிய மடுவில் பிரவேசித்தான். மனிதர்களுக்கு அதிபதியான துர்யோதனன் மாயையினால் ஜலத்தை ஸ்தம்பனம்செய்தான். அவன் மடுவில் பிரவேசித்தவுடன், ஒருவனான நான் அந்த இடத்துக்குவந்தவர்களும் களைத்த வாகனங்களுடன்கூடியவர்களும் பாணங்களால் காயப்படுத்தப்பட்டவர்களும் ஒன்றுசேர்ந்தவர்களுமான சரத்வானுடைய குமாரரும் வீரருமான கிருபர், ரதிகர்களுள் சிறந்தவரான அஸ்வத்தாமா, போஜனான கிருதவர்மா இந்த மூன்று ரதிகர்களேயும் கண்டேன். அவர்களெல்லாரும் என்னேக்கண்டுவிரைவாகக் குதிரைகளைத் தூண்டினார்கள். அருகில்வந்து, 'ஸஞ்சய! பாக்கியத்தினால் உயிருடனிருக்கிறாய்' என்று என்னைப்பார்த்துச் சொன்னார்கள். 'ஸஞ்சய! நம்முடைய அரசனான துர்யோதனன் உயிரோடிருக்கிறானா?' என்று அவர்களனைவரும் உமது புத்திரனைப்பற்றி என்னை வினவினார்கள். அப்போது நான், 'அரசன் க்ஷேமமாக இருக்கிறான்' என்பதை அவர்களுக்குக்கூறி என்னிடத்தில் துர்யோதனன் சொல்லியது அனைத்தையும் சொன்னேன். ராஜாவான துர்யோதனன் எந்தமடுவில் பிரவேசித்தானே அந்தமடுவையும் நான் சொன்னேன். அரசரே! அஸ்வத்தாமாவோ, அப்படிப்பட்ட என்னுடையவசனத்தைக் கேட்டுப் பெரிதான அந்தமடுவைப் பார்த்து, 'அந்தோ! இச்செய்கை நிந்திக்கத்தக்கது. அந்தத்துர்யோதனராஜன் எங்களை உயிரோடிருப்பவர்களாக அறியவில்லை. நாம் அந்தத்துர்யோதனனோடுசேர்ந்து பகைவர்களை எதிர்த்து யுத்தம்செய்வதில் போதுமான ஸாமார்த்தியமுடையவர்களன்றோ?' என்று தீனமாகப் புலம்பினார். ரதிகர்களுள் சிறந்தவர்களான அந்த மஹாரதர்கள் அவ்விடத்தில் நெடுநேரம் புலம்பி யுத்தரங்கத்தில் பாண்டவர்களைக்கண்டு வேகமாகஓடினார்கள். மாண்டவீரர்கள்போக மிகுந்திருப்பவர்களான அந்த மூன்று ரதிகர்களும் நன்கு அலங்கரிக்கப்பட்ட கிருபருடைய தேரில் என்னை ஏற்றிவைத்துக்கொண்டு சேனை தங்கியிருக்குமிடத்தை வந்தடைந்தார்கள். அந்தப் பாசறையில் ஸூர்யனும் அஸ்தமித்திருக்கும் ஸமயத்தில அங்குள்ள சேனைக்கூட்டங்கள் கலைந்துபோயின. உமது புத்ரர்களுடைய நாசத்தைக்கேட்டு எல்லாரும் புலம்பினார்கள். மஹாராஜரே! பிறகு, மங்கையர்களுக்குப் பாதுகாவலாயிருந்த வயதுமுதிர்ந்த மனிதர்

கள் ராஜபத்திநிகளை அழைத்துக்கொண்டு பட்டணத்தைக் குறித்துச் சென்றார்கள். அந்தப்பட்டணத்தில் கௌரவசேனையின் அழிவைக்கேட்டுப் பற்பலவிதமாகக் கூச்சலிடுகின்றவர்களும் நான்கு பக்கங்களிலும் அழுகின்றவர்களுமான மாதர்களுடைய பேரொலியானது தோன்றியது. வேந்தரே! பிறகு, அந்த ஸ்திரீகள் அடிக்கடி அழுதுகொண்டும் அன்றில்கள்போலச் சப்தத்தினால் பூமண்டலத்தை ஒலிக்கும்படிசெய்துகொண்டும் விரல்களாலும் கைகளாலும் தலைகளில் அடித்துக்கொண்டார்கள். அப்பொழுது, ஆங்காங்கு புலம்புகின்ற ஸ்திரீகள் தலைமயிர்களைப் பறித்தெறிந்தார்கள். அரசரே! அவ்விடத்தில், ஆ! ஆ! என்னும் கூச்சலோடு மார்பில் அடித்துக்கொள்ளுகின்ற பெண்டிர்கள் துக்கித்துக்கொண்டே அலறி அழுதார்கள். பிறகு, துரியோதனனுடைய மந்திரிகள் கண்ணீரால் குரல்தடைப்பட்டவர்களாகவும் மிக்கதுன்பமுள்ளவர்களாகவும் ராஜபத்திநிகளை அழைத்துக்கொண்டு நகரத்தைக்குறித்துச்சென்றார்கள். அரசரே! கையில் பிரம்புபிடித்தவர்களான வாயில்காப்போரும் அரசர்மனைவியர்களை ரக்ஷிக்கின்றவர்களும் மாசற்ற சிறந்தவிரிப்புக்களுள்ளபடுக்கைகளை எடுத்துக்கொண்டு நகரத்தைக்குறித்து விரைவாகச்சென்றார்கள். மற்றவர்கள்பெண்கோவேறுகழுதைகள்பூட்டினதேர்களில் ஏறிக்கொண்டும் தத்தம்மனைவிகளை அழைத்துக்கொண்டும் நகரத்தைக்குறித்துச்சென்றார்கள். மஹாராஜரே! அரண்மனைகளில் வஸித்த எந்தஸ்திரீகள் முன்பு ஸூர்யனாலும் பார்க்கப்பட்டவர்கள்ல்லரோ பட்டணத்தைக்குறித்துச்செல்லுகின்ற அந்தஸ்திரீகளை (இப்பொழுது ஸாதாரண) ஜனங்களும் கண்டார்கள். பரதர்களில் சிறந்தவரே! மெல்லியதன்மையுள்ளவர்களான அந்தப்பெண்கள் கணவர்களும்பந்துக்களும் கொல்லப்பெற்றவர்களாக நகரத்தைநோக்கி விரைவாகச் சென்றார்கள். *மாட்டிடையன்ஆட்டிடையன் வரையிலுள்ளமனிதர்கள் எல்லாரும் பீமஸேனனிடத்திலிருந்துண்டான பயத்தினால் பீடிக்கப்பட்டவர்களாகிப் பரபரப்புடன் நகரத்தைக்குறித்து ஓடிக்கொண்டேசென்றார்கள். மேலும், இவர்களுக்குப் பார்த்தர்களிடத்திலிருந்து மிகக்கொடியதும் அதிகமுமானபயம் உண்டாயிற்று. அப்பொழுது, ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டே நகரத்தைநோக்கி ஓடினார்கள். அவ்வண்ணம் மிகவும் பயங்கரமாக அப்படி ஓடிக்கொண்டிருக்கும்போது, சோகத்தினால் மிக்கமதிமயக்கங்கொண்ட யுயுத்ஸுவும் அந்தச்சமயத்திற்கேற்ற விஷயத்தை ஆலோசிக்க

* இவர்கள் வெளியிலேயே வசிப்பவர்களென்பது.

லானன். 'பயங்கரமானபராக்கிரமமுள்ள பாண்டவர்களால் யுத்தத்தில் பதினோர் அக்ஷௌஹிணி ஸேனைகளுக்கு நாதனான துர்யோதனன் ஜயிக்கப்பட்டான். இவனுடைய ஸஹோதரர்களும் நாசம்செய்யப்பட்டார்கள். பீஷ்மரையும் த்ரோணரையும் தலைவர்களாகக்கொண்ட கௌரவர்களனைவரும் கொல்லப்பட்டார்கள். நான் ஒருவன்மாத்திரம் தற்செயலாகப் பாக்கிய வசத்தினால் ஆபத்தினின்று விடுபட்டேன். எல்லாச்சேனைகளும் பாசறையினின்று நாற்புறங்களிலும் ஓடிவிட்டன. நாதனையிழந்தவர்களும், பராக்கிரமமற்றவர்களும், முன் பார்க்கப்படாதவர்களும், துக்கத்தினால் பீடிக்கப்பட்டவர்களும், பயத்தினால் கலக்கமுற்ற கண்களையுடையவர்களுமான (போர்வீரர்கள்) மான்கள்போல மிக்கபயத்தை அடைந்தவர்களாகிப் பத்துத்திசைகளையும் பார்த்துக்கொண்டு இங்கும் அங்கும் ஓடுகிறார்கள். துர்யோதனனுடைய மந்திரிகளில்மிகுந்திருந்தவர்கள் ராஜபத்தினிகளை அழைத்துக்கொண்டு நகரத்தைக் குறித்துப் பிரயாணமானார்கள். பிரபுவே! யுதிஷ்டிரரையும்அவ்வாறே வாஸுதேவரையும் அனுமதி கேட்டுக்கொண்டு அவர்களோடு ஹஸ்தினபுரத்தில் பிரவேசிப்பது இந்தச்சமயத்துக்கு உரியதென்று நான்எண்ணுகிறேன்' என்று மிக்கபுஜபலமுள்ள யுயுத்ஸு இவ்விதம் இந்தவிஷயத்தைக் கிருஷ்ணார்ஜுனர்களிருவரிடத்திலும் தெரிவித்தான். தோள்வலிமிக்கவரும் எப்போதும் தீனர்களின் நிலைமையை அறிந்தவருமான யுதிஷ்டிரராஜர் அவன்விஷயத்தில் பிரீதியுள்ளவரானார். வேஸ்யாபுத்திரனான அந்தயுயுத்ஸுவை ஆலிங்கனஞ்செய்து (நகரத்துக்குப்போகும்படி) அனுமதிகொடுத்தார். பிறகு, அவன் ரதத்திலேறிக்கொண்டு குதிரைகளை விரைவாக ஓட்டினான். ராஜபத்தினிகளை நகரத்தைக்குறித்துப் போகும்படி செய்தான். அவன் கண்ணீரினால் குரல்தடுக்கப்பட்டவனாகவும், கண்களில் நீர்ததும்புகின்றவனாகவும், ஸூர்யன் அஸ்தமிக்கையில் அவர்களுடன் ஹஸ்தினபட்டணத்தில் விரைவாகப் பிரவேசித்தான். அரசனுடையபக்கத்திலிருந்துவெளியில்வருகின்றவரும் சோகத்தினால் அறிவழிந்தவரும் பேரறிவாளரும் நீர்நிரம்பின கண்களையுடையவருமான விதுரரைக் கண்டான். உண்மையானதைரியமுள்ள விதுரர் எதிரில் வணங்கிநிற்கும் அந்த யுயுத்ஸுவைநோக்கிக் கூறலானார். 'புத்ர! கௌரவர்களுக்கு க்ஷயத்தை உண்டு பண்ணினதும் நடந்ததுமான இந்தயுத்தத்தில் நீ பாக்கியத்தினால் உயிரோடிருக்கிறாய். அரசனோடு பிரவேசிக்காமல் நீ மாத்திரம் ஏன்

இங்குவந்தாய்? இதன் காரணமனைத்தையும் விஸ்தாரமாகச்சொல் வாயாக' என்று வினவினர். யுயுத்ஸு, 'அந்தயுத்தத்தில் ஞாதிகளோடும் புத்திரர்களோடும் பந்துக்களோடும் சகுனிகொல்லப்பட்டவுடனே, மாண்டதுபோக மிகுந்திருக்கிற பரிவாரங்களுடன்கூடின துர்யோதனராஜன், பிறகு, தன்னுடைய குதிரையைவிட்டுவிட்டுப் பயத்தினல் கிழக்குத்திக்கைநோக்கி ஓடினன். அரசன் சேனைகள் இருக்கும் இடத்தைவிட்டு ஓடினவுடன், எல்லாம் பயத்தினல் வியாகூலமடைந்து நகரத்தைநோக்கி ஓடின. பிறகு, அதிகாரிகள் அரசனுடைய மனைவிகளும் அவனுடைய பிராதாக்களின் மனைவிகளுமாகிய அனைவரையும் வாகனங்களில் ஏற்றிவைத்துக்கொண்டு பயத்தினல் ஓடினர்கள். பிறகு, நான் கேசவருடன்கூடின அரசரானதர்மநந்தனரை அனுமதிகேட்டுக்கொண்டு உலகத்தாரால் ஏற்படக்கூடிய நிந்தையைப் பரிகரித்துக்கொண்டவனுகி ஹஸ்திநபட்டணத்தில் பிரவேசித்தேன்' என்ருன்.

எல்லாத்தர்மங்களையும் அறிந்தவரும் அளவிடமுடியாதபுத்தியையுடையவருமான விதுரர் வேசியின் புத்திரனை யுயுத்ஸுவினல்சொல்லப்பட்ட இந்தவசனத்தைக்கேட்டு ஸமயோசிதமென்று அறிந்து அவனைப் புகழ்ந்து பின்வரும் வசனத்தைக்கூறலானர். 'பரதர்களுக்கு அழிவையுண்டுபண்ணினயுத்தத்தில் காலானுஸாரமாக நடந்த இவையெல்லாவற்றையும் சொல்லுகின்ற உன்னல் கருணையினல் குலதர்மம் காக்கப்பட்டது. வீரர்களுக்கு அழிவையுண்டுபண்ணின இந்த யுத்தத்தினின்று பாக்கியத்தினல் மிஞ்சி இங்கு பட்டணத்துக்கு வந்திருக்கிற உன்னை, ஸாகரர்கள் மாண்ட பிறகு, மிகுந்திருந்த அம்சுமானைப் பிரஜைகள் பார்த்ததுபோலப் பார்க்கிறோம். புத்திர! பேராசையுள்ளவரும் வருங்காலநிலைமையை அறியாதவரும் பலவாருக வேண்டப்பட்டவரும் தெய்வத்தினல் கெடுக்கப்பட்ட மனமுள்ளவரும் துயரத்தினல் பீடிக்கப்பட்டவரும் குருடருமான அரசருக்கு எல்லா விதத்தினலும் நீ ஒருவன்தான் ஊன்றுகோல்போலக் கொள்ளப்படுகிருய். இன்றைத்தினம் நீ இவ்விடத்தில் இளைப்பாறி நாளைத்தினம் யுதிஷ்டிரனிடம் போவாய்' என்ருர். விதுரர் நீர்ததும்புகின்ற கண்களோடுகூடியவராக இவ்வளவுமட்டிலும் சொல்லிவிட்டு, யுயுத்ஸுவினிடம் விடைபெற்றுக்கொண்டு அரசனுடைய அரண்மனையில் பிரவேசித்தார். பட்டணத்து ஜனங்களாலும் தேசவாஸிகளாலும் துக்கத்தினலுண்டான கூக்குரலினல் அதிகமான ஒலியுள்ளதாகச் செய்யப்பட்டதும்

ஆனந்தமில்லாததும் சோபையையிழந்ததும் பூந்தோட்டமழிந்தநிலம் போன்றதும் பாழடைந்ததும் நாசஞ்செய்யப்பட்டிருப்பதுமான நகரத்தைக்கண்டு, முன்னமேயிருந்த துக்கத்தைவிட அதிக துக்கத்தை அடைந்தவரானார். அரசரே! எல்லாத்தர்மங்களையும் அறிந்தவரான விதுரர் வருத்தமுள்ளமனத்துடன் நகரத்தில் பிரவேசித்தார். அடிக்கடி மெள்ளமெள்ளப் பெருமூச்சுவிட்டார். யுயுத்ஸுவும் அப்பொழுது அன்றிரவு தன்னுடைய வீட்டில் வஸித்தான். அதிகதுக்கமுள்ள யுயுத்ஸுவானவன் தன்னைச்சேர்ந்த உறவினர்களால் கொண்டாடப்பட்டபோதும், பரதவம்சத்தவர்களுள் ஒருவருக்கொருவர் நேர்ந்த நாசத்தை நினைப்பவனாகி மனத்தில் களிப்படையவில்லை.

---

## முப்பதாவது அத்யாயம்.

## ஹ்ர த ப்ர வே ச ப ர் வ ம் (தொடர்ச்சி.)



(கிருபரும் அஸ்வத்தாமாவும் துரியோதனனிடம் பேசுகையில் பார்த்திருந்த வேடர்களால் தெரிந்துகொண்டு பாண்டவர்கள் மடுவுக்கு வந்ததும், கிருபர்முதலியோர் துரியோதனன் விருப்பப்படி ஒளிந்ததும், துரியோதனன் மறுபடியும் ஜலஸ்தம்பனம் செய்து மடுவில் இறங்கியதும்.)

ராஜேந்திரரே! மதயானைகளால் நன்குமுழக்கமுண்டுபண்ணப் பட்டிருந்த பாசறையானது, சேனை ஓடினவுடனே, ஒரு முகூர்த்தத்திற்குள் முற்றும் சூன்யமாகியது. எந்தஇடத்தில் பேரொலியினால் மஹாரதர்கள் ஒன்றையும் அறியவில்லையோ அந்த இடத்தில் ஒரு மனிதனுடைய சத்தத்தையும் நாங்கள் கேட்கவில்லை'' என்று சொன்னான்.

திருதராஷ்டிரன், ''ஸஞ்சய! பாண்டவர்களால் யுத்தபூமியில் எல்லாப் போர்வீரர்களும் கொல்லப்படும்தருணத்தில், மிகுந்திருக்கிற என்னைச்சேர்ந்த அந்தவீரர்கள் யாதுசெய்தனர்? கிருதவர்மாவும் கிருபரும் வீர்யவானான துரோணபுத்திரரும் மந்தபுத்தியுள்ள அரசனான துர்யோதனனும் அப்பொழுது என்னசெய்தார்கள்?'' என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான். ''மஹாத்மாக்களான க்ஷத்ரியர்களுடைய மனைவிகள் விரைவாகஓடவும், பாசறையும் ஸைன்யங்கள் ஓடிவிட்டபடியால் சூன்யமாயிருக்கவும், மிக்க மனவருத்தமுற்றவர்களும் அரசனிடத்தில் மிக்க பிரியமுள்ளவர்களுமான மூன்று ரதிகர்கள், அப்

பொழுது வெற்றியுடன்கூடின பாண்டவர்களுடைய சத்தத்தைக் கேட்டும், சேனைகள் ஓடிப்போன பாசறையைக் கண்டும், ஸாயங்காலத்தில் அந்தஇடத்தில் நிற்பதில் பிரியமற்றவர்களானார்கள். பிறகு, அவர்கள் (துர்யோதனன்மறைந்திருக்கும்) மடுவைநோக்கிச்சென்றார்கள். அரசரே! தர்மாத்மாவான யுதிஷ்டிரரும் யுத்தரங்கத்தில் ஸகோதரர்களோடுகூடி ஸந்தோஷமுள்ளவராகத் துர்யோதனனைக் கொல்லும் விருப்பத்துடன் எங்கும் ஸஞ்சரித்தார். ஜயத்தில் விருப்பமுள்ளவர்களும் மிக்க கோபங்கொண்டவர்களும் உமது புத்திரனைத் தேடுகின்றவர்களுமான அந்தப் பாண்டவர்கள் முயற்சியுடன் தேடியும் அவனைக் காணவேயில்லை. எப்பொழுது துர்யோதனன் யுத்தத்தைவிட்டுக் கால்களாலேஓடித் தன்மாயையினால் ஜலத்தை ஸ்தம்பனம் செய்துகொண்டு அந்தமடுவில் பிரவேசித்தானோ, எப்பொழுது பாண்டவர்கள் எல்லாரும் மிகக்களைத்த வாகனங்களையுடையவர்களானார்களோ அப்பொழுது அந்தப்பாண்டவர்கள் தங்களுடைய பாசறையைஅடைந்து தங்கள் போர்வீரர்களோடு சேர்ந்திருந்தார்கள். பிறகு, கிருபரும் அஸ்வத்தாமாவும் ஸாத்வதனான கிருதவர்மாவும் பார்த்தர்கள் (பாசறையில்) வீற்றிருக்கையில் அந்த மடுவைக்குறித்து மெள்ளச்சென்றார்கள். அவர்கள் எந்தமடுவில் துர்யோதனராஜன் படுத்திருக்கிறானோ அந்தமடுவையடைந்து, ஜலத்தில் தூங்கிக்கொண்டிருப்பவனும் அவமதிக்கமுடியாதவனுமான (அந்தத்) துரியோதனராஜனைப்பார்த்து, 'ஓ! அரசனே! எழுந்திரு. எங்களுடன் சேர்ந்து யுதிஷ்டிரனை எதிர்த்துப் போர்புரிவாயாக. ஜயித்தாவது பூமியை அனுபவி; கொல்லப்பட்டாவது ஸ்வர்க்கத்தை அடை. துரியோதன! உன்னால் அந்தப்பாண்டவர்களுடைய பலமும் முழுதும் அழிக்கப்பட்டது. அந்தப் பாண்டவர்களுடைய கக்ஷியில் மிகுதியிருக்கிற போர்வீரர்களும் பெரும்பான்மையாக (உன்னால்) திருப்பிஅடிக்கப்பட்டார்கள். பிரஜைகளுக்குப் பதியாயிருப்பவனே! எங்களால் பாதுகாக்கப்பட்டிருக்கிற உன்னுடைய வேகத்தை பொறுப்பதற்கும் அவர்கள் சக்தியுள்ளவர்களாகார். பாரத! ஆதலால், எழுந்திரு' என்று கூறினார்கள்.

துர்யோதனன், 'புருஷர்களுக்கு நாசத்தையுண்டுபண்ணுகின்ற இப்படிப்பட்ட பாண்டவ கௌரவயுத்தத்தினின்று பாக்யத்தால்தப்பி உயிரோடிருக்கின்ற ஆண்மையிற் சிறந்தவர்களான உங்களை நான் பார்க்கிறேன். நாமெல்லாரும் இளைப்பாறி ஶ்ரமத்தைத் தீர்த்துக்கொண்டு ஜயிப்போம். நீங்களும் களைத்திருக்கிறீர்கள். நாமும் அதிக

மாகக் காயப்படுத்தப்பட்டிருக்கிறோம். அந்தப் பாண்டவர்களுடைய சேனையானது மேற்பட்டிருக்கின்றது ; ஆதலால், யுத்தம் செய்வதை நான் விரும்பவில்லை. வீரர்களே ! உங்களுடைய இந்த மனமானது உதாரமான தன்மையுள்ளதாயிருக்கிறதென்பது ஆச்சர்யமன்று. நம்மிடத்தில் சிறந்தசக்தி இருக்கிறது. பராக்கிரமத்தைக் காட்ட இது ஸமயமன்று. இன்று ஓரிரவு இளைப்பாறி உங்களுடன்கூடி நான் நாளைத்தினம் யுத்தத்தில் சத்துருக்களை எதிர்த்துப் போர்புரிவேன். எனக்கு ஶ்ரமம் இராது' என்று கூறினன். இவ்வாறு உரைக்கக் கேட்ட அஶ்வத்தாமா, யுத்தத்தில் கெட்டமதங்கொண்ட அரசனைப் பார்த்து, 'வேந்தனே ! எழுந்திரு. உனக்கு மங்களம். நாம் சத்துருக்களை ஜயிப்போம். அரசே ! யாகம், தடாகாதிநிர்மாணம், தானம், ஸத்யம், ஜபம், இவைகளின்மீது ஆணையிட்டுச் சொல்லுகிறேன். இப்பொழுது ஸோமகர்களை நான் நாசஞ்செய்யப்போகிறேன். இந்தஇரவு விடிவதற்குள்ளாக யுத்தத்தில் பகைவர்களை நான் கொல்லாமல் போவேனேயாகில், யஜ்ஞத்தினுலுண்டுபண்ணப்பட்டதும் ஸாதுக்களுக்கு உரியதுமானபிரீதியை அடையாமற்போகக்கடவேன். பிரபுவே ! எல்லாப்பாஞ்சாலர்களையும் கொல்லாமல் கவசத்தைக் கழற்றப்போகிறதில்லை. நீ எழுந்திரு. இதனைச் சொல்லுகிறேன். வேந்தே ! என்னுடைய வசனத்தைக்கேள்' என்றார்.

அவர்கள் பேசிக்கொண்டிருக்குந்தருணத்தில் மாம்ஸங்களுடைய சுமையினால் களைத்தவர்களான வேடர்கள் தற்செயலாகத் தண்ணீர் குடிப்பதற்காக அந்தஇடம் வந்துசேர்ந்தார்கள். மஹாராஜரே ! பிரபுவே! அந்தவேடர்கள் நாள்தோறும் அதிகபக்தியுடன் பீமஸேனனுக்கு மாம்ஸக்குவியல்களைக் கொண்டுவந்து கொடுப்பவர்கள். அவ்விடத்தில் ரஹஸ்யமாக ஒன்றுசேர்ந்து உட்கார்ந்திருந்த அந்தவேடர்கள் அவர்களுடைய அந்தஎல்லாவசனத்தையும் துர்யோதனனுடைய வசனத்தையும் கேட்டார்கள். அப்பொழுது யுத்தத்தில் விருப்பமுள்ளவர்களான அந்த மஹாவில்லாளிகளனைவர்களும் யுத்தத்தில் விருப்பமில்லாதவனான துர்யோதனன்விஷயத்தில் அதிகநிர்ப்பந்தத்தைச் செய்தார்கள். ராஜேந்திரரே ! வேடர்கள் அவ்விதநிலைமையிலிருக்கிற கௌரவர்களைச்சேர்ந்த அந்தமஹாரதர்களையும் யுத்தத்தில் விருப்பமில்லாமல் ஜலத்திலிருக்கிற அரசனையும்கண்டு அவர்களுக்கும் ஜலத்திலிருக்கிற அரசனுக்கும்நடந்த ஸம்வாதத்தையும்கேட்டுத் துர்யோதனன் ஜலத்திலிருப்பதாக அறிந்தார்கள். அரசனைத்தேடுகின்ற பாண்டுபுத்திரன், உம்முடையபுத்திரனைப்பற்றித் தற்செயலாக அங்கு

வந்த வேடர்களிடம் முந்திக் கேட்டிருந்தான். மன்னரே! பிறகு, அந்த மிருகவேட்டைக்காரர்கள் அப்பொழுது பாண்டுபுத்திரனுடைய அந்தவார்த்தையை நினைத்து, 'துர்யோதனனை வெளிப்படுத்துவோம். பாண்டவன் பொருளைக்கொடுப்பான். இந்தமடுவில் துர்யோதன ராஜன் இருக்கிறானென்பது நமக்குவெளிப்படையாகத் தெரிந்துவிட்டது. ஆதலால், நாமனைவரும் கோபமுள்ள துர்யோதனன் ஜலத்தில் படுத்திருப்பதைச் சொல்வதற்காக யுதிஷ்டிரரிருக்குமிடம் செல்வோம். நாம்எல்லோரும், புத்திமானும் வில்லாளியுமான அந்தப்பீமஸேனனுக்கு ஜலத்தில்படுத்திருக்கிற துர்யோதனனைப்பற்றிக் கூறுவோம். அவன் நல்லபிரீதியுடையவனாகி நிச்சயமாக நமக்கு மிகுதியானபொருள்களைக் கொடுப்பான். உலர்ந்ததும் அதிகப் பிரயாஸத்தினால் அடையப்பட்டதும் (தேகத்தில்) வரட்சியை உண்டுபண்ணும் தன்மையுள்ளதுமான மாம்ஸத்தினால் நமக்கு யாதுபயன்?' என்று ஒருவரோடொருவர் மெதுவாகச்சொல்லிக்கொண்டார்கள். பொருள் விருப்பமுள்ளவர்களான அந்தவேடர்கள் இவ்வண்ணம்கூறி அதிக ஸந்தோஷமுள்ளவர்களாக மாம்ஸச்சுமைகளை எடுத்துக்கொண்டு பாசறையைநோக்கிச்சென்றார்கள். மஹாராஜரே! அஸ்திரவித்தையில் தேர்ச்சியுள்ளவர்களும் (பகைவர்களை) அடிக்கும்தன்மையுள்ளவர்களுமான பாண்டவர்களும் நின்றுகொண்டிருந்த துர்யோதனனை யுத்தத்தில்காணமல், வஞ்சனைகளை அறிந்தவனும் பாபியுமான அந்தத் துர்யோதனனை எதிர்த்து யுத்தம்செய்யும் விருப்பத்தினால்அந்தயுத்தரங்கத்தில் நான்குபக்கத்திலும் சாரர்களை அனுப்பினார்கள். பிறகு, தர்மராஜனுடைய படைவீரர்களெல்லாரும் ஒன்று சேர்ந்து வந்து துர்யோதனராஜன் ஒளிந்துவிட்டானென்பதைத் தெரிவித்தார்கள். பரதர்களுள்சிறந்தவரே! அந்தச்சாரர்களுடைய அந்த வசனத்தைக்கேட்டு யுதிஷ்டிர ராஜர், 'சத்துருக்களுள் ஒருவன் மிகுந்து ஜீவித்திருந்தாலும் வெற்றியானது ஸந்தேகத்துக்கு இடமுள்ளதாகும். ராஜ்யத்தை எவ்வாறு அடைவேன்? அந்தராஜ்யமானது வெற்றிமுதலானவைகளால் சிறப்பிக்கப்படுகிறதன்றோ?' என்று மிக்ககவலையை அடைந்து பெருமூச்சுவிட்டார். பரதர்களுள் சிறந்தவரே! பிரபுவே! பிறகு, பாண்டவர்கள் தீனர்களாயிருக்குந் தருணத்தில், வேடர்கள் அரசனான துர்யோதனனைக்கண்டு, அந்த இடத்திலிருந்து புறப்பட்டு விரைவுள்ளவர்களாகப் பாசறைக்குவந்தார்கள். அவர்கள் தடுக்கப்பட்டும் பீமஸேனன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே நுழைந்தார்கள். அவர்கள் மஹாபலசாலியும்

பாண்டுநந்தனனுமான பீமஸேனனை அணுகி (மடுக்கரையில்) நடந்ததும் தங்களால்கேட்கப்பட்டதுமான விருத்தாந்தம் அனைத்தையும் அந்தப்பீமஸேனனிடம் சொன்னார்கள். அரசரே! பிறகு, பகைவர்களை வாட்டுபவனான விருகோதரன் அந்தவேடர்களுக்கு மிகுதியான தனத்தைக் கொடுத்துவிட்டுத் தர்மராஜரிடத்தில், 'அரசரே! அந்தத் துரியோதனன் என்னால் வேடர்கள்முகமாக அறியப்பட்டுவிட்டான். எவன்விஷயமாக நீர் பரிதபிக்கிறீரோ அவன் ஜலத்தைஸ்தம்பனம் செய்துகொண்டு (மடுவில்) படுத்திருக்கிறான்' என்று அவையனைத்தையும் உரைத்தான். அரசரே! குந்தீபுத்திரரான அஜாதசத்துரு, ப்ரியனான பீமஸேனனுடைய அந்தவார்த்தையைக்கேட்டு ஸஹோதரர்களோடு மகிழ்ச்சியடைந்தார். பிறகு, அந்தப்பாண்டவர்கள் மஹாவில்லாளியான அந்தத்துர்யோதனன் ஜலம்நிறைந்தமடுவில் பிரவேசித்திருக்கிறானென்பதைக்கேட்டு ஜனார்த்தனரை முன்னிட்டுக் கொண்டு விரைவாகவே சென்றார்கள். பிரஜைகளுக்குநாதரே! பிறகு, அதிக ஸந்தோஷமுள்ளவர்களான பாண்டவர்கள் பாஞ்சாலர்கள் இவர்களுடைய 'கலகல' என்னும் சப்தமானது எல்லாப்பக்கங்களிலும் தோன்றியது. பரதர்களுள் சிறந்தவரே! ராஜரே! க்ஷத்திரியர்கள் விரைவுள்ளவர்களாக ஸிம்மநாதங்களையும் அட்டஹாஸங்களையும் செய்தார்கள். ஒருவரையொருவர் உரக்கக்கூவிஅழைக்கவும் அழைத்தார்கள். அவ்விடத்தில் அதிகஸந்தோஷமுள்ளவர்களான ஸோமகர்கள், 'பாவியான துர்யோதனன் அறியப்பட்டான்; காணப்பட்டான்' என்று அடிக்கடி யுத்தரங்கத்தில் நாற்புறங்களிலும் கூச்சலிட்டார்கள். பூமிக்குநாதரே! அவ்விடத்திற்கு விரைவாகச் செல்லுகின்றவைகளும் வேகமுள்ளவைகளுமான அந்தத்தேர்களுடைய நெருங்கியசப்தமானது ஆகாயத்தைஅளாவியது. பாரதரே! களைத்த வாகனங்களையுடையவர்களான அர்ஜுனன், பீமஸேனன், மாத்ரீபுத்திரர்களான நகுலஸஹதேவர்கள், பாஞ்சாலராஜகுமாரனான திருஷ்டத்யும்னன், ஜயிக்கப்படாதவனான சிகண்டி, உத்தமௌஜஸ், யுதாமன்யு, மஹாரதனான ஸாத்யகி, மிகுந்திருக்கின்ற பாஞ்சாலர்கள், த்ரௌபதீபுத்திரர்கள், குதிரைகள், யானைகள், நூற்றுக்கணக்கான காலாட்கள், இவர்களெல்லாரும் துர்யோதனனைக் கண்டுபிடிக்க வேண்டுமென்கிற எண்ணமுள்ளவர்களாக விரைவுடன் ஆங்காங்கு யுதிஷ்டிரராஜரைப் பின்தொடர்ந்து சென்றார்கள். மஹாராஜரே! பிறகு, பிரதாபசாலியானதர்மராஜர் உம்முடையபுத்திரனான துர்யோதனன் மாயையினால் ஜலத்தை ஸ்தம்பனம் செய்துகொண்டிருந்த

தும் குளிர்ந்த நிர்மலமான ஜலமுள்ளதும் இரண்டாவதுஸமுத்திரம் போன்றதும் மனத்துக்கு இனியதும் கோரஸ்வரூபமுள்ளதுமான த்வைபாயனஹ்ரதத்தை அடைந்தார். பாரதரே! அரசன் கதாயுதத்தைக்கையில்கொண்டு மிக்க ஆச்சர்யகரமான தெய்வயோக விதியினால் ஜலத்தினுள் பிரவேசித்து ஒரு மனிதனாலும் பார்க்க முடியாதவனாகப் படுத்திருந்தான். பிறகு, ஜலத்தினுள் வஸிக்கின்ற துர்யோதனராஜன் மேகத்தினுடைய இடிமுழக்கம்போன்ற நெருங்கினஒலியைக்கேட்டான். ராஜேந்திரரே! மஹாராஜரே! யுதிஷ்டிரரும் ஸகோதரர்களுடன்கூடினவராகப் பெரியசங்கநாதத்தினாலும் தேருருளைகளின் நேமியொலியினாலும் பூமியைநடுக்கமுறச் செய்துகொண்டும் மேலே பெரும்புழுதியை எழும்பும்படி செய்துகொண்டும் உம்முடையபுத்திரனைக்கொல்வதற்காக அந்தமடுவை வந்தடைந்தார். மஹாரதர்களான க்ருதவர்மாவும் க்ருபரும் அஸ்வத்தாமாவும் யுதிஷ்டிரருடையசேனையின் சப்தத்தைக்கேட்டு அரசனைப் பார்த்து,'ஜயத்தினால் பிரகாசிக்கின்ற பாண்டவர்கள் மிக்கஸந்தோஷத்துடன் இதோ வருகின்றார்கள். நாங்கள்ஓடப்போகிறோம். நீ எங்களுக்கு விடைகொடுக்கவேண்டும்' என்றுகூறினார்கள். பிரபுவே! துர்யோதனனோ வேகமுள்ளவர்களான அவர்களுடைய அந்தவசனத்தை அப்பொழுது கேட்டு'அப்படியே ஆகட்டும்' என்றுசொல்லிவிட்டு, அந்தமடுவில்(பிரவேசித்து)மாயையினால்ஜலத்தைஸ்தம்பனம் செய்தான். மஹாராஜரே! கிருபர்முதலான அந்தரதிகர்கள் அரசனிடம் அனுமதிபெற்றுக்கொண்டு மிகவும்துக்கித்தவர்களாகத்தூரத்தில் சென்றார்கள். பெரியவரே! அதிகம் களைத்தவர்களான அவர்கள் நெடுந்தூரஞ் சென்று ஓர் ஆலமரத்தைப்பார்த்து அரசனைப்பற்றிக் கவலையுற்றவர்களாக அதன்அடியில் உட்கார்ந்தார்கள். மகாபலசாலியான துர்யோதனன் ஜலத்தை ஸ்தம்பிக்கச்செய்துகொண்டு படுத்திருந்தான். பாண்டவர்களும் யுத்தம்செய்வதில் விருப்பமுற்றவர்களாக அவ்விடம்வந்தார்கள். மன்னரே! கிருபர்முதலானரதிகர்கள், 'எவ்வாறு யுத்தம்நடக்கப்போகிறதோ; அரசன் எவ்வாறு ஆகப்போகிறானோ; பாண்டவர்கள் எவ்வாறு துர்யோதனனை அடைவார்களோ' என்று இவ்வாறுசிந்தித்துக்கொண்டே ரதங்களினின்று குதிரைகளை அவிழ்த்து விட்டுவிட்டு அந்த ஆலமரத்தினடியில் உட்கார்ந்திருந்தார்கள்.

---

## முப்பத்தோராவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



(யுதிஷ்டிரர் மடுவிலிருக்கிற துர்யோதனனை நோக்கி விதுரநுடையசொற்களால் பயப்படுத்தலும், யுதிஷ்டிரருக்கும் துர்யோதனனுக்கும் ஸம்வாதமும்.)

பிறகு, அந்த மூன்றுரதிகர்களும் துர்யோதனனை விட்டு விலகிச்சென்றுவிட்ட ஸமயத்தில், பாண்டவர்கள் துர்யோதனன்இருந்த மடுவை அடைந்தார்கள். கௌரவர்களுட்சிறந்தவரே! அப்பொழுது த்வைபாயனமென்னும் மடுவைஅடைந்து, அந்தமடுவானது திருதராஷ்டிரபுத்திரனால் ஸ்தம்பனம் செய்யப்பட்டதைக்கண்டு, குருநந்தனர் வாஸுதேவரைநோக்கி இந்தவாக்கியத்தை உரைக்கலானார். '(மாதவரே!) தார்த்தராஷ்டிரனால் ஜலத்தில் பிரயோகிக்கப்பட்டிருக்கிற இந்தமாயையைப்பாரும். ஜலத்தை ஸ்தம்பனம்செய்துகொண்டு படுத்திருக்கிறான். இவனுக்கு மனிதர்களிடத்தினின்று பயமில்லை. கபடங்களில் தேர்ந்தவனான இவன் தேவஸம்பந்தம்பெற்ற இந்தமாயையை உண்டுபண்ணி வஞ்சனையினால் ஜலத்திற்குள்இருக்கிறான். மாதவரே! இவனுக்கு யுத்தத்தில் வஜ்ரபாணியான இந்திரனே நேரில் உதவி செய்தாலும் இவன் யுத்தத்தில் கொல்லப்பட்டதை ஜனங்கள் பார்க்கப்போகிறார்கள்'என்றார். வாஸுதேவர், 'பாரதரே! மாயாவியான துர்யோதனனுடைய இந்தமாயையை மாயையினால் நாசம்செய்யும். யுதிஷ்டிரரே! இது ஸத்யம். மாயாவியை மாயையினாலே கொல்ல வேண்டும். பரதஸ்ரேஷ்டரே! அனேக *கிரியைகளாலும் உபாயங்களாலும் ஜலத்தில் மாயையைப் பிரயோகித்து மாயாவியான துர்யோதனனை நீர் வதம்செய்யும். தைத்யர்களும் தானவர்களும் இந்திரனால் கிரியைகளாலும் உபாயங்களாலும் கொல்லப்பட்டார்கள். மஹாத்மாவான விஷ்ணுவினால் பலமுள்ள கிரியைகளாலும் உபாயங்களாலும் பலிசக்ரவர்த்தியானவன் கட்டப்பட்டான். மஹாஸுரர்களான ஹிரண்யாக்ஷனும் ஹிரண்யகசிபுவும் கிரியையையும் உபாயத்தையும் முன்னிட்டுக் கிரியையினாலேயே நாசஞ்செய்யப்பட்டார்கள். அரசரே! மஹாபலசாலியான விருத்ரனும் கிரியையினாலேயே கொல்லப்பட்டான். மன்னரே! அவ்வாறே, புலஸ்

* 'பகைவர்செய்கைகளுக்கு எதிரிடையான தந்திரங்களால்' என்பது பழைய உரை.

தியருக்குப் பௌத்திரனும் விஸ்ரவஸின் குமாரனுமான ராவண னென்னும் ராக்ஷஸனும் பந்துக்களோடும் பரிவாரங்களோடும் ராம ரால் கொல்லப்பட்டான். அவ்வாறே, நீரும், உபாயத்தைக்கைக் கொண்டு, கிரியையினால் பராக்கிரமத்தை வெளியிடும். வேந்தரே! புராதனர்களான தாரகனென்கிற மஹாஸுரனும் வீர்யமுள்ளவனான விப்ரசித்தியும் என்னால் கிரியையுடன்கூடினஉபாயங்களாலே நாசஞ் செய்யப்பட்டார்கள். பிரபுவே! வாதாபியும் இல்வலனும் அவ்வாறே த்ரிசிரஸும் அஸுரர்களான ஸுந்தோபஸுந்தர்களும் கிரியையினா லேயே ஸம்ஹரிக்கப்பட்டார்கள். பிரவுவே! கிரியையுடன்சேர்ந்த உபாயங்களால் இந்திரனால் ஸ்வர்க்கம் அனுபவிக்கப்படுகிறது. அரச ரே! கிரியை சிறந்தபலமுள்ளது. யுதிஷ்டிரரே! வேறு ஒன்றும் பலமுள்ளதன்று. தைத்யர்களும் தானவர்களும் ராக்ஷஸர்களும் அர சர்களும் கிரியையுடன்கூடின உபாயங்களாலேயே கொல்லப்பட்டார் கள். ஆதலால், கிரியையைச் செய்வீராக' என்று உரைத்தார். மஹாராஜரே! பாரதரே! வாஸுதேவர் இவ்வாறு உரைக்க விர தத்தை நன்குஅனுஷ்டித்தவரும் குந்தியின்புதல்வருமான யுதிஷ்டிரர் அட்டஹாஸம்செய்துகொண்டு ஜலத்திற்குள்ளிருப்பவனும் மஹா பல சாலியுமான அந்த உமதுபுத்திரனைக்குறித்துப் பேசத்தொடங்கினார்.

"துர்யோதன! மஹாராஜனே! எல்லாக்ஷத்திரியர்களையும் உன் னுடைய குலத்தையும் அழித்துவிட்டு யாதுகாரணத்தைக்கருதி ஜலத் தில் நீ இந்தக்காரியம் செய்தாய்? உன்னுடைய உயிரைவிரும்பி இப்பொழுது நீ ஜலத்தில் பிரவேசித்திருக்கிறாய்; அரசனே!எழுந்திரு. துர்யோதன! எம்முடன்கூடப் போர்புரிவாயாக. புருஷர்களுள்சிறந்த வனே! வேந்தனே! நீ பயந்து ஜலத்தை ஸ்தம்பனம்செய்துகொண் டிருக்கிறாயே; உன்னுடைய கர்வமும் அந்தக் கௌரவமும் எங்கே போயின? எல்லாஜனங்களும்ஸபையில்உன்னை 'சூரன்'என்றேசொல் லுகின்றார்கள். ஜலத்தில் படுத்திருக்கின்ற உன்னுடைய அப்படிப் பட்ட சௌர்யத்தைப் பயனற்றதென்று எண்ணுகிறேன். அரசனே! எழுந்திரு. யுத்தம் செய். நற்குலத்தில் பிறந்த க்ஷத்திரியனாக இருக் கிறாய். அதிலும், குருவம்சத்திலுதித்தவனான நீ குலத்தையும் பிறப் பையும் நன்றாக நினைத்துக்கொள்வாயாக. குருவம்சத்தில் உன்னு டைய பிறப்பைப் பெருமையாகச் சொல்லிக்கொள்ளுகின்ற அப்படிப் பட்ட நீ இப்பொழுது யுத்தத்தினின்று மிகப்பயந்து எவ்வாறு ஜலத் தில் பிரவேசித்திருக்கிறாய்? யுத்தஞ்செய்யாமல் ஒளிவதென்பது ஸநா தன தர்மமன்று. அரசனே! யுத்தத்தில் 'ஓடுதலானது இழிந்தஜனங்க

ளால் அடையப்பட்டது; ஸ்வர்க்கத்தை அடைவதற்கு விரோதமானது. நீ யுத்தத்தில் அக்கரையை அடையாமல் எவ்வாறு உயிரோடிருக்க எண்ணங்கொண்டாய்? அப்பா! விழுந்திருக்கின்ற இந்தப் புத்திரர்களையும் பிராதாக்களையும் பிதாக்களையும் கண்டும் ஸம்பந்திகளையும்தோழர்களையும் மாதுலர்களையும் பந்துக்களையும்கொல்வித்தும் இப்பொழுது எவ்வாறு மடுவில் இருக்கிறாய்? பாரத! நீ சூரனென்று எண்ணிக்கொண்டிருக்கிறாய்; நீ சூரனல்லை. கெட்டபுத்தியுள்ளவனே! எல்லா ஜனங்களும் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுதே, 'யுத்தத்தில் நான் சூரன்'என்று பொய்சொல்லுகிறாய். சூரர்கள் பகைவர்களைப் பார்த்து எவ்விதத்தினாலும் ஓடாரன்றோ? *சூரனே! நீ † எந்தச்செய்கையினால் யுத்தத்தை இழக்கிறாய்? அதனைக் கூறுவாயாக. துர்யோதன! அப்படிப்பட்ட நீ எழுந்திரு; மனத்திலுள்ள பயத்தை விட்டுப் போர்புரிவாயாக. துர்யோதன! ஸுயோதன! க்ஷத்திரிய தர்மத்தைப் பின்பற்றியிருக்கிற உன்னைப்போன்ற சூரன் தர்மத்தை அனுஷ்டிக்கவேண்டுமென்கிற எண்ணமிருக்குமாகில் எல்லாச் சேனையையும் பிராதாக்களையும் சாகும்படிசெய்து இப்பொழுது உயிரோடிருப்பதில் புத்தியைச் செலுத்தலாகாது. பாரத! கர்ணனையும் ஸுபலனுடையபுத்திரனான சகுனியையும் துச்சாஸனனையும் பற்றுக்கோடாகக்கொண்டு மோகத்தினால் உன்னை அறியாமல்போனதாகியமிகவும்பெரியபாவத்தைச்செய்தமையால்எதிர்த்து யுத்தஞ்செய்வாயாக. உன்னைப்போன்றவன் அஜ்ஞானத்தினால் ஓடுவதில் எவ்வாறு ருசியுள்ளவனாவான்? துர்யோதன! உன்னுடைய அந்தப்பேராண்மை எங்கேபோயிற்று? மானம்எங்கேபோயிற்று? சௌர்யம் எங்கேசென்றது? பெரியஉத்ஸாஹம் எங்கேபோய்விட்டது? உன்னுடைய அஸ்திரப்பயிற்சி எங்கேசென்றது? ஏன் தடாகத்தில் படுத்திருக்கிறாய்? பாரத! அப்படிப்பட்டநீ எழுந்திரு; க்ஷத்திரியதர்மத்தோடு போர்புரிவாயாக. பாரத! எங்களையாவதுதோல்வியடையச்செய்து இந்தப்பூமியை ஆள்; அல்லது, எங்களாலாவது கொல்லப்பட்டுப் பூமியில் உறங்கு. மஹாத்மாவானபிரம்மதேவரால் இது உனக்குப்பரமதர்மமாக சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது. உனக்குரிய ஆண்மையில் நிலைத்திருந்துகொண்டு, அந்தத்தர்மத்தை உண்மையாகச்செய்வாயாக' என்றார்.

---

* 'அவமதித்தபடி' என்பதும், † 'வானப்ரஸ்தன்' ஆயுதத்தைவிட்டுவிட்டவன்,பேடி இவர்களின்செய்கையில் எந்தச்செய்கையைப்பின்பற்றி' என்பதும் பழையஉரை.

மஹாராஜரே! புத்திமானான தர்மபுத்திரரால் இவ்வாறு உரைக்கக் கேட்ட உமது புத்திரன், ஜலத்திலிருந்துகொண்டு இந்த வசனத்தை உரைக்கலானான். 'மஹாராஜனே! பயமானது பிராணியைவந்தடைவதென்பது ஆச்சர்யமன்று. பாரத! பிராணபாயத்தினின்று பயந்து நான் யுத்தத்தைவிட்டு ஓடவில்லை. நான் ரதத்தையும் அம்புத்தூணிகளையும் இழந்தவனானேன். பின்புறத்திலிருந்த ஸாரதியும் கொல்லப்பட்டான். ஸேனைகளை இழந்து ஏகாகியாகிவிட்ட நான் யுத்தத்தில் இளைப்பாறுதலை விரும்பினேன். அரசனே! பிராணனைக்காப்பாற்றிக்கொள்ளவேண்டுமென்றாவது பயத்தினாலாவது வ்யஸனத்தினாலாவது இந்தஜலத்தில் நான் பிரவேசிக்கவில்லை. சிரமத்தினாலன்றோ நான் இந்தக்காரியம் செய்தேன். குந்தீபுத்திர! நீயும் இளைப்பாறு. உன்னை அனுஸரித்துவந்திருப்பவர்களும் இளைப்பாறட்டும். நான் எழுந்திருந்து உங்களனைவர்களையும் யுத்தரங்கத்தில் எதிர்த்துப் போர்புரியப்போகிறேன்' என்று சொன்னான்.

யுதிஷ்டிரர், 'துர்யோதனா! நாங்களெல்லோரும் இளைப்பாறினவர்களே. நெடுநேரமாக உன்னைத்தேடுகிறோம். ஆதலால், இப்போது எழுந்திரு. இப்பொழுது யுத்தம்செய். யுத்தத்தில் எங்களையாவது கொன்று செல்வம்நிறைந்த ராஜ்யத்தை அனுபவி; அல்லது, யுத்தத்தில் எங்களாலாவதுகொல்லப்பட்டு வீரலோகங்களை அடை' என்று கூறினர். துர்யோதனன், 'ஜனேசுவர! குருநந்தன! எவர்களை உத்தேசித்துக் குருக்களுடையராஜ்யத்தை விரும்புகிறேனோ அப்படிப்பட்ட என்னுடைய பிராதாக்களனைவரும் கொல்லப்பட்டார்கள். சிறந்தரத்தினங்கள் அழிந்துபோனதும் க்ஷத்திரியஸ்ரேஷ்டர்கள் கொல்லப்பட்டதுமான பூமியை, விதவையாயிருக்கிற ஸ்திரீயை அனுபவிக்க விரும்பாததுபோல அனுபவிப்பதற்கு நான் விரும்பவில்லை. யுதிஷ்டிர! பரதர்களுள்சிறந்தவனே! பாஞ்சாலர்கள் பாண்டவர்கள் இவர்களின் உத்ஸாஹத்தை அழித்து நான் உன்னை ஜயிப்பதற்கே இன்னும் விருப்பமுற்றிருக்கிறேன். பிதாமஹரும் கொல்லப்பட்டுத் துரோணரும் கர்ணனும் ஒழிந்துபோன இந்நிலைமையில் நான் ஒரு ஸமயத்திலாவது யுத்தத்தினால் செய்யத்தக்கவிஷயம் ஒன்றிருப்பதாக நினைக்கவில்லை. அரசனே! சூன்யமாயிருக்கிற இந்தப் பூமியானது உனக்கே இப்போது இருக்கட்டும்; அரசனான எவன் தான் ஸஹாயமில்லாதவனாயிருந்துகொண்டு ராஜ்யத்தைஆள விரும்புவான்? அப்படிப்பட்டதோழர்களையும் புத்திரர்களையும் பிராதாக்களையும் தந்தைகளையும் கொன்று உங்களாலும் ராஜ்யமானது கவர்ந்துகொள்ளப்

பட்டிருக்குங்காலத்தில், என்னைப்போன்றவன் எவன்தான் உயிரோடிருப்பான்? பாரத! நான் மான்தோலை ஆடையாகக்கொண்டு கானகம் செல்லப்போகிறேன். பந்துக்கள் கொல்லப்பட்டவனான எனக்கு ராஜ்யத்தில் விருப்பமில்லை. அரசனே! பெரும்பான்மையாக உறவினர்கள் கொல்லப்பட்டதும் யானைகளும் குதிரைகளும் அழிக்கப்பட்டதுமான இந்தப்பூமியானது உனக்கே இருக்கட்டும். மனக்கொதிப்பைவிட்டு, இந்தப்பூமியை ஆள்வாயாக. நான் இரண்டு மான்தோல்களைத் தரித்துக் கானகத்தையே அடையப்போகிறேன். பிரபுவே! ஜனங்களைஇழந்தவனான எனக்கு உயிரோடிருப்பதில் இப்பொழுது விருப்பமில்லை. ராஜேந்திரனே! நீ போ. அரசனழிக்கப்பட்டதும் யுத்தவீரர்கள் கொல்லப்பட்டதும் சிறந்தபொருள்களழிந்ததும் க்ஷத்ரியர்கள் சிதறிப்போனதுமான பூமியை ஸுகமாக அனுபவி' என்றுசொன்னான். மிக்ககீர்த்தியுள்ள யுதிஷ்டிரர் எளிமையான சொல்லைக்கேட்டு, ஜலத்திலிருக்கிற உமது புத்திரனை துர்யோதனனைநோக்கிக்கூறலானார்: 'ஐயா! ஜலத்திலிருந்துகொண்டு தீனமான அர்த்தமில்லாத வசனங்களை நீ கூறாதே. அரசனே! இந்தப்புலம்பலானது குருவியினுடைய சப்தம்போல என்மனத்தில் பதியவில்லை. துர்யோதனா! தானம் செய்வதில் நீ ஸமர்த்தனாக இருந்தாலும் உன்னால் கொடுக்கப்பட்ட பூமியை ஆள்வதற்கு நான் விரும்பமாட்டேன். உன்னால்கொடுக்கப்பட்ட இந்தப்பூமியை அதர்மத்தினால் நான்பெற்றுக்கொள்ளேன். ராஜனே! க்ஷத்திரியனுக்கு வாங்குவது தர்மமென்று எண்ணப்படவில்லை. நான் உன்னால் கொடுக்கப்பட்ட இந்தப்பூமிமுழுவதையும் விரும்பவில்லை. உன்னை யுத்தத்தில் ஜயித்து இந்தப்பூமியை அனுபவிக்கப்போகிறேன். ஸ்வதந்திரனல்லாத நீ எவ்வாறு பூமியைக்கொடுப்பதற்கு விரும்புகிறாய்? அரசனே! உன்னால் இந்தப்பூமியானது அப்பொழுதே ஏன் கொடுக்கப்படவில்லை? ராஜனே! தர்மத்தினால் (பூமியை) யாசிக்கின்ற நம்முடைய குலத்திற்கு ஸமாதானத்தின்பொருட்டு முதலில்வந்த மகாபலசாலியான ஸ்ரீவாஸுதேவரை அவமதித்துவிட்டு இப்பொழுது ஏன் நீ கொடுக்கிறாய்? உனக்கு என்ன சித்தப்ரமம்? முயற்சியுள்ள எந்த அரசன் பூமியைக்கொடுப்பதற்கு விரும்புவான்? கௌரவநந்தன! மன்னனே! நீ இப்பொழுது பூமியைக் கொடுப்பதற்கோ, அல்லது, பலாத்காரமாகப் பிடுங்குவதற்கோ சக்தனல்லை. அப்படிப்பட்ட நீ எவ்வாறு கொடுக்கவிரும்புகிறாய்? யுத்தத்தில் என்னை ஜயித்து இந்தப்பூமியை ஆள்வாயாக. பரதவம்சத்திலுதித்

தவனே! ஊசிமுனையினல் பூமியில் எந்த அம்சம் பேர்க்கப்படுமோ அவ்வளவுள்ளபூபாகத்தைக்கூட முன்பு நீஎனக்குக் கொடுத்தாயில்லே. பிரஜைகளுக்கு நாதனே! அப்படிப்பட்ட நீ எவ்வாறு இந்தப்பூமியைக் கொடுக்கிருய்? முன்பு, ஊசிமுனை நாட்டக்கூடிய பூமியையும் எனக்கு நீ விடவில்லே. அப்படிப்பட்ட நீ எவ்வண்ணம் பூமியை விடுகிருய்? இப்படிப்பட்ட ஐஸ்வர்யத்தை அடைந்து இந்தப் பூமியைப் பரிபாலனம் செய். எந்தமூடன்தான் சத்துருவுக்குப் பூமியைக் கொடுப்பதற்கு முயல்வான்? நீயோ மஹாமூடன். சுத்த மூர்க்கஸ்வபாவத்தினல்(விஷயங்களைத்) தெரிந்துகொள்ளுகிருயில்லே. பூமியைக் கொடுக்க எண்ணமுள்ளவனுக இருந்தாலும் உயிரோடு உன்னை நான் விடப்போகிறதில்லே. நீ எங்களையாவது தோல்வியடையச்செய்து இந்தப்பூமியை ஆள்வாய். அல்லது, எங்களாலாவது கொல்லப்பட்டு உத்தமமான உலகங்களை அடைவாய். அரசனே! நீயும் நானுமாகிய இருவரும் உயிரோடிருக்கும்வரையில் ஸர்வப்ராணிகளுக்கும் நம்முடைய வெற்றியில் ஸம்சயமுண்டாகும். என்னிடத்தில் அகப்பட்டிருப்பதனல் உன் உயிரை உன்னல் அடையமுடியாது. நான் விரும்பினல் உன்னை உயிரோடிருக்கச் செய்வேன். நீ உயிரோடிருப்பதற்குத் தக்கவனல்லே. எங்களைக் கொளுத்தும் விஷயத்தில் உன்னல் மிகவும் முயற்சிசெய்யப்பட்டது. அரசனே! ஸர்ப்பங்களாலும் விஷங்களாலும் ஜலத்தில் பிரவேசிக்கச்செய்ததாலும் ராஜ்யத்தைக் கவர்ந்ததினுலும் இன்னுதவற்றைச் சொன்னதாலும் த்ரௌபதியை இழுத்ததாலும் உன்னல் நாங்கள் அவமதிக்கப்பட்டோம். இந்தக்காரணங்களினல் உனக்கு உயிர் இல்லே; எழுந்திரு; எழுந்திரு; பாவீ! யுத்தம் செய். யுத்தத்தில் நன்மையுண்டாகும்' என்ருர். ஜனுதிபரே! ஆங்காங்கு அந்த வீரர்கள் விசித்திரமாயும் ஜயத்துடன்கூடியவைகளாயுமிருக்கிற இவ்வாருன சொற்களை அடிக்கடி கூறினுர்கள்' என்ருன்.

---

## முப்பத்திரண்டாவது அத்யாயம்.

### ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



(யுதிஷ்டிரருடைய கடுஞ்சொற்களைக் கேட்டுத் துரியோத னன் கதையை எடுத்துக்கொண்டு மடுவினின்று எழுந்திருந்ததும், இருவருக்கும் ஸம்வாதமும்.)

திருதராஷ்டிரன், "இவ்வண்ணம் வெருட்டப்படுகின்றவனும் இயற்கையாகக் கோபமுள்ளவனும் பகைவர்களைத் தவிக்கச்செய்பவனும் வீரனும் அரசனுமான என்குமாரன் எவ்வண்ணம் ஆனான்? அவனால் அதட்டிக்கூறும் சொல்லானது எவ்விதத்தினாலும் இதற்கு முன் கேட்கப்பட்டதில்லை. அவன் ராஜத்தன்மையினால் எல்லா ஜனங்களுக்கும் பூஜிக்கத்தக்கவனாக இருந்தான். அகங்காரியாக இருப்பதினால் எவனுக்குத் தன்னுடைய *குடைநிழலும் சூரியனுடைய ஒளிபோல் மனவருத்தத்தின்பொருட்டே ஆகுமோ அவன் இவ்விதமான வாக்குக்களை எப்படி ஸஹிப்பான்? ஸஞ்சய! ம்லேச்சர்களோடும் ஆடவிகர்களோடுங்கூடின இந்தப்பூமிமுழுவதும் உன் கண்ணுக்கு எதிரில் எவனுடைய அருளினால் நிலைத்திருக்கிறதோ அந்தத்துரியோதனன் அவ்வாறு வெருட்டப்பட்டவனும் தன்னுடைய வேலைக்காரர்களால் இழக்கப்பட்டவனும் மேலும் பாண்டவர்களால் ஜனங்களில்லாத இடத்தில் நன்கு சூழ்ந்துகொள்ளப்பட்டவனுமானான். ஸஞ்சய! அவன் கடுமையானவையும் ஜயத்துடன்கூடியவையுமான சொற்களை அடிக்கடி கேட்டுப் பாண்டவர்களைப்பார்த்து யாதுகூறினானோ அதனை எனக்குச்சொல்வாயாக" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"அரசரே! ராஜேந்திரரே! பிராதாக்களுடன்கூடின யுதிஷ்டிரரால் அப்பொழுது வெருட்டப்படுகின்றவனும் ஜலத்தில் இருப்பவனும் கெட்ட நிலைமையை அடைந்தவனும் உம்முடைய குமாரனுமான அந்தத் துரியோதன மகாராஜன் கடுமையான சொற்களைக்கேட்டு, ஜலத்தினுள்ளிருந்துகொண்டே அடிக்கடி தீர்க்கமாயும் உஷ்ணமாயும் பெருமூச்சுவிட்டுக்கொண்டும் ஜலத்திற்குள்ளிருந்தே இருகைகளையும் அடிக்கடி உதறிக்கொண்டும் யுத்தத்தில் மனத்தைச்செலுத்தி யுதிஷ்டிர ராஜரை நோக்கிக் கூறலானான்.

* 'சூரியவெப்பத்தினின்று குடையால் காக்கப்பட்டானென்பதையும் அபவாதமாகக் கொள்பவன்' என்பது பழையஉரை.

'பார்த்தர்களே! நீங்கள் எல்லாரும் தோழர்களுடனும் ரதங்களுடனும் வாகனங்களுடனும் இருக்கிறீர்கள். நானோ ஒருவன்; களைத்திருப்பவன்; ரதத்தையும் இழந்தவன்; வாகனங்கள்கொல்லப்பட்டவன். ஸஹாயமில்லாதவனும் பாதசாரியும் சஸ்திரங்களை இழந்தவனுமான நான் சஸ்திரங்களைக் கையில் பிடித்தவர்களும் ரதங்களுடன் கூடியவர்களுமான அனேகர்களால் சூழப்பட்டவனாக எவ்வாறுபோர் புரிவதற்குச் சக்தியுள்ளவனாவேன்? யுதிஷ்டிர! நீங்கள் ஒவ்வொருவராக என்னை எதிர்த்துச் சண்டைசெய்யுங்கள். ஒருவன் அனேக வீரர்களோடு யுத்தகளத்தில் போர்புரிவது நியாயமன்று. மேலும், நான் விசேஷித்துக் கவசத்தை இழந்தவனும் களைத்தவனும் ஆபத்தைஅடைந்தவனும் அதிகமாகக் காயப்படுத்தப்பட்டிருக்கிற சரீரத்தையுடையவனும் வாகனங்களும் ஸைனிகர்களும் அழிந்தவனுமாயிருக்கிறேன். அரசனே! எனக்கு உன்னிடத்தினின்றாவது குந்தீபுத்திரனான பீமஸேனன், அர்ஜுனன், வாஸுதேவன், பாஞ்சாலர்கள், நகுலஸஹதேவர்கள், யுயுதானன், இன்னும்மற்ற உனக்குள்ள வீரர்கள் இவர்களிடத்தினின்றாவது பயம்இல்லை. கோபங்கொண்டவனான நான் ஒருவனாக யுத்தத்தில்நின்று உங்களெல்லாரையும் தடுப்பேன். ஜனாதனே! ஸத்புருஷர்களுடைய கீர்த்தியானது தர்மத்தை ஆதாரமாகக்கொண்டது. நான் தர்மத்தையும் கீர்த்தியையும் பாதுகாப்பவனாக இருந்துகொண்டு சொல்லுகிறேன். நான் எழுந்திருந்து யுத்தரங்கத்தில் எல்லா வீரர்களையும் எதிர்த்துப் போர்புரியப்போகிறேன். பரதவம்சத்தில் தோன்றினவனே! என்னை எதிர்த்தவர்களனைவர்களையும் கொல்லப்போகிறேன். நான் சஸ்திரங்களையும் ரதத்தையுமிழந்தவனாயிருந்தும், தேர்களையும் குதிரைகளையுமுடையவர்களாயிருக்கிற உங்களை ஸூர்யன் இரவின் முடிவில் எல்லாநக்ஷத்திரங்களையும் மறையச்செய்வதுபோலத் தேஜஸினால் நாசஞ்செய்யப்போகிறேன். பாண்டவர்களே! உறுதியாக இருங்கள். பரதர்களுள் சிறந்தவனே! புகழ்பெற்றவர்களான க்ஷத்திரியர்கள், பாஹ்லீகர்கள், துரோணர், பீஷ்மர், மஹாத்மாவான கர்ணன், சூரனானஜயத்ரதன், பகதத்தன், மத்ரராஜனானசல்யன், பூரிஸ்ரவஸ், புத்திரர்கள், ஸுபலனுடைய குமாரனானசகுனி இவர்கள் விஷயத்தில் கடனாளியாயில்லாமலிருத்தலை இப்பொழுது அடையப்போகிறேன். உன்னைப் பிராதாக்களோடு கொன்று, * மித்திரர்களுக்கும் ஸுஹ்ருத்துக்களுக்கும் அவ்வாறே பந்துக்களுக்கும் இப்பொழுது கடனாளியாகாதிருத்தலை அடையப்போகிறேன்' என்றான். ஜனா

* சாந்திபர்வம் 385-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

திபனும் ஸ்ரீமானும் உம்முடைய புத்திரனுமான துரியோதனன் ஜலத்தினுள்ளிருந்துகொண்டே இவ்வளவுமட்டிலும் சொற்களைச் சொல்லிவிட்டுச் சும்மா இருந்துவிட்டான். யுதிஷ்டிரர், 'துர்யோதன! பாக்கியத்தினால் நீயும் க்ஷத்திரியதர்மத்தை அறிகிறாய். மிக்க புஜபலமுள்ளவனே! தெய்வாதீனமாக உன் புத்தியானது யுத்தத்தின்பொருட்டே உறுதியாக இருக்கிறது. காந்தாரீபுத்திர! பாக்கியத்தினால் சூரனாக இருக்கிறாய். தெய்வாதீனமாக யுத்தத்தை அறிந்திருக்கிறாய். நீ உதவியில்லாதவனாக இருந்துகொண்டு எங்களனைவர்களையும் யுத்தரங்கத்தில் எதிர்த்து யுத்தஞ் செய்ய விரும்புகிறாயன்றோ? ஸஹாயமற்றவனான நீ ஒருவனோடு எதிர்த்து, எந்த ஆயுதம் உனக்கு விருப்பமோ அதை எடுத்துக்கொண்டு யுத்தம்செய். நாங்கள் பார்க்கிறவர்களாக நிற்கிறோம். வீரனே! இதோ நான் நீ விரும்பியவிருப்பத்தை மீண்டும் உனக்குக் கொடுக்கிறேன். எங்களுள் ஒருவனைக்கொன்று அரசனாகிவிடு. அல்லது (எங்களால்) கொல்லப்பட்டு ஸ்வர்க்கத்தைஅடை' என்றுகூறினார். துர்யோதனன், 'யுத்தத்தில் போர்புரிவதற்காக ஒருவரம் இப்பொழுது எனக்குக்கொடுக்கவேண்டும். ஆயுதங்களுள் இந்தக்கதாயுதந்தான் எனக்கு எப்பொழுதும் பிரியமானது. பிராதாக்களான உங்களுள் எவனொருவன் என்னை (எதிர்த்துப்போர்புரியச்) சக்தியுள்ளவனென்று எண்ணுகிறானோ, அவன், கதாயுதத்துடன் பாதசாரியாயிருந்து யுத்தரங்கத்தில் என்னோடு போர்புரியலாம். அடிக்கடி விசித்திரமான அனேக ரதயுத்தங்கள் நடந்திருக்கின்றன. ஆச்சர்யகரமானதும் பெரிதுமான இந்தக்கதாயுத்தமொன்று இப்பொழுது நடக்கட்டும். மனிதர்கள் அன்னங்களில்கூட மாறுதலைச்செய்வதற்கு விரும்புகிறார்கள். உன்னுடைய அனுமதியின்மேல் யுத்தங்களுக்கும் மாறுட்டம்உண்டாகட்டும். மிக்க தோள்வலியமைந்தவனே! கதையினால் இளையஸஹோதரர்களுடன்கூடின உன்னையும் பாஞ்சாலர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் மற்றுமுள்ள உன்னுடையபோர்வீரர்களையும் ஜயிக்கப்போகிறேன். யுதிஷ்டிர! இந்திரனிடத்திலிருந்தும் எனக்கு ஒருபொழுதும் கலக்கமுண்டாகாது' என்று மறுமொழிகூறினான். யுதிஷ்டிரர், 'காந்தாரீபுத்திர! எழுந்திரு, எழுந்திரு. துர்யோதன! பலசாலியான நீ ஒருவன் கதாயுதத்துடன்கூடியவனாக யுத்தத்தில் ஒருவனான என்னை எதிர்த்துப் போர்புரிவாயாக. காந்தாரிநந்தன! ஆண்பிள்ளையாக இரு. மிக்க ஜாக்கிரதையுடன் யுத்தம்செய். இந்திரனே உனக்கு உதவிசெய்பவனானாலும். இப்பொழுது உனக்குப் பிராணன் இராது' என்று கூறினார்.

நரஶ்ரேஷ்டனும் ஜலத்துக்குள்ளிருப்பவனும் உமது புத்திரனுமான அந்தத் துரியோதனன், புற்றிலிருந்து சீறுகின்ற மகா ஸர்ப்பம்போல இந்தவசனத்தைப் பொறுக்கவில்லை. அரசரே! வாக்காகிற கொரடாவினால் அவ்வாறு அடிக்கடி துன்புறுத்தப்படுகின்ற அந்தத்துரியோதனன் உத்தமமான குதிரையானது கொரடாவைப் பொருததுபோல (அந்த) வசனத்தைப் பொறுக்கவில்லை. வீர்யமுள்ள துர்யோதனன் ஜலத்தை நன்றாகக் கலக்கிக்கொண்டும் உருக்குமயமானதும் பெரியதும் பொன்வளயங்களைப் பூஷணமாகவுடையதுமான கதையை வேகத்துடன் எடுத்துக்கொண்டும் சிறந்தநாகம்போலச் சீறிக் கொண்டும் ஜலமத்தியத்தினின்று மேலே எழுந்தான். உம்முடைய புத்திரனான அந்தத்துரியோதனன் ஸ்தம்பனம் செய்யப்பட்டிருந்த ஜலத்தைப் பிளந்துகொண்டும் தோளில் உருக்குமயமானகதாயுதத்தைவைத்துக் கொண்டும் நன்றாகஜ்வலிக்கின்ற சூரியன்போல் மேலேஎழுந்தான். பிறகு, சிறந்த புத்தியுள்ளவனும் மிக்கவலிமையுள்ளவனுமான துரியோதனன் உருக்குமயமானதும் ஸ்வர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்டுள்ளதுமான பெரியகதையைக் கையினால் உருவினான். கதையை ஏந்திய துர்யோதனன் நன்றாகப்பிரகாசிக்கின்ற ஸூர்யன்போல விளங்கினான். கதையைக் கையிற்பிடித்தவனும் சிகரத்துடன்கூடின மலைபோன்றவனும் பிரஜைகளிடத்தில் கோபங்கொண்டு (ஸம்ஹாரத்திற்காக) நிற்கின்ற சூலபாணியான ருத்திரர்போன்றவனும் மேலேஎழுந்தவனும் மிக்கபுஜபலமுள்ளவனும் *பகைவர்களை அடக்குபவனுமான துர்யோதனனை எல்லாப்பிராணிகளும் தண்டத்தைக்கையில்கொண்ட அந்தகனைப்போல எண்ணின. ஜனாதிபரே! உம்முடையபுத்திரனை எல்லாப்பாஞ்சாலர்களும் வஜ்ராயுதத்தைக்கையில்கொண்ட இந்திரனைப்போலவும் சூலத்தைக் கையில்ஏந்திய ருத்திரரைப்போலவும் கண்டார்கள். கரையில்வந்திருக்கின்ற அந்தத்துர்யோதனனைக்கண்டு, பாஞ்சாலர்களும் பாண்டவவீரர்களுமாகிய எல்லாரும் ஸந்தோஷித்தார்கள். அவர்கள் (ஆனந்தத்தினால்) ஒருவர்க்கொருவர் உள்ளங்கைகளைக் கொடுத்துக்கொண்டார்கள். உம்முடையபுத்திரனான துர்யோதனன் அதைப்பரிகாசமென்றெண்ணி இருகண்களையும் புரட்டிவிழித்துக் கோபத்துடன் பாண்டவர்களைக்கொல்லத்த விருப்பமுள்ளவனாகப் புருவத்தை முக்கோணமாகநெறித்துக்கொண்டும் உதட்டை நன்றாகக் கடித்துக்கொண்டும், பிறகு கேசவருடன்கூடின அந்தப்பாண்டவர்களைப்பார்த்து, 'பாண்டவர்களே! இந்தப்பரிஹாஸத்தினுடையபலனைத்

* இரட்டித்தலால் ஒருசொல் விடப்பட்டது.

திருப்பியனுபவிக்கப்போகிறீர்கள். நீங்கள் இப்பொழுதே கொல்லப் பட்டுப் பாஞ்சாலர்களோடு யமலோகம்போகப்போகிறீர்கள்' என்றான். அந்த ஜலத்தினின்று எழுந்திருந்த உம்முடையபுத்திரனை துர்யோதனன் கதையைக்கையில்கொண்டு இரத்தத்தினால்நன்குநனைக்கப் பட்டு நின்றான். ரத்தத்தினால்பூசப்பட்டிருக்கிற அந்தத்துரியோதனனுடைய ஜலத்தினால் நனைக்கப்பட்ட சரீரமானது அப்பொழுது அருவிப்பெருக்குடன்கூடின மலைபோலப்பிரகாசித்தது. அச்சமயத்தில் பாண்டவர்கள் கதாயுதத்தைத்தூக்கிக்கொண்டிருக்கிற அந்தவீரனைக் கோபங்கொண்ட யமனைப்போலவும் நேரில் நிற்கின்ற சூலபாணியைப் போலவும் எண்ணினார்கள். பிறகு, யுத்தத்தில் சிறந்த வீர்யமுள்ளவனை துர்யோதனன், மேகத்தின்இடிமுழக்கம்போன்ற சப்தத்துடன் விருஷபம்போல் உத்ஸாஹத்தினால் கர்ஜித்துக்கொண்டு பார்த்தர்களைக் கதைச்சண்டைக்கு அழைத்தான். அவன், 'யுதிஷ்டிர! நீங்கள் ஒவ்வொருவனாக என்னை எதிர்த்துவாருங்கள். ஒருவீரனை யுத்தபூமியில் அனேக வீரர்களோடு போர்புரியும்படி செய்வது நியாயமன்று. நான்கவசத்தைக்கழற்றிவைத்தவன்; அதிகஸ்ரமத்தைஅடைந்தவன். ஜலத்திலும் முழுகியிருந்தவன்; மிகுதியாகக் காயப்படுத்தப்பட்ட சரீரத்தையுடையவன். வாகனங்களும் வீரர்களும் கொல்லப்பட்டவன். போர்செய்வது அவசியமே. நீங்களனைவரும் சேர்ந்து என்னோடு யுத்தம் செய்வதென்னும் இது தகுந்தது தகாதது என்பதை எப்பொழுதும் நீ அறிந்திருக்கிறாய்' என்று சொன்னான்.

யுதிஷ்டிரர், 'துர்யோதன! ஸஹாயமற்றவனை அபிமன்யுவை யுத்தத்தில் அனேகமகாரதர்கள் கொன்றபொழுது இந்தப்புத்தி ஏன் உனக்கு உண்டாகவில்லை? க்ஷத்திரியதர்மம் மிக்ககொடுமையானது; ஒன்றையும் எதிர்பாராதது; மிக்ககருணையற்றது. அப்படியில்லாவிட்டால் அப்படிப்பட்ட அபாயநிலைமையை அடைந்திருந்த அபிமன்யுவை எவ்வாறு அனேகர்கள் கொல்வார்கள்? நீங்கள் எல்லாரும் தர்மத்தை அறிந்தவர்கள்; எல்லாரும் சூரர்கள்; சரீரத்தைஇழக்கத்துணிந்தவர்கள். நீதியுடன் யுத்தம்செய்பவர்களுக்குச் சிறந்ததான இந்திரலோககதியானது கூறப்பட்டிருக்கிறது. ஒருவன் அனேகர்களால்கொல்லத்தக்கவனல்லனென்பது தர்மமே. அப்படியானால், உன் ஸம்மதத்தில்கட்டுப்பட்டுஅனேகவீரர்கள் அபிமன்யுவை ஏன்கொன்றார்கள்? எந்த மனிதனும் ஆபத்தை அடைந்த காலத்தில் தர்மசாஸ்திரத்தை ஆராய்கின்றான்; நல்ல நிலைமையில் இருப்பானேயாகில், பரலோகத்தின் வாயிலை அடைக்கப்பட்டதாகப்பார்க்கிறான். வீரனே!

கவசத்தை அணிந்துகொள்; தலை மயிர்களை முடித்துக்கொள். பாரத! வேறுஎது உனக்கு இல்லையோ அதையும்எடுத்துக்கொள். வீர! நான் மீண்டும் உனக்கு இந்தஒருவிருப்பத்தைக்கொடுக்கிறேன். ஐந்துபாண்டவர்களுள் எவனோடு நீ போர்புரிவதற்கு விரும்புகிறாயோ அவனைக் கொன்று நீ அரசனாகலாம். அல்லது, நீ கொல்லப்படுவாயேயாகில் ஸ்வர்க்கத்தை அடையலாம். வீரனே! யுத்தத்தில் உயிரைத்தவிர உனக்கு எந்த விருப்பத்தைச் செய்யக்கடவோம்?' என்று வினவினார். அரசரே! பிறகு, உம்முடைய குமாரன் பொன்மயமான கவசத்தைப்பூண்டுகொண்டு விசித்திரமாயும் பொன்னாலலங்கரிக்கப் பட்டதாயுமிருக்கிற தலைப்பாகையையும் தரித்தான். அரசரே! தலைப்பாகையை அணிந்தவனும் மங்களகரமான கவசத்தைப்பூண்டவனுமான உம்முடைய குமாரன் பொன்மயமான மேருமலைபோலப் பிரகாசித்தான். மன்னரே! கவசம்பூண்டவனும் கதையையுடையவனும் உமது குமாரனுமான துர்யோதனன் யுத்தமுனையில் ஸன்னத்தனாகஇருந்துகொண்டு எல்லாப்பாண்டவர்களையும்பார்த்து, 'பிராதாக்களான உங்களுள் ஒருவன் கதாயுதத்தை எடுத்துக்கொண்டு என்னோடு போர்புரியலாம். பரதர்களுள் சிறந்தவனே! ஸஹதேவனோடாவது பீமனோடாவது நகுலனோடாவது அர்ஜுனனோடாவது உன்னோடாவது இப்பொழுது யுத்தம்செய்யப்போகிறேன். நான் யுத்தத்தைச்செய்து ரணரங்கத்தில் வெற்றியடையப்போகிறேன். புருஷஶ்ரேஷ்டனே! நான், பொற்பட்டங்கட்டியிருக்கிற கதாயுதத்தினால், எவ்விதத்தினாலும் அடையமுடியாதபகையினுடையமுடிவை இப்பொழுது அடையப்போகிறேன். கதாயுத்தத்தில் எனக்கு ஒப்பானவன் ஒருவனும் இல்லையென்று எண்ணுகிறேன். ஒன்றுசேர்ந்திருக்கிற உங்களனைவரையும் கதாயுதத்தினாலேயே கொல்வேன். எல்லாருமானாலும் சிலரானாலும் என்னுடன் நியாயத்தோடு யுத்தம்செய்வதற்கு ஸமத்தர்களாகமாட்டீர்கள். இவ்வண்ணம் கர்வத்தினால் அடக்கமில்லாத சொல்லை நான் சொல்லலாகாது. ஆனால், உங்கள் முன்னிலையிலேயே இந்தச்சொல்லைப் பயனுள்ளதாகச் செய்யப்போகிறேன். இந்த முகூர்த்தத்தில் அது உண்மையாகவோ பொய்யாகவோ ஆகப்போகிறது. இப்பொழுது என்னுடன் எவன் யுத்தம் செய்யப்போகிறானோ அவன் கதையைக் கையில் எடுத்துக் கொள்க' என்று கூறினான்.

---

## முப்பத்துமூன்றாவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



(யுதிஷ்டிரர் தங்களுள் ஒருவரைவென்றாலும் நாட்டை அடையலாமென்று துரியோதனனுக்குச் சொல்லியதும், மாதவர் பீமனும் துரியோதனனைவெல்வது ஸந்தேகமென்றதும், பீமன் துரியோதனனை எளிதிற் கொல்வேனென்றதும், மாதவர்முதலியோர் பீமனைப் புகழ்ந்ததும், பீமனும் துரியோதனனும் வீரவாதம் செய்து போருக்குமுயன்றதும்.)

அரசரே! துர்யோதனன் இவ்வண்ணம் அடிக்கடி கர்ஜிக்கும்போது,வாஸுதேவர் யுதிஷ்டிரர்மீதுகோபங்கொண்டவராகி, 'யுதிஷ்டிரரே! இவன் உம்மையாவது அர்ஜுனனையாவது நகுலனையாவது ஸஹதேவனையாவது யுத்தத்தில் விரும்புவானாகில் என்னசெய்கிறது? அரசரே! 'யுத்தத்தில் ஒருவனையே கொன்று கௌரவர்களுக்கு அரசனாகக்கடவாய்' என்று ஏன் இப்படிப்பட்ட இந்தக் காரியம் உம்மால் ஆராய்ந்துபாராமல் கூறப்பட்டது? அரசரே! இவன் பீமஸேனனைக் கொல்ல வேண்டுமென்கிற எண்ணத்தினால் புருஷவடிவமுள்ள இருப்புப்பாவையில்பதின்மூன்றுவர்ஷகாலம்யுத்தப்பயிற்சிசெய்திருக்கிறான். பரதர்களுள்சிறந்தவரே! இவனிடத்தினின்று எவ்வாறு கார்யம்ஸித்திக்கும்? அரசர்களுள்சிறந்தவரே! தயையினால் நீர்ஆலோசியாமல் செய்துவிட்டீர். யுத்தத்தில் இவனை எதிர்த்துச்சண்டை செய்கிறவன், குந்திநந்தனனான விருகோதரனைத்தவிர வேறு ஒரு மனிதனை நான்காணவில்லை. அவனும் அதிகமான பயிற்சியுள்ளவனல்லன். உமக்கும் சகுனிக்கும் முன்பு ஸமமாயில்லாத சூதாட்டம் ஏற்பட்டதுபோல இந்தப் போர்ச் சூதானது இவர்களுக்கு மறுபடியும் விசேஷித்துத்தொடங்கப்பட்டுவிட்டது. பீமன் பலசாலி; ஸமர்த்தன். அரசனான துர்யோதனன் மிக்கபயிற்சியுள்ளவன். அரசரே! பலசாலி பயிற்சியுள்ளவன் இவர்களுள் பயிற்சியுள்ளவனே மேற்படுகிறான். ராஜரே! அப்படிப்பட்ட இந்தப்பகைவன் உம்மால் நல்லவழியில் நிலைநிறுத்தப்பட்டான். நீரும் மிகக்கொடிய ஆபத்தில் நிலைபெறும்படி செய்யப்பட்டீர். நாங்கள் கஷ்டத்தை அடையும்படி செய்யப்பட்டோம். எந்த மனிதன் எல்லாச் சத்துருக்களையும் ஜயித்துக் கிடைத்த ராஜ்யத்தைக் கஷ்டதசையை அடைந்திருக்கிற ஒரு சத்ருவினால் அவ்வாறு கவரப்படும்படி செய்வான்? இப்படிப்பட்ட யுத்தத்தில் அவனை ஒருபாணத்தினால் அடித்துத்தள்ளித் தூக்கப்படும்படி

செய்யவேண்டும். தேவனாகஇருந்தாலும் யுத்தத்தில் கதாபாணியான துர்யோதனனை ஜயிக்கச்சக்தியுள்ளவனை உலகத்தில் இப்பொழுது நான் காணவில்லை. யுத்தத்தில் கதாபாணியான துர்யோதனனை ஜயிப்ப தற்குப் பல்குனனாவது நீராவது மாத்ரீகுமாரர்களான நகுலஸஹ தேவர்களாவது ஸமர்த்தர்களென்று நான் நினைக்கவில்லை. அரசனான துர்யோதனன் அதிகஸாமர்த்தியமுள்ளவன். நீரோ பீமனோ நகுலனோ ஸஹதேவனோ பல்குனனோ நியாயத்தினால் ஜயிக்கத்திறமையில்லாத வர்களே. பாரதரே! இவ்வாறிருக்க, 'யுத்தத்தில் எங்களுள்ஒருவனைக் கொன்று நீ ராஜாவாகிவிடு' என்றும், 'கதையினால் யுத்தம்செய்' என் றும் சத்துருவைப்பார்த்து நீர் எப்படிச்சொல்லுகிறீர்? விருகோதரனை அடுத்தும் நமக்கு ஜயமுண்டாவது ஸம்சயமே. மஹா பலசாலியான இந்தத் துர்யோதனன் நியாயமாக யுத்தஞ் செய்பவர்களுள் மிக்க பயிற்சியுள்ளவன். பாண்டு குந்தி இவர்களின் இந்தஸந்ததியானது நிச் சயமாக ராஜ்யத்தை அடையாது. முடிவில்லாதவனவாஸத்திற்காவது பிச்சையெடுப்பதற்காவது ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கிறது' என்றார்.

பீமஸேனன், 'மதுஸூதனரே!நீர்கவலைப்படவேண்டாம். இன்று எவ்விதத்தினாலும் அடையமுடியாத பகையினுடைய அக்கரையை அடையப்போகிறேன். நான் யுத்தத்தில் துர்யோதனனைக் கொல்லப் போகிறேன்; ஸந்தேகமில்லை. வாஸுதேவரே! தர்மராஜருக்கு வெற்றியானது நிச்சயமாகக் காணப்படுகிறது. என்னுடைய இந்தக் கதையானது ஒன்றரைமடங்குமிகப்பெரிதானது. துர்யோதனனுடை யது அப்படியன்று. மாதவரே! நீர் மனவருத்தமடைய வேண்டாம். நான் இந்தக்கதையினால் போர்க்களத்தில் சண்டைசெய்வதற்குச் சக்தி யுள்ளவனாக இருக்கிறேன். ஜனார்த்தனரே! நீங்கள் எல்லாரும் என் னைப்பார்த்துக்கொண்டிருங்கள். கோவிந்தரே! யுத்தகளத்தில் பற்பல சஸ்திரதாரிகளான மூவுலகத்திலுமுள்ள வீரர்களையும் தேவர்களோடு கூடியிருந்தாலும் யுத்தத்தில் எதிர்த்துப்போர்புரிவேன். அவ்வாறி ருக்க, துர்யோதனனை எதிர்ப்பதைப்பற்றிச்சொல்லவும் வேண்டுமா?' என்றுகூறினான். அவ்வாறுபேசுகின்ற விருகோதரனை வாஸுதேவர் ஸந்தோஷத்துடன் புகழ்ந்தார். இவ்விதமானவசனத்தையும் உரைக்க லானார். 'மிக்கபுஜபலமுள்ளவனே! தர்மராஜரான யுதிஷ்டிரர் உன்னை அடுத்துப் பகைவர்களைக்கொன்று, விளங்குகின்ற தம்முடைய ராஜ்ய ஸம்பத்தை அடைகிறார்; ஸம்சயமில்லை. உன்னால் திருதராஷ்டிர குமாரர்களனைவரும் யுத்தத்தில் கொல்லப்பட்டார்கள். அரசர்க ளும் ராஜகுமாரர்களும் யானைகளும் மாய்க்கப்பட்டனர். பாண்டு

நந்தன! மஹாயுத்தத்தில் உன்னை எதிர்த்துக் களிங்கர்களும் மகாரதர்களும் கீழ்நாட்டுவீரர்களும் காந்தாரர்களும் அவ்வாறே குருவீரர்களும் கொல்லப்பட்டார்கள். குந்திநந்தன! துர்யோதனனையும் கொன்று, கடல்சூழ்ந்த பூமியைத் திருமால் இந்திரனுக்குக் கொடுத்ததுபோலத் தர்மராஜருக்குக்கொடுப்பாயாக. பாவியானதார்த்தராஷ்டிரன் யுத்தத்தில் உன்னை எதிர்த்து நசிக்கப்போகிறான். நீ இவனுடைய இருதொடைகளையும் முறித்துப் பிரதிஜ்ஞையைப்பரிபாலனம் செய்யப்போகிறாய். பாவியான துர்யோதனனை நீ முயற்சியோடு எதிர்த்துப் போர்புரியவேண்டும். இவன் ஸமர்த்தன்; மிக்கவலிமையுள்ளவன்; எப்பொழுதுமே யுத்தத்தில் தேர்ச்சிபெற்றவன்' என்றார்.

ஜனநாதரே! மன்னரே! பிறகு, ஸாத்யகி பற்பல சொற்களால் அந்தப் பாண்டுநந்தனனான பீமஸேனனைப் புகழ்ந்தான். தர்மராஜரை முன்னிட்டவர்களான பாஞ்சாலர்களும் பாண்டவர்களைச்சேர்ந்தவர்களும்எல்லாருமே பீமஸேனனுடைய அந்தவார்த்தையைக்கொண்டாடினர். பிறகு, பயங்கரமானபலத்தையுடைய பீமன் ஸ்ருஞ்சயர்களுடன் நிற்கின்றவரும் ஜ்வலிக்கின்றஸூர்யனைப்போன்றவருமான யுதிஷ்டிரரைப்பார்த்துக்கூறலானான். 'நான்யுத்தத்தில் இவனோடு எதிர்த்துப் போர்புரிவதற்குச் சக்தியுள்ளவனாக இருக்கிறேன். புருஷாதமனான இந்தத்துரியோதனன் என்னை யுத்தத்தில் ஜயிப்பதற்குச்சக்தியுள்ளவனாகான். உள்ளத்தில் வைக்கப்பட்டிருக்கிற மிக்ககோபத்தை, அர்ஜுனன் காண்டவவனத்தில் நெருப்பை விட்டதுபோலத் திருதராஷ்டிரபுத்திரனான துரியோதனனிடத்தில் இன்று விடப்போகிறேன். பாண்டவரே! உம்முடைய மனத்திலிருக்கிற சல்யத்தை இப்பொழுது எடுக்கப்போகிறேன். அரசரே! இப்பொழுது கதாயுத்தத்தினால் பாவியான துர்யோதனன் கொல்லப்பட்ட பிறகு, நீர் ஸுகமாகஇரும்.தோஷமற்றவரே!இன்று கீர்த்திமயமானமாலையைஉமக்கு நான் போடப்போகிறேன். இன்று துர்யோதனன் பிராணனையும் ஐசுவர்யத்தையும் ராஜ்யத்தையும் இழக்கப்போகிறான். அரசனானதிருதராஷ்டிரனும் இப்பொழுது என்னால் புத்திரன் கொல்லப்பட்டானென்பதைக்கேட்டுச் சகுனியினுடையபுத்தியினாலுண்டான அசுபகாரியத்தைநினைக்கப்போகிறான்' என்றுசொன்னான். பரதர்களுள்சிறந்தவனும் வீர்யசாலியுமான பீமஸேனன் இவ்வாறுஉரைத்துக் கதையைக்கையிலெடுத்துக் கொண்டும் இந்திரன் விருத்திரனை அழைத்ததுபோல அழைத்துக்கொண்டும் யுத்தத்திற்காக எழுந்து நின்றான். அதிகவீர்யமுள்ளவனான உம்முடைய புத்திரன் அவன் அழைத்த

தைப்பொருதவனுகி ஒருயானை மற்றொருயானையை எதிர்ப்பதுபோல் விரைவாக எதிர்த்துநின்றான். கதையைக்கையில்கொண்டுயுத்தத்திற்காக நெருங்கிவந்திருக்கிற உம்முடையகுமாரனைப் பாண்டவர்கள் எல்லாரும் சிகரத்துடன் கூடின கைலாஸத்தைப்போலக் கண்டார்கள். தன் கூட்டத்தைவிட்டுப் பிரிந்திருக்கின்ற யானையைப்போல ஸஹாயமற்றவனுயிருக்கின்ற மஹாபலசாலியான துர்யோதனனை அடைந்து பாண்டவர்கள் மிக்க ஸந்தோஷத்தைஅடைந்தார்கள். துர்யோதனனுக்கும் பரபரப்பாவது பயமாவது வாட்டமாவது மனவருத்தமாவது உண்டாகவில்லை. யுத்தத்தில் ஸிம்மம்போல நின்றான். அரசரே! அப்பொழுது நன்றாக மேலேதூக்கப்பட்ட கதையுடன்கூடியவனும் சிகரத்துடன்கூடின கைலாஸம்போன்றவனுமான துர்யோதனனைப்பார்த்துப் பிறகு பீமஸேனன் உரைக்கலானான். 'துர்யோதன! அரசரான திருதராஷ்டிரராலும் உன்னாலும் எங்கள் விஷயத்தில் செய்யப்பட்டதும் வாரணாவதத்தில் முன்நடந்ததுமான அந்தப்பாவமானகார்யத்தை நினைத்துக்கொள். சகுனியினுடைய புத்திலாகவத்தினால் ஸபையின் நடுவில் வீட்டுக்கு விலக்காயிருந்த த்ரௌபதியும் இழுத்துவரப்பட்டாள். சூதாட்டத்திலும் அரசரானயுதிஷ்டிரர்வஞ்சிக்கப்பட்டார். கெட்டஎண்ணமுள்ளவனே! நிரபராதிகளான பார்த்தர்களிடத்தில் இன்னும் வேறெந்தப்பாவங்களைச்செய்தாயோ அவற்றின் பெரிதான பலனைப்பார். மிக்ககீர்த்தியையுடையவரும் பரதஸ்ரேஷ்டரும் நம் அனைவருக்கும் பிதாமஹரும்கங்காபுத்திரருமானபீஷ்மர் உன்னிமித்தமாக அடிக்கப்பட்டுச் சரதல்பத்தில் படுத்திருக்கிறார். துரோணரும் கர்ணனும் கொல்லப்பட்டார்கள். பிரதாபமுள்ளவனான சல்யனும் கொல்லப்பட்டான். வைரமென்கிற நெருப்பை ஆதியிலுண்டுபண்ணின சகுனியும் யுத்தத்தில்கொல்லப்பட்டான். சூரர்களான உன்னுடைய பிராதாக்களும் ஸைனிகர்களுடன்கூடினபுத்திரர்களும் கொல்லப்பட்டார்கள். யுத்தங்களில் திரும்பாதவர்களும் சூரர்களுமான அரசர்களும் கொல்லப்பட்டார்கள். இவர்களும் இன்னும்அநேக க்ஷத்திரியச்ரேஷ்டர்களும்கொல்லப்பட்டார்கள். அவ்வாறேபாவியும் த்ரௌபதிக்குக் கிலேசத்தையுண்டுபண்ணினவனுமான பிராதிகாமியும் கொல்லப்பட்டான். குலத்தைக்கெடுக்கவந்த புருஷாதமனான நீ ஒருவன்தான் மிகுந்திருக்கிறாய். உன்னையும் இப்பொழுது கதையினால் கொல்லப்போகிறேன். இந்தவிஷயத்தில் ஸந்தேகமில்லை. அரசனே! இப்பொழுது நான் யுத்தத்தில் உன்னுடைய கொழுப்பு முழுமையையும் ராஜ்யத்திலுள்ள பேராசையையும் பாண்டவர்களி

டத்தில் நீ செய்யும் பாவச்செயலையும் நாசம்செய்யப்போகிறேன்' என்றான். துர்யோதனன், 'விருகோதர! பலவாறான தற்புகழ்ச்சியினால் யாதுபயன்? இப்பொழுது என்னுடன் யுத்தம்செய். உனக்கு யுத்தத்திலுள்ளசிரத்தையை இப்பொழுது நான்போக்கப்போகிறேன். பாவி! இமயமலையினுடைய சிகரம்போன்ற பெரிதானகதையை எடுத்துக்கொண்டு கதாயுத்தத்தில் ஸன்னத்தனாக நிற்கின்ற என்னை நீ பார்க்கவில்லையா? பாவி! நீதியுடன் யுத்தஞ்செய்கின்ற எந்தச் சத்துருத்தான் தேவர்களுள் இந்திரனேயானாலும் கதையுடன்கூடின என்னை இப்பொழுது கொல்வதற்குச் சக்தியுள்ளவனாவான்? குந்தீபுத்திர! ஜலமில்லாத சரத்காலமேகம்போல வீணாகக்கர்ஜிக்காதே. உன்னுயிரை நாசஞ்செய்வதற்குள்ளேயே உன்பலத்தை யுத்தத்தில் காட்டு' என்றுமொழிந்தான். வெற்றியில் விருப்பமுள்ளவர்களான ஸ்ருஞ்சயர்களுடன்கூடின பாண்டவர்கள் அவனுடைய அந்தவார்த்தையைக்கேட்டு, அந்தவசனத்தை எல்லோரும் புகழ்ந்தார்கள். அரசரே! மனிதர்கள் மதம்பிடித்தயானையைக் கைக்கொட்டினால் உத்ஸாஹப்படுத்துவதுபோலப் பகைவர்கள் துர்யோதனனை மறுபடியும் நல்லஉத்ஸாஹத்தைஅடையும்படி செய்தார்கள். அந்தச்சமயத்தில் ஜயத்தில்விருப்பமுற்றவர்களான பாண்டவர்களுடைய யானைகள் கர்ஜித்தன; குதிரைகள் அடிக்கடி கனைத்தன. சஸ்திரங்கள் நன்றாகப் பிரகாசித்தன.

---

## முப்பத்துநான்காவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



(கதாயுத்தத்தோட்டக்கத்தில் பலராமர்வந்ததும், அவர் பாண்டவர்கள் முதலானவர்களால் பூஜிக்கப்பட்டு உட்கார்ந்தவுடன் மறுபடி கதாயுத்தம் தொடங்கியதும்.)

மன்னரே! பிறகு, மிகவும் பயங்கரமான அந்த யுத்தமானது நன்றாக முறையோடு ஆரம்பிக்கப்பட்டு மஹா பலமுள்ளவர்களான எல்லாப் பாண்டவர்களும் உட்கார்ந்திருக்கையில், பனை மரத்தைக் கொடியாகக்கொண்டவரும் கலப்பையை ஆயுதமாகக்கொண்டவருமான பலராமர், தம்முடைய சிஷ்யர்களான துர்யோதனன் பீமன் இருவர்களுக்கும் கதாயுத்தம் நேர்ந்ததைக் கேட்டு வந்தார். அவரைக்கண்டு கேசவரும் பாண்டவர்களும் அதிக ஸந்தோஷத்துடன் அருகில்வந்து வந்தனம்செய்து முறைப்படி பூஜித்தார்கள்.

வேந்தரே! பூஜித்தபிறகு, 'பலராமரே! யுத்தத்தில் சிஷ்யர்களுடைய ஸாமர்த்தியத்தைப் பாரும்' என்கிற இந்தவசனத்தை உரைத்தார்கள். அப்பொழுது, பலராமர் பாண்டவர்களுடன்கூடின வாஸுதேவரையும் கதாபாணியாகநிற்கின்ற குருவம்சத்திலுதித்தவனான துர்யோதனனையும் பார்த்துச் சொல்லலானார். 'தீர்த்தயாத்திரைக்காகப் புறப்பட்ட எனக்கு இன்றோடு நாற்பத்திரண்டு நாள்களாகின்றன. புஷ்யத்தில் புறப்பட்டேன். சிரவணத்தில் திரும்பிவந்தேன். மாதவ! சிஷ்யர்களுடைய கதாயுத்தத்தைப் பார்க்க விருப்பமுள்ளவனாக இருக்கிறேன்' என்றார். பிறகு, யுதிஷ்டிரராஜர் பலராமரைக்கட்டிக்கொண்டு நல்வரவையும் க்ஷேமத்தையும் தக்கபடிவினவினார். மஹாவில்லாளிகளும் பிரியப்படத்தக்கவர்களும் கீர்த்திசாலிகளுமான கிருஷ்ணார்ஜுனர்களும் அதிகபிரீதியுள்ளவர்களாக ஹலாயுதரை அபிவாதனஞ்செய்து கட்டிக்கொண்டார்கள். அரசரே! அவ்வாறு சூரர்களான மாத்ரீபுத்திரர்களும் த்ரௌபதியினுடைய ஐந்துகுமாரர்களும் மஹாபலசாலியான பலராமரை அபிவாதனஞ்செய்து நின்றார்கள். வேந்தரே! பிறகு, அவ்வாறே கதாயுதத்தைக் கையில் ஏந்தியவர்களான பீமஸேனனும், பலசாலியும் உமதுகுமாரனுமான துரியோதனனும் பலராமரைப் பூஜித்தார்கள். அங்குள்ள அந்தஅரசர்கள் அந்தஸமயத்தில் பலராமரை வரவேற்புமொழிகளால் அடிக்கடி கௌரவித்து மஹாத்மாவான அவரைப்பார்த்து, 'மஹாபாகுபலமுள்ளவரே! யுத்தத்தைப் பாரும்' என்று இவ்வாறு * கூறினர். அப்பொழுது, பலராமர் ஸ்ருஞ்சயர்களுடன்கூடின பாண்டவர்களைக் கட்டிக்கொண்டு அளவற்ற பராக்ரமத்துடன்கூடினவர்களான எல்லா அரசர்களையும் பார்த்து க்ஷேமம்விசாரித்தார். அவ்வாறே, அவர்களும் பலராமரைஅணுகி, 'அநாமயம் ?' (=கவலையற்றிருக்கிறீரா?) என்று வினவினார்கள். பலராமர் மஹாத்மாக்களான எல்லாக்ஷத்ரியர்களையும் திருப்பி மரியாதைசெய்து குசலப்ரஶ்னத்தையும் வயதுக்குத்தக்கபடி ஸம்பாஷணத்தையுஞ்செய்து ஜனார்த்தனரையும் ஸாத்யகியையும் அன்புடன் கட்டிக்கொண்டு அவர்களிருவரையும் உச்சிமோந்து, குசலப்ரஶ்னத்தையும் செய்தார். அரசரே! அவ்விருவரும் ஸந்தோஷத்துடன் இந்திரனும் உபேந்திரனும் தேவர்களுக்கெல்லாம் நாதரான பிரம்மதேவரைப் பூஜிப்பதுபோலக் குருவான அந்தப்பலராமரை முறைப்படி பூஜித்தார்கள். பாரதரே! பிறகு, தர்மநந்தனர் பகைவர்களை அடக்குபவரான பலராமரைப் பார்த்து, 'பலராமரே! பிராதாக்களுடைய

* இரட்டித்தலால் ஒருசொல் விடப்பட்டது.

இந்தமஹாயுத்தத்தைப் பாரும்' என்று கூறினர். மஹாரதர்களால் பூஜிக்கப்படுகின்றவரும் அதிகமானபிரீதியையுடையவரும் மிக்கபுஜ பலமுள்ளவரும் காந்தியையுடையவரும் கேசவருக்குமூத்தவருமான பலதேவர் அவர்களுடையமத்தியில் உட்கார்ந்தார். அரசர்களுடைய மத்தியில் உட்கார்ந்திருப்பவரும் கறுப்புவஸ்திரத்தைத் தரித்தவரும் வெண்மையான காந்தியையுடையவருமான அந்தப்பலராமர் ஆகாயத்தில் நக்ஷத்திரங்களுடையகூட்டங்களால் சூழப்பட்டசந்திரன்போல விளங்கினர். மன்னரே ! பிறகு, வைரத்தினுடைய முடிவை உண்டு பண்ணஎண்ணங்கொண்டவர்களான அவ்விருவருக்கும் (காண்போர்) புளகமடையத்தக்கதும் நாசத்தையுண்டுபண்ணுகிறதுமான கைகலந்தயுத்தம் நடந்தது'' என்றுகூறினன்'' என்றார்.

---

## முப்பத்தைந்தாவது அத்யாயம்.

### ஹ்ரதப்ரவேசபர்வம். (தேர்டர்ச்சி.)



**(ஜனமேஜயர் வைசம்பாயனரிடம் பலராமருடைய தீர்த்தயாத்திரை முறையை வினவியதும், அவர்சொல்லத்தொடங்கிப் பிரபாஸ தீர்த்தத்திற்கு அப்பெயர்வரக் காரணம்கூறியதும்.)**

ஜனமேஜயர், "பிரபுவானபலராமர் முன்னமே அந்த யுத்தம் நேர்ந்ததருணத்தில், 'கேசவ ! நான் த்ருதராஷ்டிரபுத்திரனான துர்யோதனனுக்காவது பாண்டவர்களுக்காவது உதவிசெய்யப்போகிறதில்லை. நான் மனம்வந்தபடி போகப்போகிறேன்' என்று கேசவரைக் கேட்டுக்கொண்டு விருஷ்ணிகளுடன் புறப்பட்டுச்சென்றார். பிராம்மணரே ! சத்துருக்களை அழிப்பவரானராமர் இவ்விதம் சொல்லிவிட்டுஅப்பொழுதுசென்றாரே?மீண்டும்அவருடையவரவை எனக்கு உரைப்பீராக. விஸ்தாரமாகச்சொல்லும். எப்படி ராமர்வந்தார்? எவ்வாறு யுத்தத்தைப்பார்த்தார்? மிகச்சிறந்தவரே ! நீர் ஸமர்த்தராக வன்றோஇருக்கிறீர்' என்றுவினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

"மிக்க புஜபலமுள்ளவரே ! மஹாத்மாக்களான பாண்டவர்கள் உபப்லாவ்ய நகரத்திலிருந்துகொண்டு எல்லாப்பிராணிகளுடைய நன்மையின்பொருட்டும்விரோதத்தைப்போக்கக்கருதி மதுஸூதனரான ஸ்ரீ வாஸுதேவரைத் துர்யோதனனருகில் அனுப்பினர்கள். அவர் ஹஸ்தினபுரஞ்சென்று திருதராஷ்டிரரையும்அணுகி, வழியைவிட்டு விலகாததும் மிகவும்நன்மையாயிருப்பதுமான வசனத்தைஉரைத்

தார். திருதராஷ்டிரராஜர், முன்பு எதுஎவ்விதம்சொல்லப்பட்டதோ அதை அவ்விதம் அனுஷ்டிக்கவில்லை. வேந்தரே! புருஷர்களுள் சிறந்தவரும் மிக்கபுஜபலமுள்ளவருமான மாதவர் அந்தஹஸ்தினு பட்டணத்தில் ஸமாதானத்தைப்பெறுமல் உபப்லாவ்யத்தைநோக்கி வந்தார். நரஸ்ரேஷ்டரானஅவர், திருதராஷ்டிரபுத்ரனுன துர்யோதனனுல் அனுப்பப்பட்டு அந்தஹஸ்தினுபட்டணத்திலிருந்து திரும்பிப் பாண்டவர்களுடைய சேனையைக்குறித்துவந்தார். தர்மநந்தனரை அடைந்து (அங்குதாம்) சொன்னதையும், பின்பு நடந்த விருத்தாந்தத்தையும் உள்ளபடிஉரைத்தார். 'கௌரவர்கள் காலத்தினுல் தூண்டப்பட்டவர்களாகி என்னுடையவசனத்தை அனுஷ்டிக்கவில்லை. பாண்டவர்களே! என்னுடன்கூடப் புஷ்யநக்ஷத்திரத்திலே புறப்படுங்கள்' என்றும்சொன்னுர். பிறகு, சேனைகள் வகுக்கப்படும் பொழுது பலசாலிகளுள்சிறந்தவரும் பெரியமனமுள்ளவருமான பலராமர் பிராதாவானமாதவரைப்பார்த்து, 'சிறந்தபுஜபலமுள்ளவனே! மதுஸூதன! அவர்களுக்கும் (=தார்த்தராஷ்டிரர்களுக்கும்) உதவிசெய்யவேண்டும்' என்றுகூறினுர். அப்பொழுது கோவிந்தர், இவருடைய அந்தச்சொற்படி செய்யவில்லை. பிறகு, பெரும்புகழுள்ளவரும் கலப்பையைத்தரித்தவருமான பலராமர் கோபத்தினுல் மூடப்பட்டமனத்துடன் அனுஷநக்ஷத்திரத்துடன்சேர்ந்ததினத்தில் எல்லாயாதவர்களோடும் ஸரஸ்வதீநதியில் தீர்த்தயாத்திரையைஉத்தேசித்துப் புறப்பட்டார். சத்துருக்களை அடக்குகிறவனுன கிருதவர்மா துர்யோதனனை அடைந்தான். வாஸுதேவரோ ஸாத்யகியோடு பாண்டவர்களை அடைந்தார். சூரரானரோஹிணிபுத்திரர் புறப்பட்டவுடனே, மதுஸூதனர் புஷ்யநக்ஷத்திரத்துடன்கூடின தினத்தில் பாண்டவர்களை முன்னிட்டுக்கொண்டு குருதேசத்தைநோக்கிச்சென்றுர். மார்க்கத்தில்செல்லுகிற ராமர், சென்றுகொண்டே வேலைக்காரர்களைப்பார்த்து, 'தீர்த்தயாத்திரையில் வேண்டியபண்டங்களையும் எல்லாஉபகரணங்களையும் அக்னிகளையும் யாகம்செய்பவர்களையும் துவாரகையினின்று கொண்டுவந்து சேருங்கள். தீர்த்தயாத்திரை நிமித்தமாகப் பொன்களையும் வெள்ளிகளையும் கறவைப்பசுக்களையும் வஸ்திரங்களையும் குதிரைகளையும் யானைகளையும் ரதங்களையும் கோவேறு கழுதைகளையும்ஒட்டகங்களையும் (பல்லக்குமுதலிய) வாகனங்களையும் எல்லாராஜபரிவாரங்களையும் சீக்கிரமாகக்கொண்டுவாருங்கள். சீக்கிரமாகச்செல்லுந்திறமையுடையவர்களே! ஸரஸ்வதீநதியினுடைய பிரவாகத்தை எதிர்நோக்கிச்செல்லுங்கள். ரித்விக்குக்களையும் நூறுநூறு

கப் பிராம்மணோத்தமர்களையும் அழைத்துவாருங்கள்' என்றுகட்டளை யிட்டார். அரசரே! கௌரவர்களுக்குத்தீங்கைவிளைவிக்கின்ற யுத்தத் தொடக்கத்தில், அப்பொழுது மஹாபலசாலியான பலதேவர் வேலைக் காரர்களைப் பார்த்து இவ்வாறுகட்டளையிட்டுத் தீர்த்தயாத்திரையைக் குறித்துச் சென்றார். யாதவர்களுள் உத்தமரும் ஸ்ரீமானுமான பலராமர் தீர்த்தயாத்திரையைநினைத்துக்கொண்டு ஸமுத்திரத்தி னின்று ஸரஸ்வதீநதியின்பிரவாகத்தை எதிர்நோக்கிச்சென்றார். பர தர்களுள்சிறந்தவரே! பலபத்திரர், ரித்விக்குக்களாலும் ஸுஹ்ருத் துக்களாலும் அவ்வாறே மற்றப்பிராம்மணோத்தமர்களாலும், ரதங் களாலும் யானைகளாலும் குதிரைகளாலும் வேலைக்காரர்களாலும் கோவேறுகழுதைகளும் ஒட்டகங்களும்கட்டியிருக்கிற அனேகவாக னங்களாலும் சூழப்பட்டவராகித் தீர்த்தயாத்திரைக்குச் சென்றார். அரசரே! பாரதரே! இவர்செல்லும் தேசங்களில் எந்தவஸ்துக்களை எதிர்பார்க்கின்றார்களோ அப்படிப்பட்ட பற்பலவிதமான கொடுக்கத் தக்கவஸ்துக்களும் பற்பலவிததானங்களும், களைத்தவர்களும் உடம் பிளைத்தவர்களும் சிசுக்களும் பிராயமுதிர்ந்தவர்களுமான மனிதர் கள் யாசகர்கள் இவர்களின் பூஜையின்பொருட்டு அவ்வண்ணம் மிகுதியாக ஒவ்வொருதேசத்திலும் ஏற்படுத்தப்பட்டன. போஜன விருப்பமுள்ளவர்களுக்காக எங்கும் அன்னம் ஸித்தம்செய்யப் பட்டிருந்தது. அரசரே! எப்பொழுதுஎப்பொழுது எந்தஎந்தப் பிராம்மணர் எந்தஎந்தஇடத்தில் புஜிக்கத்தக்கவஸ்துவைப் புஜிப் பதற்குவிரும்பினாரோ அப்பொழுது அப்பொழுது அந்த அந்தப்பிரா ம்மணருக்கு அந்தஅந்தவிடத்தில் அவ்வாறு உணவுப்பொருள்களைக் கொண்டுவந்தார்கள். மன்னரே! ரோஹிணி புத்திரரானபலராமரு டையகட்டளையினால் ஆங்காங்கு இருப்பவர்கள் அந்தஅந்தஇடத்தில் எங்கும் தின்னத்தக்க வஸ்துக்களுடையகுவியல்களையும் குடிக்கத் தக்கவஸ்துக்களுடையராசிகளையும் ஸித்தஞ்செய்தார்கள். அந்த இடத்தில் ஸுகத்தைவிரும்புகின்ற பிராம்மணர்களுடையபூஜையின் பொருட்டு விலையுயர்ந்தவஸ்திரங்களும் கட்டில்களும் விரிப்புக்களும் ஏற்படுத்தப்பட்டன. பாரதரே! எந்தவிடத்தில் எந்தப்பிராம்ம ணன் உறங்குகிறானோ எந்தவிடத்தில் எவன் விழித்திருக்கிறானோ அந்தஅந்தஇடத்திலேயே அவர்களெல்லாருக்கும் எல்லாம் ஸித்தம் செய்யப்பட்டனவாகக்கண்டார். அப்பொழுது எல்லா ஜனங்களும் ஸௌகரியப்படி சென்றார்கள்; நின்றார்கள். செல்லவிருப்பமுள்ள வருக்கு வாகனங்களையும் தாகமுள்ளவருக்குப் பானங்களையும் பசி

கொண்டவருக்கு ருசியுள்ளஅன்னங்களையும் வஸ்திரங்களையும் ஆப ரணங்களையும் மனிதர்கள் அவ்விடத்தில் கொண்டுவந்தார்கள். மன்னரே! அந்தவழியானது எல்லாருக்குமே ஸுகரமாகவிளங்கிற்று. வீரரே! அங்குசெல்லுகின்றமனிதர்களுக்கு அப்பொழுது அந்தவழியானது ஸ்வர்க்கத்துக்கொப்பானதாகவும் என்றும்மகிழ்பவர்களான ஜனங்களோடுகூடியதாகவும், ருசியுள்ள பக்ஷணங்களுள்ளதாகவும் ஜலமுள்ளதாகவும், கடைத்தெருக்கள், கடைகள், விற்கக்கூடிய பண்டங்கள் இவைகளுடன்கூடியதாகவும், பற்பல ஜனங்களால் சூழப்பட்டதாகவும், பற்பல மரங்களோடும் கொடிகளோடும்கூடியதாகவும் பற்பலரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டதாகவும் இருந்தது. வேந்தரே! பிறகு, மஹாத்மாவும் யாதவர்களுள் சிறந்தவீரரும் பிரஸித்தி பெற்றவருமான பலராமர் நியமத்துடன் புண்யதீர்த்தங்களில் நல்ல மனமுள்ளவர்களுக்குப் பொருள்களையும் பிராம்மணர்களுக்கு யாக தக்ஷிணைகளையும் கொடுத்தார். அவர், பிராம்மணர்களுக்கு நல்ல வஸ்திரத்துடன் கூடியவையும் கொம்புகளில் பொற்குமிழ்கள் கட்டியவையுமான ஆயிரக்கணக்கான கறவைப்பசுக்களையும் பற்பலதேசங்களிலுண்டான குதிரைகளையும் வாகனங்களையும் நல்ல வேலைக்காரர்களையும்கொடுத்தார். ராமர் உத்தமப்பிராம்மணர்களின்பொருட்டு ரத்னங்களையும் முத்துக்களையும் மணிகளையும் பவளங்களையும் சிறந்ததங்கத்தையும் நல்ல சுத்தமான வெள்ளியையும் இருப்புப் பாத்திரத்தையும் தாம்ரமயமான பாத்திரத்தையும் கொடுத்தார். மஹாத்மாவும் ஒப்பற்ற ப்ரபாவமுள்ளவரும் உதாரமான சரித்திரத்துடன்கூடியவருமான அந்தப்பலராமர் ஸரஸ்வதீதீர்த்தத்தை அடைந்திருக்கிறவர்களுக்கு இவ்வண்ணமாக மிகுதியானதனத்தைக் கொடுத்தார். பிறகு, முறையாகக் குருக்ஷேத்திரம் சென்றார்" என்றார்.

ஜனமேஜயர், "மனிதர்களுள்சிறந்தவரே! ஸரஸ்வதீநதி தீர்த்த கட்டங்களுடைய குணத்தையும் உத்பத்தியையும் பயனையும் (அங்கு ஸ்நானஞ்செய்வதனால்) நிறைவேறக்கூடிய காரியத்தையும் எனக்குச் சொல்வீராக. பகவானே! பிரம்மவித்துக்களுள் சிறந்தவரே! கிரமப்படி வரிசையாகத் தீர்த்தங்களைச் சொல்லும். எனக்கு அதிக குதூகலம் இருக்கின்றது" என்றுவினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

"அரசரே! ராஜேந்திரரே! பரிசுத்தமானவையும் என்னால் சொல்லப்படுகின்றவையுமான தீர்த்தங்களுடைய பயனையும் குணத்தையும் உத்பத்தியையும் முழுமையும் கேளும். மஹாராஜரே! நரேந்திரரே! யாதவர்களுள் சிறந்தவீரரான பலராமர் க்ஷயரோகத்

தினால் க்ஷீணிக்கின்ற சந்திரன் முன்பு எந்த இடத்தில் சாபத்தி னின்று விடுபட்டவனாகி மீண்டும் தேஜஸை அடைந்து எல்லா உலகத்தையும் பிரகாசிக்கச்செய்கிறானோ அந்தப்புண்யமான பிர பாஸதீர்த்தத்தைக்குறித்து ரித்விக்குக்களோடும் நண்பர்களோடும் பிராம்மணர்களுடைய கூட்டங்களோடும் வந்தார். பூமியிலுள்ள தீர்த்தங்களுள் இஃதன்றோ மிகச்சிறந்தது. இதற்கு, சந்திரனை விளங்கச்செய்ததால் பிரபாஸமென்று பெயர்'' என்றுகூறினார்.

---

## முப்பத்தாறாவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



(சந்திரன் க்ஷயரோகம் அடைந்து அனுகூலம் பெற்றகதையும், பலராமர் அந்தப்பிரபாஸதீர்த்தத்தில் ஸ்நான முதலியன செய்ததும்.)

ஜனமேஜயர் "மகிமைபொருந்தின சந்திரன் யாதுகாரணம் பற்றி க்ஷயரோகத்தினால் மூடப்பட்டான்? சிறந்த அந்தத்தீர்த்தத் தில் அவன் எவ்வாறு ஸ்நானஞ்செய்தான்? சந்திரன் அந்தத் தீர்த் தத்தில் எவ்விதமாக ஸ்நானம்செய்து மீண்டும் பூர்த்திசெய்யப்பட் டான்? மஹரிஷியே! இவையனைத்தையும் எனக்கு விஸ்தாரமாக உரைப்பீராக'' என்று வினவ, வைசம்பாயனர் சொல்லத் தொடங் கினார்.

"ஐயா! பிரஜைகளுக்குநாதரே! தக்ஷருக்குப் பலபெண்கள் உண்டானார்கள். அந்தத்தக்ஷர், அவர்களுள் இருபத்தேழு பெண் களைச் சந்திரனுக்குக் கொடுத்தார். ராஜேந்திரரே! சுபமானகர்மங் களைச் செய்தவனான அந்தச்சந்திரனுக்குப் பத்னிகளும் நக்ஷத்ரமண் டலத்தோடு சேருவதில் ஆவலுள்ளவர்களுமான அந்தத் தக்ஷ கன்னிகைகள் (நாட்களின்) கணக்குக்கும் ஆனார்கள். விசாலமான கண்களையுடையவர்களான அந்தஸ்திரீகளெல்லாரும் ரூபத்தினால் நிக ரில்லாதவர்களாயிருந்தார்கள். அவர்களுள் ரோஹிணியானவள் ரூபஸம்பத்தினால் மேலானவளானாள். அதனால் அந்தச் சந்திர பகவான் அவளிடத்தில் அதிகப்பிரீதியைப் பாராட்டினான். அவள் இவனுக்கு மனத்துக்கு இன்பத்தை உண்டுபண்ணுகிறவளானாள். அதனால், பிறகு, அவன் அவளை எப்பொழுதும் அனுபவித்தான். பிறகு, நக்ஷத்திரங்களுடைய பேர்வாய்ந்தவர்களான அந்தஸ்திரீக ளெல்லோரும் மஹாத்மாவான சந்திரனிடத்தில் கோபங்கொண்டு

முயற்சியுடனே பிதாவும் ஸ்ருஷ்டிகர்த்தருமான தக்ஷரிடம்வந்து, 'பிரஜாநாதரே! சந்திரன் எங்களிடத்தில் வஸிக்கிறதில்லை. எப்பொழுதுமே ரோஹிணியை அடைகிருன். அப்படிப்பட்ட நாங்களனைவர்களும் ஒன்றுசேர்ந்து ஆகாரநியமத்துடனும் தவத்தைச் செய்வதில் ஊக்கத்துடனும் உமதருகில் வஸிக்கப்போகின்ருேம்' என்றுசொன்னர்கள். தக்ஷர் அவர்களுடைய வார்த்தையைக்கேட்டுப்பிறகு, சந்திரனைப்பார்த்து, 'நீ எல்லாமனைவிகளிடத்திலும் ஸமமாயிரு. பெரிதான அதர்மம் உன்னை அணுகவேண்டாம்' என்று சொன்னர். தக்ஷர் அந்தக்கன்னிகைகள் எல்லோரையும் பார்த்து, 'குழந்தைகாள்! நீங்கள் சந்திரனிடம்செல்லுங்கள். சந்திரன் என்னுடையகட்டளையினல் எல்லாரிடத்திலும் ஸமமாகவஸிப்பான்' என்று உரைத்தார். அவ்வாறு (அவரால்) அனுப்பப்பட்ட மங்களகரிகளான அந்தப்பெண்கள் சந்திரனுடைய வீட்டைஅடைந்தார்கள். அரசரே! காந்தியுள்ளவனை சந்திரன் அவ்வாறு சொல்லப்பட்டும் மறுபடியுமே அடிக்கடி ரோஹிணியுடன்சேர்ந்து பிரீதியை அடைந்திருந்தான். பிறகு, அந்த ஸ்திரீகளனைவரும் ஒருங்குசேர்ந்து மீண்டும் (பிதாவினிடம்போய்), 'ஸோமன் எங்களிடத்தில் வஸிக்கவில்லை. உமதுசொற்படி நடக்கவில்லை. உமதுபணிவிடையில் ஊக்கமுள்ளவர்களாக உம்முடையஸமீபத்தில் வாஸம்பண்ணப்போகிருேம்' என்று கூறினர்கள். அந்தக் கன்னிகைகளுடைய அந்த வார்த்தையைக் கேட்டு, தக்ஷர் பிறகு ஸோமனைநோக்கி, 'காந்தியினல் மிகப்பிரகாசிப்பவனே! நீ எல்லாமனைவிகளிடத்திலும் ஸமமாயிருந்துகொண்டிரு. உன்னை நான் சபிக்கவேண்டாம்' என்று சொன்னர். தக்ஷருடைய அந்தவார்த்தையை அவமதித்துவிட்டுச் சந்திரன் ரோஹிணியுடன் கூடவே வஸித்துவந்தான். பிறகு, அந்தப் பெண்கள் மீண்டும் கோபங்கொண்டு பிதாவையடைந்து அப்பொழுது அவரைத் தலையால் வணங்கி, 'ஸோமன் எங்களிடத்தில் வஸிக்கிறதில்லை. ஆதலால், எங்களுக்கு நீரே ரக்ஷகராகவேண்டும். சந்திரபகவான் எப்பொழுதும் ரோஹிணியினிடத்திலேயேவாஸஞ்செய்கிருன். அவன் உம்முடைய வார்த்தையை மதிக்கவில்லை. எங்களிடத்திலும் ஸ்நேகத்தைவிரும்புகிருனில்லை. ஆதலால், எங்களெல்லாரையும் ஸோமன் அடையும்படி செய்து காப்பாற்றும்' என்று கூறினர்கள். அரசரே! பகவானை தக்ஷர் அந்த வார்த்தையைக்கேட்டுக் கோபங்கொண்டு ரோஷத்தினல் ஸோமனுக்கு க்ஷயரோகம் உண்டாகும்படிசெய்தார். அந்த ரோகமும் நக்ஷத்திரங்களுக்குத் தலைவனை சந்திரனை அடைந்தது.

க்ஷயரோகத்தினல் சரீரம் மூடப்பட்ட அந்தச்சந்திரன் நாளுக்குநாள் தேய்ந்தான். மன்னரே! மஹாராஜரே! சந்திரன் பற்பலயாகங்களாலே தேவதைகளை ஆராதித்து அந்தக்ஷயரோகத்தினின்று விடுபடும்பொருட்டு முயற்சியையும்செய்தான்; அவன்சாபத்தினின்று விடுபடாமல் க்ஷயத்தையேஅடைந்துகொண்டிருந்தான். பிறகு, ஸோமன் க்ஷீணித்துக்கொண்டிருக்கவே, ஒஷதிகள் முளைக்கவில்லை. எல்லாம் எல்லாவிதத்திலும்சுவைக்கத்தக்கரஸமும்வீர்யமும்அற்றனவாயின. ஒஷதிகளுக்கு க்ஷயமுண்டாகவே, பிராணிகளுக்கும் க்ஷயமுண்டாயிற்று. சந்திரன்க்ஷீணித்தபோது எல்லாப்பிரஜைகளும் மெலிந்தன. அரசரே! பிறகு, தேவர்கள் ஸோமனைவந்தடைந்து, 'ஸோம! இதென்ன உன்னுடைய உருவமானது இவ்விதமாகவிளங்குகின்றது? எந்தக்காரணத்தினல் உனக்கு இந்தப்பெரும்பயம் நேர்ந்திருக்கின்றதோ அஃதனைத்தையும் எங்களுக்குச் சொல். உன்னிடத்தினின்றும் காரணத்தைக் கேட்டபிறகு, நாங்கள் பரிகாரம்செய்வோம்' என்றுவினவினர்கள். தேவர்களால் இவ்வாறுகேட்கப்பட்டசந்திரன் அவர்களனைவர்களையும் பார்த்துச் சாபத்தினது காரணத்தையும்அவ்வாறே தனக்குக்ஷயரோகம் சம்பவித்திருக்கின்றதையும் சொன்னன். பிறகு, தேவர்கள் அவனுடையவசனத்தைக்கேட்டு தக்ஷரைஅடைந்து, 'பகவானே! நீர் மனத்தெளிவை அடையவேண்டும். ஸோமன்விஷயத்தில் இந்தச் சாபத்தைநிவிர்த்திக்கவேண்டும். இந்தச்சந்திரன் க்ஷீணித்துச் சிறிதேமிகுதியுள்ளவனுகக் காணப்படுகிறான். தேவநாதரே! இவனுடைய க்ஷயத்தினலேயே பிரஜைகளும் கொடிகளும் ஒஷதிகளும் பற்பலவித்துக்களும் க்ஷயத்தை அடைந்தன; அவ்வாறே மனிதர்களும் க்ஷீணித்தார்கள். லோகநாதரே! நீர் கருணைபுரியவேண்டும்' என்று வேண்டினர்கள். இவ்வாறு சொல்லப்பட்ட ஸ்ருஷ்டிகர்த்தரான தக்ஷர், பிறகு, தேவர்களைப்பார்த்து, 'என்னுடைய இந்த வசனமானது சீக்கிரமாகத் திருப்புவதற்கு முடியாதது. மஹாபாக்கியமுள்ளவர்களே! ஒரே ஒரு காரணத்தினல் இந்தச்சாபம் விலகப்போகிறது. சந்திரன் எல்லாமனைவிகளிடத்திலும் நித்தியம் ஸமனுயிருக்கட்டும். அவன் சிறந்த ஸரஸ்வதீதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து மீண்டும் விருத்தியடையவான். தேவர்களே! அப்படிப்பட்டஎன்னுடையவசனம் சத்தியம். ஸோமன் எப்பொழுதுமே அரைமாஸம் க்ஷயத்தை அடைவான்; மீண்டும் அரை மாஸம் விருத்தியடைவான். இந்தஎன்னுடையவார்த்தை ஸத்தியமானது. இவன்மேற்குக்கடல்சென்று ஸரஸ்வதி ஸமுத்திரத்துடன்

சேருமிடத்தில் தேவநாதரை ஆராதிக்கவேண்டும். அதனால், காந்தி யடைவான்' என்றுசொன்னார். பிறகு, அந்தஸோமன் ரிஷிகளுடைய கட்டளையினால் ஸரஸ்வதீநதியைக்குறித்துப் புறப்பட்டு முதலில் ஸரஸ்வதீநதியினுடைய பிரபாஸதீர்த்தத்தை அடைந்தான். மிக்ககாந்தியுள்ள சந்திரன் அந்தத்தீர்த்தத்தில் அமாவாஸ்யையில் ஸ்நானஞ்செய்து அதிககாந்தியைப்பெற்று உலகங்களைப் பிரகாசிக்கச் செய்தான்; குளிர்ந்தகிரணங்களோடுகூடியிருக்குந்தன்மையையும் பெற்றான். ராஜேந்திரரே! தேவர்களெல்லாம் தக்ஷருடையமிக்கஅருளைப்பெற்று ஸோமனோடுசேர்ந்தவர்களாகி அவர்முன்னிலையில் நின்றார்கள். பிறகு,மகிமையுடன்கூடினஸ்ருஷ்டிகர்த்தரானதக்ஷர் பிரீதியையடைந்தவராகி எல்லாத்தேவர்களையும் அனுப்பினார். மறுபடியும் ஸோமனைப்பார்த்து, 'புத்திர! ஒருபொழுதும் ஸ்திரீகளையும் பிராம்மணர்களையும் அவமதிக்காதே; போ. நீ எப்பொழுதும் ஜாக்ரதையாயிருந்துகொண்டு என்கட்டளையைச்செய்' என்று நியமித்தார். மஹாராஜரே! விடைகொடுக்கப்பட்ட அந்தச்சந்திரன், பிறகு தன்னிருப்பிடம்சென்றான். மனுஷ்யர்களும் மகிழ்ச்சியுற்று முன்போல யாகஞ்செய்தார்கள். சந்திரன் சபிக்கப்பட்டதும் பிரபாஸதீர்த்தமானது தீர்த்தங்களுள் சிறந்ததானதும் முழுதும் உமக்கு இவ்வண்ணம் சொல்லப்பட்டன. மஹாராஜரே! சந்திரன் அமாவாஸ்யையில் எப்பொழுதும் உத்தமமானபிரபாஸதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சிறந்த காந்தியையுடையவனாகி விருத்தியடைகிறான். அரசரே! சந்திரன் அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சிறந்தஒளியைப்பெற்று உலகங்களைவிளங்கச்செய்து உடம்பையும் வளர்த்துக்கொண்டகாரணத்தினால் அந்தத்தீர்த்தத்தைப் பிரபாஸமென்று அறிகிறார்கள். பயமற்றவரும்சிறந்தபலமுள்ளவருமானபலராமர் அந்தத்தீர்த்தத்தில்ஸ்நானஞ்செய்து ப்ரீதியுள்ளவராகிப் பிறகு தக்ஷிணைகளைக்கொடுத்து அங்கிருந்து, ஜனங்கள் சமஸோத்பேதமென்று சொல்லுகிறவிடத்தையடைந்தார். மஹாபலசாலியும் கலப்பையை ஆயுதமாகக்கொண்டவரும் கேசவருக்குமூத்தவருமான பலராமர் அவ்விடத்திலும் சிறந்த தானங்களைக்கொடுத்து ஓரிரவு வஸித்துஅப்பொழுது விதிப்படிஸ்நானஞ்செய்து அவ்விடத்தில் உத்தமமான ஆசீர்வாதங்களைப்பெற்று, பிறகு விரைபவராகி உதபானத்தை அடைந்தார். ஜனமேஜயரே! ராஜேந்திரரே! (ஸரஸ்வதீநதி கண்ணுக்குத் தோன்றாவிட்டாலும்) ஓஷதிகள் பூமி இவற்றின் வளத்தினால் அந்தநதியை மறைந்திருப்பதாக ஸித்தர்கள் அறிகிறார்கள்.

---

## முப்பத்தேழாவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



(ஏகதன், த்விதன், த்ரிதர் என்னும்பிராம்மணர்களின்கதை.)

மஹாராஜரே! ஹலாயுதர் அந்தஇடத்தினின்று நதியை அடைந்திருக்கின்றதான புகழ்பெற்ற த்ரிதருடைய கிணற்றையடைந்தார். உலக்கையை ஆயுதமாகக்கொண்ட பலராமர் அவ்விடத்தில் மிகுதியான திரவியத்தைக்கொடுத்து அவ்வாறே பிராம்மணர்களைப்பூஜித்து அதிலேயே ஸ்நானஞ்செய்து மிக்க ஸந்தோஷத்தை அடைந்தார். (முன்பு) அந்தக்கிணற்றில் தர்மத்தில் பற்றுள்ளவரும் சிறந்ததவமுடையவருமான அந்தத்ரிதர் இருந்தார். கிணற்றில் வஸிக்கின்ற அந்த மஹாத்மாவினால்ஸோமரஸம் பானம்பண்ணப்பட்டது. அந்தக் கிணற்றில் அவரை விட்டுவிட்டுப் பிராதாக்களிருவர்களும் வீட்டுக்குச்சென்றார்கள். பிறகு, பிராம்மணர்களுள் உத்தமரான த்ரிதர் அவ்விருவர்களையும் சபித்தார்' என்றார். ஜனமேஜயர், "பிராம்மணரே! கிணறு எவ்வாறு ஏற்பட்டது? சிறந்ததவத்தையுடைய த்ரிதர் எவ்வாறு விழுந்தார்? பிராம்மணர்களுள் சிறந்தவரே! இரண்டுபிராதாக்களாலும் ஏன் அவர் விடப்பட்டார்? கிணற்றில் அவரை விட்டுவிட்டு இரண்டு பிராதாக்களும் எவ்வாறு வீட்டை அடைந்தார்கள்? த்ரிதர் எவ்வாறு யாகஞ்செய்தார்? எவ்வாறு ஸோமபானம்பண்ணினார்? பிராம்மணரே! கேட்கத்தக்கதாக நீர் எண்ணினால் இதனை எனக்குச்சொல்வீராக" என்றுவினவ, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினார்.

"அரசரே! பூர்வயுகத்தில் ஆதித்யனுக்கொப்பானவர்களும் பிராதாக்களுமான ஏகதன், த்விதன், த்ரிதர் என்கிற மூன்று ரிஷிகள் இருந்தார்கள். அவர்களெல்லாரும் பிரம்மதேவருக்கொப்பானவர்களும் ஸந்ததியுள்ளவர்களும் எல்லோரும் தவத்தினால் பிரம்மலோகத்தை ஜயித்தவர்களும் பிரம்மவாதிகளுமாயிருந்தார்கள். எப்பொழுதும் தர்மத்தில் பற்றுதலுள்ளவரும் (அவர்களுக்குப்) பிதாவுமான கௌதமர் அவர்களுடைய தவத்தினாலும் நியமத்தினாலும் ஐம்பொறியடக்கத்தாலும் எப்பொழுதும் ப்ரீதியுள்ளவரானார். மகிமையுடையவரான அந்தப் பிராம்மணர் நெடுங்காலம் அவர்களுடைய ப்ரீதியையடைந்திருந்து தமக்குத் தகுந்ததான பரலோகஸ்தானத்தை அடைந்தார். அரசரே! மஹாத்மாவான அந்தக்

கௌதமருக்குச் சிஷ்யர்களாயிருந்த அரசர்களனைவரும் அந்தக் கௌதமர் ஸ்வர்க்கம்சென்றவுடனே அவருடையபுத்திரர்களைப்பூஜித்தார்கள். அரசரே! அவர்களுள் த்ரிதர், தம் பிதாவைப்போல் செய்கையினாலும் அத்யயனத்தினாலும் மேன்மையைப்பெற்றார். அவ்வாறே மஹாபாக்கியசாலிகளும் பரிசுத்தமான லக்ஷணங்களுள்ளவர்களுமான ரிஷிகளனைவர்களும் அவருடைய பிதாவை எவ்வாறு பூஜித்தார்களோ அவ்வாறே மகா பாக்கியசாலியான அவரைப் பூஜித்தார்கள். அரசரே! பிறகு, பிராதாக்களான ஏகதனும் த்விதனும் ஒருஸமயத்தில் யஜ்ஞத்தின்பொருட்டும் அவ்வாறே பொருளின் பொருட்டும் கவலையுற்றார்கள். பகைவர்களைவாட்டுபவரே! 'த்ரிதனை முன்னிட்டுக்கொண்டு நாம் எல்லாச்சிஷ்யர்களிடமும் சென்று அவர்களிடமிருந்து பசுக்களைப் பெற்றுக்கொண்டு பெரும்பயனைத்தரும் யாகத்தைச்செய்து ஸோமபானம்செய்வோம்' என்று அவ்விரண்டு பிராதாக்களுக்கும் எண்ணமுண்டாயிற்று. அரசரே! அம்மூன்று பிராதாக்களும் அவ்வாறே செய்தார்கள். மஹாத்மாக்களான அந்த மஹரிஷிகள் பசுக்களைவிரும்பி யாகம்செய்யக்கூடிய எல்லாச்சிஷ்யர்களையும் அடைந்து அவர்களுக்கு யாகம்செய்வித்தலென்னும் கார்யத்தினால் அவர்களிடத்தினின்றும் அனேகபசுக்களைத் தானமாகப்பெற்றுக் கிழக்குத்திக்கை வந்தடைந்தார்கள். மஹாராஜரே! அவர்களுக்கு முன்னிலையில் த்ரிதரானவர் மகிழ்ச்சியுடன் சென்றுகொண்டிருந்தார். ஏகதனும் த்விதனும் பின்புறத்தில் பசுக்களைஓட்டிக்கொண்டு சென்றார்கள். ஏகதன் த்விதன் இவ்விருவர்களுக்கும், 'நாமிருவரும்என்ன செய்தால் இந்தப்பசுக்களை த்ரிதனுக்குக்கொடாமல் அடையலாம்' என்னும்கவலை உண்டாயிற்று. ஜனேஸ்வரரே! பாபிகளான ஏகதன் த்விதன் இருவரும் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டு ஏகாந்தத்தில் சொன்னதைத்தெரிந்துகொள்ளும். அதாவது, 'த்ரிதன் யஜ்ஞங்களில் ஸமர்த்தன்; அவ்வாறே வேதங்களிலும் உறுதியான பாண்டித்யமுள்ளவன். அதனால், த்ரிதன் மிகுதியானபசுக்களையடைவான். ஆதலால், நாம் இருவரும்ஒன்றுசேர்ந்தவர்களாகிப்பசுக்களைஓட்டிக்கொண்டு சென்றுவிடுவோம். த்ரிதனும் நம்மிருவர்களாலும் விடப்பட்டுத் தன்னிஷ்டப்படி செல்லட்டும்' என்பது. அவர்கள் இரவில்வழியை அடைந்து நடந்து வந்துகொண்டிருக்கும்பொழுது ஒருசெந்நாய் எதிர்ப்பட்டது. ஸரஸ்வதிநதியினுடைய கரையில் அவ்விடத்தில் சிறிதுதூரத்தில் பெரிதான கிணறு ஒன்றிருந்தது. பிறகு, த்ரிதர் எதிரில் வழியில் நிற்கின்ற செந்நாயைக்கண்டு அதனிடத்திலுண்டானபயத்தினால் விலகி அங்

தக் கிணற்றில் விழுந்தார். மஹாராஜரே! ஆழ்ந்ததும் மிக்ககோரமானதும் எல்லாப் பிராணிகளுக்கும் பயங்கரமாயிருப்பதுமான கிணற்றில் விழுந்த முனிஸ்ரேஷ்டரான த்ரிதர், பிறகு, துன்பக்குரலுடன் அலறினர். அந்தஇரண்டு ரிஷிகளும் (அந்தச்சப்தத்தைக்) கேட்டார்கள். ஏகதன் த்விதன் என்கிற இரண்டு பிரதாக்களும் அந்த த்ரிதர் கிணற்றில் விழுந்ததை அறிந்து செந்நாயினிடத்திலிருந்துண்டான பயத்தினாலும் பேராசையினாலும் அவரை விட்டுவிட்டுச் சென்றார்கள். அரசரே! பரதர்களில் சிறந்தவரே! பசுக்களிடம் பேராசைகொண்டவர்களான இரண்டுபிராதாக்களாலும் விடப்பட்டவரும் மிக்கதவமுள்ளவரும் கற்றறிந்தவரும் உயிரை இழந்தவன் போலானவரும் ஸோமபானம் செய்யாதவருமான அந்த த்ரிதர் பாபியானவன் நரகத்தில் அமிழ்ந்த தன்தேகத்தைப் பார்ப்பதுபோல ஜலமில்லாததும் புழுதிகளால் சூழப்பட்டதும் கொடிகளாலும் புற்களாலும் மூடப்பட்டிருப்பதுமான கிணற்றில் அமிழ்ந்திருக்கின்ற தம் உருவத்தைக்கண்டு அப்பொழுது 'இங்கிருக்கின்ற என்னால் ஸோமரஸம் எவ்வாறு பானம்பண்ணத்தக்கதாகும்?' என்று சிந்தித்தார். பெருந்தவமுள்ளவரான அந்தத்ரிதர் அந்தக் கிணற்றில் இவ்வாறு ஆலோசிக்கையில், தற்செயலாக அந்தக் கிணற்றில் தொங்கிக்கொண்டிருந்தஒருகொடியைக்கண்டார். பிறகு, ரிஷியான அவர் புழுதியினால் மூடப்பட்டிருக்கிற அந்தக்கிணற்றில் கீழேவெட்டி ஜலத்தை உண்டு பண்ணிக்கொண்டார். அக்னிகளையும்*ஹோதாவுக்குத்தம்மையும் ஸங்கல்பித்துக் கொண்டார். மிக்கதவத்தையுடைய அந்தரிஷியானவர், பிறகு, அந்தக்கொடியை ஸோமலதையாகப் பாவனைசெய்து ருக்குக்களையும் யஜுஸுகளையும் ஸாமங்களையும் மனத்தினால்சிந்தித்தார். அரசரே! சிறிய கற்களை அம்மி குழவிகளாக நினைத்து ஸோமலதையைஇடித்துச்சாறுபிழிந்தார்.ஜலத்தை நெய்யாகச்செய்துதேவர்களுக்குஹவிர்ப்பாகங்களையும் கொடுத்தார். ஸோமக்கொடியைப்பிழியுமுன் நெருங்கியஒலி உண்டாயிற்று. மன்னரே! திரிதருடைய அந்த வேதத்வனியானது ஸ்வர்க்கத்தைஎட்டியது. பிரம்மவாதிகளால் சொல்லப்பட்டபடி அந்தயாகத்தை த்ரிதரிஷி செய்தார். சிறந்த மகாத்மாவான த்ரிதருடைய மகாயஜ்ஞம் நடந்துவருங்காலத்தில் ஸ்வர்க்கமுழுமையும் மனக்கவலைஅடைந்துவிட்டது; காரணமோ அறியப்படவில்லை. பிறகு, தேவபுரோகிதரான ப்ருஹஸ்பதி மிகப் பெரிதானசப்தத்தைக்கேட்டார். கேட்டு, எல்லாத்தேவர்களையும் பார்

* வேறுபாடம்.

த்து, 'தேவர்களே! த்ரிதருடைய யஜ்ஞம்நடந்துவருகின்றது; அங்கே செல்வோம். மிக்கதவமுள்ளவரான அந்தத்ரிதர் கோபங்கொண்டால் வேறு தேவர்களையும் படைப்பார்' என்று சொன்னார். அந்த ப்ருஹஸ்பதியினுடைய அந்த வார்த்தையைக்கேட்டு எல்லாத் தேவர்களும் ஒன்றுசேர்ந்து த்ரிதருடைய யாகம் நடக்கின்றவிடத்தில் சென்றார்கள். அந்தத்தேவர்கள் அந்த இடத்திற் சென்று த்ரிதரிருக்கிறகிணற்றையும் யாகச்சடங்குகளில் தீக்ஷை பெற்றிருக்கின்ற மகாத்மாவான அந்தத்ரிதரையும்கண்டார்கள். தேவர்கள் அதிக காந்தியோடுகூடினவரும் மகாத்மாவும் மகாபாக்கியசாலியுமான அந்தத்ரிதரைக்கண்டு, 'மகரிஷியே! நாங்கள்யஜ்ஞபாகத்தைப்பெறுவதில் விருப்பமுள்ளவர்களாக வந்துவிட்டோம்' என்றுசொன்னார்கள். பிறகு, த்ரிதரென்கிற ரிஷியானவர் தேவர்களைப்பார்த்து, 'தேவர்களே! பயங்கரமான இந்தக்கிணற்றில் விழுந்து மனமழிந்திருக்கின்ற என்னைப்பாருங்கள்' என்றுசொன்னார். மஹாராஜரே! பிறகு, அவர் அந்தத் தேவர்களுக்கு முறைப்படி மந்திரத்துடன்கூடின ஹவிர்ப்பாகங்களைக் கொடுத்தார். அதனால், அப்பொழுது அவர்கள் பிரீதியுள்ளவர்களானார்கள். பிறகு, தேவர்கள் விதிப்படிகொடுக்கப்பட்ட பாகங்களைப்பெற்று மனமகிழ்ந்தவர்களாகி அவர் மனத்தினால் விரும்பினவரன்களை அவருக்குக் கொடுக்கஆரம்பித்தார்கள். அந்தத்ரிதரிஷியோ தேவர்களைப் பார்த்து, 'என்னை இந்தக்கிணற்றினின்று காப்பாற்றவேண்டும். எவன் இந்தக்கிணற்றிலுள்ள தீர்த்தத்தை ஆசமனம்செய்வானோ அவன் ஸோமபானம்பண்ணினவனுடைய கதியை அடையவேண்டும்' என்கிற வரன்களைக்கேட்டார். அரசரே! அந்தக்கிணற்றினின்று அலையுடன்கூடின ஸரஸ்வதீநதியானது மேலே எழும்பியது. அந்தநதியினால் மேலே தூக்கிக்கொண்டுவரப்பட்ட த்ரிதர் தேவர்களைப் பூஜித்துக்கொண்டு நின்றார். அரசரே! தேவர்கள் 'அப்படியே ஆகட்டும்' என்றுசொல்லிவிட்டு வந்தபடியே சென்றார்கள். த்ரிதரும் அப்பொழுது பிரீதியுள்ளவராகித் தம்முடைய வீட்டையே அடைந்தார். மஹாதபஸ்வியான அந்தத்ரிதர் கோபங்கொண்டு அப்பொழுது பிராதாக்களான அந்த இரண்டுரிஷிகளையும் அடைந்து, 'பசுக்களிடத்தில் பேராவலுள்ளநீங்கள் என்னைவிட்டு விட்டுஓடினதனால் என்னால்சபிக்கப்பட்டவர்களாகிப் பயங்கரமான உருவத்துடனும் கோரப்பற்களுடனுங்கூடிய செந்நாய்வடிவங்கொண்டு எங்கும்ஸஞ்சரிக்கின்றவர்களாவீர். இந்தப்பாவச்செய்கையினால் உங்களுடைய ஸந்ததிகளும், கோலாங்கூலங்களும் கரடிகளும் வான

ரங்களும் ஆகப்போகின்றீர்கள்' என்று க்ரூரமானவார்த்தையைச் சொல்லிச்சபித்தார். வேந்தரே! ஸத்யவாதியானத்ரிதருடைய வாக்கினால் அப்பொழுது இவ்வாறுரைக்கப்பட்ட அவ்விருவர்களும் ஒரு க்ஷணத்திற்குள் அப்படிப்பட்ட செந்நாய்வடிவமுள்ளவர்களாகக் காணப்பட்டார்கள். அளவுகடந்தவிக்கிரமமுள்ளவரும் கம்பீரமான எண்ணமுள்ளவருமான பலராமர் அக்கிணற்றிலும் ஸ்நானஞ்செய்து கொடுக்கத்தக்க பற்பலவஸ்துக்களைக் கொடுத்துப் பிராம்மணர்களையும்பூஜித்து நதியையடைந்திருக்கின்ற அந்தக்கிணற்றையும்பார்த்து அடிக்கடி புகழ்ந்து அப்பொழுது விநசனத்தைக்குறித்துச்சென்றார்.

---

## முப்பத்தெட்டாவது அத்யாயம்.

### ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



**(பலராமர் ஸரஸ்வதீதீரத்திலுள்ள பற்பல தீர்த்தங்களைக்குறித்து யாத்திரைசெய்ததும், அந்தஅந்தத் தீர்த்தங்களுடைய மகிமையும்.)**

மன்னரே! பிறகு, பலராமர் விநசனத்தைவந்தடைந்தார். எந்த இடத்தில் சூத்திரர்களின்மீதும் இடையர்களின்மீதும் பகையினால் ஸரஸ்வதிநதியானது நசித்ததோ அந்தவிடத்தில் அதனால் அந்த நதியை ரிஷிகள் எப்பொழுதும்'விநசனே' என்றுசொல்லுகின்றார்கள். மஹாபலசாலியான பலராமர் அந்தஇடத்திலும் ஸரஸ்வதி நதியில் ஸ்நானம்செய்து பிறகு சிறந்த ஸரஸ்வதிநதியின் கரையிலுள்ள ஸுபூமிகம் என்கிற க்ஷேத்திரத்தை அடைந்தார். அவ்விடத்தில் சுசியாக இருப்பவர்களும் எக்காலத்திலும் சோம்பலில்லாதவர்களும் பரிசுத்தமானமுகமுள்ளவர்களுமான அப்ஸரஸ்திரீகள் குற்றமற்றவிளையாட்டுக்களை விளையாடுகிறார்கள். ஜனேஸ்வரரே! அந்த இடத்தில் பிராம்மணர்களால் அடையப்பட்ட அந்தப் புண்யதீர்த்தத்தை உத்தேசித்துத் தேவர்கள் கந்தர்வர்களோடு ஒவ்வொருமாஸத்திலும் வருகின்றார்கள். அரசரே! கந்தர்வர்களும் அவ்வாறே அப்ஸரஸுகளுடைய கூட்டங்களும் ஒன்றுசேர்ந்து கலந்துகொண்டவர்களாக அந்த விநசனதீர்த்தத்தில் ஆங்காங்கு ஸுகமாக நர்த்தனஞ்செய்கின்றார்கள். அவ்விடத்தில் தேவர்களும் பித்ருக்களும் கொடிகளுடன்கூடியவர்களாகப் புண்யமான திவ்ய புஷ்பங்களாலே அடிக்கடி வீசப்படுகின்றவர்களாகி ஸந்தோஷமடைகின்றார்கள். வேந்தரே! உத்தமமானஸரஸ்வதிநதியினுடைய கரையில் ஸுபூமிகை என்று பிரஸித்திபெற்ற

அந்தப் பூமியானது அந்தஅப்ஸரஸ்திரீகளுக்கு மங்களகரமான விளையாட்டிடமாயிருக்கிறது. ரோஹிணீதேவியின்புத்திரரான மாதவர் அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்துபிராம்மணர்களுக்குத்தனத்தைக் கொடுத்துத் திவ்யமான அந்தக்கானத்தையும் நான்குவித வாத்தியங்களுடைய கோஷத்தையுங்கேட்டும் தேவர்கள், கந்தர்வர்கள், ராக்ஷதர்கள் இவர்களின் பெரியபடுக்கைகளையும் பார்த்தும், பிறகுகந்தர்வர்களுடையதீர்த்தத்தைவந்தடைந்தார். அந்த இடத்தில்விஸ்வாவஸு முதலானகந்தர்வக்கூட்டங்களும்அப்ஸரஸுகளின் கூட்டங்களும் மிகவும் மனத்திற்கின்பமான நர்த்தனத்தையும் நான்குவித வாத்தியகோஷங்களையும்கானத்தையும் செய்கின்றனர். கலப்பையைத்தரித்தமாதவர் அந்தஇடத்தில் பிராம்மணர்களின்பொருட்டுப் பற்பல தனத்தையும் ஆட்டுமயிர்களால் செய்த கம்பளத்தையும் கோவேறுகழுதைகளையும் ஒட்டகங்களையும்ஸ்வர்ணத்தையும் அவ்வாறேவெள்ளியையும்கொடுத்துப் பிராம்மணர்களைப் புஜிக்கச் செய்து விலையேறப் பெற்றவையும் விரும்பப்படுகின்றவையுமான பொருள்களாலே திருப்தியடையும்படி செய்து பிராம்மணர்களோடுகூடியவராகவும் ஸ்தோத்திரம் செய்யப்பட்டவராகவும் சென்றார். நீண்டகைகளையுடையவரும் சத்துருக்களை அடக்குகின்றவரும் *சிறந்த குண்டலத்தை அணிந்தவருமான பலராமர் அந்தக்கந்தர்வ தீர்த்தத்தினின்று கர்க்கஸ்ரோதஸ் என்கிற மஹா தீர்த்தத்தை அடைந்தார். ஜனமேஜயரே! மங்களகரமான ஸரஸ்வதீ நதியிலுள்ள அந்தத்தீர்த்தத்தில் வயதுசென்றவரும் தவத்தினால் பரிசுத்தமான சித்தமுள்ளவரும் மஹாத்மாவுமான கர்க்கரால் காலஞானமும் காலகதியும் ஜ்யோதி மண்டலங்களுடைய மாறுதலும் பயங்கரமான உத்பாதங்களும் சிலமங்களகரமான விஷயங்களும்அறியப்பட்டன. அவருடைய நாமதேயத்தினால் அந்தத்தீர்த்தமானது கர்க்கஸ்ரோதஸ் என்று எண்ணப்பட்டிருக்கிறது. அரசரே! பிரபுவே! நல்லவிரதத்தையுடைய ரிஷிகள், அந்த இடத்தில் மஹாபாக்கியசாலியானகர்க்கரைக்காலஞானத்தின்பொருட்டுநித்தியம்உபாஸித்தார்கள். மஹாராஜரே! வெண்மையானசந்தனமணிந்த பலராமர் அவ்விடத்தில் சென்று பரிசுத்தமான மனமுள்ள ரிஷிகளுக்கு விதிப்படி தனத்தைக் கொடுத்தார். கறுப்புவஸ்திரத்தை அணிந்தவரும் பெரும்புகழுள்ளவருமான அந்தப்பலராமர் பற்பலவிதமான அப்படிப்பட்ட பக்ஷியங்களைப் பிராம்மணர்களுக்குக்கொடுத்து அப்

* 'ஏககுண்டலீ' என்பது மூலம். 'ஒற்றைக்குண்டலம்' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு.

பொழுது சங்கதீர்த்தஞ் சென்றூர். பலசாலியும் பனைமரத்தைக் கொடியாகக்கொண்டவருமான பலராமர் அந்தஇடத்தில் மஹா மேருவைப்போல் வளர்ந்திருப்பதும் வெண்ணிறமுள்ள மலைக்கொப பானதும் ரிஷிகளுடைய கூட்டங்களால் அடையப்பட்டதும் ஸரஸ் வதியினுடைய கரையில் முளைத்திருப்பதுமான மகாசங்கம் என்கிற மரத்தைக்கண்டார். மனிதர்களுள் சிறந்தவரே! அவ்விடத்தில் யக்ஷர்களும் வித்யாதரர்களும் அளவற்ற பலத்துடன்கூடின ராக்ஷ ஸர்களும் அளவற்ற பலமுள்ள பிசாசர்களும் ஆயிரக்கணக்கான அந்த எல்லா ஸித்தர்களும் ஆகாரத்தை விட்டு அந்தமரத்தினுடைய பழத்தை விரதங்களோடும் நியமங்களோடும் அந்தஅந்தக்காலத்தில் புஜித்துக்கொண்டு அடையப்பட்ட அந்தஅந்த நியமங்களோடு தனித் தனி ஸஞ்சரிக்கின்ற அவர்கள் மனிதர்களால் காணப்படாமல் திரிந் தார்கள். புருஷர்களுள் சிறந்தவரே! இவ்வுலகத்தில் அந்த மரமா னது இவ்வாறு பிரஸித்திபெற்றது. அந்த இடத்தில் ஸரஸ்வதீ தீர்த்தமானது பாவனமென்று உலகத்தில்பிரஸித்திபெற்றிருக்கிறது. அரசரே! யாதவர்களுள் சிறந்தவரான பலராமர் அந்தத்தீர்த்தத்தி லும் கறவைப்பசுக்களையும் தாம்ரபாத்திரங்களையும் இருப்புப்பாத்தி ரங்களையும் பற்பல வஸ்திரங்களையும் கொடுத்துப் பிராம்மணர்களைப் பூஜித்து ரிஷிகளால் பூஜிக்கப்பட்டவராகப் புண்யமான நைஸர்க்கிக மென்கிற தீர்த்தத்தை அடைந்தார். அவர் அவ்விடத்தில்சென்று பற்பல வேஷங்களைத் தரித்தவர்களான ரிஷிகளைக்கண்டு தீர்த்தத்தி லும் ஸ்நானம்செய்து பிராம்மணர்களைப் பூஜித்தார். அரசரே! மிக்க புஜபலமுள்ளவரும் அதிககீர்த்தியுள்ளவரும் தர்மாத்மாவும் தவறாத வருமான பலராமர் பிராம்மணர்களின்பொருட்டு மிகுதியானபோக்ய வஸ்துக்களைக் கொடுத்து, பிறகு, ஸரஸ்வதிநதிக்குத் தென்புறமாகப் புறப்பட்டுச் சிறிதுதூரம்சென்று நாகதன்வா என்கிற தீர்த்தத் தை அடைந்தார். மஹாராஜரே! அங்கே மகாகாந்தியுள்ளவனும் ஸர்ப்பங்களுக்கு அரசனுமான வாஸுகியினுடைய அநேக ஸர்ப் பங்களால் சூழப்பட்ட உத்தமமானவீடு இருக்கின்றது. அந்த இடத்தில் எப்பொழுதுமே பதினாலாயிரம் ரிஷிகள் வஸிக்கின் றார்கள். அந்த இடத்தில் தேவர்கள்வந்து ஸர்ப்பங்களுள் உத்தம னை வாஸுகியை எல்லா ஸர்ப்பங்களுக்கும் அரசனாக முறைப்படி அபிஷேகம்செய்தார்கள். பூருவம்சத்தில்பிறந்தவரே! அந்தஇடத்தில் ஸர்ப்பங்களிடத்திலின்றும் பயமில்லை. அரசரே! அவ்விடத்திலும் சாஸ்திரத்தில்சொல்லியபடி பிராம்மணர்களுக்கு ரத்னக் குவியல்

களைக்கொடுத்துக் கிழக்குத்திக்கை நோக்கிச்சென்றார். அந்தக்கீழ்த்திசையில் ஒவ்வோரிடத்திலும் பிரஸித்திபெற்ற லக்ஷக்கணக்கான அனேக தீர்த்தங்கள் இருந்தன. மஹாபலசாலியான பலராமர் அந்தத் தீர்த்தங்களில் ரிஷிகளால் சொல்லப்பட்டபடி ஸ்நானஞ்செய்து உத்தமப் பிராம்மணர்களுக்குத் தனத்தைக் கொடுத்துப் புறப்பட்டார். பிறகு, கலப்பையை ஆயுதமாகக்கொண்ட பலராமர் அங்கிருக்கின்ற அந்த ரிஷிஸங்கங்களை நமஸ்கரித்துப் பிறகு ரிஷிகளால் அடையப்பட்டிருக்கிற மகாதீர்த்தத்தைக்குறித்துச்சென்றார். அரசரே! வெண் சாந்தணிந்தவரும் கலப்பையையுடையவருமான பலராமர் எந்த இடத்தில் ஸரஸ்வதிநதியானது மஹாத்மாக்களும் நைமிசாரண்ய வாஸிகளுமானரிஷிகளுடைய இஷ்டஸித்தியின்பொருட்டு மறுபடியும் கிழக்குமுகமாகத் திரும்பியதோ அவ்விடத்தில் திரும்பியிருக்கிற அந்தச் சிறந்த நதியைக்கண்டு வியப்புற்றவரானார்'' என்றார்.

ஜனமேஜயர், "அத்வர்யுக்களுள் சிறந்தவரே ! பிராம்மணரே ! எந்தக்காரணத்தினால் ஸரஸ்வதிநதியானது கிழக்குமுகமாகத் திரும்பியதாயிற்று ? விவரிக்கப்படும் இதெல்லாவற்றையும் கேட்க விருப்பமுற்றிருக்கிறேன். எந்தக்காரணத்தினால் அவ்விடத்தில் யதுநந்தனரான பலராமர் வியப்பை அடைந்தார்? நதிகளுள்சிறந்த ஸரஸ்வதிநதியானது யாதுகாரணத்தினால் எவ்வாறு திரும்பியது?'' என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார். "அரசரே! முற்காலத்தில் கிருதயுகத்தில் தபஸ்விகள் நைமிசக்ஷேத்ரத்தில்வஸித்து வந்தார்கள். பன்னிரண்டுவருஷத்தில் நிறைவேறத்தக்க மிக்கபெரிதான யாகமானது நடக்கும்ஸமயத்தில் அனேக ரிஷிகள் அந்தயாகத்திற்கு வந்தார்கள். மகாபாக்கியசாலிகளான அந்தஅநேகரிஷிகள்அந்த யாகத்தில் முறைப்படி வஸித்துவிட்டு, பன்னிரண்டுவர்ஷங்களால் நிறைவேற்றத்தக்க அந்தநைமிசஸத்ரமானதுமுடிந்தவுடன், தீர்த்த யாத்திரையைஉத்தேசித்து அவ்விடம்வந்தார்கள். மன்னரே! ரிஷிகள் அதிகமாகஇருந்ததினால் ஸரஸ்வதீநதியின்தென்கரையிலும் வடகரையிலுமுள்ள தீர்த்தகட்டங்களெல்லாம்நகரங்களாயின. புருஷஶ்ரேஷ்டரே! அந்தப்பிராம்மணோத்தமர்கள் தீர்த்தங்களிலிருக்கும் அவாவினால் ஸமந்தபஞ்சகம்வரையில் நதீதீரத்தைஅடைந்து வஸித்தார்கள். அவ்விடத்தில் ஹோமஞ்செய்பவர்களும் பரிசுத்த மனமுள்ளவர்களுமான அந்தரிஷிகளுடைய மிக்கபெரிதான வேதாத்தியயனகோஷத்தினால் திக்குக்கள்நிறைக்கப்பட்டவைகளாயின. பிறகு,ஹோமஞ்செய்யப்படுகின்றவைகளும் நான்குபக்கத்திலும் பிரகாசிக்கின்றவைகளுமான

அந்தமஹாத்மாக்களுடைய அக்னிஹோத்திரங்களால் உத்தமமான ஸரஸ்வதீநதியானது விளங்கியது. மஹாராஜரே! வாலகில்யர்களும் * அஸ்மகுட்டர்களான தபஸ்விகளும் மற்றத் * தந்தோலூகலிகளும் அப்படியே தேகத்தை எப்பொழுதும் ஜலத்தினால் அலம்புகின்றவர்களானமற்றவர்களும் வாயுவைப் பக்ஷிக்கின்றவர்களும் ஜலத்தைஆகாரமாகக்கொண்டவர்களும் சருகுகளைப்பக்ஷிக்கின்றவர்களும் பற்பலநியமங்களுள்ளவர்களும் அப்படியே தரையில் படுப்பவர்களுமான ரிஷிகள், தேவர்கள் கங்கையை விளங்கச்செய்வதுபோல நதிகளுள்சிறந்ததான ஸரஸ்வதீநதியைவிளங்கச்செய்துகொண்டு ஸரஸ்வதிநதியினுடையஸமீபத்தில்வஸித்தார்கள்.யாகங்களால்தேவர்களைப் பூஜிப்பவர்களானரிஷிகள் நூறு நூறாகவந்துசேர்ந்தார்கள். மஹாவ்ரதத்துடன்கூடினவர்களான அந்தரிஷிகள் ஸரஸ்வதீநதியின் கரையில் வஸிப்பதற்கு இடத்தைக்காணவில்லை. மஹாவிரதத்துடன்கூடின அந்தரிஷிகள் குருக்ஷேத்திரத்தில் இடத்தைக் கண்டுகொண்டார்கள். பிறகு, மஹரிஷிகள் தங்களுடைய †யஜ்ஞோபவீதங்களால் அந்த இடத்தில் ஸரஸ்வதியை ஏற்படுத்திக்கொண்டு அக்னிஹோத்திரங்களைச்செய்தனர்; பற்பலகிரியைகளையும் செய்தனர். ஜனமேஜயரே! ராஜேந்திரரே! பிறகு, ஸரஸ்வதீஜலத்தைஅடைவதில் ஆசையற்றதும் கவலையுற்றதுமான அந்தரிஷிக்கூட்டத்தைக்கண்டு, புண்யமான தவத்தினையுடைய ரிஷிகளின்மீதுள்ளகருணையினால், அந்தரிஷிகளுக்காக ஸரஸ்வதீநதியானது அனேகதீர்த்தவிசேஷங்களை ஏற்படுத்திக்கொண்டு திரும்பியது. ராஜேந்திரரே! பிறகு, நதிகளுள் சிறந்ததான ஸரஸ்வதீநதியானது அவர்களுக்காகத் திரும்பி மீண்டும் மேல்திசையைநோக்கிப் பெருகிஓடியது. ஸபலமானஸரஸ்வதிநதியானது, அவர்களுக்காக மறுபடியும் ஓடிச்சென்றது. அரசரே! அப்பொழுது அந்தப்பெரியநதியானது மிகப்பெரிதான ஆச்சர்யத்தை உண்டுபண்ணியது.அரசரே! இவ்வாறு ஸரஸ்வதீநதியினால்ஏற்படுத்தப்பட்டஅந்தத் தீர்த்தவிசேஷமானது நைமிஷீயமென்று எண்ணப்பட்டிருக்கிறது. குருவம்சத்தில் பிறந்தவர்களுள் சிறந்தவரே! குருக்ஷேத்திரத்தில் பெரியகிரியைகளைச்செய்யும் அவ்விடத்திலுள்ள அனேக தீர்த்தவிசேஷங்களையும்திரும்பினஸரஸ்வதியையுங்கண்டுமஹாத்மாவான ராமரு

* அனுசாஸனபர்வம் ஏ0கூ-வது பக்கம் குறிப்பிற்காண்க.

† 'யஜ்ஞோபவீதங்களையே ஸரஸ்வதீநதியாகப் பாவித்து' என்பது. 'யஜ்ஞோபவீதங்களால் ஸரஸ்வதீநதிக்கரையைச் சிறுசிறுபாகமாக அளந்துகொண்டு' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு.

க்கு அவ்விடத்தில் ஆச்சர்யமுண்டாயிற்று. அரசரே! கலப்பையை ஆயுதமாகக்கொண்டவரும் யதுநந்தனருமான பலராமர் அவ்விடத்திலும் முறைப்படி ஸ்நானஞ்செய்து பிராம்மணர்களுக்குக் கொடுக்கத்தக்கவஸ்துக்களையும் பற்பலஆபரணங்களையும்கொடுத்துப்பிராம்மணர்களுக்குப் பக்ஷயத்தையும் பற்பலபோஜனத்தையும்கொடுத்துப்பிறகு பிராம்மணர்களால் பூஜிக்கப்பெற்று, ஸரஸ்வதி தீர்த்தங்களுள் சிறந்ததும், பற்பல பிராம்மணஸமூகத்தோடுகூடியதும், இலந்தைமரங்களாலும் இங்குதமரங்களாலும் ஸ்யாமாகவிருக்ஷங்களாலும் ப்லக்ஷமரங்களாலும்அரசமரங்களாலும்தான்றிமரங்களாலும்கங்கோலங்களாலும் பலாசங்களாலும் இளமூங்கில்களாலும் பீலுவிருக்ஷங்களாலும் ஸரஸ்வதீதீர்த்தத்தில் முளைத்திருக்கின்றமற்றும்பற்பலமரங்களாலும் சிறந்த கருசகங்களாலும்வில்வமரங்களாலும் ஆம்ராதகமரங்களாலும் அதிமுக்தகவிருக்ஷக்கூட்டங்களாலும் பாரிஜாதங்களாலும் விளங்குகின்றதும் வாழைத்தோட்டங்களால் அதிகரித்ததும், கண்களுக்கு அழகியதும் மனத்திற்கின்பமானதும், காற்றையும்ஜலத்தையும் பழத்தையும்சருகுகளையும் ஆகாரமாகக்கொண்டவர்களாலும் தந்தோலூகலிகர்களாலும் அஸ்மகுட்டர்களாலும் வாயுவைப்பக்ஷிக்கின்ற அனேகரிஷிகளாலும் சூழப்பட்டதும், வேதகோஷங்களால் நன்றாக ஒலிக்கப்பட்டதும், அநேக மிருகயூதங்களால் சூழப்பட்டதும், ஹிம்ஸையை அறியாதவர்களும் தர்மத்தையே முக்கியமாக அனுஷ்டிக்கின்றவருமான மனிதர்களால் நன்றாக அடையப்பட்டிருப்பதும், மகாமுனிவரான மங்கணகர் என்கிற ஸித்தர் தவம்புரிந்த இடமுமான ஸப்தஸாரஸ்வத தீர்த்தத்தைக்குறித்துவந்தார்'' என்று கூறினார்.

---

## முப்பத்தோன்பதாவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



(ஸாரஸ்வதீநதியானது ஏழாகப்பிரிந்ததும், ஸப்தஸாரஸ்வத தீர்த்தம் மங்கணகர் இவர்களின் வாலாறும்.)

ஜனமேஜயர்! "பிராமணோத்தமரே! எந்தக்காரணத்தினால் அந்தத்தீர்த்தத்திற்கு ஸப்தஸாரஸ்வதமென்கிற பெயர்வந்தது? மங்கணகர் என்கிற ரிஷி யார்? மகிமையுள்ளவரான அந்த மங்கணகர் எவ்வாறு ஸித்தரானார்? அவருடைய நியமம் எவ்விதமாக இருந்தது? அவர் எவருடையவம்சத்தில் பிறந்தவர்? அவரால் எது அத்ய

யனம் பண்ணப்பட்டது? மஹரிஷியே! இவை அனைத்தையும் உள்ளபடி எனக்கு உரைப்பீராக" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

"எந்த நதிகளாலே இவ்வுலகம் வ்யாபிக்கப்பட்டிருக்கிறதோ அந்த ஏழுநதிகளும் ஸரஸ்வதி நதியைச்சேர்ந்தவை. ஸரஸ்வதீ நதியானது, பலவான்களாலே ஆங்காங்கு அழைக்கப்பட்டு ஸுப்ரபை, காஞ்சனாக்ஷி, விசாலை, மனோரமை, ஓகவதீ, ஸுரேணு, விமலோதகை என்ற பெயருள்ளதாயிற்று. மஹாராஜரே! மஹானான பிரம்மதேவருடைய மஹாயாகமானது நடந்துவருகையில் விஸ்தாரமான யாகசாலையில் நன்கு ஸித்திபெற்ற பிராம்மணர்கள் நிறைந்தும் பரிசுத்தமான புண்யாஹ கோஷங்களாலும் அப்படியே வேதகோஷங்களாலும் அப்பொழுது அந்தயாககார்யத்தில் தேவர்கள் முயற்சியுள்ளவர்களாகியும் அதேயாகத்தில் பிரபிதாமஹர் தீக்ஷைபெற்றுமிருக்கும்போது, விரும்பப்படும் எல்லாப்பொருள்களும் நிறைந்துள்ள ஸத்ரயாகத்தினால் தேவர்களைப்பூஜிக்கின்ற அவருக்காகத் தர்மங்களிலும் அர்த்தங்களிலும் ஸமர்த்தர்களான மனிதர்களால், அப்பொழுது பிராம்மணர்களால் மனத்தினால் விரும்பப்படும் பொருள்கள் அவர்களுக்கு ஆங்காங்கு கொடுக்கப்பட்டன. அந்த யாகத்தில் கந்தர்வர்கள் கானம் செய்தார்கள். அப்ஸரஸுகளுடைய கூட்டங்களும் நர்த்தனம்செய்தன. திவ்யமான நான்கு விதவாத்யங்களையும் விரைவாக வாசித்தார்கள். அந்த யாகத்தினுடைய நிறைவினால் தேவர்களுடைய கூட்டங்கள் ஸந்தோஷமடைந்தன; மிக்க ஆச்சர்யத்தையுமடைந்தன. மனுஷ்யஜாதியில் பிறந்தவர்கள் ஸந்தோஷமடைந்தார்களென்பதில் ஸந்தேகமென்ன? அரசரே! யாகம் நடந்துவருகையில் பிதாமஹரும் புஷ்கரக்ஷேத்திரத்திலிருக்கவே, ரிஷிகள் 'இவ்விடத்தில் நதிகளுள் சிறந்த ஸரஸ்வதிநதியானது காணப்படாமையினால் இந்தயாகமானது மிக்ககுணமுள்ளதாகக் காணப்படவில்லை' என்றுசொன்னார்கள். அந்தவார்த்தையைக் கேட்டுப் பகவான் ப்ரீதி அடைந்து பிறகு ஸரஸ்வதியை நினைத்தார். ராஜேந்திரரே! யாகம்செய்கின்ற பிதாமஹரால் புஷ்கரக்ஷேத்திரத்தில் அழைக்கப்பட்ட ஸரஸ்வதீநதியானது அவ்விடத்தில் ஸுப்ரபை என்கிற பெயரோடு பெருகியோடிற்று. விரைவுடன் கூடினதும் பிதாமஹரைப் பூஜிக்கின்றதுமான அந்தஸரஸ்வதிநதியைக்கண்டு அந்தரிஷிகள் ஸந்தோஷமுள்ளவர்களாகி யாகத்தை நன்குமதித்தார்கள். ஜனேஸ்வரரே! நதிகளுள் சிறந்ததான இந்த

ஸரஸ்வதிநதியானது பிதாமஹருக்காகவும் வித்வான்களுடைய ஸந்தோஷத்திற்காகவும் இவ்வண்ணம் புஷ்கரக்ஷேத்திரத்தில் பெருகியது. அரசரே! நைமிசக்ஷேத்திரத்தில் ரிஷிகள் ஒன்று சேர்ந்திருந்தார்கள். அந்த இடத்தில் வேதத்தைப்பற்றி விசித்திரமான கதைகள் நடந்தன. பற்பலவேதங்களையறிந்தவர்களான அந்தரிஷிகள் எவ்விடத்தில் இருந்தார்களோ அவ்விடத்தில் அந்த ரிஷிகள் ஒன்று கூடி ஸரஸ்வதிநதியை நினைத்தார்கள். ராஜேந்திரரே! ஸத்ரயாஜிகளான ரிஷிகளாலே த்யானம் பண்ணப்பட்டதும் மிக்க பாக்கியமுள்ளதும் பரிசுத்தஞ்செய்வதுமான ஸரஸ்வதிநதியானது ஒன்று சேர்ந்திருக்கின்ற மஹாத்மாக்களுக்கு உதவிசெய்வதின்பொருட்டு அந்த நைமிசத்தில் வந்தது. பாரதரே! அந்த நைமிசக்ஷேத்திரத்தில் நதிகளுள் சிறந்ததும் பூஜிக்கப்பட்டதுமான ஸரஸ்வதியானது ஸத்ரயாஜிகளான ரிஷிகளின்பொருட்டுக் காஞ்சனாக்ஷி என்கிறபெயருடன் வந்தது. கயாக்ஷேத்திரத்தில் பெரியயாகம் செய்கின்றகயனுடைய யாகத்தில் நதிகளுள் சிறந்ததான ஸரஸ்வதிநதியானது அழைக்கப்பட்டது. கடுமையானவிரதத்தையுடைய ரிஷிகள் கயனுடைய (அந்நதியை) விசாலையென்று சொல்லுகின்றார்கள். பாரதரே! அந்த (ஸரஸ்வதி) நதியானது ஹிமயமலையினுடைய சாரலினின்று சீக்கிரமாகப்பெருகி யாகம்செய்கின்ற ஔத்தாலகியினுடைய அவ்விதமான யாகத்தில்வந்தது. அரசரே! புண்ணியமானஉத்தரகோஸலதேசத்தைச்சார்ந்தஅந்த இடத்தில் திரளானமகரிஷிகளுடைய கூட்டம் நாற்பக்கத்தினின்றும் வந்துகூடிற்று. யாகம் செய்கிறவரும் மஹாத்மாவுமான ஔத்தாலகரால் முன்பு நினைக்கப்பட்ட நதிகளுள் சிறந்ததான ஸரஸ்வதிநதியானது ரிஷிகளுக்காக அந்தத்தேசத்தில் வந்தது. மரவுரிகளையும் மான்தோலையுமுடுத்தவர்களான ரிஷிகளுடைய கூட்டங்களாலே பூஜிக்கப்படுகின்ற அந்த ஸரஸ்வதீநதியானது மனோஹரையென்று பிரஸித்தி பெற்றது. அந்தநதியானது அவர்களால் மனத்தினால் வரிக்கப்பட்டதன்றோ! ராஜரிஷிகளால் அடையப்பட்டதும் பாவனமாயிருப்பதுமான ரிஷபத்வீபத்தில் ஸுரேணுவானது பிரவஹித்தது. மஹாபாக்யமுள்ளதும் நதிகளுள் சிறந்ததுமான ஸரஸ்வதீநதியானது மஹாத்மாவான குருராஜன் யாகம்செய்யும் ஸமயத்தில் குருக்ஷேத்திரத்தில் வந்தது. ராஜேந்திரரே! திவ்ய தீர்த்தத்துடன்கூடின ஸரஸ்வதியானதுமஹாத்மாவானவஸிஷ்டரால் அழைக்கப்பட்டுக்குருக்ஷேத்திரத்தில் ஓகவதியாக வந்தது. கங்காத்வாரத்தில் யாகம்செய்கின்ற தக்ஷராலும் (அழைக்கப்பட்ட) ஸரஸ்வதீயானது ஸுவேணியென்று

பிரஸித்திபெற்றதாக விரைவானகதியுடன் பிரவஹித்தது. புண்ய மான ஹிமவத்பர்வதத்தில் மீண்டும் யாகஞ்செய்கின்ற பிரம்மதேவ ராலே அழைக்கப்பட்டதும் மகிமைபொருந்தியதுமான ஸரஸ்வதி யானது விமலோதையாகப் பிரவஹித்தது. பிறகு, அந்த நதிகள் அந்தத் தீர்த்தத்தில் வந்து சேர்ந்து ஒன்றுபட்டன. ஆதலால், அந்தத் தீர்த்தமானது ஸப்தஸாரஸ்வதமென்று பூமியில் பிரஸித்திபெற்றது. இவ்வாறு ஏழு ஸரஸ்வதீநதிகளும் பெயருடன் கூறப்பட்டன. அவ்வாறு பரிசுத்தமென்று எண்ணப்பட்டிருக்கிற ஸப்தஸாரஸ்வத தீர்த்தமும் கூறப்பட்டது.

அரசரே! இளமைதொடங்கிப் பிரம்மசாரியும் நதியில் முழு கினவருமான மங்கணகருடைய பெரிதான விளையாட்டையும் கேளும். பாரதரே! ஸரஸ்வதீநதிதீர்த்தத்தில் தற்செயலாக ஸ்நா னம் செய்கின்றவளும் அழகியகடைக்கண்ணையுடையவளும் வஸ்திர மில்லாதவளும் சிறந்தரூபமுள்ளவளுமான ஒரு ஸ்திரீயைக்கண்டு ஸரஸ்வதிநதியின் ஜலத்தில் மங்கணகருடைய வீர்யம் விழுந்தது. புருஷஶ்ரேஷ்டரே! அப்பொழுது மஹாதபஸ்வியும் மிக்க தர்மாத் மாவுமான அந்த மங்கணகரிஷியானவர் குடத்தில் அந்த இந்திரி யத்தைஏந்தினர். குடத்திலிருந்த வீர்யமானது ஏழுபாகமாகப் பிரிந்தது. அதில், மருத்கணங்களைச் சேர்ந்த வாயுவேகன், வாயு பலன், வாயுஹா, வாயுமண்டலன், வாயுஜ்வாலன், வாயுரேதஸ், வீர்ய முள்ளவனான வாயுசக்கரன் என ஏழுரிஷிகள் உண்டானர்கள். இவ்வாறு ஏழு ரிஷிகளும் மருத்துக்களை உண்டு பண்ணுகின்ற வர்களாகப் பிறந்தார்கள். ராஜேந்திரரே! மஹரிஷியினுடைய இந் தச் சரித்திரமானது எவ்விதமாக மூவுலகங்களிலும் பிரஸித்தி பெற்றிருக்கின்றதோ அவ்விதமாகவே பூமியில் அதிக ஆச்சரியமாயி ருக்கின்ற வேறொரு சரித்திரத்தையும் கேளும். அரசரே! முற்காலத் தில் ஸித்தரானமங்கணகர் தர்ப்பத்தின் நுனியினல் கையில் காயப் படுத்தப்பட்டவரானாராம். அவருடையகையில் * சாகரஸமானது பெருகியதென்று நாம் கேட்டிருக்கின்றோம். அந்தமங்கணகர் சாக ரஸத்தைக்கண்டு ஸந்தோஷமுள்ளவராக நர்த்தனம்செய்தார். வீரரே! பிறகு, அவர் நர்த்தனம் செய்தவுடனே, அவருடைய தேஜஸினாலே மயங்கி ஜங்கமஸ்தாவரம்இரண்டும் கூத்தாடின. அரசரே!நராதிபரே! பிறகு, பிரம்மாதிகளான தேவர்களும் தபோதனர்களான ரிஷிக ளும், 'தேவரே! நீர் இந்தரிஷியை நர்த்தனம் செய்யாதபடி செய்

---

* சிறந்த ஓஷதியின் ஸாரம்.

யக்கடவீர்' என்று மங்கணகர்கிமித்தமாக மஹாதேவரிடம் விஜ்ஞா பனம் செய்தார்கள். பிறகு, தேவரான மஹாதேவர், தேவர் களுக்கு ஹிதத்தைச்செய்யும் விருப்பத்தினால் களிப்புமிகுந் துள்ள அந்த ரிஷியைக்கண்டு, 'ஓ! ஓ! பிராம்மண! தர்மத்தை அறிந்தவனே! ஏன் நீ நர்த்தனம்செய்கிருய்? ரிஷியே! ப்ராம்மணர் களுள்சிறந்தவனே! தபஸ்வியும் தர்மமார்க்கத்தில் நிலைபெற்றவனு மான உனக்கு யாதுகாரணத்தினால் இப்படிப்பட்ட பெருங்களிப்பு உண்டாயிருக்கிறது?' என்று வினவினர். ரிஷி சொல்லுகிருர்; 'பிரபுவே! பிராம்மணரே! என் கையினின்று பெருகுகின்ற எந்தச் சாகரஸத்தைப் பார்த்து அதிக ஸந்தோஷத்தினால் நான் நர்த்தனம் செய்கிறேனே அதனை நீர் பார்க்கவில்லையா?' என்று சொன்னர். மஹாதேவர் மகிழ்ச்சியினால் மயங்கியிருக்கின்ற அந்த ரிஷியைப் பார்த்து நகைத்து, 'பிராம்மண! நான் ஆச்சர்யத்தை அடையவில்லை. என்னைப்பார்' என்று சொன்னர். ராஜேந்திரரே! முனிஸ்ரேஷ்ட ரைப் பார்த்து இவ்வாறு சொல்லிவிட்டு, சிறந்தபுத்தியுள்ள மஹாதே வர், விரல்நுனியினால் தம்முடைய கட்டைவிரலை அடித்தார். அர சரே! பிறகு, அந்தக் காயத்தினின்று பனிபோன்ற நிறமுள்ள பஸ்மம் வெளியில் வந்தது. மன்னரே! அந்தமுனிவர் அதைக்கண்டு வெட்கமடைந்து கால்களில் வணங்கினர். அந்தத்தேவரை மஹா தேவராக எண்ணினர்; ஆச்சர்யமடைந்து இந்த வார்த்தையையும் சொல்லலானர். 'நான், ருத்ரரென்னும் தேவரைக்காட்டிலும் மற்றதை மிகஉயர்ந்ததும் சிறந்ததுமாக எண்ணவில்லை. சூலபாணி யாயிருக்கிற நீர் தேவாஸுரர்களுடன்கூடின உலகத்துக்குக் கதியா யிருக்கிறீர். வித்வான்கள், உம்மால் இந்த உலகம் படைக்கப்பட்ட தென்று இவ்வுலகில் சொல்லுகின்றுர்கள். யுகக்ஷயகாலத்தில் எல்லா வஸ்துவும் மறுபடியுமே உம்மிடத்திலேயே பிரவேசிக்கின்றன. நீர் தேவர்களாலும் அறியமுடியாதவர்; அவ்வாறிருக்க, என்னால் எப் படி அறியத்தக்கவராவீர்? உலகத்திலுள்ள பொருள்களெல்லாம் உம் மிடத்தில் காணப்படுகின்றன. தோஷமற்றவரே! பிரம்மாதிகளான தேவர்கள் வரங்களைக்கொடுப்பவரான உம்மை உபாஸிக்கின்றுர்கள். நீர் எல்லாமாயிருக்கிறீர். தேவர்களைப் படைப்பவரும் படைக்கும்படி செய்பவரும் நீர். உம்முடைய அனுக்கிரஹத்தினலே தேவர்களெல் லாரும் இவ்வுலகத்தில் ஓரிடத்தினின்றும் பயத்தை அடையாதவர்க ளாக ஸந்தோஷிக்கின்றுர்கள். சங்கரரே! நீர் பிரபு; மேலான ஈஸ்வ ரராயிருப்பதனல் அதிகமாக விளங்குகிறீர். பிரம்மாவும் விஷ்ணுவும்

உலகங்களை சிருஷ்டித்துக்கொண்டும் ரக்ஷித்துக்கொண்டும் உம்மிடத்தில் நிலைபெற்றிருக்கின்றார்கள். உண்டாயிருக்கிற ஸ்தாவர ஜங்கமாத்மகமான உலகம் முழுவதும் உம்மையே மூலமாகக்கொண்டிருக்கின்றது. பரமேஸ்வரரே! மேன்மையை விரும்புகின்றவர்களான மனிதர்களுக்குப் பிரஸன்னரான நீர் ஸ்வர்க்கத்தையும் உத்தமமான ஸ்தானத்தையும் கொடுக்கிறீர். மோக்ஷத்தை விரும்பி நல்ல கர்மாக்களைச்செய்கின்ற மனிதர்களுடைய அந்தக்கர்மாக்களை த்யான யோகத்தினால் அறிந்து அவர்களுக்கு மறுபடியும் ஸம்ஸாரமார்க்கத்தில் வராமலிருக்கும்படி நித்யமான பதத்தைக் கொடுக்கிறீர். மஹாதேவரே! மஹேஸ்வரரே! செந்தாமரைக்கண்ணரே! உம்மால் (கொடுக்கப்படுகிற) உபகரணங்களாலேயே காரியங்களைச்செய்கிறேன்; ஆதலால், உமதருள் வீணாகாது. சம்புவும் எப்பொழுதும் எல்லாப்பக்கங்களிலுமிருப்பவருமான ஈஸ்வரரைச் சரணமடைகிறேன். செய்கையினாலும் மனத்தினாலும் வாக்கினாலும் அவரையே நான் சரணமடைகிறேன்' என்று கூறினார். அந்த ரிஷியானவர் இவ்வாறு மஹாதேவரை ஸ்தோத்திரம் செய்துவிட்டு வணங்கினவரானார். 'தேவரே! கர்வத்தைமுன்னிட்ட இப்படிப்பட்ட அற்பத்தன்மையானது என்னால் காட்டப்பட்டதனால் என்தவமானது குறையாமலிருக்கவேண்டுமென்று நான் உம்மைப் பிரார்த்திக்கிறேன்' என்றார். பிறகு, தேவர், பிரீதியுள்ளமனத்துடன் அந்தரிஷியைப்பார்த்து, 'பிராம்மண! எனதருளினால் உன்னுடையதவமானது ஆயிரக்கணக்காக விருத்தியடையட்டும். உன்னுடன் நான் இந்த ஆஸ்ரமத்தில் எப்பொழுதும் வஸிக்கப்போகிறேன். ஸப்தஸாரஸ்வதமென்கிற இந்தத் தீர்த்தத்தில் எந்தமனிதன் என்னை அர்ச்சிப்பானோ அவனுக்குக் கிடைக்கஅரிதானவஸ்து ஒன்றும் இவ்வுலகத்திலாவது பரலோகத்திலாவது இராது. அவர்கள் ஸாரஸ்வதலோகத்தையும் அடைவார்கள். ஸம்சயமில்லை' என்று மறுபடியும் சொன்னார். மிக்கதேஜஸுடன்கூடியவரான இந்தமங்கணகருடைய சரித்திரமும் கூறப்பட்டது. அவர் ஸுகன்யையிடத்தில் வாயுவினால் புத்திரராக உண்டுபண்ணப்பட்டவர்.

---

## நாற்பதாவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



(பலராமர் ஔசனஸதீர்த்தத்திற்குச் சென்றதும், அந்தத்தீர்த்தத்தின் வரலாறும், பலராமர் உசங்குவின்ஆஸ்ரமத்திற்குச் சென்றதும், உசங்குவின்சரித்திரமும்; பலராமர் ப்ருதூதகதீர்த்தத்தில் ஸ்நானதானாதிகள் செய்ததும்.)

அவ்விடத்தில் கலப்பையைஆயுதமாகக்கொண்ட பலராமர் வாஸஞ்செய்து ஆஸ்ரமவாஸிகளானரிஷிகளை நன்குபூஜித்து மங்கண கரிடத்தில் மங்களகரமான பிரீதியைப் பாராட்டினார். பாரதரே! கலப்பையையுடையவரும் மஹாபலசாலியுமான பலராமர் ப்ராம் மணர்களுக்குத் தானங்கொடுத்து அந்த இரவு வாஸஞ்செய்து ரிஷி களுடைய கூட்டங்களால் பூஜிக்கப்பட்டவராகிக் காலையில்எழுந்திரு ந்து ஸ்நானஞ்செய்து எல்லாரிஷிகளிடமும் அனுமதிபெற்றுத் தீர்த் தாடனத்தின்பொருட்டு விரைவுடன் புறப்பட்டார். அரசரே! பிறகு, கலப்பையை ஆயுதமாகக்கொண்டஅவர், முற்காலத்தில் ரகுராமரால் தள்ளப்பட்ட ராக்ஷஸனுடைய பருத்ததலையினால் கவரப்பட்டகணுக் காலையுடையவரான மஹோதரரென்கிறமஹரிஷியானவர் எந்தஇடத் தில்விடப்பட்டாரோ அந்தக்கபாலமோசனமென்று பிரஸித்திபெற்ற ஔசனஸதீர்த்தத்தை வந்தடைந்தார். அந்த இடத்தில் முற்காலத் தில் மஹாத்மாவான சுக்கிரரால் தவம் செய்யப்பட்டது. அரசரே! எந்தஇடத்தில் மஹாத்மாவானஇந்தச்சுக்கிரருடைய நீதிமுழுவதும் தோன்றியதோ, எந்தஇடத்திலிருந்துகொண்டு சுக்கிரர் தைத்ய தான வர்களுடைய சண்டையைப்பற்றி ஆலோசித்தாரோ தீர்த்தங்களுள் சிறந்ததான அந்த உத்தமதீர்த்தத்தை அடைந்து பலராமர் மஹாத்மா வான பிராம்மணர்களுக்கு முறைப்படி தனத்தையும் கொடுத்தார்" என்றார்.

ஜனமேஜயர், "பிராம்மணரே! கபாலமோசனம் எவ்வாறு ஏற்பட்டது? அந்த இடத்தில் மஹாமுனிவர் எவ்வாறு விடுபட் டார்? ராக்ஷஸனுடையதலையானது எந்தக்காரணத்தினால் ஒட்டி யது?" என்றுவினவ, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினார். "அர சர்களுள்சிறந்தவரே! முற்காலத்தில் தண்டகாரண்யத்தில் வஸித்த வரும் ராக்ஷஸர்களை நாசஞ்செய்யப்போகிறவரும் மஹாத்மாவுமான ரகுராமனால் முனைகூர்மையான க்ஷுரத்தினால் ஜனஸ்தானத்திலி

ருந்த துராத்மாவான ராக்ஷஸனுடைய தலையானது அறுக்கப்பட்டது. அந்தத்தலையானது மஹாவனத்தில் விழுந்தது. அரசரே! அந்தத்தலையானது, தற்செயலாக வனத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருந்த மகோதரரிஷியினுடைய கணுக்கால்எலும்பைப்பிளந்துபற்றிக்கொண்டு அப்பொழுது பிரகாசித்தது. அந்தத்தலைகௌவிக்கொண்டிருத்தலினாலே, பேரறிவாளரான அந்தப்பிராம்மணர் அப்பொழுது தீர்த்தங்களையும் க்ஷேத்திரங்களையும்அடைவதற்குச் சக்தியற்றவரானார். துர்க்கந்தமுள்ளதும் ஊனீர்பெருகுகின்றதுமான அந்தத்தலையினால்உண்டான வேதனையினால் பீடிக்கப்பட்ட அந்தமகரிஷியானவர் பூமியிலுள்ள எல்லாத்தீர்த்தங்களுக்கும் போனாரென்று நாம்கேட்டிருக்கிறோம். மஹாதபஸ்வியான அந்தமகரிஷி எல்லாநதிகளையும் ஸமுத்திரங்களையும்அடைந்து அந்த விருத்தாந்தமனைத்தையும் பரிசுத்தமானமனமுள்ளவர்களானரிஷிகளுக்குச் சொன்னார். எல்லாத்தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்தும் விடுபட்டவராகவில்லை. அந்தப்பிராம்மணோத்தமர் மகரிஷிகளுடைய மகிமைபொருந்தியவசனத்தினால் அப்பொழுது ஔசனஸமென்று பிரஸித்திபெற்ற ஸரஸ்வதீநதியைச்சேர்ந்த உத்தமதீர்த்தத்தை ஸர்வபாபங்களையும் தணிக்கக்கூடியதென்றும் ஸர்வோத்தமமான ஸித்திக்கிடமாயிருப்பதென்றும் கேட்டறிந்தார். பிறகு, அவர் அந்தஸரஸ்வதீநதியிலுள்ள ஔசனஸதீர்த்தத்தை அடைந்து ஸ்நானஞ்செய்தார்.பிறகு, ஔசனஸதீர்த்தத்தில்ஸ்நானஞ்செய்கின்ற அந்தமகரிஷியினுடைய காலை விட்டுவிட்டு அப்பொழுது அந்த ராக்ஷஸனுடைய தலையானது ஜலத்தினுள் விழுந்தது. அவர் அந்தத்தலையினால் விடப்பட்டு அதிகஸுகத்தை அடைந்தார். பிரபுவே! அந்தத்தலையானது ஜலத்தினடுவில் கண்ணுக்குக் காணாமல் மறைந்துவிட்டது. மன்னரே! பிறகு, அந்தமகோதரமகரிஷியானவர் மனக்கவலையற்றவராகவும் பரிசுத்தமான மனமுள்ளவராகவும் பாபம்நீங்கினவராகவும் ப்ரீதியுள்ளவராகவும் செய்யவேண்டியதைச் செய்தவராகவும் ஆஶ்ரமத்தை வந்தடைந்தார். பிறகு, தலையினால் விடுபட்டவரும் பெருந்தவமுள்ளவருமான அந்தமகோதரர் புண்ணியாஶ்ரமத்தை அடைந்து சுத்தமான மனமுள்ளவர்களான ரிஷிகளுக்கு அவைஎல்லாவற்றையும்உரைத்தார். கர்வத்தைஅழிப்பவரே! அந்தரிஷிகள் அந்தமஹோதரருடைய வார்த்தையைக்கேட்டு, பிறகு, ஒன்றுகூடி அந்தத்தீர்த்தத்திற்குக் கபாலமோசனமென்று பெயரிட்டார்கள். நன்குஆலோசிப்பவரான அந்தமகரிஷியும் மிகச்சிறந்த அந்தத் தீர்த்தத்தை மறுபடியும் அடைந்து அந்தத்தீர்த்தத்தை நிறையக்

குடித்து அப்பொழுது ஸித்தியை அடைந்தார். ராஜேந்திரரே! மாதவர் அப்பொழுது அந்தத்தீர்த்தத்தில் கொடுக்கத்தக்க அனேக வஸ்துக்களைக் கொடுத்து பிராம்மணர்களை நன்குபூஜித்து உசங்குவினுடைய ஆஸ்ரமம்சென்றார். பாரதரே! பிரபுவே! எந்தஆஸ்ரமத்தில் ஆர்ஷ்டிஷேணராலே கடுந்தவம் செய்யப்பட்டதோ, எந்த இடத்தில் விஸ்வாமித்திரமகரிஷி பிரர்ம்மண்யத்தைப் பெற்றாரோ மகிமை பொருந்தின அந்த ஆஸ்ரமஸ்தானமானது விரும்பப்படும் எல்லாப் பொருள்களாலும் நிறைந்ததாகவும் எப்பொழுதும் ரிஷிகளாலும் பிராம்மணர்களாலும் அடையப்பட்டதாகவும் இருந்தது. ராஜேந்திரரே! பிறகு, ஸ்ரீமானான பலராமர் பிராம்மணர்களால் சூழப்பட்டவராகி உசங்கு சரீரத்தைவிட்டஇடமான அந்த ஆஸ்ரமம்சென்றார். பாரதரே! வயதுமுதிர்ந்தவரும் இடைவிடாமல் தவத்தைஅனுஷ்டிப்பவருமானஉசங்குஎன்கிற பிராம்மணர் தேகத்தைவிடுவதில் நிச்சயங்கொண்டு அப்பொழுது பலவாறு ஆலோசித்துப் பிறகு மிக்கதவமுள்ளவரான அவர் எல்லாப்புத்திரர்களையும் அங்கழைத்து, 'என்னை ப்ருதூதகத்துக்குக் கொண்டுபோங்கள்' என்று சொன்னார். தவத்தையே பொருளாகக்கொண்ட அந்தரிஷிபுத்திரர்கள் உசங்கு மூப்படைந்ததை அறிந்து அந்தத்தபோதனரை ஸரஸ்வதீ நதியைச்சேர்ந்த ப்ருதூதக தீர்த்தத்தை அடையச்செய்தார்கள். சிறந்தபுத்தியையுடையவரான அந்த உசங்கு அப்பொழுது அந்தப்புத்திரர்களால் பரிசுத்தமாயுள்ளதும் அனேகதீர்த்தங்களோடுகூடியதும் பிராம்மணர்களுடைய கூட்டங்களால் அடையப்பட்டதுமான ஸரஸ்வதீநதியை அடையும்படி செய்யப்பட்டார். அரசரே! புருஷஸ்ரேஷ்டரே! மிக்க தவமுள்ளவரும் ரிஷிகளுள்சிறந்தவருமான அந்தஉசங்கு அந்தஸரஸ்வதீதீர்த்தத்தில் விதிப்படி ஸ்நானம்செய்து தீர்த்தகுணங்களையும் அறிந்து அதிகப்பிரீதியுள்ளவராகி அருகிலிருக்கின்ற எல்லாப்புத்ரர்களையும் பார்த்து, 'எந்தமனிதன் ஸரஸ்வதீநதியின்வடகரையில் ப்ருதூதகத்தில் மந்திரஜபம்செய்துகொண்டிருந்து தன்னுடைய சரீரத்தை விடுவானோ அவன் அக்ஷயமான ஸ்வர்க்கத்தை அடைகிறான்' என்றுசொன்னார். உசங்கு இவ்வாறுசொல்லிவிட்டுத் தம்சரீரத்தை விட்டு விஷ்ணுபதத்தை அடைந்தார். குருவம்சத்திலுதித்தவரே! தர்மாத்மாவும் பிராம்மணர்களிடத்தில் அன்புள்ளவரும் தபஸ்விகளுள்சிறந்தவரும் வீர்யமுள்ளவரும் உக்ரமானதேஜஸுள்ளவரும் பெருந்தவம்புரிந்தவரும் பலவானும் பிரதாபசாலியும் கலப்பையை ஆயுதமாகக்கொண்டவருமான அந்தப்பலராமர், எந்தஇடத்தில் உல

கங்களுக்கெல்லாம் பிதாமஹரும் பகவானுமான நான்முகனர் உலகங்களைப்படைத்தாரோ எந்தவிடத்தில் கடுமையான விரதமுள்ளவரும் ரிஷிகளுள் சிறந்தவருமான ஆர்ஷ்டிஷேணர் பெரியதவத்தினலே வேதஸமூகத்தைப்பெற்ருரோ, எந்தவிடத்தில் ஸிந்துத்வீபர்என்கிற ராஜரிஷியும் மகாதபஸ்வியான தேவாபியும் அவ்வாறே விஸ்வாமித்திரமுனிவரும் பிராம்மண்யத்தைப் பெற்ருர்களோ அந்தப்ருதூதகத்துக்குவந்து ஸ்நானம்செய்து ஆசமனம்பண்ணிப் பிராம்மணர்களுக்குக் கொடுக்கத்தக்கவஸ்துக்களை மிகுதியாகக்கொடுத்தார்'' என்றுகூறினர்.

---

### நாற்பத்தோராவது அத்யாயம்.

### ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



**(ஆர்ஷ்டிஷேணர் ப்ருதூதகதீர்த்தத்தில் தவஞ்செய்து எல்லாவேதங்களையும் அறிந்ததும், விஸ்வாமித்திரர்முதலானவர்கள் அந்ததவம் புரிந்ததினல் பிராம்மண்யத்தை அடைந்ததும், பலராமர் அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம்முதலியனசெய்து பகநுடைய ஆஸ்ரமத்துக்குச்சென்றதும்.)**

ஜனமேஜயர், "பிராம்மணரே! ஆர்ஷ்டிஷேணர் எவ்வாறு அப்படிப்பட்டபெருந்தவம் புரிந்தார்?அப்பொழுது ஸிந்துத்வீபரும் எவ்வாறு பிராம்மண்யத்தை அடைந்தார்? ப்ராம்மணரே! ஸாதுக்களுள் சிறந்தவரே! தேவாபியும் விஸ்வாமித்திரரும் எவ்வாறு பிராம்மண்யத்தை அடைந்தார்கள்? பகவானே! அவற்றை எனக்குச்சொல்வீராக.எனக்கு அதிககுதூகலமிருக்கின்றது'' என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானர்.

"அரசரே! முற்காலத்தில் கிருதயுகத்தில் ஆர்ஷ்டிஷேணரென்கிற பிராம்மணேத்தமர் எப்பொழுதும் குருவின்வீட்டில் வஸித்துக்கொண்டு நித்தியம் வேதாத்தியயனத்திலேயே பற்றுதலுள்ளவராயிருந்தார். மன்னரே! எப்பொழுதுமே குருகுலத்தில் வாஸஞ்செய்துகொண்டிருக்கின்ற அந்தஆர்ஷ்டிஷேணருக்கு வித்யையானது முடிவுபெறவில்லை. வேதங்களும் முடிவுபெறவில்லை. வேந்தரே! பிறகு, பெருந்தவமுள்ளவரான அந்த ஆர்ஷ்டிஷேணர் கவலையுடன் தவம்புரிந்தார். பிறகு, அந்தத்தவத்தினலே உத்தமமானவேதங்களை அறிந்தார். வித்வானும் வேதங்களை அடைந்தவரும் ஸித்திபெற்ற

வரும் மிக்கதவமுடையவருமான அந்த ரிஷிஸ்ரேஷ்டர் அந்தத்தீர்த் தத்திற்கு மூன்றுவரன்களைக் கொடுத்தார். அவை, 'பெரியநதியா கிய ஸரஸ்வதியினுடைய இந்தத்தீர்த்தத்தில் இன்றுமுதல் ஸ்நா னஞ்செய்தமனிதன் அஸ்வமேதத்தை நிறைவேற்றிய பயனை அடைவான். இன்றுமுதல் இந்தஇடத்தில் கொடியஜந்துவினிடத் தினின்று பயம் உண்டாகாது. மேலும், (இங்கே தவமுதலிய வற்றைச்செய்பவன்) சிறிது காலத்திற்குள்ளாகவே முழுப்பலனை யும் அடைவான்' என்றுசொன்னார். மகாதேஜஸ்வியும் இவ்வாறு ஸித்திபெற்றவரும் மகிமையுடையவரும் பிரதாபசாலியுமான அந்த ஆர்ஷ்டிஷேணமஹரிஷியானவர் இவ்வாறுசொல்லிவிட்டு, ஸ்வர் க்கத்தை அடைந்தார். மஹாராஜரே ! பிரதாபசாலியான ஸிந்து த்வீபரும் தேவாபியும் அதேதீர்த்தத்தில் அப்பொழுது மகிமை பொருந்திய பிராம்மண்யத்தைப் பெற்றார்கள். ஐயா ! அவ்விதமே தவத்தில் நிலைபெற்றவரும் இந்திரியங்களையடக்கினவருமான கௌசி கர் நன்றாக அனுஷ்டிக்கப்பட்டதவத்தினால் பிராம்மண்யத்தை அடைந்தார்.

பூமியில் காதியென்று பிரஸித்திபெற்றவரும் மஹானுமான ஒருக்ஷத்திரியர் இருந்தார். அரசரே ! பிரதாபசாலியான விஸ் வாமித்திரர் அந்தக்காதிக்குப் புத்திரரானார். ஐயா ! குசிகவம் சத்தில்தோன்றினவரான அந்தக்காதியென்கிற அரசர், மகாயோகி யானாராம். மிக்கதவத்தையுடைய அந்தக்காதியானவர் விஸ்வாமித்திர ரென்கிறபுத்திரருக்குப் பட்டாபிஷேகம்செய்வித்துத் தேகத்தைவிடு வதில் எண்ணம்கொண்டார். அந்த அரசரைப்பார்த்து ஜனங்கள் வணங்கி, 'மிகக்கற்றறிந்தவரே ! ராஜ்யத்தைவிட்டுச்செல்வது தக்க தன்று. மகாபயத்தினின்று எங்களைக் காப்பாற்றுவீராக' என்று சொன்னார்கள். இவ்வாறு சொல்லியதைக்கேட்ட காதி, பிறகு, அவர் களைப்பார்த்து, 'என்னுடையகுமாரன் எல்லா உலகத்திற்கும் ரக்ஷக னுவான்' என்று மறுமொழிகூறினார். அரசரே ! காதிராஜர் இவ் வாறு சொல்லிவிட்டுப் பிறகு விஸ்வாமித்திரரை அரசராகச்செய்து விட்டு ஸ்வர்க்கம்சென்றார். விஸ்வாமித்திரர் அரசரானார். அவர் முயற்சியுள்ளவராயிருந்தும் பூமியைரக்ஷிப்பதற்குச் சக்தியுள்ளவராக வில்லை. பிறகு, அந்த அரசர் ராக்ஷஸர்களிடமிருந்து மகாபயமிருப்ப தைக் கேட்டார்; சதுரங்கஸேனையுடன் நகரத்தினின்றும்வெளிப் புறப்பட்டார். அவர் தூரமானவழியைக்கடந்து வஸிஷ்டாஸ்ரமத்துக் குச் சென்றார். அரசரே ! அவருடைய படைவீரர்கள் அந்த ஆஸ்ர

மத்தில் அனேக அக்கிரமங்களைச் செய்தார்கள். பிறகு, மகிமையுள்ள பிராம்மணரான வஸிஷ்டர் ஆஸ்ரமத்திற்குவந்தார்; பிறகு, பெருங்காடெல்லாம்அழிக்கப்படுவதைக் கண்டார். மகாராஜரே! அந்த விஸ்வாமித்திரரிடத்தில்கோபங்கொண்ட ரிஷிஸ்ரேஷ்டரான வஸிஷ்டர் தம்முடைய ஹோமதேனுவைப்பார்த்து, 'கோரரூபிகளான சபரர்களை உண்டுபண்ணு' என்றுகட்டளையிட்டார். அவ்வாறுசொல்லப்பட்டவுடன், அந்தப்பசுவானது கோரமானகாட்சியுள்ளமனிதர்களைஉண்டு பண்ணியது. அவர்களோ அந்தப்படையைஎதிர்த்து எல்லாத்திசைகளிலும்சிதறச்செய்தார்கள். காதியின்குமாரரானவிஸ்வாமித்திரர்அச்சேனையானது ஓடிவிட்டதைக்கேட்டுத் தவத்தையே சிறந்ததென்றெண்ணித் தவத்திலேயே மனத்தைச் செலுத்தினார். அரசரே! அந்த விஸ்வாமித்திரர் மனத்தை அடக்கினவராகி ஸரஸ்வதீநதியைச்சேர்ந்த சிறந்தஇந்தத்தீர்த்தத்தில், நியமங்களாலும் உபவாஸங்களாலும் தம்முடைய தேகத்தை இளைக்கச்செய்துகொண்டு ஜலத்தை ஆகாரமாகக்கொண்டும் வாயுவைப் பக்ஷித்தும் சருகுகளை ஆகாரமாகக்கொண்டும் இருந்தார்; அவ்வாறே, தரையிலும் படுத்தார். இன்னும் மற்றவெவ்வேறுநியமங்களையும் அனுஷ்டித்தார். தேவர்களோ அடிக்கடி அவருடைய விரதத்திற்கு இடையூறு செய்தார்கள். மஹாத்மாவான இந்த விஸ்வாமித்திரருடைய புத்தியானது நியமத்தைவிட்டு அகலாமலிருந்தது. பிறகு, காதிபுத்ரர், அதிகமுயற்சியுடன் பலவிதமான தவத்தைச்செய்து ஒளியினால் சூர்யன்போன்ற வடிவமுள்ளவரானார். வரன்களைக்கொடுப்பவரும் மஹாதேஜஸ்வியுமான பிரம்மதேவர் விஸ்வாமித்ரர் அவ்விதம் தவத்துடன்கூடியிருப்பதை அறிந்து அப்பொழுது எதிரில்தோன்றினார். மன்னரே! அந்தவிஸ்வாமித்ரர், 'நான் பிராம்மணனாகக்கடவேன்' என்கிறவரனை வேண்டினார். எல்லா உலகங்களுக்கும் பிதாமஹரான பிரம்மதேவரும் 'அவ்வாறேஆகுக' என்றுசொன்னார். மிக்கபுகழுள்ளவரான அந்தவிஸ்வாமித்ரர் உக்ரமானதவத்தினால் பிராம்மண்யத்தைப் பெற்று இஷ்டம் நிறைவேறித் தேவதைக்கு ஒப்பானவராகிப் பூமிமுழுதும் ஸஞ்சாரம்செய்தார். அரசரே! அப்படிப்பட்ட சிறந்த தீர்த்தத்தில் பலராமர் பற்பல தனத்தைக்கொடுத்து அவ்வாறே பாலுள்ள பசுக்களையும் வாகனங்களையும் படுக்கைகளையும் வஸ்திரங்களையும் அலங்காரத்தையும் பக்ஷயத்தையும் குடிக்கத்தக்க நல்ல வஸ்துவையும் பிராம்மணோத்தமர்களுக்கு மகிழ்ச்சியுடன் பூஜித்துக்

கொடுத்தார். வேந்தரே! பிறகு, தால்ப்யரான பகரிஷியானவர் கடுமையான தவத்தைச்செய்தஇடமென்று கேள்விப்படும் அந்தப்பகருடைய ஆஸ்ரமத்திற்கருகில் பலராமர்சென்றார்.



## ...டாவது அத்யாயம்.

## ஹ்ரத பராவேசபர்வம் (தொடர்ச்சி.)

(பலராமர் அவாகீர்ணதீர்த்தத்திற்குச்சென்றதும், பகரிஷியின் சரித்திரமும், பலராமர் அவ்விடத்தினின்று வஸிஷ்டாபவாஹதீர்த்தத்திற்குப்போனதும்.)

அரசரே! மிக்கபெருந்தவமுள்ளவரும் தர்மாத்மாவும் பிரதாபசாலியும் கோபமுள்ளவருமான தால்ப்யரென்னும்பகமஹரிஷி கடுந்தவத்தினால் தன்சரீரத்தைக் கிருசமாகச்செய்துகொண்டு அதிகமான கோபத்தினால் மூடப்பட்டுப் பசுக்களுக்காகத்* திருதராஷ்டிரனுடைய ராஜ்யத்தை ஹோமம்செய்தஇடமும் பிராம்மணர்கள் நிறைந்திருப்பதுமாகிய அவாகீர்ணமென்கிறதீர்த்தத்தை யதுநந்தனரானபலராமர் அடைந்தார். முற்காலத்தில் நைமிசாரண்யவாஸிகளுடைய பன்னிரண்டுவருஷத்தினால்நிறைவேறத்தக்க யாகமானது முடிந்தபிறகு, விஸ்வஜித்தென்னும் யாகத்தினுடையமுடிவில் ரிஷிகள் பாஞ்சாலநாட்டைஅடைந்தார்கள். அரசரே! மனஸ்விகளானமகரிஷிகள் அந்தப் பாஞ்சாலநாட்டிறைவனைத் தக்ஷிணைக்காகயாசித்தார்கள். அவர்கள் பாஞ்சாலர்களிடத்தினின்று நல்லபலமுள்ளவைகளும் வியாதியற்றவைகளுமான இருபத்தேழுகன்றுகளைப் பெற்றுக்கொண்டார்கள். தால்ப்யரென்கிறபகர் அந்தரிஷிகளைப்பார்த்து, 'பசுக்களைப் பிரித்துக்கொள்ளுங்கள். நான் இந்தப்பசுக்களைவிட்டுவிட்டு ராஜஸ்ரேஷ்டனை யாசிக்கப்போகிறேன்' என்றுசொன்னார். மன்னரே! பிராம்மணோத்தமரும் பிரதாபசாலியுமானபகர் எல்லாரிஷிகளையும் பார்த்து இவ்வாறுசொல்லிவிட்டு த்ருதராஷ்டிரனுடைய அரண்மனையைக் குறித்துச்சென்றார். அந்தத்தால்ப்யர் ஜனங்களுக்குநாதனான த்ருதராஷ்டிரனுடைய ஸமீபத்திற்போய்ப் பசுக்களை யாசித்தார். அரசர்களுள்சிறந்தவனான அந்தத்ருதராஷ்டிரனும் கோபங்கொண்டு இந்தத் தால்ப்யரைப்பார்த்து அப்பொழுது தற்செயலாக மரித்திருக்கிறபசுக்களைக்கண்டு, 'அபசதப்ராம்மண! உனக்குவிருப்பமிருக்குமானால் இந்

* இவன் பாஞ்சாலராஜன்.

தப் பசுக்களைச் சீக்கிரமாகக்கொண்டுபோ' என்றுசொன்னான். பிறகு, தர்மங்களையறிந்தவரானபகரிஷியானவர் கோபங்கொண்டு, 'அந்தோ! கஷ்டம்; நான் ஸபையில் க்ரூரமான சொல்லைச் சொல்லப்பெற்றேன்' என்றுசிந்திக்கலானார். பிராம்மணோத்தமர் ஒருமுகூர்த்தகாலம் ஆலோசித்துக் கோபத்தினால்மூடப்பட்டு த்ருதராஷ்டிரராஜனுடைய வினாசத்தின்பொருட்டுப் புத்தியைச் செலுத்தினார். முனிஸ்ரேஷ்டரான அந்தத்தால்ப்யரிஷியானவர் செத்தபசுக்களுடைய மாம்ஸங்களை அறுத்தெடுத்து முற்காலத்தில் அதனை த்ருதராஷ்டிரராஜனுடைய ராஜ்யமாகப்பாவித்து ஹோமம்செய்தார். மஹாராஜரே! தால்ப்யரென்கிற பகரிஷி சிறந்தநியமத்தை அடைந்து அவாகீர்ணமென்கிற ஸரஸ்வதீ தீர்த்தத்தில் அக்னியை நன்றாகவளர்த்து ஹோமஞ்செய்தார். மிக்கதவத்தையுடைய அந்தத்தால்ப்யர் அந்தமாம்ஸங்களாலேயே ராஜ்யத்தை (ப்பாவித்து) அக்னியில் ஹோமஞ்செய்தார். அரசரே! பிறகு, மிக்கபயங்கரமான அந்தயாகமானது முறைப்படிநடந்து வருகையில், திருதராஷ்டிரனுடையராஜ்யமானது க்ஷீணித்துவிட்டது. பிரபுவே! அழகான காடானது கோடாலியினால் வெட்டப்படுவது போல அந்தராஜ்யமானது பிரஜ்ஞையையிழந்தும் நிலைகுலைந்தும் ஆபத்தையடைந்தது. மனிதர்களுக்குத்தலைவனும் பிரபுவும் அரசனுமான அந்தத்திருதராஷ்டிரன், ராஜ்யம் அவ்வாறு சிதறிப்போயிருக்கின்றதைக்கண்டு மனவருத்தமுற்று ஆலோசிக்கலானான். முற்காலத்தில் அரசன் பிராம்மணர்களோடுகூடி (த்தனதுராஜ்யத்தை ஆபத்திலிருந்து) விடுவிப்பதற்காக முயற்சியைச்செய்தான். ஆனால், நன்மையை அடையவில்லை. ராஜ்யம் க்ஷீணித்துக்கொண்டேயிருந்தது. தோஷமற்றவரே! அரசன் மனவருத்தத்தை அடைந்தபொழுது அந்தப் பிராம்மணர்களும் மனவருத்தமடைந்தார்கள். ஜனமேஜயரே! அரசன் ராஜ்யத்தை (ஆபத்தினின்று) விடுவிப்பதற்குச் சக்தியற்றவனபொழுது பிராம்மணர்முதலானவர்களைக் கேட்டான். பிறகு, பிராம்மணர்முதலானவர்கள் (அரசனைப்பார்த்து), 'உன்னால் பசுவிஷயத்தில் அபகாரம்செய்யப்பட்டிருக்கின்ற பகரிஷியானவர் மாம்ஸங்களால் உன்னுடைய இந்தராஜ்யத்தை ஹோமம்செய்கிறார். அந்தரிஷியினால் ஹோமம்பண்ணப்படுகின்ற உன்னுடைய இந்தராஜ்யத்திற்குப் பெரிதான அழிவு உண்டாயிருக்கிறது. உன்னுடையராஜ்யத்திற்கு இப்பொழுது பெரிதான அழிவையுண்டாக்கிய இது அந்தத்தவத்தினுடைய செய்கை. மகாபாகுபலமுள்ளவனே! பூமியைக்காப்பவனே! ராஜனே! ராஜ்யத்திற்குச் சாந்தியை விரும்பினால் ஸரஸ்வதீநதியி

னுடைய தீர்த்தங்களைச்சேர்ந்த ஒருபுண்ணியதட்டத்தில் இருக்கின்ற அந்தரிஷியை மனங்களிக்கச்செய்'என்றனர். பரதர்களுள்சிறந்தவரே! பிறகு, திருதராஷ்டிர ராஜன் ஸரஸ்வதீநதியை அடைந்து தலையால் பூமியில்வணங்கிக் கைகளைக்குவித்துக்கொண்டு பகரிஷியைப்பார்த்து, 'பகவானே! உம்மை நான் பிரார்த்திக்கிறேன். என்னுடைய குற்றத்தைப் பொறுத்துக்கொள்ளும். தீனனும் பேராசையுள்ளவனும் மூர்க்கஸ்பாவத்தினலே மனம்கெடுக்கப்பட்டவனுமான எனக்கு நீரே கதி. நீர்தாம் எனக்குநாதர். நீர் மனத்தெளிவடையவேண்டும்' என்று வேண்டினன். அவ்வாறு புலம்புகின்றவனும் சோகத்தினல் கலக்கமுற்ற சித்தத்தையுடையவனுமான அந்தத்திருதராஷ்டிரனைப் பார்த்து அந்தத்தால்ப்யரிஷிக்குக் கிருபையுண்டாயிற்று. அவனுடைய ராஜ்யத்தை விடுவித்தார். அவன்விஷயத்தில் அந்த ரிஷியானவர் கோபத்தைவிட்டுவிட்டுப் பிரஸன்னரானர். அந்த ராஜ்யம் ஆபத்தினின்று விடுபடுவதின்பொருட்டு மறுபடியும் அக்கினியில் ஆகுதியைச்செய்தார். அந்தத்தால்ப்யர் ராஜ்யத்தை ஆபத்தினின்று விடுவித்து அதிகமானபசுக்களைப் பெற்றுக்கொண்டு மனமகிழ்ந்து மீண்டும் நைமிசாரண்யம்சென்றார். அரசரே! தர்மாத்மாவும் பெரியமனமுள்ளவனுமான திருதராஷ்டிரனும் மனவமைதியைப் பெற்று எல்லாம் நிறைந்துள்ள தன்னுடைய நகரத்தையே அடைந்தான். மகாராஜரே! உதாரமானபுத்தியையுடைய பிருகஸ்பதி அஸுரர்களுடைய நாசத்தின்பொருட்டும் தேவர்களுடைய க்ஷேமத்தின் பொருட்டும் அந்தத்தீர்த்தத்தில் மாம்ஸங்களால் யாகத்தைச் செய்தார். பிறகு, அஸுரர்கள் க்ஷீணித்தார்கள். யுத்தத்தில் ஜயத்தினல் பிரகாசிக்கின்ற தேவர்களாலும் அஸுரர்கள் நன்கு முறிய அடிக்கப்பட்டார்கள். அரசரே! மிக்கபுகழுள்ளவரும் மிக்ககைவன்மையுள்ளவருமான பலராமர் அந்தத்தீர்த்தத்திலும் விதிப்படி ஸ்நானஞ்செய்து பிராம்மணர்களுக்குக் குதிரைகளையும் யானைகளையும் பெண்கோவேறுகழுதை கட்டப்பட்ட தேர்களையும் மிக்கவிலைபெற்ற ரத்னங்களையும் தனத்தையும் மிகுதியான தான்யத்தையும் கொடுத்து யாயாதமென்கிற தீர்த்தத்தைக் குறித்துச் சென்றார். மகாராஜரே! ஸரஸ்வதிநதியானது அந்த இடத்தில் நடந்த மஹாத்மாவும் நகுஷபுத்திரனுமான யயாதியினுடைய யாகத்தில் நெய்யையும் பாலையும் பெருக்கியது. புருஷர்களுள் சிறந்தவனும் பூமிக்கு நாதனுமான யயாதி அந்த இடத்தில் யாகம்செய்து ஸந்தோஷமுள்ளவனாக மேலேஎழுந்து சிறந்த உலகங்களை அடைந்தான். அந்த

இடத்தில் மற்றொருஸமயம் யாகம்செய்கின்ற யயாதிராஜன் மிக்க ஔதார்யத்தைவெளியிட்டுப் பரமாத்மாவினிடத்தில் சாஶ்வதமான பக்தியையும்செலுத்தி எந்தஎந்தப்பிராம்மணர்கள் எந்தஎந்தப்போகங்களை மனத்தினாலே விரும்புகிறார்களோ அந்தஅந்தப்பிராம்மணர்களுக்கு அந்த அந்தவிருப்பங்களைக்கொடுத்தான். இந்தயாகத்திலழைக்கப்பட்ட எந்த எந்த மனிதன் எந்த எந்த இடத்திலிருந்தானோ அவன் அவனுக்கு அவ்வவ்விடத்திலேயே நதிகளுள்சிறந்ததான ஸரஸ்வதி நதியானது வீடுமுதலானவற்றையும் படுக்கைமுதலானவற்றையும் அறுசுவையுடன்கூடிய போஜனத்தையும் அவ்வாறே பற்பலவிதமானதானத்தையும் கொடுத்தது. அவர்கள் அரசனுடையதானத்தை ஸர்வோத்தமமாக எண்ணி ப்ரீதியைஅடைந்து மங்களகரமான ஆசீர்வாதங்களையும்செய்து அவனை ஸ்தோத்திரம்செய்தார்கள். அந்தஇடத்தில் யாகத்தின்நிறைவினாலேகந்தர்வர்களுடன்கூடினதேவர்கள் வியப்புற்றார்கள். மனிதர்களும் அந்தயஜ்ஞத்தின்நிறைவைக்கண்டு வியப்புற்றவர்களானார்கள். பிறகு, மகாதர்மத்தை த்வஜமாகக்கொண்டவரும் மஹாத்மாவும் நல்லசித்தமுள்ளவரும் எப்பொழுதும் மகாதானத்தில் நிலைபெற்றவரும் சித்தத்தை அடக்கினவரும் இந்திரியங்களை வசப்படுத்தினவரும் பனைமரத்தைக் கொடியாகக்கொண்டவருமான பலராமர் மகாபயங்கரமான வேகத்தையுடைய வஸிஷ்டாபவாகமென்கிற தீர்த்தத்தைக்குறித்துச் சென்றார்" என்று கூறினர்.

---

## நாற்பத்துமூன்றாவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



(வஸிஷ்டாபவாஹதீர்த்தத்திற்கு அந்தப்பெயர்வந்ததற்குக்காரணம்.)

ஜனமேஜயர், "பிராம்மணரே! அந்த வஸிஷ்டாபவாஹதீர்த்தமானது யாதுகாரணம்பற்றிப் பயங்கரமான வேகத்துடன்கூடியதாயிற்று? நதிகளுள்சிறந்ததான ஸரஸ்வதீநதியானது யாதுகாரணம் பற்றி அந்தவஸிஷ்டரிஷியை இழுத்துச்சென்றது? பிரபுவே! இவருக்கு விஶ்வாமித்திரருடன் யாதுகாரணத்தினால் வைரமுண்டாகியது? மிகக்கற்றறிந்தவரே! நான் உம்மைக்கேட்கிறேன். இதனைச் சொல்வீராக; நீர்சொல்லும்போது எனக்குப் போதுமென்றஎண்ணம் உண்டாகவில்லை" என்றுவினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

“பாரதரே! அரசரே! விஸ்வாமித்திரருக்கும் பிரம்மரிஷியான வஸிஷ்டருக்கும் தவத்தைப்பற்றிய போட்டியினால் பெரும்பகையானது உண்டாகியது. ஸ்தாணுதீர்த்தத்தில் மகிமைபொருந்தின வஸிஷ்டருடைய ஆஸ்ரமம் கீழ்க்கரையிலிருந்தது. புத்திமானான விசுவாமித்திரருடைய ஆஸ்ரமமானது அந்த வஸிஷ்டாஸ்ரமத்திற்கு எதிர்க்கரையிலிருந்தது. மஹாராஜரே! எந்தஇடத்தில்ஸ்தாணுவானவர் கடுந்தவம்புரிந்தாரோ அந்தஇடத்தில் இந்தவிஸ்வாமித்திரருடையகோரமான அந்தச்செய்கை நடந்ததென்று கற்றறிந்தவர்கள் சொல்லுகின்றார்கள். பிரபுவே! பகவானான ஸ்தாணுவானவர் எந்த இடத்தில் யாகஞ்செய்து ஸரஸ்வதியைப்பூஜித்து ஸ்தாபனம்செய்தாரோ அந்தத்தீர்த்தமானது ஸ்தாணுதீர்த்தமென்று பிரஸித்திபெற்றது. நராதிபரே! அந்தத்தீர்த்தத்தில் தேவர்கள், தேவசத்துருக்களை அழிப்பவரான ஸ்கந்தரை மஹிமைதங்கிய ஸேனாபதித்தன்மையுடன் அபிஷேகம் செய்தார்கள். மஹரிஷியான விஸ்வாமித்திரர் ஸரஸ்வதியைச்சேர்ந்த அந்தத்தீர்த்தத்தில் உக்கிரமான தவத்தினால் வஸிஷ்டரை நிலைகுலையச்செய்தார். அதனைக்கேளும். பாரதரே! தவத்தைத்தனமாகக்கொண்டவர்களான அந்தவிஸ்வாமித்திரர் வஸிஷ்டர் இருவரும் நாள்தோறும் தவம்காரணமாகக் கடுமையானபகையைச் செய்துகொண்டார்கள். அந்தத்தவத்திலும் அதிக ஸந்தாபத்தையடைந்த விஸ்வாமித்திரமகரிஷி வஸிஷ்டருடைய தேஜஸைக் கண்டு சிந்தையடைந்தார். பாரதரே! தர்மத்தில் நிலைபெற்றவரான அந்த விஸ்வாமித்திரருக்கு இந்தப் புத்தியுண்டாயிற்று. ‘இந்த ஸரஸ்வதீநதியானது ஜபிக்கின்றவர்களுள் உத்தமரும் தவத்தைத்தனமாகக்கொண்டவருமான வஸிஷ்டரை வேகத்தினால் விரைவாக என் சமீபத்திற்குக்கொண்டுவரும். இவ்விடத்தில் வந்திருக்கின்ற ப்ராம்மணஸ்ரேஷ்டரான வஸிஷ்டரைக் கொல்வேன்; ஸம்சயமில்லை’ என்று மகிமைபொருந்தின விஸ்வாமித்திரமகரிஷி இவ்வாறு நிச்சயித்துக் கோபத்தினால் கண்கள்மிகச்சிவந்து, நதிகளுள்சிறந்ததான ஸரஸ்வதியை நினைத்தார். அந்தநதி அந்தமகரிஷியினால் த்யானம்பண்ணப்பட்டதாகி மனக்கலக்கத்தை அடைந்தது. ஸரஸ்வதியானது அப்பொழுது மகாவீர்யமுள்ளவரும் மகாகோபமுள்ளவருமான அந்தவிஸ்வாமித்திரரை அடைந்து அங்கம்நடுங்கி நிறம்மாறி அஞ்சலிபந்தம்செய்துகொண்டு முனிஸ்ரேஷ்டரானஅவரருகில்வந்து நின்றது. வீரனான கணவனையிழந்தமங்கையைப்போல அது மிகவும் துக்கமடைந்ததாயிற்று. அந்தஸரஸ்வதி முனிஸ்ரேஷ்டரான விஸ்

வாமித்திரரைப்பார்த்து, 'நான் யாதுசெய்யக்கடவேன்? சொல்லும்' என்றுசொல்லிற்று. கோபங்கொண்ட விஸ்வாமித்திரமுனிவர் அந்த நதியைப்பார்த்து, 'வஸிஷ்டரை விரைவில் கொண்டுவா. அவரை இப்பொழுது நான் கொல்லப்போகிறேன்' என்றுசொன்னார். அதைக் கேட்டு, நதியானது மனவருத்தமடைந்தது. செந்தாமரைமலருக்கொப்பானகண்களையுடையஸரஸ்வதியானது பிறகுபயந்து கைகளைக்குவித்துக்கொண்டு காற்றினால் அடிபட்டகொடிபோல் அதிகம்நடுங்கிற்று. அந்தநிலைமையிலிருக்கின்றஅந்தமகாநதியைக்கண்டுமுனிவர்'நீஆலோசியாமல்வஸிஷ்டரை என்னுடையபக்கத்தில்கொண்டுவா'என்றுசொன்னார்.நதிகளுள்சிறந்தஅந்தஸரஸ்வதி புத்திமானானவிஸ்வாமித்திரர் சொல்லியவசனத்தைக்கேட்டு,செய்யவேண்டுமென்றுவிரும்பப்பட்டபாவத்தையும்அறிந்து,பூமியில்ஒப்பற்றவஸிஷ்டருடைய மிகிமையையும் அறிந்ததாகி, வஸிஷ்டரிடம்சென்று இவ்விஷயத்தைத்தெரிவித்தது. இரண்டுபேர்களுடையசாபத்தினின்றும்பயந்து அடிக்கடி நடுக்கமுற்று மகாசாபத்தைநினைத்து ரிஷியினிடத்தினின்று அதிகமாகப்பயந்தது. அரசரே! தர்மாத்மாவும் மனிதர்களுள் சிறந்தவருமானவஸிஷ்டர் இளைத்தும் நிறம்மாறியுமிருப்பதும் கவலையுற்றதுமானஅந்தஸரஸ்வதியைப்பார்த்து,'நதிகளுள்சிறந்தவளே! உன்னைக்காப்பாற்றிக்கொள். வேகமாகச்செல்லுகின்ற நீ என்னை விஸ்வாமித்ரரிடம் கொண்டுபோ. இல்லாவிட்டால், விஸ்வாமித்திரர் உன்னைச் சபிப்பார். நீ ஆலோசனைசெய்யாதே' என்றார். குருகுலத்தில் உதித்தவரே! அந்தநதியானது கருணையையே ஸ்வபாவமாகக்கொண்ட அந்த வஸிஷ்டருடைய வார்த்தையைக் கேட்டு எந்தக்கார்யத்தைச் செய்தால் நன்மைஉண்டாகுமென்று ஆலோசித்தது. 'வஸிஷ்டர் என்னிடத்தில் அதிகதயைபாராட்டினாரன்றோ; நான் எப்பொழுதும் அவருக்கு நன்மையைச் செய்யவேண்டும்' என்கிற எண்ணமானது அந்தநதிக்கு உண்டாயிற்று. அரசரே! பிறகு, ஸரஸ்வதிநதியானது தன் கரையில் ஜபம்செய்கின்றவரும் ஹோமம்செய்கின்றவரும்ரிஷிகளுள் சிறந்தவருமான கௌசிகரைப்பார்த்து ஆலோசித்தது. நதிகளுள் சிறந்த அந்த ஸரஸ்வதிநதி, பிறகு, இதுதான் ஸமயமென்றெண்ணித் தன்வேகத்தினால் கரையை இடித்துத்தள்ளியது. அரசரே! அந்தக்கரை இடிந்துவிழுந்ததினால் இழுத்துக்கொண்டுபோகப் படுகின்ற அந்தவஸிஷ்டமகரிஷி அப்பொழுது ஸரஸ்வதியைத்துதிக்கலானார். 'ஸரஸ்வதி! பிதாமஹருடைய தடாகத்தினின்று நீ பெருகி வந்தாய். உத்தமமான உன்னுடையதீர்த்தங்களாலேயே இவ்வுலக

மனைத்தும் வ்யாபிக்கப்பட்டிருக்கின்றது. தேவி! நீயே ஆகாயத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு மேகங்களில் ஜலத்தை உண்டுபண்ணுகிறாய். எல்லாத்தீர்த்தங்களும் நீயேயென்று நாம் படித்திருக்கின்றோம்; நீயே புஷ்டி; காந்தி; கீர்த்தி; ஸித்தி; புத்தி; பார்வதி; ஸரஸ்வதி! நீயே ஸ்வாஹாதேவி; இவ்வுலகம் உன்னைச் சார்ந்திருக்கின்றது. நீயே ஸர்வப் பிராணிகளிடங்களிலும் இவ்வுலகில் *நான்குவிதமாக வஸிக்கின்றாய்' என்றார்.

அரசரே! மகரிஷியினாலே இவ்வாறு துதிக்கப்படுகின்ற ஸரஸ்வதிநதியானது அந்தப்பிராம்மணரை விஸ்வாமித்திரருடைய ஆஸ்ரமத்தைக்குறித்து வேகத்தோடுஇழுத்துச்சென்றது. தான் அந்தமகரிஷியைக்கொண்டுவந்ததை விஸ்வாமித்திரருக்குஅடிக்கடி தெரிவித்தது. பிறகு, ஸரஸ்வதியினால் கொண்டுவரப்பட்ட அந்த வஸிஷ்டரைக் கண்டு விஸ்வாமித்திரர் கோபத்துடன் அப்பொழுது வஸிஷ்டருக்கு நாசத்தை உண்டுபண்ணக்கூடிய ஆயுதத்தைத்தேடினார். ஆலஸ்யமில்லாத ஸரஸ்வதிநதியானது கோபித்துக்கொண்டிருக்கின்ற அந்த விஸ்வாமித்திரரைப்பார்த்துப் பிரம்மஹத்தி தோஷத்தினின்று பயந்ததாகவும் இருவர்களுடைய வாக்கியத்தையும் அனுஷ்டிப்பதாகவும் விசுவாமித்திரரை வஞ்சித்து, வஸிஷ்டரைக் கீழ்த்திசையை நோக்கி இழுத்துச்சென்றது. பிறகு, ரிஷிஸ்ரேஷ்டரானவஸிஷ்டர் கொண்டு போகப்பட்டதைக்கண்டு விஸ்வாமித்திரர் அதிககோபங்கொண்டு ஸரஸ்வதியைப்பார்த்து, 'நதிகளுள் சிறந்தவளே! கல்யாணி! நீ என்னை வஞ்சித்து மீண்டு சென்றாயாதலால் ராக்ஷஸர்களுக்கு விருப்பமான ரக்தத்தைப் பெருக்குவாயாக' என்று சொன்னார். பிறகு, சிறந்த புத்தியுள்ள விஸ்வாமித்திரராலே சபிக்கப்பட்ட ஸரஸ்வதியானது அப்பொழுது ஒருவருஷகாலம் ரக்தங்கலந்தஜலத்துடன்ஓடிற்று. பிறகு, ரிஷிகளும் தேவர்களும் கந்தர்வர்களும் அப்ஸர ஸ்திரீகளும் அவ்வாறு ஸரஸ்வதியைக்கண்டு அப்பொழுது மிகவும் துக்கித்தவர்களானார்கள். அரசரே! ஸரஸ்வதிநதியானது இவ்வாறு வஸிஷ்டாபவாஹமென்று உலகத்தில் பிரஸித்திபெற்றது. நதிகளுள்சிறந்த ஸரஸ்வதி மீண்டும் தன்வழியையே அடைந்தது.

---

* பரா, பஸ்யந்தி, மத்யமா, வைகரிஎன வாக்கு நான்குவிதம்.

## நாற்பத்துநான்காவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



(ரிஷிகள் ஸாரஸ்வதிநதியைத் தவத்தினல் சுத்திசெய்ததும், இந்திரன் ஸ்ரஸ்வதியும்அருணையும் கூடுமிடத்தில் யாகமுதலியன செய்து ப்ரம்மஹத்தியைப் போக்கிக்கொண்டதும், பலராமர் அவ்விடத்தில் ஸ்நானமுதலியனசெய்து ஸோமதீர்த்தம் சென்றதும்.)

கோபங்கொண்ட புத்திமானன அந்தவிஸ்வாமித்திரராலே சபிக்கப்பட்ட அந்த ஸரஸ்வதிநதியானது சுத்தமான சிறந்த அந்தத் தீர்த்தத்தில் ரக்தமாக ஓடிற்று.அரசரே! பாரதரே! பிறகு, ராக்ஷஸர்கள் அவ்விடம் வந்தார்கள். அவர்களெல்லாரும் அந்த ஸரஸ்வதிநதியில் ரக்தத்தைக்குடித்துக்கொண்டு ஸுகமாயிருந்தார்கள். அவர்கள் அந்த ரக்தபானத்தினல் அதிகமாகத்திருப்தியடைந்தவர்களாகவும் ஸுகமடைந்தவர்களாகவும் மனக்கவலையற்றவர்களாகவும் கூத்தாடுகின்றவர்களாகவும் சிரிப்பவர்களாகவும் ஸ்வர்க்கத்தை ஜயித்தவர்கள்போலானார்கள். அரசரே! சிறிதுகாலத்திற்குப்பிறகு, சிறந்த தவத்தைத்தனமாகக்கொண்ட மகரிஷிகள் தீர்த்தயாத்திரையை உத்தேசித்து ஸரஸ்வதிநதியை வந்தடைந்தார்கள். அரசரே! தவத்தில் ஆசையுள்ளவர்களும் ஸமர்த்தர்களுமான ரிஷிஶ்ரேஷ்டர்கள் அந்த எல்லாத்தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து அதிகமான ப்ரீதியை அடைந்து எந்தவழியினல் ஸாரஸ்வதிதீர்த்தமானது ரக்தமயமாகப் பெருகிவருகின்றதோ அந்தவழியை நாடிச் சென்றார்கள். அரசர்களுள்சிறந்தவரே! மஹாபாக்கியசாலிகளான அந்த மஹரிஷிகள், பிறகு, ரக்தத்தினல் நாற்பக்கத்திலும் நிரம்பியதும் பயங்கரமாயிருக்கின்றதும் அனேகராக்ஷஸர்களால் பானம்செய்யப்படுகின்றதுமான ஸரஸ்வதிநதியினுடைய அந்தத்தீர்த்தத்தைஅணுகி அப்பொழுதுபார்த்தார்கள்.அரசரே! கடுமையானவிரதமுள்ளரிஷிகள் அந்தராக்ஷஸர்களைக்கண்டு ஸரஸ்வதியை ரக்ஷிப்பதில் அதிகமுயற்சியைச்செய்தார்கள். மஹாபாக்கியசாலிகளும் மஹாவிரதங்களுள்ளவர்களுமான அந்த மகரிஷிகளனைவரும் வந்து நதிகளுள் சிறந்ததான ஸரஸ்வதிநதியை அழைத்து, 'ஏ! கல்யாணி! காரணத்தைச்சொல். யாதுகாரணம்பற்றி உன்னுடைய இந்தமடுவானது இவ்வாறு கொள்ளத்தகாததிலைமையைஅடைந்தது? நாங்கள் கேட்டபிறகு முயற்சியைச்செய்யப் போகி

ரும்' என்று இந்தவசனத்தைக் கூறினார்கள். பிறகு, அந்தஸரஸ்வதிநதி யானது அதிகநடுக்கமுற்று எல்லாவிருத்தாந்தத்தையும் உள்ளபடி உரைத்தது. பிறகு, அந்தரிஷிகள் துக்கத்தை அடைந்திருக்கின்ற அந்த நதியைக்கண்டு, 'காரணத்தை நாம் கேட்டோம். தோஷமற்ற வளே! சாபத்தையும் கேட்டோம். ரிஷிகளனைவரும் எது யுக்தமோ அதைச்செய்வார்கள்' என்றுசொன்னார்கள். அந்தமஹரிஷிகள் நதிக ளுள்சிறந்த ஸரஸ்வதியைப்பார்த்து இவ்வாறுசொல்லிவிட்டு, பிறகு, 'நாமெல்லோரும் இந்தஸரஸ்வதியைச் சாபத்தினின்றுவிடுவிப் போம்' என்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள். அரசரே! அந்தப்பிராம்மணர்களனைவரும் தவங்களாலும் அவ்வாறே நியமங் களாலும் பற்பல உபவாஸங்களாலும் அவ்வாறே கஷ்டமானவிரதத் துடன்கூடிய நியமங்களாலும் பசுபதியும் ஜகத்பதியுமான மஹா தேவரைஆராதித்து நதிகளுள்சிறந்தவளான அந்தஸரஸ்வதிதேவி யைச்சாபத்தினின்றுவிடுவித்தார்கள். அவர்களுடையபிரபாவத்தினால் அந்தஸரஸ்வதிநதியானது முன்போலத் தெளிந்தஜலத்துடன்கூடின தாகித் தன்னிலைமையிலிருந்தது. சாபத்தினின்றுவிடுபட்ட அந்தஉத் தமநதி முன்போலஅதிகமாகப்பிரகாசித்தது. அந்தரிஷிகளால் அவ் வாறுசெய்யப்பட்டிருக்கிற ஸரஸ்வதிநதியின்தீர்த்தத்தைக்கண்டுஅவ் வாறு பசிகொண்டவர்களான ராக்ஷஸர்கள் அவர்களையே சரணம டைந்தார்கள். அரசரே! பிறகு, பசியினால்பீடிக்கப்பட்டவர்களான ராக்ஷஸர்கள் அஞ்சலிசெய்துகொண்டு தயையுடன் அந்தரிஷிகள னைவரையும் பார்த்து, 'நாங்கள் பசித்தவர்களாகவும் சாஸ்வத மானதர்மத்தினின்று விடுபட்டவர்களாகவும் இருக்கிறோம். நாங் கள் பாவத்தைச்செய்வதென்னும் இது எங்களுடைய இச்சை யினால் ஏற்பட்டதன்று. உங்களுடைய அருளில்லாமையாலும் எங்க ளுடைய பாவச்செயல்களினாலும் பிறப்பிக்கும் நிமித்தமாகச்செய்யப் பட்ட ஸ்திரீகளுடைய பாவத்தினாலும் பிரம்மராக்ஷஸர்களாகிறோம். ஆகையால், எங்களுடைய இந்தப்பக்ஷம் வளர்கிறது. இவ்வாறே, வைசியர்கள், சூத்திரர்கள், க்ஷத்திரியர்கள் இவர்களுள்ளும் எவர்கள் பிராம்மணர்களைப் பகைக்கின்றார்களோ அவர்களும் இவ்வுலகில் ராக்ஷஸர்களாகிறார்கள். சிறந்தசக்தியுள்ளவர்களாயிருந்தும் எவர் கள் ஆஸ்ரிதரக்ஷணத்தைச் செய்யவில்லையோ அவர்களும் இவ்வுல கில் ராக்ஷஸர்களாகப் பிறக்கிறார்கள். எந்தமனிதர்கள் ஆசார்யரையும் ரித்விக்கையும் குருவையும் அவ்வாறே பெரியவர்களையும் அவமதிக் கின்றார்களோ அவர்களும் இவ்வுலகில் ராக்ஷஸர்களாகப் பிறக்கிறார்

கள். பிராம்மணோத்தமர்களே! ஆதலால், இச்சமயத்தில் எங்களுக்குக் கரையேற்றத்தைச் செய்யுங்கள். நீங்கள் எல்லா உலகங்களேயும் கரையேற்றிவிடுவதில் ஸாமர்த்தியமுடையவர்கள்' என்று அடிக்கடி சொன்னார்கள். பரிசுத்தமனத்தையுடையவர்களான ரிஷிகள் அந்த ராக்ஷஸர்களுடைய வார்த்தையைக்கேட்டு, ராக்ஷஸர்கள் மோக்ஷத்தை அடையவேண்டி அந்த மகாநதியை ஸ்தோத்திரம்செய்தார்கள்; அந்தராக்ஷஸர்களுக்கு (ப்பின்வருமாறு) உரைத்தார்கள். 'தும்மினஎச்சில் தெறித்ததும் புழுவுள்ளதும் எச்சில்ஸம்பந்தப்பட்டதும் மயிர்களுள்ளதும் நிந்திக்கப்பட்டதும் கண்ணீரினால் கெடுக்கப்பட்டதும் நாய்களால் தொடப்பட்டதுமான அன்னத்தை இவ்வுலகில் ராக்ஷஸர்களுடைய பாகமாகச் சொல்லுகிறார்கள். ஆதலால், கற்றறிந்தவன் எப்பொழுதும் இந்தஅன்னங்களே அறிந்து பிரயத்தனத்தினால் விலக்கவேண்டும். எவன் இப்படிப்பட்ட அன்னத்தைப் புஜிக்கிறானோ அவன் ராக்ஷஸான்னத்தைப் புஜிக்கிறான்' என்றனர். பிறகு, தவத்தையே தனமாகக்கொண்ட அந்தமகரிஷிகள் ஸரஸ்வதீதீர்த்தத்தைப் பரிசுத்தம்பண்ணி ராக்ஷஸர்களுக்கு மோக்ஷத்தின்பொருட்டு அந்தநதியைத் தூண்டினார்கள். மனிதர்களுள் சிறந்தவரே! நதிகளுள்சிறந்த அந்தஸரஸ்வதி, மகரிஷிகளுடைய அபிப்பிராயத்தைஅறிந்து, பிறகு, அருணையென்னும் தன்சரீரத்தை அழைத்தது. மகாராஜரே! அந்தராக்ஷஸர்கள் அந்த அருணையில் ஸ்நானஞ்செய்து சரீரங்களேவிட்டு ஸ்வர்க்கத்தை அடைந்தார்கள். அந்தஅருணாநதியானது பிரம்மஹத்தியைப் போக்கும்திறமையுள்ளதன்றோ? நூறுயாகம்செய்தவனும் தேவர்களுக்கு அரசனுமான இந்திரன் இந்தவிஷயத்தைஅறிந்து சிறந்தஅந்தத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பாவத்தினால் விடுபட்டானும்" என்றார்.

ஜனமேஜயர், "மகிமைபொருந்தினவனான இந்திரன் யாதுகாரணத்தினால் பிரம்மஹத்தியை அடைந்தான்? எவ்வாறு இந்தத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பாபமற்றவனானான்?" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார். "ஜனேஸ்வரரே! முற்காலத்தில் இந்திரன் நமுசிவிஷயமாகச் செய்த உடன்பாட்டைப் பிளந்தாகிய இந்த உபாக்கியானத்தை நடந்தபடி கேளும். நமுசியானவன் இந்திரனிடத்தினின்றுபயந்து ஸூர்யனுடையகிரணத்தில்பிரவேசித்தான். இந்திரன் அவனோடு ஸ்நேஹம்செய்துகொண்டு, 'அஸுரர்களுள் சிறந்தவனே! நான் உன்னே ஈரமுள்ள வஸ்துவினாலாவது உலர்ந்தவஸ்துவினாலாவது இரவிலாவது பகலிலாவது கொல்லப்போகிறதில்லை. மித்திர! நான்

உன்னிடம் ஸத்யமாகச் சபதம்செய்கிறேன்' என்று இந்தப்பிரதிஜ்ஞையைக் கூறினன். மன்னரே! ஈஸ்வரனை அந்தஇந்திரன் இவ்வாறு உடன்பாட்டைச்செய்து பனியைக்கண்டு ஜலத்தினுடைய நுரையினலே இவனுடைய தலையைவெட்டினன். வெட்டப்பட்ட அந்த நமுசியினுடைய தலையானது, 'ஓ, ஓ! மித்திரனைக்கொன்றவனே! பாபி!' என்றுசொல்லிக்கொண்டு இந்திரனை அணுகி அவனைப் பின்தொடர்ந்து சென்றது. இவ்வாறு அந்தத்தலையினலே அடிக்கடி சொல்லப்படுகின்ற அந்த இந்திரன் மனவருத்தத்தை அடைந்து இந்தவிருத்தாந்தத்தைப் பிரம்மதேவரிடம் தெரிவித்தான். லோகநாதரானபிரம்மதேவர் இந்திரனைப்பார்த்து, 'தேவேந்திர! முறைப்படி யாகம்செய்து பாபபயத்தைப்போக்குகின்ற அருணதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய். இந்திரனே! இந்த அருணையானது ரிஷிகளாலே புண்ணியஜலமுள்ளதாகச் செய்யப்பட்டிருக்கின்றது. முந்தியே இந்தநதியினுடைய வரவானது இந்த ஸரஸ்வதீநதியில் மறைந்திருந்தது. பிறகு, ஸரஸ்வதி தெய்வத்தன்மைவாய்ந்த அருணையைத் தன்ஜலத்துடன் அடைந்து கலந்தது. ஸரஸ்வதி அருணை இவற்றின்ஸங்கமமானது மஹாபுண்ணியமானது. தேவேந்திர! இவ்விடத்தில் நீ யாகஞ்செய். அனேகதானங்களைக் கொடு. இதில் ஸ்நானம்பண்ணி நீ மிக்ககோரமான பாவத்தினின்றும் விடுபடப்போகிருய்' என்றார். ஜனமேஜயரே! இவ்வாறு கூறப்பட்ட அந்தஇந்திரன் ஸரஸ்வதிநதியைச்சேர்ந்த புண்ணியதீர்த்தத்தில் முறைப்படியாகஞ்செய்து அருணையில் ஸ்நானம் செய்தான். தேவநாதனை அந்த இந்திரன், ப்ரம்மஹத்தியினல் உண்டுபண்ணப்பட்ட அந்தப்பாவத்தினின்றுவிடுபட்டு மனமகிழ்ந்து ஸ்வர்க்கம் சென்றான். பாரதரே! அரசர்களுள் சிறந்தவரே! நமுசியினுடைய அந்தத் தலையுங்கூட அந்தத் தீர்த்தத்திலேயே ஸ்நானம்செய்து இஷ்டங்களைக்கொடுக்கின்றஅக்ஷயமான உலகங்களை அடைந்தது. அரசர்களுக்கு அரசரே! மஹாத்மாவான பலராமர் அந்தத்தீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்து பலவித தானங்களைக்கொடுத்துச்சிறந்ததர்மத்தைப்பெற்று உத்தமமானசெய்கையுடன் எந்தத்தீர்த்தத்தில் முற்காலத்தில் ஸாக்ஷாத் ஸோமன், சிறந்த புத்தியுள்ளவரும் மஹாத்மாவும் பிரம்மதேவருடையபுதல்வருமானஅத்ரியானவர் ஹோதாவாயிருந்த முக்கியமான ராஜஸூயயாகத்தினல் தேவர்களை முறைப்படி பூஜித்தானே,எந்தத்தீர்த்தத்தில் அந்த யாகத்தின்முடிவில் மிகப்பெரிய தானவர்களுக்கும் தைத்தியர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் தேவர்களோடுகூடத் தாரகமென்று பெயர்

பெற்ற மிகக்கடுமையான யுத்தம்நேர்ந்ததோ, எந்த இடத்தில் சுப்பிர மணியர் தாரகாஸுரனைக் கொன்றாரோ,எந்தஇடத்தில் அஸுரர்களை நாசஞ்செய்கின்ற சுப்பிரமணியர் தேவஸேனாதிபத்தியத்தைப்பெற்றா ரோ, எந்த இடத்தில் பெரிய அரசமரமிருந்ததோ, எந்த இடத்தில் கிருத்திகாபுத்திரரான சுப்பிரமணியர் எப்பொழுதும் நேரில் வாஸஞ் செய்தாரோ, அந்தஸோமனுடையதான மகிமைபொருந்தியநல்லதீர்த் தத்தை அடைந்தார்" என்று கூறினர்.

---

## நாற்பத்தைந்தாவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



### (குமாரோத்பத்தி வர்ணனை.)

ஜனமேஜயர், "பிராம்மணோத்தமரே! ஸரஸ்வதிநதியின் இந் தப்பிரபாவம் உம்மால் உரைக்கப்பட்டது. பிராம்மணரே! சுப் பிரம்மண்யருடைய அபிஷேகத்தையும் நீர் சொல்லவேண்டும். பேசு கிறவருள்சிறந்தவரே! எந்தத்தேசத்தில் எந்தக்காலத்தில் எவ்வித மாக எவர்களாலே எந்தவிதியினாலே பகவானும் பிரபுவுமான சுப்பிர மணியர் அபிஷேகம் செய்விக்கப்பட்டாரோ அவர் எவ்வாறு தைத்தி யர்களுக்கு மிக்கதுன்பத்தைச் செய்தாரோ அவையெல்லாவற்றை யும் அப்படியே எனக்கு உரைப்பீராக.எனக்கு ஆவல் அதிகமாயிருக் கின்றதன்றோ?" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

"ஜனமேஜயரே! குருவம்சத்திலுதித்தவரான உமக்கு இந்த ஊக்கம் தகுதியானதே. என்னுடையவார்த்தையானது ஸந்தோஷத் தையுண்டுபண்ணவே பண்ணும். நராதிபரே! கேட்கின்ற உமக்கு மஹாத்மாவான சுப்பிரமணியருடைய அபிஷேகத்தையும் பிரபாவத் தையும் ஸந்தோஷத்துடன் உரைக்கப்போகிறேன். முற்காலத்தில் மஹேஶ்வரருடையவீர்யமானது நழுவி அக்னியில்விழுந்தது. அக்னி பகவான், அக்ஷயமானஅந்தவீர்யமனைத்தையும் தாங்குவதற்குச்சக்தி யற்றவனானன். தேஜஸ்வியும் காந்தியுள்ளவனும் பிரபுவுமான அக்னி பகவான் அதனால் வாட்டமுற்றான்; அந்தத்தேஜஸைத் தாங்கச் சக்தியற்றவனானன்; பிரம்மாவிடத்திலும் சொன்னான். பிரபுவான அந்தஅக்னிபகவான் பிரம்மாவினுடைய கட்டளையினால் கங்கையை அடைந்து ஸூர்யனுக்கொப்பானதேஜஸுள்ள திவ்யகர்ப்பத்தை

விட்டான். பிறகு, கங்கையும் அந்தக்கர்ப்பத்தைத் தாங்கச்சக்தியற்ற வளாகித் தேவர்களால் பூஜிக்கப்பட்ட அழகான இமயமலையில் விட்டாள். அக்னிகுமாரரான அந்தச் சுப்பிரமணியர் அந்த இடத்தில் உலகங்களை வசப்படுத்திக்கொண்டு விருத்தியடைந்தார். பிறகு, கிருத்திகாதேவிகள் அக்னிபோன்ற அந்தக்கர்ப்பத்தைக் கண்டார்கள். புத்திரன்விஷயத்தில் விருப்பமுள்ளவர்களான அந்தக்கிருத்திகாதேவிகளனைவரும் நாணற்கொத்தில் தோன்றினவரும் மஹாத்மாவும் அக்னிகுமாரரும் ஈஸ்வரருமான ஸுப்ரம்மண்யரை, 'இவன் என்னுடையபிள்ளை' என்று இரைந்துசொன்னார்கள். மகிமைபொருந்தியவரும் பிரபுவுமான சுப்பிரமணியர் அந்தத்தாயார்களுடைய அந்த அபிப்ராயத்தையறிந்து, பெருகவிடுகின்ற அந்தக் கிருத்திகைகளுடையபாலை ஆறுமுகங்களாலும் அப்பொழுது பானம்பண்ணினார். திவ்யதேகதாரிகளான அந்தக்கிருத்திகாதேவிகள் பாலரான அந்தச் சுப்பிரமண்யருடைய அந்தப்ரபாவத்தைக்கண்டு அதிகஆச்சர்யத்தை அடைந்தார்கள். எந்தமலையின் சிகரத்தில் கங்கையினால் அந்தக் கர்ப்பம் விடப்பட்டதோ அது அப்பொழுது மேருபர்வதம்போல் முழுதும் பொன்மலையாக விளங்கியது. விருத்தியடைகின்ற அந்தக் கர்ப்பத்தினால் பூமியானது ஒளியுள்ளதாகச்செய்யப்பட்டது. அந்தக் கர்ப்பத்தினால் எல்லாமலைகளும் ஸ்வர்ணமயமாகிவிட்டன. மிகப் பெரிய வீர்யத்தையுடையவரும் பருத்ததேகமுள்ளவரும் பலமுள்ளவருமான குமாரர், முன்பு காங்கேயரென்றும் பின்பு கார்த்திகேயரென்றும் கருதப்பட்டவரானார். ராஜேந்திரரே! சாந்தியும் தவமும் வீர்யமும் பொருந்திய அந்தச்சுப்பிரமணியர் சந்திரன்போலப் பிரியமான காட்சியையுடையவராக அதிகமாகவிருத்தியடைந்தார். அந்த ஸுப்ரம்மண்யர் ஸ்வர்ணமயமாயும் திவ்யமாயுமிருக்கிற அந்தநாணற்புதரில் காந்தியினால் சூழப்பட்டவராகவும் கந்தர்வர்களாலும் ரிஷிகளாலும் எப்பொழுதும் ஸ்தோத்திரஞ்செய்யப்பட்டவராகவும் படுத்திருந்தார். அவ்வாறே, திவ்யமானவாத்யங்களையும் நர்த்தனங்களையும் அறிந்தவர்களும் அழகியகாட்சியுடன்கூடியவர்களுமான ஆயிரக்கணக்கான தேவகன்னிகைகள் ஸ்தோத்திரம்செய்துகொண்டு இவருடையபக்கத்தில் நர்த்தனஞ்செய்தார்கள். எல்லா அக்னிகளும் இவரை அனுஸரித்தன. நதிகளுள்சிறந்தகங்கையும் பூமியும் சிறந்தவடிவம்பெற்று இவரைத்தரித்தனர். பிருகஸ்பதியானவர் இந்த ஸ்கந்தருக்கு ஜாதகர்மமுதலான கிரியைகளைச்செய்தார். வேதமும் நாலுமூர்த்தியோடுகூடினதாக அஞ்சலிசெய்துகொண்டு இவரை ஸ்தோ

த்திரம் செய்தது. *நான்குபாதங்களுடன்கூடின தனுர்வேதமும் அஸ்த்ரமந்திரங்கள் பலவற்றோடும் உபஸம்ஹாரமந்திரங்களோடும் கூடியதாக ஸ்கந்தரை ஸ்தோத்திரம் செய்தது. அந்த இடத்தில் வாக்தேவியும் தனித்தவளாக நேரில்வந்து இவரை நன்றாகத்துதித்தாள். உமாபதியும் பர்வதராஜகுமாரியோடுசேர்ந்து அநேகபூதகணங்களால்சூழப்பட்டவராகி மகாத்மாவும் தேவர்களுக்கெல்லாம்தேவருமான ஸ்கந்தரைப்பார்த்தார். பூதஸங்கங்களுடையகூட்டங்கள் அத்யாச்சர்ய கரமான தோற்றத்துடன்கூடியவைகளாயிருந்தன. விகாரமான பூதங்கள் விகாரவடிவத்துடன்கூடியவைகளாகவும் விகாரமானஆபரணங்களுடனும் த்வஜங்களுடனும் கூடியவைகளாகவும் புலி கரடி சிங்கம் இவைகளுடைய முகம்போன்ற முகத்தையுடையவைகளாகவும் பூனை முதலை இவைகளுடையமுகம்போன்ற முகத்தையுடையவைகளாகவும் இருந்தன. மற்றவைகள் விருஷதம்சமென்னும் பூனை முகமுள்ளவைகள் ; அவ்வாறே சில, யானைமுகத்துடனும் ஒட்டகமுகத்துடனும் கூடியவைகள்.சில, கோட்டான்முகமுள்ளவைகள்.சில, கழுகுபோலவும் நரிபோலவும் தோற்றமுள்ளவைகள். சில, கிரௌஞ்சம் புறா ரங்குஎன்னும்ஒருவகைமான் இவைகளுடைய முகங்களுக்கு ஒப்பான முகமுள்ளவைகளாயிருந்தன. வேறு சிலபூதங்கள் முள்ளில்லாப்பன்றி முள்ளம்பன்றி உடும்பு செம்மறியாடு வெள்ளாடு பசுமாடு இவைகளுடைய சரீரங்களுக்கொப்பானசரீரங்களைத்தரித்து ஆங்காங்கு நின்றன. சிலபூதங்கள் மலைபோலவும் மேகம்போலவும் வடிவத்தைத்தரித்துச் சக்கராயுதங்களையும் கொள்ளிகளையும் கதையையும் ஆயுதமாகத்தரித்தன. சில, மைக்குவியல்போல் விளங்கின. சில, வெள்ளைமலைபோலப் பிரகாசித்தன. அரசரே ! ஸப்தமாதர்களுடைய கணங்களும் ஸாத்யர்களும் விஸ்வேதேவர்களும் வஸுக்களும் பித்ருக்களும் ருத்திரர்களும் ஆதித்யர்களும் ஸித்தர்களும் உரகர்களும் தானவர்களும் பக்ஷிகளும் வந்தார்கள். அமிதமான ஒளிபொருந்தியகுமாரரைப் பார்ப்பதற்காக ஸ்வயம்புவும் பகவானுமான பிரம்மாவும் அவருடைய புத்திரர்களும் விஷ்ணுவும் இந்திரனும் வந்தார்கள். நாரதரைமுதல்வராகக்கொண்ட சிறந்ததேவர்களும் கந்தர்வர்களும் தேவரிஷிகளும் ப்ருஹஸ்பதியைத்தலைவராகக்கொண்டஸித்தர்களும் உலகத்துக்குஸ்ரேஷ்டர்களான பித்ருக்களும் தேவர்களுக்குத்தேவதைகளும் எல்லா (1) யாமர்களும் (2) தா

---

* ஆதிபர்வம் 520-வது பக்கம் குறிப்பிற்காண்க.

1, 2 தேவர்களின்வகை.

மர்களும் அவ்விடம் வந்தார்கள். பலமுள்ளவரும் மஹாயோகபலத்துடன்கூடினவருமான அந்த ஸ்கந்தர் பாலராயிருந்தும் தேவர்களுக்கு நாதரும் சூலத்தைக்கையில்ஏந்தியவரும் பிநாகபாணியுமான ஈசுவரரைநோக்கி வந்தார். எதிரில்வருகின்ற அந்தக்குமாரரைப் பார்த்து, 'இந்தக்குமாரன் கௌரவத்தினால் முதலில் யாருடைய பக்கத்தில் வருவான்? என்னிடம்வருவனு?' என்று சிவன், பர்வதராஜபுத்ரி, கங்கை, அக்னி ஆகிய இவர்கள் எல்லாருக்கும் ஒரேஸமயத்தில் இவ்விதமான எண்ணம் உண்டாயிற்று. அந்தக்குஹர் அந்த நால்வர்களுடைய அபிப்பிராயத்தையும் கண்டு யோகத்தை அடைந்து ஒரே ஸமயத்தில் பலவிதசரீரங்களை உண்டுபண்ணினார். பகவானான பிரபுவானவர், பிறகு, ஒரு க்ஷணத்தில் நான்கு மூர்த்தியுள்ளவரானார். அந்தஸ்கந்தருக்குப் பின்புறத்தில் சாகரும் விசாகரும் நைகமேயரும் இருந்தனர். பிரபுவான அந்த ஸ்கந்தபகவான் இவ்விதம் தம்மை நாலாகச் செய்துகொண்டு ஆச்சர்யகரமான தோற்றமுள்ளவராகி ருத்திரரிருக்குமிடம் சென்றார். பிறகு, விசாகரோ பர்வதராஜபுத்திரியான பார்வதீதேவியை அடைந்தார். மகிமைபொருந்திய அந்தச்சாகர் திவ்யமான மூர்த்தியுடன் அக்னியை அடைந்தார். அக்னிபோலப் பிரகாசிக்கின்ற நைகமேயர் என்கிற குமாரர் கங்கையையடைந்தார். எல்லாரும் பிரகாசிக்கின்ற தேகமுள்ளவர்களும் ஸமமான உருவமுள்ளவர்களுமான அந்த நான்கு ஸ்கந்தமூர்த்திகளும் அமரிக்கையுடன் அவர்களைஅடைந்தார்கள். அது ஆச்சர்யமாயிருந்தது. தேவர்களும் அஸுரர்களும் ராக்ஷஸர்களும் மயிர்சிலிர்த்தலையுண்டுபண்ணுகின்றதும் மிக்கஆச்சரியகரமானதும் முன்பார்க்கப்படாததுமான அச்செய்கையைக்கண்டு பெரிதான ஹாஹாகாரத்தைச்செய்தார்கள். பிறகு, ருத்திரர், பார்வதி, அக்னி எல்லோரும் கங்கையுடன் லோகநாதரான பிரம்மதேவரை நமஸ்கரித்தார்கள். அரசர்களுள் சிறந்தவரே! மன்னரே! பிறகு, அவர்கள் முறைப்படி நமஸ்கரித்துக் கார்த்திகேயருக்குப் பிரியத்தைச் செய்யும் விருப்பத்தினால், 'பகவானே! தேவர்களுக்கு நாதரே! எங்களுடைய பிரியத்திற்காக இந்தப்பாலருக்கு விரும்பியபடி தகுந்தஆதிபத்யத்தைக் கொடுக்கக்கடவீர்' என்கிறஇந்தவசனத்தை உரைத்தார்கள். பிறகு, பகவானும் புத்தியுள்ளவரும் எல்லாஉலகங்களுக்கும் பிதாமஹருமான அந்தப்பிரம்மதேவர், 'இந்தக்குமாரர் எந்தஸ்தானத்தைப்பெறலாம்' என்று மனத்தினால் ஆலோசித்தார். குருவம்சத்திலுதித்தவரே! அவர் மஹாத்மாவான அந்தச்சுப்பிரமண்யருக்கு, தே

வர்கள் கந்தர்வர்கள் ராக்ஷஸர்கள் பூதங்கள் யக்ஷர்கள் பக்ஷிகள் பன்னகர்கள் இவைகளுடைய எல்லாத்தலைமைகளையும் முழுதும் அளித்தார். மஹாபுத்திசாலியான பிரம்மதேவர் அவரைத் தலைமை வகிப்பதில் ஸமர்த்தராக எண்ணினார். பாரதரே! தேவர்களுடைய நன்மையில் நிலைபெற்றவரான அந்தப்பிரம்மதேவர், பிறகு, ஒரு முகூர்த்தகாலம் ஆலோசித்து அந்த ஸ்கந்தருக்கு எல்லாப்பிராணிகளுள்ளும் சேனாதிபதியாயிருக்கும் தன்மையை அளித்தார். ஸர்வப்பிராணிகளுக்கும் பிதாமஹராயிருக்கிற பிரம்மதேவர், எவர்கள் எல்லாத்தேவஸமூகங்களுக்கும் அரசர்களென்று பிரஸித்திபெற்றிருக்கிறார்களோ அவர்களனைவர்களையும் இந்தஸ்கந்தருக்குக் கட்டுப்பட்டிருக்கும்படி கட்டளையிட்டார். பிறகு, பிரம்மாவைமுதன்மையாகக்கொண்ட தேவர்கள் ஒன்றுசேர்ந்து குமாரரைஎடுத்துக்கொண்டு அபிஷேகம்செய்வதற்காகப் பர்வதராஜனை அடைந்தார்கள். எந்த நதியானது ஸமந்தபஞ்சகத்தில் மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்றிருக்கிறதோ பரிசுத்தமானதும் இமயமலையினின்று உண்டானதும் நதிகளுள்சிறந்ததும் தேவஸம்பந்தம் பெற்றதுமான அந்தஸரஸ்வதீ நதியையும் அடைந்தார்கள். விருப்பம்நிறைவேறினவர்களான தேவகந்தர்வர்களனைவரும் எல்லாக்குணங்களுடனுங்கூடியதும் பரிசுத்தமாயிருப்பதுமான அந்தஸரஸ்வதீநதியினுடைய கரையில் உட்கார்ந்தார்கள்.

---

## நாற்பத்தாறுவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



(பிருகஸ்பதிமுதலியோர் குமாரருக்குத் தேவஸேனாபதியாக முடிசூட்டியதும், பிரம்மாமுதலியோர் தத்தம்பாரிஷதர்களை அவருக்குக்கொடுத்ததும்.)

பிறகு, பிருகஸ்பதியானவர் சாஸ்திரப்படி அபிஷேகத்துக்குரிய எல்லாப்பொருள்களையும் சேகரித்து நன்றாகஜ்வலிக்கின்ற அக்னியில் விதிப்படிஹோமம்செய்தார். ஜனங்களுக்குத்தலைவரே! மனிதர்களைக் காப்பவரே! பிறகு, ஹிமவானால்கொடுக்கப்பட்டதும் உத்தம ரத்தினங்களால் பிரகாசிக்கின்றதும் திவ்ய ரத்தினங்களாலிழைக்கப்பட்டதும் பரிசுத்தமாயிருப்பதுமானஉத்தமஆஸனத்தில்வீற்றிருக்கின்ற ஸ்கந்தரைநோக்கி, எல்லாவிதமான மங்கலப்பொருள்களோடும்விதிகளாலும்

மந்திரங்களாலும் புரஸ்கரிக்கப்பட்டிருக்கின்ற அபிஷேக யோக்கிய மான திரவியமனைத்தையும் எடுத்துக்கொண்டு, தேவதைகளுடைய கணங்களும்,மஹாவீர்யத்துடன்கூடியவர்களான இந்திரன், விஷ்ணு, ஸூர்யன், சந்திரன், தாதா, விதாதா, அனிலன், அனலன், பூஷா, பகன், அர்யமா, அம்சன், விவஸ்வான், புத்தியுள்ளவரும் மித்திரனோடும்வரு ணனோடும்கூடியவரும் ருத்ரர்களாலும் வஸுக்களாலும் ஆதித்யர் களாலும் அஸ்வினீதேவர்களாலும்சூழப்பட்ட பிரபுவுமான ருத்ரர், இவர்களும், விஸ்வேதேவர்களாலும் மருத்துக்களாலும் ஸாத்யர்களா லும் பிதிருதேவதைகளாலும் கந்தர்வர்களாலும் அப்ஸரஸுகளா லும் யக்ஷர்களாலும் ராக்ஷஸர்களாலும் பன்னகர்களாலும் கணக்கி லடங்காத தேவரிஷிகளாலும் பிரம்மரிஷிகளாலும் வைகானஸர்களா லும் வாலகில்யர்களாலும் வாயுவைஆகாரமாகக் கொண்டவர்களாலும் கிரணங்களைப்பானம்பண்ணுகிறவர்களாலும் பிருகுவினுடையவம் சத்தில்பிறந்தவர்களாலும் அங்கிரஸினுடையகோத்திரத்தில் தோன் றினவர்களாலும் மஹாத்மாக்களானயதிகளாலும் எல்லாவித்யாதரர் களாலும் பரிசுத்தர்களானயோகஸித்தர்களாலும் சூழப்பட்டபிரம்ம தேவரும்,புலஸ்தியரும், மஹாதபஸ்வியானபுலஹரும், அங்கிரஸும், கஸ்யபரும், அத்ரியும், மரீசியும், பிருகுவும், க்ரதுவும், ஹரியும், ப்ர சேதஸும், மனுவும், தக்ஷரும், ருதுக்களும், கிரஹங்களும், ஜ்யோ திஸுகளும், உருவத்துடன்கூடினநதிகளும், சாஸ்வதமாயிருக்கின்ற வேதங்களும், ஸமுத்திரங்களும், மடுக்களும், பற்பலதீர்த்தங்களும், பூமியும், ஆகாயமும், திக்குக்களும், மரங்களும், தேவமாதாவான அதி தியும், ஹ்ரீயும், ஸ்ரீயும், ஸ்வாஹாதேவியும், ஸரஸ்வதியும், உமையும், இந்திராணியும், *ஸினீவாலியும், அனுமதியும், குஹுவும், ராகையும், திஷணையும், இன்னம் மற்றத்தேவதைகளுடையபத்னிகளும், இமய மலையும், விந்தியமலையும், அனேக சிகரங்களுடன்கூடின மேருபர்வத மும்,கூட.ஸஞ்சரிக்கின்றவைகளுடன்சேர்ந்த ஐராவதமும், கலைகளும் காஷ்டைகளும்,மாஸங்களும், அர்த்தமாஸங்களும், ருதுக்களும், இர வும், பகலும், குதிரைகளுள் சிறந்த உச்சைஸ்ரவமும், நாகராஜனான வாஸுகியும், அருணனும், கருடனும், ஓஷதிகளுடன்கூடினவிரு க்ஷங்களும், பகவானான தர்மதேவனும், ஒன்று சேர்ந்து வந்தார் கள். காலனும் யமனும் ம்ருத்யுவும் யமனுடையகிங்கரர்களும் அதிக மாயிருப்பதினால் சொல்லப்படாத பற்பலவிதமான அந்தக் கணதேவர் களும் குமாரருடையஅபிஷேகத்தின்பொருட்டு அந்தஅந்தஇடத்தி

* கர்ணபர்வம் கக0-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

னின்று வந்தார்கள். அரசரே! அந்தஎல்லாத்தேவர்களும் அப்பொழுது அபிஷேகத்துக்குரியபொருள்களையும் எல்லாமங்களத்திரவியங்களையும் (கையில்) எடுத்துக்கொண்டார்கள். அரசரே! அலங்கரிக்கப்பட்டவரும் மகாத்மாவும் அஸுரர்களுக்குப் பயங்கரருமான குமாரரைத் தேவர்கள் மிக்க ஸந்தோஷத்துடன் திவ்ய ஸம்பாரங்களுடன் கூடின பொற்கலசங்களால் ஸரஸ்வதீநதியைச்சேர்ந்த புண்யதீர்த்தங்களால் ஸேனாதிபதிஸ்தானத்தில் அபிஷேகம்செய்தார்கள். மஹாராஜரே! எல்லா உலகங்களுக்கும் பிதாமஹரும் பகவானுமான ப்ரம்மதேவர் ஜலாதிபதியானவருணனை முற்காலத்தில் அபிஷேகஞ் செய்தது போல அபிஷேகம்செய்தார். மஹாதேஜஸ்வியான கஸ்யபரும் ஜனங்களால் புகழப்பட்ட மற்றவர்களும் அபிஷேகம்செய்தார்கள்.

பிரபுவான பிரம்மதேவர் ப்ரீதியுடன்கூடியவராகி அந்தஸுப்ரம்மண்யருக்குப் பலசாலிகளும் காற்றின்வேகம்போன்ற வேகமுள்ளவர்களும் விரும்பினவீர்யத்தைத் தரிப்பவர்களும் ஸித்தர்களுமான மஹாபாரிஷதர்களைக் கொடுத்தார். இவருக்கு நந்திஸேனனையும் லோஹிதாக்ஷனையும் சூரனென்று மதிக்கப்பட்ட கண்டாகர்ணனையும் (கொடுத்து) பிரஸித்திபெற்ற குமுதமாலியையும் நான்காவது அநுசரனாக ஏற்படுத்தினர். ராஜேந்திரரே! அச்சமயத்தில், மஹாதேஜஸ்வியும் பிரபுவுமான ஸ்தாணுவானவர் அனேகமாயைகளைத் தரிப்பவனும் காமம், வீர்யம், பலம் இவைகளோடுகூடியவனும் தேவசத்துருக்களை நாசஞ் செய்பவனும்மஹாபாரிஷதனுமானகாமனை ஸ்கந்தருக்குக்கொடுத்தார். மிக்க கோபங்கொண்ட அந்தக்காமன் தேவாஸுரயுத்தத்தில் பயங்கரமான செய்கைகளுடன்கூடின பதினான்கு லக்ஷம் அஸுரர்களை இரு கைகளாலேயே கொன்றானன்றோ? அவ்வாறு தேவர்கள் அந்த ஸ்கந்தரின்பொருட்டு ராக்ஷஸர்களால் நெருங்கியதும் தேவசத்துருக்களுக்கு க்ஷயத்தை உண்டுபண்ணுகின்றதும் ஜயிக்கமுடியாததும் எல்லா உருவங்களுமுள்ளதுமான ஸேனையைக் கொடுத்தார்கள். அவ்வாறே, இந்திரனுடன்கூடின தேவர்களனைவரும் கந்தர்வர்களும் யக்ஷர்களும் ராக்ஷதர்களும் ரிஷிகளும் பிதிர்க்களும் ஜயசப்தத்தை வெளியிட்டார்கள். பிறகு, யமனுக்கும் காலனுக்குமொப்பானவர்களும் மஹாவீர்யமுள்ளவர்களும் மஹாகாந்தியுள்ளவர்களுமான உன்மாதன், ப்ரமாதனென்கிறஇருவர்களையும்அநுசரர்களாகக்கொடுத்தார்கள். ஸூர்யனை அநுஸரித்துச் செல்லுகின்றவர்களான ஸுப்ராஜன், பாஸ்வரன்என்கிற இருவரையும் பிரதாபசாலியான ஸூர்யன் ப்ரீதியுள்ளவனாகக் கார்த்திகேயருக்குக் கொடுத்தான். சந்திரனும், கைலயங்கிரியினு

டைய சிகரத்திற்கொப்பானவர்களும் வெண்ணிறமுள்ள புஷ்பமாலை களையும் சந்தனத்தையும் அணிந்தவர்களுமானமணியையும் ஸுமணி யையும் அனுசரர்களாகக் கொடுத்தான். அவ்வாறே, அக்னியானவன் சூரர்களும் சத்துருப்படையை நாசம்செய்பவர்களுமான ஜ்வாலாஜிஹ் வன் ஜ்யோதிஸ்என்கிற இருவரையும் புத்திரருக்கு அனுசரர்களாகக் கொடுத்தான். அம்சனும், புத்திசாலியான ஸ்கந்தருக்குப் பரிகன், வடன், மிகப்பெரிய பலசாலியான பீமன், அத்யுக்ரரூபிகளும் வீர்ய த்தில் மதிக்கப்பட்டவர்களுமான தஹநி, தஹனன் என்கிற ஐந்து அனுசரர்களையும் கொடுத்தான். பகைவீரர்களைக்கொல்பவனுன இந் திரன் வஜ்ரத்தையும் தண்டத்தையும் தரிப்பவர்களான உத்க்ரோசன், ஸத்கரன்என்கிற இருவரையும் அக்னியின்குமாரரான ஸ்கந்தருக்குக் கொடுத்தான். அவ்விருவர்களும் யுத்தத்தில் தேவேந்திரனுடைய அனேகசத்துருக்களைக் கொன்றூர்களன்றே?மஹாயஶஸ்வியானவிஷ் ணுவானவர் சக்ரன், விக்ரமகன், மஹாபலசாலியான ஸங்க்ரமன் என் கிறமூவர்களையும் ஸ்கந்தருக்கு அனுசரர்களாகக்கொடுத்தார். வைத் யர்களுள் சிறந்தவர்களான அஶ்விநிதேவர்களிருவரும் எல்லா வித்தைகளிலும் ஸமர்த்தர்களான வர்த்தனனையும் நந்தனனையும் ஸ்கந்தருக்கு ப்ரீதியுள்ளவர்களாகக் கொடுத்தார்கள். மஹாயசஸ் வியான பிர்ம்மதேவர் குந்தன், குஸுமன், குமுதன், டம்பரன், ஆடம்பரன் இவர்களை மஹாத்மாவான ஸ்கந்தருக்குக் கொடுத்தார். விஶ்வகர்மாவானவன் பலசாலிகளும்ஆட்டுமுகத்தையுடையவர்களும் பலத்தால் அதிகரித்தவர்களும் மஹாமாயையுள்ளவர்களுமான வக் ரன் அனுவக்ரன் என்னும் இருவர்களையும் குமாரரின்பொருட்டு அனுசரர்களாகக்கொடுத்தான். பிரபுவான மித்திரன், மஹாத்மாவான குமாரருக்கு மஹாபலசாலிகளும் தவத்தையும் வித்தைகளையும் தரிப்பவர்களுமான ஸுவ்ரதனையும் ஸத்யஸந்தனையும் கொடுத்தான். விதாதாவானவன் பார்க்க மிக்கஅழகானவர்களும் வரதர்களும் மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்றவர்களுமான ஸுவ்ரதனையும் மஹாத்மாவான சுபகர்மாவையும் கார்த்திகேயருக்குக் கொடுத்தான். பாரதரே! பூஷாவும் மஹாமாயாவிகளான பாணீதகன் காலிகனென் கிற இரண்டு பார்ஷதர்களையும் கார்த்திகேயருக்குக் கொடுத்தான். பரதகுலத்தில் பிறந்தவர்களுள் சிறந்தவரே! வாயுவானவன் பெரிய முகத்துடன்கூடியவர்களும் மஹாபலசாலிகளுமான பலனையும் அதிபலனையும் கார்த்திகேயருக்குக் கொடுத்தான். ஸத்யப்பிரதிஜ்ஞை யுள்ளவனுன வருணன் திமியினுடைய முகத்துடன்கூடியவர்களும்

மஹா பலசாலிகளுமான யமனையும் அதியமனையும் கார்த்திகேயருக்குக் கொடுத்தான். அரசரே! இமயமலையானது மஹாத்மாவான ஸுவர்ச்சஸையும் அதிவர்ச்சஸையும் அக்னியின்புத்திரருக்குக் கொடுத்தது. பாரதரே! மேருவானது காஞ்சனனையும் மஹாத்மாவான மேகமாலியையும் அக்னிபுத்ரருக்கு அனுசரர்களாகக் கொடுத்தது. மஹாத்மாவான மேருபர்வதமே மஹா பலபராக்ரமமுள்ளவர்களான ஸ்திரன் அஸ்திரன் என்கிற வேறு இரண்டு கிங்கரர்களையும் அக்னி புத்ரருக்குக் கொடுத்தது. விந்தியபர்வதமானது பெரியகற்களால் யுத்தம் செய்கிற ஸ்வபாவமுள்ள உச்சிருங்கன் அதிஸ்ருங்கன் என்கிற இரண்டுபாரிஷதர்களை அக்னிபுத்ரருக்குக் கொடுத்தது. ஸமுத்திரம் கதையைத் தரித்தவர்களான ஸங்கிரஹன் விக்ரஹன் என்கிற இரண்டு மஹாபாரிஷதர்களை அக்னிபுத்ரருக்குக்கொடுத்தது. மங்களகரமான தோற்றமுள்ளபார்வதி, உன்மாதனையும் சங்குகர்ணனையும், புஷ்பதந்தனையும் அக்னிபுத்ரருக்குக் கொடுத்தாள். *கங்கையானவள் அக்னி புத்ரருக்கு ஜயனையும் மஹாஜயனையும் கொடுத்தாள். புருஷர்களுள் சிறந்தவரே! ஸர்ப்பங்களுக்கரசனான வாஸுகியும் (அனுசரர்களைக்) கொடுத்தான். இவ்விதமாக ஸாத்யர்களும் ருத்திரர்களும் வஸுக்களும் பித்ருக்களும் ஸமுத்திரங்களும் நதிகளும் மகாபலமுள்ள மலைகளும் சூலங்களையும் பட்டஸங்களையும் தரித்திருக்கின்றவர்களும் திவ்யமான ஆயுதங்களுடன்கூடியவர்களும் பற்பலவேஷங்களால் அலங்கரிக்கப்பட்டவர்களுமான ஸேனைக்கூட்டத் தலைவர்களைக் கொடுத்தார்கள். பாரதரே! அரசரே! பற்பல ஆயுதங்களுடன்கூடியவர்களும் பலவித ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்களுமான ஸ்கந்தருடைய வேறுள்ள ஸைனிகர்களுடைய நாமதேயங்களையும் கேளும்.

ஜனமேஜயரே! † சங்குகர்ணன், நிகும்பன், பத்மன், குமுதன், பன்னிரண்டு கைகளுடன்கூடிய அநந்தன், கிருஷ்ணன், உபகிருஷ்ணன், க்ராணஸ்ரவன், கபிஸ்கந்தன், காஞ்சனாக்ஷன், ஜலந்தமன், அக்ஷன், ஸந்தர்ஜனன், குநதீகன், தமோந்தக்ருத், ஏகாக்ஷன், துவாதசாக்ஷன், ஏகஜடன், பிரபு, ஸஹஸ்ரபாகு, விகடன், வியாக்ராக்ஷன், க்ஷிதிகம்பனன், புண்யநாமா, ஸுநாமா, ஸுசக்ரன், பிரியதர்

* 'கங்கா' என்பது மூலம். 'நாகௌ' என்பது வேறுபாடம்; அந்தப் பாடத்திற்கு, 'ஜயன் மஹாஜயன் என்கிற இரண்டு நாகர்களை வாஸுகி கொடுத்தான்' என்பது பொருள். † சிலபெயர்கள் இரட்டிக்கின்றன.

சனன், பரிஸ்ருதன், ப்ரியமானமாலைகளையும் சந்தனங்களையுமுடையவனான கோகநதன், அஜோதரன், கஜசிரன், ஸ்கந்தாக்ஷன், சதலோசனன், ஜ்வாலாஜிஹ்வன், கராளாக்ஷன், சிதிகேசன், ஜடி, ஹரி, பரிஸ்ருதன், கோகநதன், க்ருஷ்ணகேசன், ஜடாதரன், சதுர்த்தம்ஷ்டிரன், அஷ்டஜிஹ்வன், மேகநாதன், ப்ருதுஸ்ரவன், வித்யுதாக்ஷன், தனுர்வக்த்ரன், ஜாடரன், மாருதாசனன், உதாராக்ஷன், ரதாக்ஷன், வஜ்ரநாபன், வஸுப்ரபன், ஸமுத்ரவேகன், சைலகம்பி, விருஷன், மேஷன், ப்ரவாஹன், நந்தன், உபநந்தன், தூம்ரன், ஸ்வேதன், களிங்கன், ஸித்தார்த்தன், வரதன், ப்ரியகன், நந்தன், பிரதாபசாலியான கோநந்தன், ஆநந்தன், பிரமோதன், ஸ்வஸ்திகன், த்ருவகன், க்ஷேமவாஹன், ஸுவாஹன், ஸித்தபாத்திரன், கோவ்ரஜன், கனகாபீடன், மஹாபாரிஷதேஸ்வரன், காயனன், ஹஸனன், பாணன், வீர்யமுள்ளவனான கட்கன், வைதாலி, கதிதாலி, கதகன், வாதிகன், ஹம்ஸஜன், பங்கதிக்தாங்கன், ஸமுத்ரோன்மாதனன், ரணோத்கடன், ப்ரஹாஸன், சுவேதஸித்தன், நந்தனன், காலகண்டன், பிரபாஸன், கும்பாண்டகோதரன், காலகக்ஷன், ஸிதன், பூதமதனன், யஜ்ஞவாஹன், ஸுவாஹன், தேவயாஜி, ஸோமபன், மஜ்ஜானன், மஹாதேஜன், க்ரதன், கிராதன், துஹரன், துஹாரன், வீர்யசாலியான சித்ரதேவன், மதுரன், ஸுப்ரஸாதன், கிரீடி, மகாபலன், வத்ஸலன், மதுவர்ணன், கலசோதரன், தர்மதன், மன்மதகரன், வீர்யசாலியானஸூசீவக்த்ரன், ஸ்வேத வக்த்ரன், ஸுவக்த்ரன், சாருவக்த்ரன், பாண்டுரன், தண்டபாகு, ஸுபாகு, ரஜன், கோகிலகன், அசலன், கனகாக்ஷன், பாலப்ரபு, ஸஞ்சாரகன், கோகநதன், க்ருத்ரபத்திரன், ஜம்புகன், லோஹஜவக்திரன், ஜவனன், கும்பவக்திரன், கும்பகன், ஸ்வர்ணக்ரீவன், க்ருஷ்ணௌஜஸ், ஹம்ஸவக்திரன், சந்திரபன், பாணிகூர்ச்சன், சம்பூகன், பஞ்சவக்திரன், சிக்ஷகன், சாஷவக்திரன், ஜம்பூகன், சாகவக்திரன், குஞ்சலன், யோகயோக்தா இவர்களும் எப்பொழுதும் பிராம்மண ப்ரியர்களும் மஹாத்மாக்களும் பிரம்மதேவரைச் சேர்ந்தவர்களும் மஹா புத்திமான்களும் பெரிய ஸபைகளைச் சேர்ந்தவர்களும் யௌவனத்திலிருப்பவர்களும் பாலர்களும் விருத்தர்களுமான பாரிஷதர்களும் ஆயிரம்ஆயிரமாகக் குமாரரை ஸ்தோத்திரம்செய்துகொண்டு உபாஸித்தனர்.

ஜனமேஜயரே! எவர்கள் பற்பலவிதமான முகங்களுடன்கூடினவர்களோ அவர்களைக் கேளும். சிலர் ஆமை முகமுடையவர்கள். சிலர் கோழிமுகமுடையவர்கள். சிலர் முயலின்முகம்போன்ற முகமுடைய

வர்கள். சிலர் *கோட்டான்முகமுள்ளவர்கள். பாரதரே! சிலர் கழுதை முகமுள்ளவர்கள்; ஒட்டகமுகமுள்ளவர்கள்; பன்றி முகமுள்ளவர்கள்; பூனைமுகமுள்ளவர்கள்; முயல்முகமுள்ளவர்கள்; நீண்டமுகமுள்ளவர்கள்; மற்றவர்கள் கீரியின்முகம்போன்றமுகமுள்ளவர்கள்; *கோட்டான் முகமுள்ளவர்கள். சிலர் காக்கைமுகம்போன்ற முகமுள்ளவர்கள்; எலியின் முகம்போன்ற முகமுள்ளவர்கள்; பெரிச்சாளியின்முகம்போன்ற முகமுள்ளவர்கள்; அவ்வாறே மயில்முகமுள்ளவர்கள்; சிலர் மீனின் முகமுள்ளவர்கள்; ஆட்டுமுகமுள்ளவர்கள்; வெள்ளாடு, செம்மறியாடு, எருமைக்கடா இவைகளின் முகம்போன்ற முகமுள்ளவர்கள்; கரடி புலிகளின் முகம்போன்ற முகமுடையவர்கள். அவ்வாறே, சிறுத்தை சிங்கம் இவைகளின் முகம் போன்ற முகமுடையவர்கள். சிலர் பயங்கரமான ரூபமுள்ளவர்கள்; யானைமுகமுள்ளவர்கள்; அவ்வாறே முதலையின் முகமுடையவர்கள்; கருடனுடைய முகம்போன்ற முகமுடையவர்கள்; கழுகுமுகமுடையவர்கள்; சிலர் செந்நாய்முகமுள்ளவர்கள்; காகத்தின்முகமுள்ளவர்கள். மற்றவர்கள் கோவேறுகழுதையின் முகம்போன்ற முகமுடையவர்கள்; அவ்வாறே, பூனையின் முகமுள்ளவர்கள். பாரதரே! பெரிய வயிறுகளையும் பாதங்களையும் அங்கங்களையுமுடையவர்கள்; நக்ஷத்திரங்கள்போன்றகண்களையுடையவர்கள். சிலர் புறாவின்முகம்போன்ற முகமுடையவர்கள்; அவ்வாறே, சிலர் காளைமாட்டின் முகம்போன்ற முகமுடையவர்கள்; கோகிலங்களின் முகம் போலப் பிரகாசிக்கின்ற முகமுள்ளவர்கள்; கழுகு தித்திரிப்பக்ஷி இவைகளின் முகமுள்ளவர்கள்; ஓணானுடைய முகமுள்ளவர்கள்; பரிசுத்தமான வஸ்திரங்களைத்தரித்தவர்கள்; ஸர்ப்பத்தின் முகம்போன்ற முகமுடையவர்கள்; சூலம்போன்ற முகமுடையவர்கள்; பயங்கரமான முகமுள்ளவர்கள்; மங்களகரமான முகமுள்ளவர்கள்; பற்களில் விஷமுள்ளவர்கள்; மரவுரி தரித்தவர்கள்; அவ்வாறே, பசுவின் மூக்குப்போலவும் முகம்போலவுமிருக்கின்ற மூக்குக்களையும் முகங்களையுமுடையவர்கள்; பருத்தவயிற்றையுடையவர்கள்; இளைத்த அங்கங்களையுடையவர்கள்; பருத்த அங்கங்களையுடையவர்கள்; ஒட்டின வயிறுள்ளவர்கள்; குறுகின கழுத்தையுடையவர்கள்; பெரிய காதுகளையுடையவர்கள்; பற்பல ஸர்ப்பங்களைப் பூஷணமாகக்கொண்டவர்கள்; சிறந்தயானையின்தோலை வஸ்திரமாக உடுத்தவர்கள்; கறுப்புமான்தோலை வஸ்திரமாக உடுத்தவர்கள். மஹாராஜரே! தோளில முகமுள்ளவர்கள்; வயிற்றில் முகமுள்ளவர்கள்; முதுகில்

---

* இரட்டிக்கிறது.

முகமுள்ளவர்கள்; மோவாயில் முகமுள்ளவர்கள்; கணுக்காலில் முக முள்ளவர்கள்; அனேகர்கள் விலாவில் முகமுள்ளவர்கள்; பற்பலஇடங் களில் முகமுள்ளவர்கள்; புழு பூச்சி இவைகளுக்குஸமமான முக முள்ளவர்கள்; கணங்களுக்கு அத்யக்ஷர்கள். மற்றவர்கள் பலவித ஸர்ப்பங்களின் முகம்போன்றமுகமுடையவர்கள்; பற்பல கைகளையும் கழுத்தையுமுடையவர்கள். சிலர் பற்பல விருக்ஷங்களைப்போன்ற புஜங்களையுடையவர்கள். மற்றவர்கள் இடையில் தலையை உடைய வர்கள். சிலர் ஸர்ப்பங்களின் உடல்போன்ற முகமுடையவர்கள். பற்பலபுதர்களில் வஸிப்பவர்கள்; மரப்பட்டைகளால் சுற்றப்பட் டிருக்கிற தேகத்துடன்கூடினவர்கள்; பற்பல ஸ்வர்ணவஸ்திரங் களுடன் கூடினவர்கள்; பற்பல வேஷங்களைத் தரித்தவர்கள்; பற்பல புஷ்பமாலைகளையும் சந்தனங்களையும் அணிந்தவர்கள்; பற் பலவஸ்திரங்களை உடுத்தவர்கள்; தோலையே வஸ்திரமாகக் கொண் டவர்கள்; தலைப்பாகையுள்ளவர்கள்; மகுடமணிந்தவர்கள்; நல்ல கழுத்துடன்கூடியவர்கள்; நல்ல தேஜஸையுடையவர்கள்: கிரீட முள்ளவர்கள்; ஐந்துகுடுமியுள்ளவர்கள்; ஸ்வர்ணமயமான தலை மயிரையுடையவர்கள்; மூன்று சிகைகளையுடையவர்கள்; இரண்டு சிகைகளுள்ளவர்கள்; மற்றவர்கள் ஏழுசிகைகளையுடையவர்கள்; குடுமியுள்ளவர்கள்; மகுமடணிந்தவர்கள்; மொட்டைத்தலையர்கள்; சடையுள்ளவர்கள்; சித்ரமானமாலைகளைத் தரித்தவர்கள். சிலர், ரோம முள்ள முகத்துடன்கூடியவர்கள்; சண்டையிலேயே முக்கியமான ருசியுள்ளவர்கள். சிறந்த தேவர்களாலும் எப்பொழுதும் ஜயிக்கக் கூடாதவர்கள். கறுத்த நிறமுடையவர்கள்; தசைப்பற்றில்லாத முக முள்ளவர்கள்; நீண்ட முதுகையுடையவர்கள்; குறுகிய வயிற்றை யுடையவர்கள்; பருத்தும் குறுகியுமிருக்கின்ற முதுகையுடையவர் கள்; தொங்குகிறவயிற்றையும் குறியையுமுடையவர்கள்; பெரிய கைகளையுடையவர்கள்; குறுகின கைகளையுடையவர்கள்; குறுகின சரீரமுள்ளவர்கள்; குள்ளர்கள்; கூனர்கள்; குறுகின கணுக்கால்களை யுடையவர்கள்; யானையின் காதுபோலவும் கழுத்துப்போலவுமிருக் கும் காதுகளையும் கழுத்துக்களையுமுடையவர்கள்; யானையின் மூக்குப் போன்ற மூக்குள்ளவர்கள்; ஆமையின் மூக்குப்போன்றமூக்கையுடை யவர்கள்; சிலர் செந்நாயின் மூக்குப்போன்ற மூக்கையுடையவர்கள்; தீர்க்கமான பெருமூச்சுள்ளவர்கள்; தீர்க்கமான கணுக்கால்களுள்ளவர் கள்; அதிகபயங்கரமானவர்கள்; கீழ்முகமுள்ளவர்கள்; பெரியகோரப பற்களையுடையவர்கள்; குறுகின கோரப்பற்களையுடையவர்கள்; சிலர்

நான்குகோரப்பற்களையுடையவர்கள். அரசரே! ஆயிரக்கணக்காக இருக்கின்ற இன்னும் சிலர் பெரிய யானைபோன்றவர்களாகவும் பயங்கரர்களாகவும் இருப்பவர்கள். பாரதரே! நன்றாக அமைந்திருக்கிற சரீரத்தையுடையவர்கள்; காந்தியுள்ளவர்கள்; நன்றாக அலங்கரிக்கப்பட்டவர்கள்; மஞ்சள்நிறமுள்ள கண்களையுடையவர்கள்; முளைபோன்ற காதுகளையுடையவர்கள்; சிவந்தமூக்குள்ளவர்கள்; பருத்தகோரப்பற்களையுடையவர்கள்; நீண்ட கோரப்பற்களையுடையவர்கள்; பருத்த உதடுகளையுடையவர்கள்; பச்சைநிறமுள்ள தலைமயிர்களையுடையவர்கள்; பற்பல கால்களையும் உதடுகளையும் கோரப்பற்களையுமுடையவர்கள்; பற்பல கைகளுடனும் கழுத்துக்களுடனுங் கூடியவர்கள். பாரதரே! பற்பல தோல்களால் மூடப்பட்டவர்கள்; பற்பல பாஷைகளையுடையவர்கள்; தேசபாஷைகளில் ஸமர்த்தர்கள்; ஒருவரையொருவர் புகழ்பவர்கள்; ஐஸ்வர்யமுள்ளவர்கள். பெரிய ஸபைகளைச் சேர்ந்தவர்களான இவர்கள் நான்குபக்கத்தினின்றும் வந்தார்கள். பாரதரே! தீர்க்கமான கழுத்தையுடையவர்கள்; நீண்ட நகமுள்ளவர்கள்; நீண்டிருக்கிறகால்களுடனும் தலைகளுடனும் கைகளுடனுங்கூடியவர்கள்; மஞ்சள்நிறமுள்ள கண்களையுடையவர்கள்; கறுத்த கழுத்தையுடையவர்கள்; தொங்குகின்ற காதுகளையுடையவர்கள். சிலர் பீமஸேனனுக்கு ஒப்பானவர்கள்; மைபோன்றவர்கள்; வெளுத்தகண்களையுடையவர்கள்; சிவந்தகழுத்தையுடையவர்கள். சிலர் மஞ்சள்நிறமுள்ளகண்களையுடையவர்கள். அரசரே! பாரதரே! அனேகர்கள் பலநிறமுள்ளவர்கள்; விசித்ரமான வர்ணமுள்ளவர்கள். சாமரங்களைத் தலையணியாகக்கொண்டவர்களுக்குஒப்பானவர்கள். வெளுப்பாகவும் சிவப்பாகவுமிருக்கிற ரேகைகளையுடையவர்கள்; வெவ்வேறு நிறமுள்ளவர்கள்; ஒரே நிறமுள்ளவர்கள்; மயில்நிறம்போன்ற நிறமுள்ளவர்கள். பின்னும் இவர்களுடைய ஆயுதங்களைச்சொல்லுகிறேன். கேளும். மிகுதியிருக்கின்ற பாரிஷதர்களால் ஆயுதங்கள் கொள்ளப்பட்டன. சிலர் கைகளில் பாசங்களைக் கொண்டவர்கள்; திறந்தவாயையுடையவர்கள்; கழுதையின்முகமுடையவர்கள்; பின்புறத்தில் கண்களையுடையவர்கள்; கறுத்தகழுத்தையுடையவர்கள். பரிகத்தைக் கையில்கொண்டவர்கள். சதக்னிகளையும் சக்ரங்களையும் கையில்பிடித்தவர்கள்; உலக்கைகளைக் கையில் கொண்டவர்கள்; பாரதரே! சத்திகளையும் முத்கரங்களையும் கையில் கொண்டவர்கள். தண்டங்களைக் கையில்பிடித்தவர்கள்; கதைகளையும் புசுண்டிகளையும் கையில்கொண்டவர்கள்; தோமரங்களைக் கை

யில்பிடித்தவர்கள்; கோரமான பற்பல ஆயுதங்களையுடையவர்கள்; மஹாத்மாக்கள்; மிக்கசுறுசுறுப்புள்ளவர்கள்; மிக்கபலசாலிகள்; மகாவேகமுள்ளவர்கள். அவ்வாறே யுத்தத்தில் பிரீதியுள்ளவர்களும் அதிகமான பராக்கிரமமுள்ளவர்களுமான அந்தமஹாபாரிஷதர்கள் குமாரருடைய அபிஷேகத்தைக்கண்டு ஸந்தோஷமுள்ளவர்களாக மணிகளுடையஸமூகங்களை அங்கங்களில் கட்டிக்கொண்டு நர்த்தனஞ் செய்தார்கள். அரசரே! இவர்களும் இன்னும் மற்ற அனேக பாரிஷதர்களும் மஹாத்மாவும் கீர்த்திமானுமான கார்த்திகேயரை உபாஸித்தார்கள். காற்றுக்கு ஒப்பானவர்களும் சூரர்களுமானதேவர்களும் அந்தரிக்ஷவாஸிகளும் தேவதைகளால் கட்டளையிடப்பட்டு ஸ்கந்தருக்கு அனுசரர்களானார்கள். அப்படிப்பட்டவர்களில் ஆயிரர்களும் பதினாயிரர்களும் அர்ப்புதர்களும் அபிஷேகஞ் செய்யப்பட்ட மஹாத்மாவான ஸ்கந்தரைச் சூழ்ந்துகொண்டு உபாஸித்தனர்.

---

## நாற்பத்தேழாவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



**(குமாரருடைய மாத்ருகணங்களின்பெயர் கூறியதும், குமாரர் தாரகாஸுரனைக் கொன்றதும், க்ரௌஞ்சகிரியைப் பிளந்ததும்.)**

**வீ**ரரே! அரசரே! என்னால் உரைக்கப்படுகின்றவைகளும் சத்துருக்களுடைய கூட்டங்களை அழிக்கின்றவைகளும் குமாரருக்கு அனுசரங்களுமான இந்தமாத்ருகணங்களைக் கேளும். பாரதரே! மங்களகரிகளான எவர்களால் தனித்தனியாக மூவுலகங்களும் வியாபிக்கப்பட்டனவோ கீர்த்தியுடையவர்களான அந்த மாத்ருதேவதைகளுடைய பெயர்களைக் கேளும். *பரதர்களுள் சிறந்தவரே! பிரபாவதி, விசாலாக்ஷி, பாலிதை, கோஸ்தனி, ஸ்ரீமதி, பகுலை, பகுபுத்திரிகை, அப்ஸுஜாதை, கோபாலி, ப்ருஹதம்பாலிகை, ஜயாவதி, மாலதிகை, த்ருவரத்னை, பயங்கரி, வஸுதாமை, தாமை, விசோகை, நந்தினி, ஏகசூடை, மஹாசூடை, சக்ரநேமி, உத்தேஜனி, ஜயத்ஸேனை, கமலாக்ஷி, சோபனை, சத்துருஞ்சயை, க்ரோதனை, சலபி, கரி, மாதவி, சுபவக்த்ரை, தீர்த்தஸேனி, கீதப்ரியை, கல்யாணி, ருத்ரரோமை, அமிதாசனை, மேகஸ்வனை, போகவதி, ஸுப்ரூ, கனகாவதி, அலாதாக்ஷி, வீர்யவதி, வித்யுஜ்ஜிஹ்வை, பத்மாவதி, ஸுநக்ஷத்ரை, கந்தரை, பகுயோஜனை,

* இந்த அத்யாயத்தில் பல விளிகள் விடப்பட்டன.

ஸந்தாநிகை, கமலை, மஹாபலை, ஸுதாமை, பகுதாமை, ஸுப்ரபை, யசஸ்விநி, ந்ருத்யப்ரியை, சதோலூகலமேகலை, சதகண்டை, சதாநந்தை, பகநந்தை, பாவிநி, வபுஷ்மதி, சந்திரசீதை, பத்ரகாளி, ருக்ஷாம்பிகை, நிஷ்குடிகை, வாமை, சத்வரவாஸிநீ, ஸுமங்கலை, ஸ்வஸ்திமதி, புத்ரிகாமை, ஜயப்ரியை, தனதை, ஸுப்ரஸாதை, பவதை, ஜலேஸ்வரி, ஏடீ, பேடீ, ஸமேடீ, வேதாளஜநநி, கண்டூதி, காலிகை, தேவமித்ரை, வஸுஸ்ரீ, * கோடரை, சித்ரஸேனை, அசலை, குக்குடிகை, சங்கலிகை, சகுனிகை, குண்டாரிகை, கௌகுலிகை, கும்பிகை, சதோதரி, உத்க்ராதினி, ஜலேலை, மஹாவேகை, கங்கணை, மனோஜவை, கண்டகினி, ப்ரஹஸை, பூதனை, கேசயந்த்ரி, த்ருடி, வாமை, க்ரோசனை, தடித்ப்ரபை, மந்தோதரி, மூண்டி, கோடரை, மேகவாஹிநி, ஸுபகை, லம்பினி, லம்பை, தாம்ரசூடை, விகாசினி, ஊர்த்வவேணி, தரை, *பிங்காக்ஷி, *லோஹமேகலை, ப்ருதுவஸ்திரை, மதுலிகை, மதுகும்பை, பக்ஷாலிகை, மத்குலிகை, ஜராயு, ஜர்ஜராநனை, க்யாதை, தஹதஹை, தமதமை, கண்டகண்டை, பூஷணை, மணிகுட்டிகை, அமோகை, லம்பபயோதரை, வேணுவீணாதரை, பிங்காக்ஷி, லோஹமேகலை, சசோலூகமுகி, க்ருஷ்ணை, கரஜங்கை, மஹாஜவை, சிசுமாரமுகி, ஶ்வேதை, லோஹிதாக்ஷி, விபீஷணை, ஜடாலிகை, காமசரி, தீர்க்கஜிஹ்வை, பலோத்கடை, காலேஹிகை, வாமனிகை, முகுடை, லோஹிதாக்ஷி, மஹாகாயை, ஹரிபிண்டை, ஏகத்வசை, ஸுகுஸுமை, க்ருஷ்ணகர்ணி, க்ஷுரகர்ணி, சதுஷ்கர்ணி, கர்ணப்ராவரணை, சதுஷ்பதநிகேதை, கோகர்ணி, மஹிஷானனை, கரகர்ணி, மஹாகர்ணி, பேரீஸ்வனமஹாஸ்வனை, சங்ககும்பஶ்ரவஸ், பகதை, மஹாபலை, கணை, ஸுகணை, பீதி, காமதை, சதுஷ்பதரதை, பூதிதீர்த்தான்யகோசரி, பசுதை, வித்ததை, ஸுகதை, மஹாயசஸ், பயோதை, கோமஹிஷதை, ஸவிசாலை, ப்ரதிஷ்டை, ஸுப்ரதிஷ்டை, ரோசமானை, ஸுரோசனை, கௌகர்ணி, முககர்ணி, விசிரை, மந்திநி, ஏகசந்திரை, மேககர்ணை, மேகமாலை, விரோசனை, பற்பலரூபத்துடன்கூடியவர்களான இவர்களும் இன்னும்மற்ற அனேக மாத்ருதேவதைகளும் ஆயிரமாயிரமாகக் கார்த்திகேயரை அனுஸரித்துச் செல்லுகிறவர்களானார்கள். பாரதரே! மாத்ருதேவதைகள், நீண்ட நகமுள்ளவர்களாகவும் நீண்டபற்களையுடையவர்களாகவும் நீண்ட முகங்களையுடையவர்களாகவும் பலமுள்ளவர்களாகவும் மதுரஸ்வபாவமுள்ளவர்களாகவும் யௌவனத்தில் நிலை

---

* இவை இரட்டிக்கின்றன.

பெற்றவர்களாகவும் நன்ருக அலங்கரிக்கப்பட்டவர்களாகவும் இருந்தார்கள். அவ்வாறே, அவர்கள் மாஹாத்ம்யத்துடன்கூடியவர்களாகவும் நினைத்தபடி ரூபத்தைத்தரிப்பவர்களாகவும் மாம்ஸமில்லாதசரீரமுள்ளவர்களாகவும் வெண்ணிறமுள்ளவர்களாகவும் தங்கத்துக்கு ஒப்பானவர்களாகவும் இருந்தார்கள். பரதர்களுள்சிறந்தவரே! மற்றும் சிலர் கார்மேகத்துக்கு ஒப்பானவர்களாகவும் புகைநிறமுள்ளவர்களாகவும் சிவந்தகாந்தியுள்ளவர்களாகவும் பெரிய தேகமுள்ளவர்களாகவும்நீண்டமயிருள்ளவர்களாகவும் வெளுப்புவஸ்திரங்களைத்தரித்தவர்களாகவும் மேல்நோக்கியிருக்கின்ற பின்னலுள்ளவர்களாகவும் மஞ்சள்நிறமுள்ள கண்களையுடையவர்களாகவும் தொங்கிக்கொண்டிருக்கிற மேகலைகளுடன்கூடியவர்களாகவும் வயிறும்காதும்கொங்கையும் தொங்கினவர்களாகவும் சிவந்த கண்களையுடையவர்களாகவும் சிவந்த நிறமுள்ளவர்களாகவும் பசுமையான கண்களையுடையவர்களாகவும் வரன்களைக் கொடுப்பவர்களாகவும் இஷ்டப்படி ஸஞ்சரிப்பவர்களாகவும் எப்பொழுதும் ஸந்தோஷமுள்ளவர்களாகவும் இருந்தார்கள். சத்துருக்களைத்தவிக்கச்செய்பவரே! அவர்கள் யமன், ருத்ரன்,ஸோமன், குபேரன்,வருணன், மஹேந்திரன், அக்னி, வாயு, குமாரன், பிரம்மா, விஷ்ணு,ஸூர்யன்,வராஹன் இவர்களை அதிஷ்டானதேவதைகளாகக் கொண்டவர்கள்; மஹாபலமுள்ளவர்கள்; ரூபத்தினால் அப்ஸரஸுகளுக்கு ஒப்பானவர்கள்; மனத்தைக்கவருகிற ஸ்பாவமுள்ளவர்கள்; மனத்தை ரமிக்கச்செய்பவர்கள்; பேச்சில் குயிலுக்கு ஒப்பானவர்கள்; (செல்வ) மிகுதியினால் குபேரனுக்கு ஒப்பானவர்கள் ; யுத்தத்தில் இந்திரனுடைய வீர்யத்துக்கு ஸமமான வீர்யமுள்ளவர்கள்; அவ்வாறே, காந்தியினால் அக்னிக்கு ஸமமானவர்கள்; யுத்தத்தில் எப்பொழுதுமே நிச்சயமாகச் சத்துருக்களுக்குப் பயத்தைக் கொடுப்பவர்கள் ; தம்மிஷ்டப்படி ரூபத்தைத் தரிப்பவர்கள் ; வேகத்தில் வாயுவுக்கு ஒப்பானவர்கள் ; சிந்திக்கமுடியாத பலமும் வீர்யமு முடையவர்கள்; அவ்வாறே, நினைக்கமுடியாத பராக்கிரமமுள்ளவர்கள்; விருக்ஷங்களிலும் நாற்சந்திகளிலும் வஸிப்பவர்கள் ; குகைகளிலும் ஶ்மசானங்களிலும் மலைஅருவிகளிலும் வஸிப்பவர்கள்; பற்பல ஆபரணங்களைத் தரித்தவர்கள்; பற்பல பூமாலைகளையும் வஸ்திரங்களையும் தரித்தவர்கள்; பற்பல விசித்திர வேஷங்களைத் தரித்தவர்கள்; அவ்வாறே, பற்பலபாஷைகளைப் பேசுகிறவர்கள்; சத்துருக்களுக்குப் பயத்தையுண்டு பண்ணுகிறவர்களான இவர்களும் இன்னும் மற்ற மாத்ருகணங்களும் தேவராஜனுடைய ஸம்மதத்தின்மேல் மஹாத்மாவான ஸ்கந்

தரை அனுஸரித்தார்கள். ராஜஸ்ரேஷ்டரே! பரதர்களுட்சிறந்தவரே! பிறகு, மகிமைபொருந்தினமஹேந்திரன், தேவசத்துருக்களுடைய நாசத்தின்பொருட்டு, குஹருக்கு, சக்தியாயுதத்தையும் பேரொலியுள்ள பெரியமணிகட்டியதும் பிரகாசிக்கின்றதும் வெண்ணிறமுள்ளதும் பாலஸூர்யனுடைய நிறம்போன்றநிறமுள்ளதுமான கொடியையும் கொடுத்தான். பசுபதியானவர், உக்கிரஸ்வரூபமுள்ளதும் பற்பல ஆயுதங்களையும் தவத்தையும் வீர்யத்தையும் வன்மையையுமுடையதும் ஜயிக்கமுடியாததும் தம்முடைய கணங்களோடுகூடியதும் தனஞ்சயை என்று பெயர்பெற்றதும் ருத்ரரான தமக்குத் துல்யமான பலமுள்ள முப்பதினாயிரம் யுத்தவீரர்களோடுகூடியதும் எல்லாப்பூதங்களும் அடங்கின பெருங்கூட்டமுமான ஸேனையை அந்தஸ்கந்தருக்குக்கொடுத்தார். அந்தச்சேனையானது ஒருபொழுதும்யுத்தத்தினின்று புறங்காட்டிச்செல்வதை அறியாதது. விஷ்ணுவானவர் பலத்தை மிகவும் விருத்திபண்ணுகிற வைஜயந்தி என்கிற மாலையைக் கொடுத்தார். உமையவள் அழுக்கில்லாதவையும் ஸூர்யன்போன்ற ஒளிபொருந்தியவையுமான இரண்டு வஸ்திரங்களைக் கொடுத்தாள். கங்கை, திவ்யமானதும் அம்ருதத்துடன்தோன்றினதும் உத்தமமுமான கமண்டலுவைக் கொடுத்தாள். பிருஹஸ்பதியும் குமாருக்குத் தண்டத்தை அன்புடன் கொடுத்தார். கருடன் தன்னுடைய அருமைப்பிள்ளையும் விசித்திரமான தோகையுடன்கூடியதுமான மயிலைக் கொடுத்தான். அருணன் சிவந்தகொண்டையையுடைய கோழியைக் கொடுத்தான். அரசனே வருணன் பலத்துடனும் வீர்யத்துடனும்கூடிய ஆட்டைக் கொடுத்தான். பிறகு, பிரபுவும் உலகங்களைப்படைப்பவருமானபிரம்மதேவர் ஸுப்ரமணியருக்கு மான்தோலையும் யுத்தங்களில் ஜயத்தையும் கொடுத்தார். ஸ்கந்தர் தேவகணத்துக்கு ஸேனாபதியாயிருக்கும் நிலைமையைப் பெற்று ஜ்வாலையுடன் ஜ்வலிக்கின்ற இரண்டாவது அக்னிபோலப் பிரகாசித்தார். பிறகு, ஸ்கந்தர் தேவஸ்ரேஷ்டர்களை ஸந்தோஷிக்கச்செய்துகொண்டு பாரிஷதர்களோடும் மாத்ருதேவதைகளோடும் அஸுரர்களுடைய நாசத்தின்பொருட்டுச் சென்றார். பயங்கரமாயிருப்பதும் மணிகளுடனும் எடுத்துநிறுத்தப்பட்ட கொடிகளுடனுங்கூடியதுமான அந்தராக்ஷஸஸேனையானது பேரீவாத்யங்களுடனும் சங்கங்களுடனும் முரசங்களுடனும் ஆயுதங்களுடனும் கொடித்துணிகளுடனும்கூடியதாக ஜ்யோதிமண்டலங்களால் விளங்குகின்ற சரத்காலத்திலுள்ள ஆகாயம்போல் விளங்கியது. பிறகு, அந்தத்தேவகணங்களும் அவ்வாறே பற்பல பூதகணங்களும்

ஒரேயிடத்தில் மனம்பற்றியவைகளாகப் பேரிகளையும் சிறந்தசங்கங்களையும் தம்பட்டங்களையும் ஜர்ஜரங்களையும் க்ரகசங்களையும் கோவிஷாணிகங்களையும் ஆடம்பரங்களையும் கோமுகங்களையும் மிக்கஒலியுள்ள டிண்டிமங்களையும் முழக்கினார்கள். இந்திரனுடன்கூடின அந்தத் தேவர்கள் எல்லாரும் குமாரரை ஸ்தோத்திரஞ்செய்தார்கள். தேவர்களும் கந்தர்வர்களும் பாடினார்கள். அப்ஸரஸுகளுடைய கூட்டங்கள் நர்த்தனம்செய்தன. பிறகு, மஹாஸேனர் பிரீதியுடையவராகி, 'யுத்தத்தில் உங்களுடையவதத்தைச்செய்ய எண்ணங்கொண்ட சத்துருக்களைக் கொல்வேன்' என்று தேவர்களுக்கு வரனைக் கொடுத்தார். மஹாத்மாக்களானதேவர்கள் தேவஸ்ரேஷ்டரான அந்த ஸுப்ரம்மண்யரிடத்தினின்று வரத்தைப்பெற்று மனமகிழ்ந்தவர்களாகிச் சத்துருக்கள் கொல்லப்பட்டதாகவே எண்ணினார்கள். மஹாத்மாவான ஸ்கந்தர் வரம் கொடுத்தவுடன், ஸந்தோஷத்தினாலுண்டான எல்லாப் பூதக்கூட்டங்களின்ஒலியும் மூவுலகங்களையும் நிரப்பியது. அந்த மஹாஸேனர் பெரியஸேனையினால் சூழப்பட்டவராகி யுத்தத்தில் அஸுரர்களைக் கொல்வதற்காகவும் தேவர்களைக் காப்பாற்றுவதற்காகவும் புறப்பட்டார். ஜனாதிபரே! மஹாஸேனருடைய படைகளுக்குமுன்னிலையில் முயற்சி, ஜயம், தர்மம், ஸித்தி, லக்ஷ்மி, தைர்யம், ஸ்மிருதி இவைகள் சென்றன. அந்தத்தேவரான குஹர் பயங்கரமாயிருப்பதும் சூலங்களையும் முத்கரங்களையும் கையில்தாங்கியதும் எரிகொள்ளிகளைத் தரிக்கின்றதும் விசித்திரமான ஆபரணங்களையும் கவசங்களையும் அணிந்ததும் கதைகள் உலக்கைகள் நாராசங்கள் சக்திகள் தோமரங்கள் இவைகளைக்கையில் கொண்டதும் கொழுத்த ஸிம்மம்போலச் சப்திக்கின்றதுமான அந்த ஸேனையோடுகூடி ஸிம்மநாதஞ்செய்துகொண்டு புறப்பட்டார். அவரைக் கண்டு எல்லாத்தைத்யர்களும் ராக்ஷஸர்களும் தானவர்களும் பயத்தினால் மனநிலைதவறினவர்களாக ஒரேஸமயத்தில் எல்லாத்திசைகளிலும் ஓடினார்கள். பற்பலஆயுதங்களைக் கையில்கொண்டவர்களான தேவர்கள் அவர்களைக்குறித்து எதிர்த்துச்சென்றார்கள். தேஜஸோடும் பலத்தோடும்கூடியவரும் மகிமைபொருந்தியவருமான அந்தஸ்கந்தர் பார்த்துப் பிறகு கோபங்கொண்டு பயங்கரமான சக்தியையும் அஸ்திரங்களையும் அடிக்கடி இறைத்தார்; ஹவிஸினால் ஜ்வலிக்கின்ற நெருப்புப்போன்ற தம்முடையதேஜஸைத் தரித்தார். மஹாராஜரே! அளவுகடந்ததேஜஸையுடைய ஸ்கந்தரால் சக்திஅஸ்திரமானது அப்யஸிக்கப்படும்பொழுது, பூமியில் ஜ்வலிக்கின்ற கொள்ளிக்கட்டையானது

விழுந்தது. அரசரே! அவ்வாறே பிரளயகாலத்தில் மிக்ககோரமான இடிகள் விழுவதுபோல இடிகள் பேரொலியுடன் கீழேவிழுந்தன. பரதர்களுள்சிறந்தவரே! அக்னிபுத்திரரான ஸ்கந்தரால் மிக்ககோரமான ஒரு சக்தியானது பிரயோகிக்கப்பட்டபொழுது கோடிக்கணக்கானசக்திகள் விழுந்தன. அரசரே! பிறகு, மகிமையுள்ளவரும் பிரபுவுமான மஹாஸேனர் பிரீதியுள்ளவராகி மஹாபலபராக்கிரமமுள்ளவர்களும் வீரர்களும் பலசாலிகளுமான லக்ஷக்கணக்கான தைத்யர்களால்சூழப்பட்ட தாரகனென்கிற தைத்யேந்திரனேயும் எட்டுப்*பத்மஸங்கியையுள்ளஸேனேயினல் சூழப்பட்ட மஹிஷாஸுரனேயும் யுத்தத்தில் கொன்ருர்; நூறுலக்ஷம்போர்வீரர்களால் சூழப்பட்ட த்ரிபாதனேயும் கொன்ருர். ஈஸ்வரரானஸ்கந்தர் பற்பல ஆயுதங்களேக்கையில்கொண்டவர்களும் †பத்துநிகர்வஸங்கியையுள்ளவர்களுமான கிங்கரர்களால் சூழப்பட்டஹ்ரதோதரனேக் கிங்கரர்களுடன் கொன்ருர். அரசரே! குமாரருடைய அனுசரர்கள், சத்துருக்கள் கொல்லப்படும்போது பத்துத்திசைகளேயும் நிரப்பிக்கொண்டு மிக்கபேரொலியை வெளியிட்டார்கள்; கூத்தாடினர்கள்; துள்ளினர்கள்; ஸந்தோஷத்தோடு சிரித்தார்கள். ராஜேந்திரரே! பிறகு, நான்குபக்கங்களிலும் விருத்தியடைகின்ற சக்திஅஸ்திரத்தினுடையஜ்வாலேகளால் மூவுலகமும் முழுதும் பயமுறுத்தப்பட்டதாயிற்று. ஸ்கந்தருடைய நாதங்களாலேயே ஆயிரக்கணக்காகத் தைத்யர்கள் எரிக்கப்பட்டார்கள். மற்றச் சில தேவசத்துருக்கள் கொடித்துணியினலேயே விலக்கித்தள்ளப்பட்டு மாண்டார்கள். சிலர் மணிகளின்சப்தத்தினல் பயமுறுத்தப்பட்டுப் பூமியில் விழுந்தார்கள். சிலர்ஆயுதங்களால் வெட்டுப்பட்டு ஆயுளற்றுவிழுந்தார்கள். சிறந்தபலமுள்ளவரும் வீரரும் மகாபலசாலியுமான கார்த்திகேயர்இவ்வாருக யுத்தத்தில் ஆயுதங்களே ஓங்கிநிற்பவர்களான அனேகதேவசத்துருக்களேக் கொன்ருர். பிறகு, மகாபலசாலியும் பலியினுடையபுத்ரனுமானபாணனென்கிற அஸுரன் க்ரௌஞ்சபர்வதத்தை அடைந்து தேவர்களுடைய கூட்டங்களேப்பீடித்தான். உதாரமானபுத்தியுடைய மஹாஸேனர் அந்தத்தேவசத்ருவை எதிர்த்துச்சென்ருர். அந்தப் பாணன் கார்த்திகேயரிடத்தினின்றுஉண்டானபயத்தினல் க்ரௌஞ்சபர்வதத்தைச் சரணமடைந்தான். பிறகு, மஹாகோபமுள்ளவரும் மஹிமைபொருந்தியவருமான கார்த்திகேயர் அக்னியினல் கொடுக்கப்பட்ட சக்தியாயுதத்தால க்ரௌஞ்சபக்ஷியினுடைய சப்தத்தினல் ஒலிபொருந்தியதும் ஸாலமரங்களேகளால் பலநிறமாயிருப்பதும் பயங்

* ஆதிபர்வம் 374-ம்பக்கம்குறிப்பிற்காண்க. † லக்ஷம்கோடி; பதினயிரம்கோடி.

திருக்கின்ற குரங்குகளோடும் யானைகளோடும் கூடியதும் வேகத்துடன் மேலே எழுந்து பறக்கின்ற பக்ஷிகளை உடையதும் வெளியில்வருகின்ற ஸர்ப்பங்களையுடையதும் ஓடுகின்ற மந்திகளுடைய கூட்டங்களாலும் கரடிக்கூட்டங்களாலும் எதிரொலியுள்ளதாகச் செய்யப்பட்டதும் மான்களுடைய சப்தங்களால் காட்டு நடுவில் ஒலியுள்ளதுமான க்ரௌஞ்ச பர்வதத்தைப் பிளந்தார். வெளியில் வருகின்ற சரபங்களாலும் விரைவாகஓடுகின்ற சிங்கங்களாலும் துக்கிக்கத்தக்கநிலைமையைஅடைந்திருந்தும் அந்தமலையானது விளங்கியது. அந்தமலையினுடையசிகரங்களில் வஸிக்கின்றவித்யாதரர்களும் கின்னரர்களும், சக்தியினுடைய வீழ்ச்சியால் உண்டான சப்தத்தினால் மிக்கதுன்பமடைந்தவர்களும் மனக்கலக்கமுள்ளவர்களுமாக உயரக்கிளம்பினார்கள். பிறகு, ஜ்வலிக்கின்ற சிறந்த மலையினின்று தைத்யர்கள் விசித்திரமான ஆபரணங்களையும் மாலைகளையும் அணிந்தவர்களாக நூறுநூறாகவும் ஆயிரம் ஆயிரமாகவும் வெளிப்பட்டார்கள். குமாரருடைய அனுசரர்களான கிங்கரர்கள் யுத்தத்தில் அவர்களை வலிந்து கொன்றார்கள். பகவானான அந்தக் கார்த்திகேயரும் கோபமூண்டு, அப்பொழுது அஸுரராஜனுடைய குமாரனை அவனுடைய தம்பியர்களுடன், தேவராஜன் விருத்ரனைக் கொன்றது போல் விரைவாகக் கொன்றார். சத்துருவீரர்களைக்கொல்பவரும் மஹாபலசாலியுமான அக்நிகுமாரர் தம்மைப் பலரூபியாகவும் ஒரு ரூபியாகவும் செய்துகொண்டு க்ரௌஞ்சபர்வதத்தைச் சக்தியினால் பிளந்தார். யுத்தத்தில் எறியப்பட்ட சக்தியானது மறுபடியும் மறுபடியும் அவருடையகையை அடைந்தது. பிறகு, இவ்விதமான பிரபாவமுள்ள அக்நிகுமாரரான ஸ்கந்தபகவான் மீண்டும் சௌர்யத்தினாலும் இரண்டுமடங்கான தேஜஸினாலும் கீர்த்தியினாலும் ஸ்ரீயினாலும் பிரகாசித்தார். அவரால் க்ரௌஞ்சபர்வதமும் பிளக்கப்பட்டது. நூறுநூறாகத் தைத்யர்களும் கொல்லப்பட்டார்கள். பிறகு, பகவானான அந்த ஸ்கந்ததேவர் தேவசத்துருக்களைக்கொன்று தேவர்களால் பூஜிக்கப்பட்டவராகி அதிக ஸந்தோஷத்தை அடைந்தார். அரசரே! பாரதரே! பிறகு, துந்துபிகளும் சங்கங்களும் முழங்கின. யோகிகளுக்கு ஈசுவரரான ஸ்கந்ததேவர்மீது நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் தேவஸ்திரீகள் மிகச்சிறந்த பூமாரியைப் பொழிந்தார்கள். பரிசுத்தமான காற்றானது திவ்யகந்தத்துடன் வீசியது. இந்த ஸ்கந்தரைக் கந்தர்வர்களும் யாகம்செய்பவர்களும் மஹரிஷிகளும் ஸ்தோத்திரம்செய்தார்கள். சிலர் இந்த ஸ்கந்தரை

எல்லாருக்கும் முந்திப்பிறந்தவரும் பிரம்மதேவரை உத்பத்திக்குக் காரணமாகக்கொண்டவரும் பிரபுவும் பிதாமஹருக்குப் புத்திரருமான அந்த ஸநத்குமாரராகப் பாவிக்கிறார்கள். சிலர் மஹேசுவரருடைய குமாரரென்றும் சிலர் அக்னியின் குமாரரென்றும் உமையினுடைய குமாரரென்றும் கிருத்திகாதேவிகளின் குமாரரென்றும் கங்கையின் குமாரரென்றும் சொல்லுகிறார்கள். யோகிகளுக்கு ஈசுவரரும் மஹாபலசாலியுமான ஸ்கந்ததேவரை ஒருவிதமாகவும் இரண்டுவிதமாகவும் நான்குவிதமாகவும் நூறுவிதமாகவும் ஆயிரம் விதமாகவும் சொல்லுகின்றனர். அரசரே! இந்தக்கார்த்திகேயருடைய அபிஷேகமானது உமக்கு உரைக்கப்பட்டது. ஸரஸ்வதியினுடைய தீர்த்தவகையின் பரிசுத்தியையும் கேளும். மஹாராஜரே! குமாரரால் தேவசத்துருக்கள் கொல்லப்பட்டவுடன் மற்றொரு ஸ்வர்க்கம்போல உத்தமமான தீர்த்தம் உண்டாயிற்று. அவ்விடத்திலிருந்துகொண்டு பிரபுவான குமாரர் தனித்தனியாக ஐஸ்வர்யங்களையும் கொடுத்தார். அக்னிகுமாரரான ஸ்கந்தர் ராக்ஷஸத்தலைவர்களுக்கு மூவுலகங்களையும் அளித்தார். மஹாராஜரே! தைத்யவர்க்கங்களுக்கு முடிவைச்செய்பவரான அந்தப் பகவான் இவ்வாறு அந்தத்தீர்த்தத்தில் தேவர்களால் தேவஸேனாபதியாக அபிஷேகம் செய்யப்பட்டார். பரதர்களுள் சிறந்தவரே! முற்காலத்தில் எந்தத்தீர்த்தத்தில் ஜலங்களுக்கு ராஜாவான வருணன் தேவகணங்களால் அபிஷேகஞ்செய்யப்பட்டானோ அந்தத்தீர்த்தமானது ஔசனமெனப்ரஸித்திபெற்றது. பலராமர் இந்த உத்தமதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து ஸ்கந்தரை அர்ச்சித்துப் பிராம்மணர்களுக்கு ஸ்வர்ணத்தையும் வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் கொடுத்தார். பகைவீரர்களைக்கொல்பவரும் மாதவருக்குஜ்யேஷ்டரும் மாதவருமான பலராமர் அந்தத் தீர்த்தத்தில் ஓர் இரவு வஸித்துப் பூஜிக்கத்தக்க அந்த உத்தமதீர்த்தத்தில் ஸ்நானமும்செய்து ஸந்தோஷமுள்ளவரும் மனத்தில் அன்புமிக்கவரும் ஆனார். அரசரே! நீர் என்னைநோக்கிக்கேட்டதும் மஹாபலசாலியான ஸ்கந்தபகவான் பாலராயிருக்கும்பொழுதே ஒன்றுசேர்ந்த தேவர்களால் அபிஷேகஞ்செய்யப்பட்டதும் ஸேநாபதியாகச் செய்யப்பட்டதுமாகிய இவையனைத்தும் உமக்கு உரைக்கப்பட்டன" என்று கூறினார்.

---

## நாற்பத்தேட்டாவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



(தேவர்கள் வருணனை ஜலாதிபதியாக அபிஷேகஞ்செய்ததும், பலராமர் அக்னிதீர்த்தத்துக்கும் கௌபேரதீர்த்தத்துக்கும்சென்றதும், அந்தத்தீர்த்தங்களுடைய மகிமையும்.)

ஜனமேஜயர், "ப்ராம்மணரே! முறைப்படி விஸ்தாரமாகநடந்த மிக்க ஆச்சர்யகரமான இந்தக்குமாரருடைய அபிஷேகத்தை நான் உள்ளபடிகேட்டேன். தபோதனரே! இதைக்கேட்டமையால், என்னைப் பரிசுத்தனாகஅறிகிறேன். எனக்கு ரோமங்கள் சிலிர்க்கின்றன. என்னுடையமனமும் தெளிவாகஇருக்கிறது. குமாரருடைய அபிஷேகத்தையும் அவ்வாறே தைத்யர்களுடைய வதத்தையுங்கேட்டு, மீண்டும் எனக்கு அதிகமான பிரீதியும் குதூகலமும் உண்டாகின்றன. மஹாபிராஜ்ஞரே! முற்காலத்தில் இந்தத்தீர்த்தத்தில் வருணன் ஜலங்களுக்குப்பதியாகத் தேவர்களால் எவ்வாறு அபிஷேகஞ் செய்யப்பட்டான்? அதனை எனக்குச் சொல்லும். சிறந்தவரே! நீர் ஸமர்த்தராக இருக்கிறீர்" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

"அரசரே! முற்காலத்தில் இந்த ஆச்சர்யம் நடந்தவிதத்தைக் கேளும். மன்னரே! ஆதிகாலத்தில் கிருதயுகமானது முறைப்படி நடந்துவரும்பொழுது எல்லாத்தேவதைகளும் ஸமீபத்தில் வந்து வருணனைப்பார்த்து இந்தவசனத்தைஉரைக்கலானார்கள். 'பகவானே! எங்களைத் தேவராஜனை இந்திரன் எப்பொழுதும் பயங்களினின்று காப்பாற்றுவதுபோலவே எல்லாநதிகளுக்கும் நாதனை நீயும் காப்பாயாக. தேவனே! மகரங்களுக்கு ஆலயமான ஸமுத்திரத்தில் எப்பொழுதும் உனக்கு வாஸம்உண்டாகட்டும். நதிகளுக்குப்பதியான இந்த ஸமுத்திரமானது உன்னுடையவசத்தில் இருக்கப்போகிறது. சந்திரனோடுகூடவே உனக்குக் குறைவும் அபிவிருத்தியும் உண்டாகப் போகின்றன' என்றனர். வருணன் அந்தத்தேவர்களைப்பார்த்து, 'அப்படியே ஆகுக' என்று சொன்னான். பிறகு, தேவர்களெல்லாரும் ஸாகரத்தை ஆலயமாகக்கொண்ட வருணனை வந்தடைந்து சாஸ்திரத்தினால் கண்டறியப்பட்டமுறையினால் ஜலாதிபதியாகச் செய்தார்கள். பிறகு, ஜலஜந்துக்களுக்குப்பதியான வருணனைத் தேவர்கள் அபிஷேகஞ்செய்து ஜலேச்வரனை அவனைப் பூஜித்துத் தங்கள் ஸ்தானங்க

ளையே அடைந்தார்கள். மிக்ககீர்த்தியையுடைய வருணனும் பிறகு தேவர்களால் அபிஷேகஞ்செய்யப்பட்டவனாகி நதிகளையும்ஸமுத்திரங் களையும் நகங்களையும் தடாகங்களையும், இந்திரன் தேவர்களைப் பாது காப்பதுபோல முறையுடன் பாதுகாத்தான். தோஷமற்றவரே ! அரச ரே! பிறகு, பிரலம்பனைக் கொன்றவரும் பேரறிவாளருமான பலராமர் அந்தத்தீர்த்தத்திலும் ஸ்நானம்செய்து, தனத்தைக்கொடுத்து, பிறகு, எந்தவிடத்தில் அக்நியானவன் வன்னிமரத்தின் மத்தியில் ஒளிந்து காணப்படாமலிருந்தானோ, முற்காலத்தில் லோகாலோகபர்வதத்துக்கு அழிவுண்டான ஸமயத்தில் தேவர்கள் எந்த இடத்தில் எல்லாஉலகங் களுக்கும் பிதாமஹரான பிரம்மதேவரை அடைந்து, 'அக்னிபகவான் ஒளிந்துவிட்டான். காரணத்தை நாங்கள் அறியோம். பிரபுவே ! எல் லாப்பிராணிகளுக்கும் க்ஷயமுண்டாகிவிட்டது. அக்னியை உண்டு பண்ணிக்கொடும்' என்று வேண்டினார்களோ அந்த அக்னிதீர்த்தம் சென்றார்" என்றார்.

ஜனமேஜயர், "உலகங்களை ரக்ஷிப்பவனான அக்னிபகவான் யாது காரணம்பற்றி ஒளிந்தான்? தேவர்களால் எவ்வாறு அறியப்பட்டான் ? அவற்றை உள்ளபடி எனக்குச்சொல்வீராக" என்று வினவ, வைசம் பாயனர் சொல்லலானார். "பிரதாபசாலியான அக்னிபகவான் ப்ருகுவி னுடைய சாபத்தினின்று மிக்கபயமடைந்து பிறகு வன்னிமரத்தின் நடுவிடத்துக்குச் சென்று தெரியாமல் மறைந்துவிட்டான். அப்பொ ழுது, அக்னி நஷ்டமாய்ப்போனவுடன் இந்திரனுடன்கூடினதேவர்க ளனைவர்களும் மிக்கதுன்பமுற்றவர்களாகிக் காணமற்போன அக்னி யைத்தேடினார்கள். பிறகு, அக்னிதீர்த்தத்தை அடைந்து அந்தத் தீர்த் தத்தில் வன்னிமரத்தின் நடுவில் நிலைபெற்று முறைப்படிவஸிக்கின்ற அக்னியைக்கண்டார்கள். புருஷஸ்ரேஷ்டரே! பிருகஸ்பதியை முதன் மையாகக் கொண்டவர்களும் இந்திரனுடன்கூடினவர்களுமான தே வர்ளெல்லாரும் அந்த அக்னியை அடைந்து மகிழ்ச்சியுள்ளவர்களா னார்கள். மஹாபாக்யமுள்ளவரே ! தேவர்கள் மீண்டும் வந்தபடியே போனார்கள். பிரம்மவாதியான பிருகுமஹரிஷியினுடைய சாபத் தால் அந்த அக்னி அவர் சொற்படி ஸர்வபக்ஷகனானான். புத்திசாலி யான அக்னிபகவான் அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம்செய்து பிராம் மணசாபத்தினின்று விடுபட்டான். அரசரே! பிறகு, பிரபுவான பிரம் மதேவர் முற்காலத்தில் தேவர்களுடன் அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து முறைப்படி தேவதைகளுக்கு அவ்வாறாக அன்னங்களைப் படைத்தார். மன்னரே! (பலராமர்) அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம்செய்து

பற்பல தனங்களைக்கொடுத்து எந்தத்தீர்த்தத்தில் பெருந்தவம்புரிந்து பிரபுவான குபேரன் தனத்யக்ஷனுகஇருக்கும் பதவியைப் பெற்றானே அந்தக்கௌபேரதீர்த்தத்தைக் குறித்துச் சென்றார். மனிதர்களுட்சிறந்தவரே! வேந்தரே! அந்தத்தீர்த்தத்தில் வஸித்துக்கொண்டிருக்கும்பொழுதே அந்த ஐலபிலனைத் தனங்களும் நிதிகளும் வந்து அடைந்தன. கலப்பையை ஆயுதமாகக்கொண்ட பலராமர் அந்தத்தீர்த்தத்தை அடைந்து ஸ்நானம்செய்து முறைப்படி ப்ராம் மணர்களுக்குத் தனத்தைக் கொடுத்தார். அவ்விடத்தில் அந்த ஸ்தானமானது குபேரனைச் சேர்ந்த உத்தமமான பூந்தோட்டத்தில் காணப்படுகிறது. தோள்வலிமைமிக்கவரே! முற்காலத்தில் மஹாத்மாவும் யக்ஷராஜனுமான குபேரன் எந்தத்தீர்த்தத்தில் பெரும்தவம் செய்தானே, மிகுதியான வரங்களையும் பெற்றானே, தனதிபதியான அவன் எந்தத்தீர்த்தத்தில் தனதிபத்யத்தையும் அளவுகடந்த பராக்ரமமுள்ள ருத்ரரோடு நட்பையும் தேவத்தன்மையையும் லோகபாலனுயிருக்கும் நிலைமையையும் நளகூபரனென்கிற புத்திரனையும் விரைவாக அடைந்தானே, எந்தத்தீர்த்தத்தில் அந்தக் குபேரனுக்கு ஹம்ஸங்களுடன்கூடினதும் மனோவேகம்போன்ற வேகமுள்ளதும் தேவ ஸம்பந்தம்பெற்றதுமான சிறந்த புஷ்பகவிமானமும் ராக்ஷஸர்களுக்குத் தலைவனுயிருக்கும்தன்மையும் கொடுக்கப்பட்டனவோ அந்தத் தீர்த்தத்திலேயே தேவகணங்கள் வந்து குபேரனை அபிஷேகஞ்செய்தன. அரசரே! வெண்ணிறமுள்ள சந்தனத்தைத் தரித்திருக்கின்ற பலராமர், அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம்செய்து கொடுக்கத்தக்க மிகுதியான வஸ்துக்களையும் கொடுத்து எல்லாப்பிராணிகளாலும் அடையப்பட்டதும் எல்லா ருதுக்களுடனும்சேர்ந்த வனங்களுடன்கூடியதும் எப்பொழுதும் புஷ்பங்களும் பழங்களும் நிரம்பியதும் மங்களகரமாயிருப்பதுமான பதரபாசனமென்கிற உத்தமதீர்த்தத்தை விரைவுடன் அடைந்தார்.

---

## நாற்பத்தோன்பதாவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



(பலராமர் பதரபாசனதீர்த்தத்திற்குப் போனதும், ஸ்ருதாவதி அருந்ததி இவர்களுடைய மகிமையும்.)

பிரபுவே! எந்தத்தீர்த்தத்தில் புவியில் ரூபத்தினால் ஒப்பில்லாதவளான சுருதாவதி யென்கிற பரத்வாஜருடையபெண் கன்னிகையாயிருந்துகொண்டு விரதத்தை மேற்கொண்டவளாகிப் பிரம்மநிஷ்டையில் நிலைபெற்றிருந்தாளோ தபஸ்விகளாலும் ஸித்தர்களாலும் அடையப்பட்டிருந்த அந்தப் பதரபாசனமென்கிற உத்தமதீர்த்தத்தைப் பலராமர் அடைந்தார். அந்தப்பெண், 'எனக்குத் தேவராஜன் பர்த்தாவாகவேண்டும்' என்று நிச்சயித்துப் பலநியமங்களோடு அதிக உக்ரமாகத்தவம்புரிந்தாள். குருவம்சத்திலுதித்தவர்களுள் சிறந்தவரே! ஸ்திரீகளால் எவ்விதத்தினாலும் அனுஷ்டிக்க முடியாதவையும் பலபலவிதமானவையும் கடுமையாயுள்ளவையுமான நியமங்களை அனுஷ்டிக்கின்ற அந்த ஸ்ருதாவதிக்குப் பல ஆண்டுகள்சென்றன. பிரஜைகளுக்கு நாதரே! தேவர்களுக்கு அதிபதியும் பிரபுவும் பாகனென்கிற அஸுரனைக்கொன்றவனுமான இந்திரன் அவளுடைய அந்த ஒழுக்கத்தினாலும் தவத்தினாலும் சிறந்த பக்தியினாலும் மகிழ்ச்சியடைந்து மஹாத்மாவும் பிரம்மரிஷியுமான வஸிஷ்டருடைய ரூபத்தை எடுத்துக்கொண்டு அவளுடைய ஆஸ்ரமத்துக்கு வந்தான் பாரதரே! அந்தஸ்ருதாவதி உக்கிரமானதவத்தையுடையவரும் தவம்புரிபவர்களுள் சிறந்தவருமான அந்த வஸிஷ்டரைக்கண்டு முனிகளால் கண்டறியப்பட்ட ஆசாரங்களால் பூஜித்தாள். நியமங்களை அறிந்தவளும் மங்களகரியும் இன்சொற் சொல்லுபவளுமான அந்தப்பெண், 'பகவானே! ரிஷிகளுள் சிறந்தவரே! பிரபுவே! என்ன கட்டளையிடுகிறீர்? நல்ல விரதமுள்ளவரே! இப்பொழுது என் சக்திக்குத்தக்கபடி எல்லாவற்றையும் உமக்குக் கொடுப்பேன். இந்திரனிடத்திலுள்ள பக்தியினால் என்னுடைய கையை உமக்கு எவ்விதத்தினாலும் கொடுக்கமாட்டேன். தபோதனரே! மூவுலகங்களுக்கும் ஈசுவரனை இந்திரன் என்னால் விரதங்களாலும் நியமங்களாலும் தவத்தினாலும் ஸந்தோஷப்படுத்தத்தக்கவன்' என்றாள். பாரதரே! இவ்வண்ணம் உரைக்கக் கேட்டவனும் மகிமையுடையவனும் தேவனுமான மஹேந்திரன் அவளைப்பார்த்துச் சிரிக்

இன்றவன்போலவும் நியமத்தைஅறிந்து ஸமாதானம் செய்கின்றவன் போலவும், 'நல்ல விரதத்தையுடையவளே! உக்கிரமான தவத்தைச் செய்கிறாய். என்னால் அறியப்பட்டாய். கல்யாணி! சிறந்தமுகமுள்ளவளே! உன் உள்ளத்திலுள்ள இந்த முயற்சியானது எதற்காகவோ, அஃதனைத்தும் அவ்வாறே நேரும். தவத்தினால் எல்லாம் அடையப் படுகின்றன. (உன் விருப்பமும்) அப்படியே ஆகும். மங்களகரமான முகமுள்ளவளே! தேவர்களுடைய திவ்ய ஸ்தானங்கள் எவைகளுண்டோ அவைகளும் தவத்தினால் அடையத்தக்கன. பெரிய ஸுகமானது தவத்தை மூலமாகக்கொண்டது. இவ்விதம் நிச்சயத்தைச் செய்து கோரமான தவத்தைச்செய்து மனிதர்கள் சரீரத்தைவிட்டுத் தேவத்தன்மையை அடைகிறார்கள். கல்யாணி! என்னுடைய ஒரு வார்த்தையைக் கேள். மங்களகரி! நல்ல விரதத்தையுடையவளே! இந்த ஐந்து இலந்தைப்பழங்களையும் பக்குவஞ்செய்' என்று சொல்லி விட்டு மகிமையுடையவனும் பலனென்கிற அஸுரனைக் கொன்றவனுமான மஹேந்திரன் மங்களகரியான அந்தப்பெண்ணிடம் சொல்லிக்கொண்டு சென்றான். அவன், பிறகு, ஜபிக்கத்தக்க மந்திரத்தை ஜபித்தான். அதினால் அந்தஆஸ்ரமத்திற்கு ஸமீபத்தில் உத்தமமான தீர்த்தம் உண்டாயிற்று. மஹாராஜரே! அந்த இந்திரன் எந்த இடத்தில் ஜபிக்கத்தக்க மந்திரத்தை ஜபித்தானோ அந்த இடத்தில் இந்திர தீர்த்தமென்று மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்ற அப்படிப்பட்ட தீர்த்தம் உண்டாயிற்று. பாகனென்கிற அஸுரனைக் கொன்றவனும் தேவர்களுக்கெல்லாம் அரசனுமான அந்த இந்திரபகவான் அதை அறிவதின்பொருட்டு இலந்தைப்பழங்களைப் பக்குவமாகாமலிருக்கும் படி செய்தான். வேந்தரே! ராஜஸ்ரேஷ்டரே! பிறகு, பெரிய விரதமுள்ள அந்தப்பெண் மிக்க தவமுள்ளவளாகவும் மௌனவ்ரதமுள்ளவளாகவும் ஸ்ரமமில்லாதவளாகவும், பக்குவம்செய்வதிலேயே நோக்கமுள்ளவளாகவும் சுத்தவஸ்திரத்தைத் தரித்தவளாகவும் அந்த இலந்தைப் பழங்களை அக்னியின்மீது வைத்துப் பக்குவம்செய்ய ஆரம்பித்தாள். புருஷஸ்ரேஷ்டரே! பக்குவம்செய்வதிலேயே அந்தப் பெண்ணுக்கு நெடுநேரம் சென்றுவிட்டது. அந்தப் பழங்கள் பக்குவமாக்கப்படவில்லை. பகலும் முடிந்துவிட்டது. அவளிடத்திலுள்ள விறகுகளின்குவியல் (முழுதும்) நெருப்பினால் எரிக்கப்பட்டது. அக்னி விறகில்லாமலிருக்கிறதைப் பார்த்து அந்தப் பெண், பிறகு, தன்சரீரத்தை எரிக்கஆரம்பித்தாள். குற்றமற்றவரே! அழகிய தோற்றமுள்ள அந்தப் பெண், முதலில் இரண்டுகால்களையும்

நெருப்பில் வைத்து அவைகள் எரிய எரிய மறுபடியும் தள்ளிக்கொடுத்தாள். சிறந்தவளும் தாமரைமலரின் இதழ்போன்ற கண்ணுடையவளுமான அந்தப்பெண் காலெரிக்கப்படும் தருணத்திலும் மகரிஷிக்குப் பிரியத்தைச் செய்யவேண்டுமென்கிற எண்ணத்தினலே துக்கத்தை ஆலோசிக்கவில்லே. அவளுக்கு மனவருத்தம் உண்டாகவில்லே. முகத்திலும் வேறுபாடு உண்டாகவேயில்லே. சரீரத்தை அக்னியினல் ஜ்வலிக்கும்படி செய்துகொண்டு தண்ணீரினடுவில் நிற்பதுபோல நின்ருள். பாரதரே! அவளுக்கு அந்த இலந்தைப் பழத்தைச் சமைப்பதில் முயற்சி நிவிர்த்தியடையவில்லே. எவ்விதத்தினுலும் இலந்தைப்பழங்களேப் பக்குவம் செய்யவேவேண்டுமென்று அந்தக்கன்னிகை நிச்சயம்செய்துகொண்டாள். பாரதரே! மங்களகரியான அந்தப்பெண் மஹரிஷியினுடைய அந்தவசனத்தை மனத்தில் வைத்துக்கொண்டே இலந்தைப்பழத்தைச் சமைத்துக்கொண்டிருந்தாள். அவைகளோ பக்குவம் செய்யப்படவில்லே. அக்னிபகவான் அவளுடைய இரண்டு கால்களேயும் தானுக எரித்தான். அப்பொழுது அவளுக்குச் சிறிதும் மனவருத்தமுண்டாகவில்லே. பிறகு, த்ரிலோகநாதனை இந்திரன் அவளுடைய அச்செய்கையைக் கண்டு, பிறகு, அந்தக் கன்னிகைக்குத் தனது ரூபத்தைக் காண்பித்தான். தேவர்களுள்சிறந்தவனுன இந்திரன் அதிகதிடமான விரதத்தையுடைய அந்தக் கன்னிகையைப்பார்த்து, 'கல்யாணி! உன்னுடைய பக்தியினுலும் தவத்தினுலும் நியமத்தினுலும் நான் பிரீதியுள்ளவனுகிறேன். மங்களகரி! ஆதலால், உனக்கு எது இஷ்டமோ அது உண்டாகப்போகிறது. மஹாபாக்கியவதி! தேகத்தைவிட்டு ஸ்வர்க்கத்தில் என் பக்கத்தில் வஸிக்கப்போகிருய். நல்லபுருவமுள்ளவளே! உன்னுடைய இந்த உத்தம தீர்த்தமானது எல்லாப் பாவங்களேயும் போக்கக்கூடியதாகவும் பதரபாசனமென்று பெயர்பெற்றதாகவும் உலகத்தில் ஸ்திரமாக இருக்கப்போகிறது. பிரம்மரிஷிகளால் நான்கு பக்கங்களிலும் ஸ்நானஞ்செய்யப்பட்டதாகி மூவுலகங்களிலும்பிரஸித்தி அடையப்போகிறது. மகா பாக்கியமுள்ளவளே! மங்களகரமாகவும் தோஷமற்றதாகவுமிருக்கின்ற இந்த உத்தமதீர்த்தத்தில் அருந்ததியைவிட்டுவிட்டு ஸப்தரிஷிகள் ஹிமயபர்வதத்துக்குச் சென்ருர்கள். பிறகு, மகாபாக்யமுள்ளவர்களான அந்த ரிஷிகள் அவ்விடம் சென்று மிக்க கடுமையான விரதத்துடன் வஸித்துவந்தார்கள். அவர்கள் ஆகாரத்துக்காகப் பழங்களேயும் கிழங்குகளேயும் கொண்டுவரப் போனர்களாம். அவர்கள் ஜீவனத்தை உத்தேசித்து அந்த ஹிமா

சலத்தைச்சார்ந்த வனத்தில் வஸித்துவருகையில் பன்னிரண்டு வருஷகாலம் தொடர்ச்சியாக மழையில்லாமை வந்துவிட்டது. அந்தத் தபஸ்விகள் அந்த இடத்தில் ஆஶ்ரமத்தைக்கட்டிக்கொண்டு வஸித்தார்கள். அப்போது கல்யாணியான அருந்ததியும் தவத்தில் நிலைபெற்றவளாக இருந்தாள். கடுமையான நியமத்தில் நிலைபெற்றவளான அருந்ததியைக்கண்டு, பிறகு, முக்கண்ணர் மிக்கபிரீதியுள்ளவராகி அப்பொழுது வரத்தைக்கொடுக்க வந்தார். பிறகு, மகாகீர்த்திசாலியும் தேவருமான மஹாதேவர் பிராம்மணரூபத்தைஎடுத்து அவளிடம்வந்து, 'கல்யாணி! நான் பிக்ஷையை விரும்புகிறேன்' என்று கூறினர். பிறகு, அழகிய காட்சியையுடையவளான அந்தப்பெண் அந்தப்பிராம்மணரைப் பார்த்து, 'பிராம்மணரே! அன்னஸமூகம் செலவாகிவிட்டது. இப்பொழுது இலந்தைப் பழங்களைச் சாப்பிடும்' என்று மறுமொழி கூறினள். பிறகு, மஹாதேவர், 'நல்லவிரதத்தையுடையவளே! இந்தப் பழங்களைப் பக்குவம்செய்' என்று சொன்னர். புகழுள்ளவளான அந்த அருந்ததி, இவ்வாறு சொல்லியதைக்கேட்டு 'பிராம்மணருக்குப் பிரியத்தைச் செய்யவேண்டும்' என்கிற எண்ணத்தினல் அந்த இலந்தைப் பழங்களை ஜ்வலிக்கின்ற அக்னியின் மீது வைத்துப் பசனம்செய்தாள். அவள் அப்பொழுது மனத்திற்கு இன்பமாயும் திவ்யமாயுமிருக்கின்ற புண்யகதைகளைக் கேட்டாள். பன்னிரண்டு வருஷகாலமாகத் தொடர்ந்துவந்த கோரமான அந்த மழையின்மையானது போய்விட்டது. ஆகாரஞ்செய்துகொள்ளாமல் பசனஞ்செய்பவளும் நல்லகதைகளைக் கேட்டுக்கொண்டிருப்பவளுமான அந்தஅருந்ததிக்கு மிக்கபயங்கரமான அந்தக்காலமானது ஒரு பகலுக்கு ஸமமாகச்சென்றது. பிறகு, ரிஷிகள் பழங்களை எடுத்துக்கொண்டு பர்வதத்தினின்று வந்தார்கள். பிறகு, அந்தப்பகவான் பிரீதியுள்ளவராகி அருந்ததியைப்பார்த்து, 'தர்மங்களை அறிந்தவளே! முன்போல் இந்தரிஷிகளைப் பின்பற்று. தர்மங்களை அறிந்தவளே! தவத்தினாலும் நியமத்தினாலும் உன் விஷயத்தில்பிரீதியுள்ளவனாகிறேன்' என்று சொன்னர். பிறகு,அவர் தம்முடையரூபத்தைக் காண்பித்தார். பிறகு, அந்தரிஷிகளுக்கு அப்பொழுது அவளுடைய பெரிதான சரித்திரத்தைச்சொன்னர். பிராம்மணர்களே! ஹிமாசலத்தின்மேல் உங்களால் எந்தத் தவம்செய்யப்பட்டதோ அந்தத் தவமானது இவளால் செய்யப்பட்ட தவத்துக்கு ஈடாகாதென்பது என்னுடைய எண்ணம். இந்தத் தவப்பெண்ணினல் எவ்விதத்தினாலுஞ் செய்யமுடியாத தவம் செய்யப்பட்டது. ஆகாரமில்லாமல் சமைக்கின்ற இவளால் பன்னிர

ண்டு வருஷங்கள் கழிக்கப்பட்டன' என்றார். பிறகு, பகவான் அந்த அருந்ததியைப்பார்த்து, 'கல்யாணி! நீ உள்ளத்தில் விரும்பியிருக்கிற வரத்தைப் பெற்றுக்கொள்' என்று சொன்னார். விசாலமான சிவந்த கண்களையுடையவளான அந்த அருந்ததி ஸப்தரிஷிஸபையில் தேவரைப்பார்த்து, 'பகவான் என்விஷயத்தில் பிரீதியுள்ளவராகியிருந்தால் இது அத்புததீர்த்தமாகவேண்டும். இந்தத்தீர்த்தமானது ஸித்தர்களுக்கும் தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் பிரீதிவிஷயமாகவும் பதரபாசனமென்கிற பெயருடன்கூடியதாகவும் இருக்கவேண்டும். தேவதேவேசரே! அவ்வாறே இந்தத்தீர்த்தத்தில் மூன்று இரவு வஸிப்பவன் சுசியாகிப் பன்னிரண்டுவர்ஷகாலம் உபவாஸமிருந்தவன் எந்தப்பலனை அடைவனோ அதை அடையக்கடவான்' என்று வேண்டினாள். தேவரான ருத்திரர் புகழ்பெற்றவளான அந்த அருந்ததியைப்பார்த்து, 'அவ்வாறே ஆகட்டும்' என்று மறுமொழிகூறினார். பிறகு, ஸப்தரிஷிகளால் ஸ்தோத்திரஞ் செய்யப்பட்டவரான மஹேசுவரர் அப்பொழுது தம் உலகத்தைக்குறித்துச் சென்றார். ரிஷிகள் களைப்படையாதவளும் நிறம் மாறாமலிருப்பவளும் பசிதாகமில்லாதவளுமான அந்த அருந்ததியைக்கண்டு ஆச்சர்யத்தை அடைந்தார்கள்.

மஹாபாக்யமுள்ளவளே! என்னிமித்தமாகக் கடுமையான விரதத்தைஅனுஷ்டித்தவளே!உன்னால் எவ்வாறு ஸித்தியடையப்பட்டதோ அவ்வாறாகவே பரிசுத்தமுள்ள அருந்ததியினால் உயர்ந்த ஸித்தியடையப்பட்டது. கல்யாணி! இந்தவிரதத்தில் உன்னால் ஒரு விசேஷம் செய்யப்பட்டதன்றோ? அப்படிப்பட்ட விரதத்தினால் மிக்கஸந்தோஷமடைந்தவனான நான் இப்பொழுது இந்தவரனைக் கொடுக்கிறேன். கல்யாணி! சிறந்தவளே! உனக்கு விசேஷமான வரத்தைக் கொடுக்கிறேன். கல்யாணி! மஹாத்மாவான ருத்திரரால் அந்த அருந்ததிக்கு எந்தவரம் கொடுக்கப்பட்டதோ அந்தவரத்தை உனக்கு நான் பிரபாவத்தினாலும் தேஜஸினாலும் கொடுக்கிறேன். இந்தஸமயத்தில் மீண்டும் உத்தமமான ஒருவரத்தை, விதியை அனுஸரித்துச் சொல்லப்போகிறேன். எவன் மிக்க நியமமுள்ளவனாக இந்தத்தீர்த்தத்தில் ஓர் இரவு வாஸம்செய்து ஸ்நானம்செய்வானோ அவன் தேகத்தை விட்டபிறகு எவ்விதத்தினாலும் அடையமுடியாத உலகங்களை அடைவான்' என்று சொன்னான். பிறகு, மகிமையுள்ளவனும் தேவனும் ஆயிரம் கண்களையுடையவனும் பிரதாபசாலியுமானஇந்திரன் புண்யவதியான சுருதாவதியைப் பார்த்து இவ்வண்ணம் உரைத்துவிட்டு மீண்டும் ஸ்வர்க்கம்சென்றான். அரசரே! பரதஸ்ரேஷ்டரே! வஜ்ரதரனை

இந்திரன் போனவுடன், புண்யகந்தமுள்ள திவ்யபுஷ்பங்களுடைய வர்ஷமானது அங்கே வீழ்ந்தது. மன்னரே! அந்தஸமயத்தில் பேரொலியுடன் தேவதுந்துபிகளும் முழங்கின. பரிசுத்தமானதும் புண்ய கந்தத்துடன் கூடியதுமான காற்றும் வீசியது. தர்மந்தவறுதவரே! மங்களகரியான சுருதாவதியானவள் தேகத்தைவிட்டு இந்திரனுக்குப் பார்யையாக இருத்தலைப்பெற்றாள். உக்கிரமான தவத்தினால் அவனை அடைந்து அவனோடு ரமித்தாள்" என்றார்.

ஜனமேஜயர், "பகவானே! எவள் அவளுக்குத் தாய்? மங்களகரியான அந்தப்பெண் எங்கே வளர்ந்தாள்? பிராம்மணரே! யான் கேட்க விரும்புகிறேன். எனக்கு அதிகமான குதூஹலமிருக்கிறதன்றோ?" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார். "எதிரில்வருகின்றவளும் விசாலமான கண்களையுடையவளுமான க்ருதாசிஎன்கிற அப்ஸரஸ்திரீயைக் கண்டு மஹாத்மாவும் பிரம்மரிஷியுமானபரத்வாஜருடைய ரேதஸானது வெளியில் வந்துவிட்டது. ஜபம்செய்கிறவர்களுள் சிறந்தவரான அந்தப்பரத்வாஜர், அந்தவீர்யத்தைக் கையினால் ஏந்தினார். அது (கையினின்றும்) அப்பொழுது ஓர் இலையில் விழுந்தது. அதில் அந்தப்பெண் உண்டானாள். தவத்தைத் தனமாகக்கொண்டவரும் மஹரிஷியும் தர்மாத்மாவுமான அந்தப்பரத்வாஜர் அந்தப் பெண்ணுக்கு ஜாதகர்மமுதலான எல்லாக்காரியத்தையும் செய்து தேவரிஷிகணங்களின்ஸபையில் சுருதாவதிஎன்று அந்தப்பெண்ணுக்குப் பெயரையும்இட்டுத் தமது ஆஶ்ரமத்தில் அவளை வைத்துவிட்டு இமயமலையிலுள்ள வனத்தைஅடைந்தார். மகானுபாவரும்விருஷ்ணிகளுள் சிறந்தவருமான பலராமர் நன்றாக அடக்கப்பட்ட மனத்தையுடையவராகி அந்தத்தீர்த்தத்திலும் ஸ்நானம்செய்து மகாப்பிராம்மணர்களுக்குத் தனங்களையும்கொடுத்து அப்பொழுது இந்திரதீர்த்தஞ் சென்றார்.

---

## ஐம்பதாவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



**(பலராமர் இந்திரதீர்த்தமுதலான தீர்த்தங்களுக்குச் சென்றதும், அவற்றின் மகிமையும்.)**

யாதவர்களுள் சிறந்தவரும் பலசாலியுமான பலராமர், பிறகு, இந்திரதீர்த்தத்தை அடைந்து முறைப்படி ஸ்நானம்செய்து பிராம்மணர்களுக்குத் தனங்களையும் ரத்னங்களையும் கொடுத்தார். அந்த

இடத்தில் தேவராஜன் அநேக யாகங்களைச்செய்தான். தேவராஜன் பிருகஸ்பதிக்கு மிகுதியானதனத்தையும்கொடுத்தான். அந்தஇந்திரன் அந்த இடத்தில் தடையற்றவைகளும் புஷ்டியுள்ளவைகளும் பற்பல தக்ஷிணைகளுடன்கூடியவைகளுமான எல்லாயாகங்களையும் சாஸ்திரத்தில் சொல்லியபடி வேதங்களில் கரைகண்டவர்களான பிராம்மணர்களால் செய்தான். பரதஸ்ரேஷ்டரே! மிக்ககாந்தியுடையவனான இந்திரன் அந்தயாகங்களை முறைப்படி நூறுதடவை நிறைவேற்றினான்; அதனால், சதக்ரது எனப் பிரஸித்திபெற்றான். மங்களகரமாகவும் புண்யமாகவும் சாஸ்வதமாகவுமிருக்கிற அந்தத்தீர்த்தமானது அந்த இந்திரனுடையபெயரால் இந்திரதீர்த்தமெனப் பிரஸித்திபெற்றதும் எல்லாப்பாவங்களினின்றும் விடுவிக்கின்றதுமாயிற்று. உலக்கையை ஆயுதமாகக்கொண்டபலராமர் அந்தத்தீர்த்தத்திலும்விதிப்படிஸ்நானஞ்செய்து பானங்களாலும் வஸ்திரங்களாலும் போஜனங்களாலும் பிராம்மணர்களைப் பூஜித்து அவ்விடத்தினின்று மங்களகரமானராமதீர்த்தமென்கிற உத்தமதீர்த்தத்தை அடைந்தார். ஜனமேஜயரே! எந்த இடத்தில் மகாபாக்கியசாலியும் மிக்க தவமுடையவருமான பரசுராமர் பூமியில் அடிக்கடி க்ஷத்திரியபுங்கவர்களை அழித்து ரிஷிஸ்ரேஷ்டரும் உபாத்தியாயருமான காஸ்யபரை முன்னிட்டு வாஜபேயத்தினாலும் நூறுஅஸ்வமேதங்களாலும் தேவர்களைப் பூஜித்து ஸமுத்திரம்சூழ்ந்த பூமியைத் தக்ஷிணையாகக்கொடுத்தாரோ அந்த இடத்தில் கலப்பையை ஆயுதமாகக்கொண்ட பலராமர், பிராம்மணர்களுக்குத்தனத்தைக்கொடுத்து முறைப்படி ஸ்நானஞ்செய்து, பிராம்மணர்களைப் பூஜித்துப் புண்யதீர்த்தத்துடன்கூடின மங்களகரமான தேசத்தில் தனத்தைக்கொடுத்து ரிஷிகளையும் அபிவாதனம்செய்தார். பிறகு, எந்தஇடத்தில் ஜலாதிதேவதையான வருணன் முற்காலத்தில் ராஜஸூயத்தைச் செய்வதற்காக ரிஷிகளை வரவழைத்தானோ, மஹாபாக்கியமுள்ளவனும் வெண்ணிறமுள்ளவனும் சத்துருவீரர்களை நாசஞ்செய்பவனுமான அவன் எந்த இடத்தில் நடந்த யுத்தத்தில் தைத்யர்களையும் மனுஷ்யர்களையும் தானவர்களையும் கந்தர்வர்களையும் அரக்கர்களையும் ஜயித்துக் கீர்த்திபெற்றானோ அந்த யமுனாதீர்த்தத்தை அடைந்தார். அந்த உத்தமமான யாகமானது நடந்து நிறைவேறினவுடன், தேவர்களுக்கும் தானவர்களுக்கும் த்ரிலோகபயங்கரமான யுத்தம் உண்டாயிற்று. ஜனமேஜயரே! யாகங்களுள் சிறந்ததான ராஜஸூயமானது முடிந்தவுடனே க்ஷத்திரியர்களுக்கு மஹாகோரமான நாசம் நேர்ந்தது. ராஜஸ்ரேஷ்டரே!

கலப்பையை ஆயுதமாகக்கொண்டவரும் வனமாலையை அணிந் தவரும் தாமரைமலர்போன்ற கண்களையுடையவருமான அந்த மாதவர் அப்பொழுது மங்களகரமான அந்த உத்தம தீர்த்தத் தில் ஸ்நானஞ்செய்து, பிராம்மணர்களுக்குத் தனத்தைக்கொடுத்து, பிறகு ஸந்தோஷமுள்ளவராகவும் பிராம்மணர்களால் ஸ்தோத்திரம் செய்யப்பட்டவராகவும் அந்தத்தீர்த்தத்தினின்று ஸூர்யபகவான் எந்த இடத்தில் யாகம்செய்து ஜ்யோதிஸையும் ஜ்யோதிகளுக்கு அதி பதியாயிருக்கும் தன்மையையும் பிரபாவத்தையும் பெற்றானோ,அந்த ஆதித்யதீர்த்தத்தை அடைந்தார். அரசரே! அந்தநதியின் கரை யில் இந்திரனுடன் கூடின எல்லாத்தேவர்களும் மருத்துக்களுடன் கூடின விஸ்வேதேவர்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் கிருஷ்ணத்வைபாயனரும் சுகரும் மதுஸூதனரான கோவிந்தரும் யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் பிசாசங்களும் ஸித்திபெற்றனர்.மங்கள கரமாகவும் பாவனமாகவுமிருக்கின்ற அந்தஸரஸ்வதிநதியின் தீர்த்தத் தில் இவர்களும் இன்னும் மற்ற அனேகர்களும் ஆயிரமாயிரமாக யோகத்தினால் ஸித்திபெற்றார்கள். பரதஸ்ரேஷ்டரே! முற்காலத்தில் விஷ்ணுவானவர் மது கைடபன் என்கிற இரண்டு அஸுரர்களையும் கொன்று அந்த உத்தமமான தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து யோகத் தையும் உத்தமமான ஸித்தியையும் பெற்றார். பாரதரே! தர்மாத் வான த்வைபாயனரும் அந்தத்தீர்த்தத்திலேயே ஸ்நானஞ்செய்து உத்தமமான யோகத்தையும் உத்தமமான ஸித்தியையும் பெற்றார். மிக்க தவமுடையவரான அஸிதரானதேவலரும் அதேதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து உத்தமமான யோகத்தை அனுஷ்டித்து யோக ஸித்தியைப் பெற்றார்.

---

## ஐம்பத்தோராவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



(தேவலர் ஜைகீஷவ்யர் இவர்களின் சரித்திரமும் பலராமர் ஸோம தீர்த்தத்திற்குச் சென்றதும்.)

தர்மாத்மாவும்தவத்தையேதனமாகக்கொண்டவருமான அஸித ரானதேவலரும் முற்காலத்தில் கிருஹஸ்ததர்மத்தை அடைந்து அந் தத்தீர்த்தத்திலேயே வஸித்துவந்தார். மகாராஜரே! தேவலரிஷி, தர்ம த்திலேயேநித்யம்நிலைபெற்றவரும்சுத்தரும்பொறிகளை அடக்கினவரும் யஜ்ஞம் செய்தலையே ஸ்வபாவமாகக் கொண்டவரும் மிக்கதவமுள்ள

வரும்எல்லாஜந்துக்களிடமும்செய்கையினாலும்உள்ளத்தினாலும் வாக்கினாலும்ஸமமாயிருப்பவரும் கோபமில்லாதவரும் புகழ்ச்சியையும்இகழ்ச்சியையும் ஸமமாக எண்ணுகின்றவரும் விருப்புவெறுப்புக்களில் ஒத்திருப்பவரும் யமன்போல ஸமமாகப்பார்ப்பவரும் பொன்னிலும் மண்ணிலும் ஸமதிருஷ்டியுள்ளவரும் மிக்கஞானமுள்ளவரும்பிரம்மசரியத்தில் எப்பொழுதும் பற்றுள்ளவரும் எப்பொழுதும் தர்மத்தையே பிரதானமாகவுடையவருமாயிருந்துகொண்டு தேவர்களையும் பிராம்மணர்களையும் அதிதிகளையும் நித்யம் பூஜித்துவந்தார். மஹாபாக்கிய முள்ளவரே! அரசரே! பிறகு, சிறந்தபுத்தியுள்ளவரும் மனனம் செய்பவரும் மிக்ககாந்தியுள்ளவருமான ஜைகீஷவ்யரென்கிற பிக்ஷுகரும் அவ்விடம்வந்து யோகத்தை அடைந்து அந்தத்தீர்த்தத்தில் நியமத்துடனிருந்துகொண்டு தேவலருடைய ஆஸ்ரமத்தில்வஸித்து வந்தார். மஹாராஜரே! யோகத்தில் எப்பொழுதும் நிலைபெற்றவரும் மஹாதபஸ்வியுமான ஜைகீஷவ்யர் ஸித்தி அடைந்தார். அவ்விடத்தில் வஸிக்கின்ற அந்த ஜைகீஷவ்யமஹாமுனிவரைத் தேவலர் பார்த்துக்கொண்டே (அவரைஉபசரிப்பதாகிய) தர்மத்தைச் செய்யாமலிருந்தார். மஹாராஜரே! அவ்விருவருக்கும் இவ்விதமாகவே வெகுகாலம்சென்றுவிட்டது. ஜனமேஜயரே! புத்திமானும்ஸந்யாஸியுமான அந்தஜைகீஷவ்யமுனிவர், பிறகு, ஆகாரகாலத்தில்தனித்திருக்கின்ற அந்தத்தேவலரைக் கண்டார். தர்மங்களையறிந்தவரான அந்த ஜைகீஷவ்யர் பிக்ஷாகாலத்தில் தேவலரருகில்வந்தார். அந்தத்தேவலர் ஸந்யாஸிவடிவத்துடன் வந்திருக்கின்ற அந்தமஹாமுனிவரைக் கண்டு அதிக கௌரவத்தையும் அவ்வாறே அதிகப் பிரீதியையும் பாராட்டினார். பாரதரே! தேவலரோ மனத்தைஅடக்கினவராகி ரிஷிகளால் சொல்லப்பட்டவிதிப்படியும் தம்சக்திக்கேற்றபடியும் அனேக வருஷகாலம் பூஜித்தார். அரசரே! ஒருஸமயத்தில் மஹாகாந்தியுள்ளவரான ஜைகீஷவ்யமுனிவரைக்கண்டு, 'பூஜிக்கின்ற எனக்கு அனேக வருஷங்கள் சென்றுவிட்டன. இந்த ஸந்யாஸியானவர் ஆலஸ்யமுள்ளவராயிருந்துகொண்டு ஒன்றையும் பேசவில்லை' என்று மஹாத்மாவான அந்தத்தேவலருக்கு மிக்கபெரியகவலை உண்டாயிற்று. ஸ்ரீமானான அந்தத்தேவலர் இவ்வாறுஎண்ணிக்கொண்டே கலசத்தை எடுத்துக்கொண்டு ஆகாசமார்க்கமாகப் பெருங்கடலைக்குறித்துச் சென்றார். பாரதரே! தர்மாத்மாவான அந்தத்தேவலர் நதிகளுக்குப் பதியாகவிருக்கிற சமுத்திரத்தைக்குறித்துப்போனவுடன், அவ்விடத்தில் முந்தியேவந்திருக்கின்ற ஜைகீஷவ்யரைக்கண்டார். பிறகு,

அமிதமான ஒளிபொருந்திய அந்தத் தேவலமகரிஷி ஆச்சர்யத்துடன் 'எவ்வாறு இந்தத்துறவியானவர் வந்து ஸமுத்திரத்தில் ஸ்நானமும் செய்தார்!' என்று சிந்திக்கலானார். அந்த அஸிதமஹரிஷி அப்பொழுது இவ்வாறு சிந்தித்துக்கொண்டு ஸமுத்திரத்தில் விதிப்படி ஸ்நானஞ்செய்து சுசியாயிருந்துகொண்டு ஜபிக்கத்தக்கதை ஜபித்தார். ஜனமேஜயரே! ஸ்ரீமானான தேவலமஹரிஷி மந்திரஜபங்களைச் செய்து நித்தியக்கடன்களை முடித்துக்கொண்டு ஜலத்தினால் நிறைந்தகடத்தை எடுத்துக்கொண்டு ஆஸ்ரமத்தை அடைந்தார். பிறகு, அந்தத்தேவலமுனிவர், தம் ஆஸ்ரமத்தில் பிரவேசிக்கும் பொழுதே அந்த ஆஸ்ரமத்தில் வீற்றிருக்கின்ற ஜைகீஷவ்யரைக் கண்டார். ஜைகீஷவ்யர் இவரைப்பார்த்து எவ்விதத்தாலும் ஸம்பாஷிக்கவேயில்லை. மிக்கதவத்தையுடைய அந்த ஜைகீஷவ்யர் ஆஸ்ரமத்தில் கட்டைபோலிருந்துகொண்டு வாஸஞ்செய்தார். ஸமுத்திர தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தவரும் ஸமுத்திரம்போன்றவரும் முந்தியே ஆஸ்ரமத்தில் பிரவேசித்தவருமான அந்த ஜைகீஷவ்யரை அந்தத் தேவலர் கண்டார். அரசரே! சிறந்த புத்தியுள்ளவரான அஸிதரென்கிற தேவலர், ஜைகீஷவ்யருடைய யோகத்தினாலுண்டான தவத்தின் மகிமையைக்கண்டு சிந்திக்கலானார். ராஜேந்திரரே! அப்பொழுது முனிகளுள் சிறந்தவரான அந்தத்தேவலர், 'இவர் என்னால் ஸமுத்திரத்திலும் ஆஸ்ரமத்திலும் எவ்வாறு காணப்பட்டார்?' என்று ஆலோசித்தார். மன்னரே! மந்திரங்களில் கரை கடந்தவரான அந்தத் தேவலமுனிவர் இவ்வாறு ஆலோசித்துக்கொண்டே அப்பொழுது ஸந்யாஸியான ஜைகீஷவ்யருடைய மகிமையை அறிவதின்பொருட்டு அந்த ஆஸ்ரமத்தினின்று ஆகாயத்தில் எழுந்து சென்றார். அவர் ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்றவர்களும் மனத்தை அடக்கியவர்களுமான ஸித்தர்களைக் கண்டார்; அந்த ஸித்தர்களால் பூஜிக்கப்படுகின்ற ஜைகீஷவ்யரையும் கண்டார். பிறகு, மிக்க பரபரப்புள்ளவரும் விடாமுயற்சியுள்ளவரும் திடமான விரதத்தையுடையவருமான அந்த அஸிதரென்கிற தேவலர் ஸ்வர்க்கத்தையடைந்திருக்கின்ற ஜைகீஷவ்யரைக்கண்டார். பிறகு, அந்தத்தேவலர் அந்த ஸ்வர்க்கத்தினின்று பித்ருலோகத்தைக் குறித்துச் செல்லுகின்றவரும் பித்ருலோகத்தினின்று யமலோகத்தைக் குறித்துச் செல்லுகின்றவரும் அந்த யமலோகத்தினின்று ஆதித்யலோகத்தைக் குறித்துச் செல்லுகின்றவரும் அந்த ஆதித்ய லோகத்தினின்று எழுந்து சந்திரலோகம் செல்லுகின்றவரும் நாற்பக்கத்திலும்

ஸ்தோத்திரஞ் செய்யப்பட்டவருமான ஜைகீஷவ்யரைக் கண்டார். அவர், ஒரே தேவதையினிடத்தில் நிச்சயஜ்ஞானமுள்ளவர்களாகத் தேவதையைப் பூஜிக்கின்றவர்களுக்குரிய மங்களகரமான லோகங் களைக்குறித்து எழுந்து செல்லுகின்ற அந்தத்துறவியைக் கண்டார். பிறகு, அக்னிஹோத்திரிகளுக்கு உரிய உலகங்களை அடைந்து அவை களினின்றும் மேலே சென்றார். எந்தத்தபோதனர்கள் தர்சபௌர்ண மாஸங்களால் தேவர்களைப் பூஜிக்கின்றார்களோ அவர்களுடைய அவ் வுலகங்களிலும் அந்தப் புத்திமானான ஜைகீஷவ்யர் காணப்பட்டார். (தேவலர்) அவ்வுலகங்களினின்றும் பசுயாகம்செய்கிறவர்களுக்குரிய லோகத்தைக்குறித்துச் செல்லுகின்றவரும் தோஷமற்றவரும் தேவர் களால் பூஜிக்கப்பட்டவருமான ஜைகீஷவ்யரைக் கண்டார். பிறகு, பல விதமான சாதுர்மாஸ்யங்களால் எந்தத்தபோதனர்கள் தேவர்களைப் பூஜிக்கின்றார்களோ அவர்களுடைய ஸ்தானமும் அடையப்பட்டது. அவ்வாறே, அக்னிஷ்டோமயாகஞ் செய்தவர்களுடைய ஸ்தானமும் அடையப்பட்டது. எந்தத்தபோதனர்கள் அக்னிஷ்டோமத்தினால் தேவர்களை ஆராதிக்கின்றார்களோ அவர்களுடைய ஸ்தானத்தையும் ஜைகீஷவ்யர் அடைந்திருப்பதைத் தேவலர் கண்டார். யாகங்களுள் சிறந்த வாஜபேயத்தையும் அவ்வாறே பகுஸுவர்ணகத்தையும் அனுஷ்டிக்கின்ற பேரறிவாளர்களுடைய உலகங்களிலும் (அவரைக்) கண்டார். எவர்கள் ராஜஸூயத்தினாலும் பௌண்டரீகத்தினாலும் தேவர்களை ஆராதிக்கின்றார்களோ அவர்களுடைய உலகங்களிலும் அந்தத்தேவலர் ஜைகீஷவ்யரைக் கண்டார். யாகங்களுள் சிறந்த அஸ்வமேதத்தையும் நரமேதத்தையும் செய்கின்ற நரஶ்ரேஷ்டர் களுடைய உலகங்களிலும் கண்டார். செய்யமுடியாததான ஸர்வ மேதத்தையும் அவ்வாறே ஸௌத்ராமணியையும் எவர்கள் செய் கின்றார்களோ அவர்களுடைய உலகங்களிலும் அந்தத்தேவலர் ஜைகீஷவ்யரைக் கண்டார். அரசரே! துவாதசாகங்களாலும் பற் பல யாகங்களாலும் எவர்கள் தேவதைகளை ஆராதிக்கின்றார்களோ அவர்களுடைய உலகங்களில் அந்தத்தேவலர் ஜைகீஷவ்யரைக் கண் டார். மித்ரன், வருணன் இவர்களுடைய உலகங்களையும் அவ் வாறே ஆதித்யர்களுடைய உலகங்களையும் (அடைந்து) ஸாலோக்கி யம் பெற்றிருக்கின்ற அந்த ஜைகீஷவ்யரைத் தேவலர் கண்டார். பிறகு, தேவலர், ருத்திரர்கள் வஸுக்கள் பிருகஸ்பதி இவர்களுக் குள்ள ஸ்தானங்களையும் தாண்டியிருக்கின்ற ஜைகீஷவ்யரைக் கண் டார். பிறகு, அவர், ஜைகீஷவ்யர் கோலோகத்திலேறி, பிரம்மஸத்ரம்

செய்தவர்களுக்குரிய லோகங்களைக் குறித்துச் செல்லுகின்றதைக் கண்டார். அந்தத் தேவலர் மிகச்சிறந்த மூவுலகங்களையும் கடந்து தம்தேஜஸினால் மேலே எழுந்து செல்லுகின்றவரும் பதிவிரதைகளுடைய உலகங்களைக் குறித்துச் செல்லுகின்றவருமான (அந்தப்) பிராம்மணரைக் கண்டார். பகைவர்களை அடக்குபவரே! பிறகு, தேவலர், (அந்த) லோகத்திலிருந்தவரும் மறைந்துபோனவரும் முனிவர்களுள் சிறந்தவருமான ஜைகீஷவ்யரை மறுபடியும் காணவில்லை. மஹாபாக்கியசாலியான அந்தத்தேவலர் ஜைகீஷவ்யருடைய பிரபாவத்தையும் நல்லவிரதத்தையும் ஒப்பற்றயோகஸித்தியையும் ஆலோசித்தார். தீரரானதேவலர் அப்பொழுது அவ்வுலகங்களிலிருப்பவர்களும் மிக்க சிறப்புள்ளவர்களும் ப்ரம்மநிஷ்டர்களுமான ஸித்தர்களைநோக்கிப் பரிசுத்தராக அஞ்சலி செய்துகொண்டு, 'தபோதனர்களே! ஜைகீஷவ்யரை நான் காணவில்லை. அவரைப் பற்றிச்சொல்லுங்கள்; யான் இதைக் கேட்கவிரும்புகிறேன். எனக்கு அதிக ஆவலிருக்கிறதன்றோ?' என்று வினவினர். ஸித்தர்கள், 'திடமான விரதமுள்ளவரே! தேவலரே! உண்மையைச்சொல்லுகின்ற எங்களுடைய வார்த்தையைக் கேளும். ஜைகீஷவ்யர் குறைவற்றதும் சாஸ்வதமாயிருப்பதுமான பிரம்மலோகத்தை அடைந்துவிட்டார்' என்று சொன்னர்கள். பிரம்மசாரிகளான அந்த ஸித்தர்களுடைய வார்த்தையைக்கேட்டு அந்த அஸிதரென்கிறதேவலர் விரைவாக மேலேஎழும்பிக் கீழேவிழுந்தார். பிறகு, அந்த ஸித்தர்கள் மறுபடியும் தேவலரைப்பார்த்து, 'தபோதனரே! தேவலரே! பிராம்மணரே! ஜைகீஷவ்யர் பிரம்மலோகத்தில் எந்தஸ்தானத்தை அடைந்தாரோ அதைஅடைவதற்கு உமக்குக் கதிகிடையாது' என்றனர். அந்த ஸித்தர்களுடைய அந்த வார்த்தையைக்கேட்டுத்தேவலர் மீண்டும் முன்போன எல்லா உலகங்களினின்றும் வரிசையாகக் கீழே இறங்கினர். அந்தத்தேவலர் பாவனமான தம்ஆஸ்ரமத்தைச் சூரியன் போல வந்தடைந்தார்; பிரவேசிக்கும்பொழுதே ஜைகீஷவ்யரையும் கண்டார். பிறகு, தேவலர் யோகத்தினுலுண்டானஜைகீஷவ்யருடைய தபோமகிமையைக்கண்டு த்ர்மத்துடன்கூடின புத்தியினுல் ஆலோசித்தார். அரசரே! பிறகு, அந்தத்தேவலர் மஹாத்மாவும், மஹாமுனிவருமான ஜைகீஷவ்யருகில்சென்று பணிவுடன்வணங்கி, 'பகவானே! நான் மோக்ஷதர்மத்தை நன்கு அறிந்துகொள்ள விரும்புகிறேன்' என்று சொன்னர். அந்த ஜைகீஷவ்யர் தேவலருடைய அந்த வசனத்தைக்கேட்டுச் சாஸ்திரப்படி செய்யஇயல்வதும் இயலாததுமான

யோகத்தினுடைய உத்தமமான விதியை உபதேசித்தார். பிறகு, பெருந்தவமுள்ளவரான ஜைகீஷவ்யர் தேவலரை ஸந்யாஸத்தில் புத்தியைச்செலுத்தியிருப்பவராகக்கண்டு சாஸ்திரத்தில் சொல்லிய கர்மாவினால் இவருக்கு (துறவுக்குரிய) எல்லாக்கிரியைகளையும் செய்தார். ஸந்யாஸத்தில் நோக்கமுள்ள புத்தியையுடையவரான அந்தத் தேவலரைக்கண்டு, பிறகு, பிராணிகள் பித்ருக்களோடு சேர்ந்து, 'எவன் நமக்கு ஹவிர்ப்பாகங்களைக் கொடுப்பான்?' என்று கண்ணீர் விட்டன. தேவலரோ பத்துத்திக்குக்களிலும் பேசுகின்ற பிராணிகளுடைய அவ்வாறான தீனவசனத்தைக்கேட்டு ஸன்யாஸத்தை விடும் விஷயத்தில் மனவுறுதி கொண்டார். பாரதரே! பிறகு, பரிசுத்தமான பலமூலங்களும் புஷ்பங்களும் ஔஷதிகளும், 'அல்பனும் துர்ப்புத்தியுள்ளவனுமான தேவலன் நிச்சயமாக மறுபடியும் நம்மை வெட்டப் போகிறான்; எல்லாப்பிராணிகளுக்கும் அபயத்தைக் கொடுத்த இவன், (தான் செய்வதைத்) தெரிந்துகொள்ளவில்லை' என்று ஆயிரமாயிரமாகப் பெருங்கூச்சலிட்டன. பிறகு, முனிஸ்ரேஷ்டரான தேவலர் 'இல்லறம் துறவறம் (இரண்டனுள்) எது நன்மையை விளைவிக்கக் கூடியதாகும்?' என்று மீண்டும் தம்புத்தியினால் ஆலோசித்தார். அரசருட் சிறந்தவரே! தேவலர் மனத்தினால் இவ்வாறு நிச்சயஞ்செய்து இல்லறத்தைவிட்டுத் துறவறத்தில் விருப்பம்வைத்தார். பாரதரே! இதுமுதலான விஷயங்களை நன்றாகஆலோசித்துத் தேவலர் நிச்சயத்துடன் சிறந்தஸித்தியையும் சிறந்தயோகத்தையும் அடைந்தனர். பிறகு,பிருகஸ்பதியைமுதன்மையாகக்கொண்டதேவர்களும் தபஸ்விகளும் அருகில்வந்து அவருடைய தவத்தைப் புகழ்ந்தார்கள். பிறகு, ரிஷிகளுள்சிறந்த அப்படிப்பட்டநாரதர் தேவர்களைப் பார்த்து, 'அஸிதரை ஆச்சர்யமடையச்செய்த அந்தஜைகீஷவ்யரிடத்தில் தவமில்லை' என்றுசொன்னார். இவ்வாறு சொல்லுகின்றவரும் கற்றறிந்தவருமான அந்தநாரதரை நோக்கி அந்தத்தேவர்கள் மஹரிஷியான ஜைகீஷவ்யரைப் புகழ்கின்றவர்களாகி, 'இது இப்படியன்று; பிரபாவத்தினால் மஹாத்மாவான ஜைகீஷவ்யருடைய தேஜஸ் தவம் யோகம் இவைகளுக்கு ஸமமானதும் இவைகளிலும் மேலானதும் யாதொன்றுமில்லை' என்று மறுமொழிகூறினார்கள். மஹாத்மாவான ஜைகீஷவ்யர் இவ்விதமான பிரபாவமுள்ளவர். அஸிதரும் அவ்வாறே. மஹாத்மாக்களான அவ்விருவருக்கும் இது உத்தமஸ்தானமும் தீர்த்தமுமாயுள்ளது. பிறகு, மஹாத்மாவும் உத்தமமான கர்மங்களைச்செய்பவருமான பலராமர் அந்தத்தீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்து, பிராம

மணர்களுக்குத் தனத்தைக்கொடுத்துத் தர்மத்தையடைந்து மகிமை பொருந்தியதும் ஸோமனுடையதுமான சிறந்த தீர்த்தத்துக்குச் சென்றார்.

---

## ஐம்பத்திரண்டாவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



### (ததீசி, ஸாரஸ்வதர் இவர்களுடைய சரித்திரம்.)

பாரதரே! எந்தஇடத்தில் சந்திரன், முடிவில் பெரிதான தாரகாஸுரயுத்தம் நேர்ந்ததாகிய ராஜஸூயத்தினால் தேவர்களைப் பூஜித்தானோ அந்தத் தீர்த்தத்திலும், தைர்யமுள்ள பலராமர் ஸ்நானஞ்செய்து தானங்களைக்கொடுத்துத் தர்மசிந்தையுள்ளவராகி, முற்காலத்தில் பன்னிரண்டுவருஷம் மழையில்லாமை நேர்ந்திருக்கும்போது ஸாரஸ்வதமுனிவர் உத்தமப்பிராம்மணர்களுக்கு எந்தஇடத்தில் வேதங்களை அத்யயனம் செய்வித்தாரோ அந்த ஸாரஸ்வதமுனிவருடைய தீர்த்தத்தை அடைந்தார்" என்றார்.

ஜனமேஜயர், "முற்காலத்தில் பன்னிரண்டுவருஷகாலம் மழையின்மை உண்டானதருணத்தில் ஸாரஸ்வதமுனிவர்உத்தமப்பிராம்மணர்களுக்கு எவ்வாறு வேதாத்யயனம் செய்வித்தார்?" என்றுவினவ, வைசம்பாயனர் சொல்லலானார். "மஹாராஜரே! முற்காலத்தில் சிறந்த புத்தியுள்ளவரும் மிக்கதவமுடையவரும் பிரம்மசாரியும் இந்திரியங்களை ஜயித்தவருமான ததீசிஎன்று பிரஸித்திபெற்ற ஒரு முனிவர் இருந்தார். பிரபுவே! இந்திரன் அவருடைய அதிக தவத்தினின்று எப்பொழுதும் பயந்துகொண்டிருந்தான். அவர் பலவிதமானபலங்களாலும் ஆசைஅடையும்படி செய்யமுடியாதவராயிருந்தார். பிறகு, இந்திரன் அவருக்கு ஆசையை உண்டுபண்ணுவதற்காகத் தேவலோகத்தில் தோன்றினவளும் பரிசுத்தையும் பார்க்கஇன்பமாயிருப்பவளுமான அலம்புஸைஎன்கிற அப்ஸரஸ்திரீயை அனுப்பினான். மகாராஜரே! ஸரஸ்வதீநதியில் தேவர்களுக்குத் தர்ப்பணஞ்செய்கின்ற அந்த மஹாத்மாவான ததீசியின் பக்கத்தில் அந்த அப்ஸரஸ்திரீயானவள் நெருங்கினாள். திவ்யதேகத்தையுடையவளான அந்தப்பெண்ணைக் கண்டு ஜிதேந்திரியரான அந்தரிஷியினுடைய வீர்யமானது ஸரஸ்வதீநதியில் விழுந்தது. அந்தவீர்யத்தை அந்தநதியானவள் பெற்றுக்கொண்டாள். புருஷர்களுள்சிறந்தவரே! அந்த ஸரஸ்வதீதேவியானவள் ஸந்தோஷமுள்ளவளாக அந்த வீர்யத்தைத் தன் வயிற்றிலும் தரித்

தாள். அவள் புத்திரன்நிமித்தமாக மஹாத்மாவானததீசியினுடைய அந்தக் கர்ப்பத்தைத் தாங்கினாள்; ஸமயத்தில், ஸாரஸ்வதனென்கிற உத்தமபுத்திரனை ஈன்றாள். பிரபுவே! புத்திரனை எடுத்துக்கொண்டு அந்த ரிஷியினிடம் சென்றாள். ராஜேந்திரரே! பிறகு, அந்தநதியானவள் முனிஸ்ரேஷ்டரான அந்தத்ததீசியை ரிஷிகளுடைய ஸபையில் கண்டு, அவருடைய புத்திரனை அவரிடம் கொடுத்து, 'பிரம்மரிஷியே! இவன் உம்முடைய குமாரன். உம்மிடத்திலுள்ள பக்தியால் என்னால் தரிக்கப்பட்டான். பிரம்மரிஷியே! முன்பு அலம்புஸையென்கிற அப்ஸரஸ்திரீயைக்கண்டு வெளிப்பட்ட உம்முடைய வீரியத்தை நான் உம்மிடத்திலுள்ள பக்தியினால் 'இந்த வீர்யமானது அழியவேண்டாம்' என்கிற நிச்சயத்தினால் வயிற்றில் தரித்தேன். என்னால் கொடுக்கப்பட்டிருக்கின்ற உம்முடைய இந்த உத்தமபுத்திரனை ஏற்றுக்கொள்ளும்' என்று சொன்னாள். இவ்வாறு சொல்லக்கேட்ட பிராம்மணோத்தமர், புத்திரனை ஏற்றுக்கொண்டு அதிகமான பிரீதியையுமடைந்து பிதாவைப்போல அன்பினால் உச்சிமோந்தார். பரதர்களுள் சிறந்தவரே! மஹரிஷி அப்பொழுது நெடுங்காலம் கட்டிஅணைந்து பிரீதியுடன் ஸரஸ்வதியின்பொருட்டு, 'மங்களகரி! விஸ்வேதேவர்களும் பித்ருக்களும் கந்தர்வர்களுடைய கூட்டங்களும் அப்ஸரஸுகளுடைய கூட்டங்களும் உன்னுடைய ஜலத்தினால் திருப்திசெய்யப்பட்டவர்களாகத் திருப்தியை அடையப்போகிறார்கள்' என்று வரத்தை அளித்தார். அரசரே! நடந்தபடிகேளும். ப்ரீதியுள்ளவரும் அதிக ஸந்தோஷமுள்ள மனத்தையுடையவருமான அந்த மஹரிஷியானவர் இவ்வாறு சொல்லிவிட்டு நல்லசொற்களால் (அந்த) மஹாநதியை ஸ்தோத்திரம் செய்தார். 'மஹாபாக்கியவதி! பிரம்மஸரஸினின்று முற்காலத்தில் நீ பிரவஹித்தாய். நதிகளுள் சிறந்தவளே! உன்னைக் கடுமையான விரதத்தையுடைய முனிவர்கள் அறிகிறார்கள். இனிய தோற்றமுள்ளவளே! எப்பொழுதும் எனக்குப் பிரியத்தை உண்டுபண்ணுகிறவளாகவும்இருக்கிறாய். உத்தமியே! அதனால், ஸாரஸ்வதனென்கிற (இந்தப்) புத்திரனையும் நீ தரித்தாய். உன்னுடைய புத்திரன் உன்னுடையபெயரினாலேயே ஸாரஸ்வதனென்று பிரஸித்திபெற்றவனும் உலகங்களை ரக்ஷிப்பவனும் மிக்க தவமுள்ளவனும் புகழுள்ளவனும் ஆகப்போகிறான். மஹாபாக்யமுள்ளவளே! உலகத்தில் பன்னிரண்டுவர்ஷகாலம் மழை இல்லாமை நேருந்தருணத்தில் இந்த ஸாரஸ்வதன் பிராம்மணோத்தமர்களுக்கு வேதங்களை அத்யயனஞ்செய்விக்கப்போகிறான். கல்யாணி!

ஸரஸ்வதி! மஹாபாக்யவதி! நீ என்னுடைய பிரஸாதத்தினால் எப்பொழுதும் புண்யமான நதிகளைவிட மிக்கபுண்யவதி ஆகப்போகிறாய்' என்றார். பரதர்களுள் சிறந்தவரே! இவ்வண்ணமாக அந்தத்ததீசரால் ஸ்தோத்திரம் செய்யப்பட்ட அந்தப் பெரியநதியானவள் வரத்தைப்பெற்றுக்கொண்டும் புத்திரனை எடுத்துக்கொண்டும் ஸந்தோஷத்துடன் சென்றாள்.

இதேகாலத்தில் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் நேர்ந்த கலகத்தில் இந்திரன் ஆயுதங்களைத்தேடிக்கொண்டு மூவுலகங்களிலும்ஸஞ்சரித்தான். மகிமையுடையவனான இந்திரன், அப்பொழுது அந்தத் தேவசத்துருக்களைக்கொல்வதற்கு எந்தஆயுதம் தகுதியுள்ளதாகுமோ அப்படிப்பட்ட ஒன்றை அடையவில்லை. பிறகு, இந்திரன் தேவர்களைப்பார்த்து, 'தேவசத்துருக்களான அஸுரர்களைத் ததீசருடைய எலும்புகளில்லாவிடில் என்னால் கொல்லமுடியாது. ஆதலால், நீங்கள் 'ததீசரே! எலும்புகளைக்கொடும். அவைகளால் பகைவர்களை வதம் செய்யப்போகிறோம்'என்று கார்யஸித்தியின்பொருட்டு முயற்சியுடன் அந்த ரிஷிஸ்ரேஷ்டரை யாசியுங்கள்' என்று கூறினான். அந்த ரிஷிஸ்ரேஷ்டரும், 'எங்களுக்கு உதவிசெய்வீராக' என்று அந்தத்தேவர்களால் என்புகளை முயற்சியினால் வேண்டப்பட்டவராகி ஆலோசியாமல் அதை அப்பொழுது செய்தார். தேவர்களுக்குப் பிரியத்தைச் செய்தவரான அந்தத்ததீசர் அப்பொழுது அக்ஷயமான லோகங்களை அடைந்தார். பிறகு, இந்திரன் மிக்கமனக்களிப்படைந்தவனாகி அப்பொழுது அவருடைய எலும்புகளால் கதைகள் வஜ்ரங்கள் சக்ரங்கள் பெரியகனமான தடிகள்முதலான திவ்யமான பற்பல ஆயுதங்களைச் செய்வித்தான். பிரம்மபுத்திரரும்பரமரிஷியுமானபிருகுவினால், கடுமையானதவத்தினால் நிறைந்தவரும் உலகங்களை ரக்ஷிப்பவரும் பருத்த தேகமுள்ளவரும் தேஜஸ்வியும் உலகங்களில் பலிஷ்டருமாக அந்தத் ததீசர் உண்டுபண்ணப்பட்டார். மலைபோலப் பருத்தவரும் உயர்ந்தவருமான அந்தப்பிரபுவானவர் மகிமையினால் பிரஸித்தரானார். பாகனென்கிற அஸுரனை அழித்தவனான மஹேந்திரன் அவனுடைய தேஜஸிலிருந்து எப்பொழுதும் பயமடைந்திருந்தான். பாரதரே! மகிமையுள்ள இந்திரன், மந்திரத்துடன்கூடியதும் அதிக குரோதத்தோடு விடப்பட்டதும் பிரம்மதேஜஸினால் உண்டானதுமான அந்த வஜ்ரத்தினால் எண்ணூற்றுப்பத்துத் தைத்யவீரர்களையும் தானவவீரர்களையும் கொன்றான். அரசரே! பிறகு, காலம்சென்றவுடன், பெரிதும் அதிக பயங்கரமும் பன்னிரண்டுவருஷம் தொடர்ச்சியுள்ளது

மான மழையின்மையானது உண்டாயிற்று. அரசரே! பன்னிரண்டு வருஷம்வந்துகொண்டிருக்கின்ற அந்த அனுவிருஷ்டியில் மஹரிஷிகள் பசியினால் வருத்தமுற்றவர்களாகிஎல்லாத்திக்குக்களிலும் ஆகாரத்துக்காக ஓடினார்கள்.அப்பொழுது ஸாரஸ்வதமுனிவர் திக்குக்களில் ஓடுகின்ற ரிஷிகளைக்கண்டு தாமும் புறப்பட்டுப்போவதின்பொருட்டு எண்ணங்கொண்டார். அவரைப்பார்த்து, ஸரஸ்வதி, 'புத்திர! இங்கிருந்து போகவேண்டாம். எப்பொழுதும் சிறந்த மீன்களை நான் உனக்கு ஆகாரமாகக்கொடுப்பேன். இங்கே வஸிக்கலாம்' என்றாள். இவ்வாறுசொல்லப்பட்ட அந்தஸாரஸ்வதன் பித்ருக்களையும் தேவர்களையும் திருப்தியடையச்செய்தான். பிராணன்களையும் வேதங்களையும் தரித்துக்கொண்டு நித்யம் ஆகாரத்தைச்செய்துவந்தான். பிறகு, அந்த அனுவிருஷ்டி நீங்கினவுடன், மஹரிஷிகள் மீண்டும் வேதாத்யயனத்திற்காக ஒருவரையொருவர் வேதத்தைப்பற்றி வினவினார்கள். ராஜேந்திரரே ! பசியினால் பீடிக்கப்பட்டவர்களும் விசேஷமாகஓடுகின்றவர்களுமான அவர்களனைவர்களுக்குமே வேதங்கள் நாசமடைந்தன.ஒன்றுமே தோன்றவில்லை. பிறகு, அந்தரிஷிகளுள் ஒருவர் கூர்மையுள்ளபுத்தியையுடையவரும் வேதாத்யயனத்தைச்செய்பவரும் ரிஷிகளுள் சிறந்தவருமான ஸாரஸ்வதரை அடைந்தார். அந்தரிஷியானவர் திரும்பிச்சென்று மனிதர்களில்லாதகாட்டில் வேதாத்யயனம் செய்பவரும் தேவதைக்குஸமமானவரும் பிரபுவுமான ஸாரஸ்வதரிஷியைப்பற்றி அவர்களுக்குச்சொன்னார். அரசரே ! பிறகு, எல்லாமகரிஷிகளும் ஒன்றுசேர்ந்து அவ்விடத்தில்வந்து முனிஸ்ரேஷ்டரான ஸாரஸ்வதரைப்பார்த்து, 'எங்களுக்குவேதங்களை ஓதுவிப்பீராக' என்னும்வசனத்தைக் கூறினார்கள். பிறகு, முனிவர் அவர்களைப்பார்த்து, 'நீங்கள் முறைப்படி எனக்குச் சிஷ்யத்தன்மையை அடையுங்கள்' என உரைத்தார். அச்சமயத்தில் ரிஷிகளுடையகணங்கள், 'குழந்தாய் ! நீ பாலனாக இருக்கிறாய்' என்றுசொன்னார்கள். அவர் அந்தரிஷிகளைப்பார்த்து, 'என்னுடையதர்மம் அழியாமலிருக்கவேண்டும். எவன் அதர்மத்தினால் (வித்தையைச்) சொல்லுவனோ எவன் அதர்மத்தினால் பெற்றுக் கொள்வானோ அவர்கள் இருவரும் விரைவாக மரணமடைவார்கள்; அல்லது, வைரிகளாவார்கள். வர்ஷங்களாலும் தலைமயிர் நரைகளாலும் பொருளாலும் பந்துக்களாலும் ரிஷிகள் தர்மத்தைக் கூறவில்லை. எவன் நமக்குள் ஸாங்கமாக அத்யயனஞ்செய்தவனோ அவன்தான் பெரியவன்' என்று கூறினர். அந்த ரிஷிகள் அந்தஸாரஸ்வதருடைய

அந்தவசனத்தைக்கேட்டு அவரிடத்தினின்று முறைப்படி வேதங்களை அடைந்து மீண்டும் தர்மத்தைச்செய்தார்கள். வேதாத்தியயனம் செய்வதற்காக ப்ரம்மரிஷியான ஸாரஸ்வதருக்கு அறுபதினாயிரம் ரிஷிகள் சிஷ்யர்களானார்கள். பிறகு, அவர்களனைவரும் பாலராயிருந்தும் அவருடையவசத்தில் நிலைபெற்றவர்களாகிப் பிரம்மரிஷியான அவருக்கு ஆஸனத்திற்காகத் தர்ப்பங்களைப் பிடிப்பிடியாகக் கொண்டு வந்தார்கள். ரோஹிணீபுத்திரரும் மஹாபலசாலியும் கேசவருக்கு மூத்தவரும் வீரருமான பலராமர் அவ்விடத்திலும் தனத்தைக் கொடுத்து ஸந்தோஷமுள்ளவராகி அடுத்ததாகிய பரிசுத்தமான அந்த விருத்தகன்யாஶ்ரமத்தைநோக்கிச் சென்றார்"

---

## ஐம்பத்துமூன்றாவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம் (தொடர்ச்சி.)



### (வ்ருத்தகன்யையின் சரித்திரம்.)

ஜனமேஜயர், "பகவானே! முற்காலத்தில், குமாரியானவள் எவ்வாறு தவத்தையடைந்தவளானாள்? யாதுகாரணம்பற்றித் தவம் புரிந்தாள்? இவளுடைய நியமமானது எது? பிராம்மணரே! சிறந்ததும் உம்மிடத்தினின்று கேட்கப்பட்டதுமான இந்தத்தவமானது செய்ய மிகஅரியது. எவ்வாறு அவள் தவத்தில்நிலைபெற்றுநின்றாளோ அதுமுழுமையும் நீர் உரைப்பீராக' என்றுவினவ, வைசம்பாயனர் சொல்லலானார். "மஹாவீர்யமுள்ளவரும் மிக்க கீர்த்தியுள்ளவரும் கர்க்ககுலத்திலுதித்தவருமான குணிஎன்னும் ஒருரிஷிஇருந்தார். அரசரே! தபஸ்விகளுள்சிறந்தவரும் பிரபுவுமான அந்தக்கார்க்யர் பெருந்தவம்புரிந்து பிறகு தவத்தினால் அழகிய உருவத்துடன்கூடியவளான ஒரு பெண்ணை உண்டுபண்ணினார். வேந்தரே! அந்தப்பெண்ணைப் பார்த்து ப்ரீதியையடைந்தவரும் மஹாயசஸ்வியுமான குணிகார்க்ய முனிவர் இம்மண்ணுலகில்சரீரத்தைவிட்டு ஸ்வர்க்கம்சென்றார். அழகியபுருவங்களுள்ளவளும் மங்களகரியும் தாமரைமலருக்கு ஒப்பான கண்களையுடையவளும் கொண்டாடத்தக்கவளுமான அந்தப்பெண்ணானவள் முற்காலத்தில் உக்கிரமான பெருந்தவத்தினால் சிரமத்தை உண்டுபண்ணிக்கொண்டு உபவாஸங்களால் பித்ருக்களையும்தேவதைகளையும் பூஜித்தாள். மன்னரே! அவளுக்கு உக்கிரமானதவத்தில் நீண்டகாலம் சென்றது. புகழ்பெற்றவளான அந்தப்பெண் முன்

பிதாவினால் கொடுக்கப்படுபவளாயிருந்தும் பதியை விரும்பவில்லை. அவள் தனக்குத்தகுந்தபர்த்தாவைக் காணவில்லை. பிறகு, அந்தப்பெண் உக்கிரமான தவத்தினால் தன்னுடைய சரீரத்தைப்பீடித்து ஜனங்களில்லாதகாட்டில் பித்ருக்களையும் தேவர்களையும் பூஜிப்பதில் பற்றுள்ளவளாயிருந்தாள். ஶ்ரமத்தையடைந்தவளான அந்தக் *கௌமாரப்ரம்மசாரிணியானவள் செய்யவேண்டியதைச் செய்துமுடித்தவளாகத் தன்னை எண்ணிக்கொண்டு முதுமையை அடைந்தாள். ராஜேந்திரரே! முதுமையினாலும்தவத்தினாலும் அங்கங்கள் இளைக்கச் செய்யப்பட்ட அந்தமாது தானாக ஓரடியினின்றுமற்றோரடிசெல்வதற்குக்கூடச்சக்தியற்றவளானபொழுது, பரலோகத்தை அடையும் விஷயத்தில் புத்தியைச்செலுத்தினாள். சரீரத்தை விடஎண்ணங்கொண்டவளான அந்தப்பெண்ணைப் பார்த்து நாரதர், "தோஷமற்றவளே! ஸம்ஸ்காரமில்லாதவளும் கன்னியுமான உனக்கு லோகங்கள் எப்படி கிடைக்கும்? பெரியவிரதமுள்ளவளே! தேவலோகத்தில் இவ்வாறன்றோ நாம் கேட்டிருக்கிறோம். சிறந்ததவம் உன்னால் அனுஷ்டிக்கப்பட்டது; ஆனால், உலகங்கள் ஜயிக்கப்படவில்லை' என்று கூறினார். அந்தமாது, நாரதருடைய அந்த வார்த்தையைக்கேட்டு ரிஷிகளுடைய ஸபையில், 'சிறந்த ஸத்புருஷர்களே! என்னை மணம் புரிகின்ற புருஷனுக்கு என்னுடையதவத்தில் பாதிகொடுக்கிறேன்' என்றாள். இவ்வாறு சொல்லப்பட்டவுடன், காலவருடைய புத்திரரான ஶ்ருங்கவான் என்னும் ரிஷியானவர் அந்தப்பெண்ணைப் பாணிக்கிரஹணம்செய்துகொண்டார். முதலில், 'கல்யாணி! நான் இப்பொழுது உன்னுடைய கையை ஓர்உடன்பாட்டைமுன்னிட்டுப்பிடிக்கப்போகிறேன்; நான் ஓரிரவுமட்டுந்தான் உன்னுடன்சேர்ந்து வஸிப்பேன்' என்னும் இந்தச் சபதத்தையும்செய்தார். அவள், 'அப்படியே ஆகட்டும்' என்று பிரதிஜ்ஞைசெய்து அவருக்கு அப்பொழுது தன் கையைக்கொடுத்தாள். காலவகுமாரரான சிருங்கவானென்கிறரிஷியானவர் விதியை அனுசரித்து அக்னியில் ஹோமம்செய்து சாஸ்திரத்தில் சொல்லபபட்ட விதியினால் அவளுடைய பாணிக்கிரஹணத்தையும் விவாஹத்தையும் செய்தார். அரசரே! அவள் அன்றிரவில் யௌவனமுள்ளவளும் சிறந்த காந்தியையுடையவளும் திவ்யமான ஆபரணங்களையும் வஸ்திரங்களையும் அணிந்தவளும் திவ்யமான சந்தனங்களை மேனியில் பூசிக்கொண்டவளுமானாள். காந்தியினால் பிரகாசிக்கச் செய்கின்றவள்போலிருக்கின்ற அந்தப் பெண்ணைப்பார்த்துக் கால

* தவம்புரியும் இளம்பெண்.

வருடையகுமாரர் பிரீதியுள்ளவராகி ஓரிரவு அவளுடன் வஸித்தார். விடியற்காலத்தில் அவள் அவரைப்பார்த்து, 'பிராம்மணரே! தபஸ்விகளுள் சிறந்தவரே! எந்த ப்ரதிஜ்ஞையானது உம்மால் என்விஷயத்தில் செய்யப்பட்டதோ அந்த ப்ரதிஜ்ஞையை அனுஸரித்து வாஸம் செய்தேன். உமக்கு மங்களம்; உமக்கு க்ஷேமம் உண்டாகட்டும். நான் போகிறேன்' என்று சொன்னாள். அவள் மறுபடியும் தியானம் செய்து, 'எவன் இந்தத்தீர்த்தத்தில் சித்தசுத்தியுடன் தேவதைகளைத் தர்ப்பித்து ஓர் இரவு வாஸம்செய்வானோ அவன் ஐம்பத்தெட்டுவருஷம் பிரம்மசர்யத்தை நன்றாக அனுஷ்டிப்பவனுடைய பலனை அடைவான்' என்று கூறினாள். இவ்வாறு சொல்லிவிட்டு, பிறகு, அந்தப் பதிவிரதையானவள் தேகத்தைவிட்டு ஸ்வர்க்கத்தை அடைந்தாள். ரிஷியும் அவளுடைய ரூபத்தை நினைத்துக்கொண்டு வருத்தமுற்றவரானார்; பிரதிஜ்ஞையின்படி தவத்திற்பாதியையும் மனவருத்தத்துடன் பெற்றுக்கொண்டார். பரதசிரேஷ்டரே! அப்பொழுது அவர் அவளுடைய ரூபத்தினால் வசப்படுத்தப்பட்டவரும் துக்கமுள்ளவருமாகித் தம்முடைய சரீரத்தை நசிக்கும்படிசெய்து அவளுடைய கதியை அடைந்தார். இந்த விருத்தகன்னியினுடைய மகிமை பொருந்திய சரித்திரமும் அவ்வாறே பிரம்மசர்யமும் மங்களகரமான ஸ்வர்க்ககதியும் உமக்கு உரைக்கப்பட்டன. பலராமர் அவ்விடத்திலிருந்துகொண்டே சல்யன் கொல்லப்பட்டானென்பதைக்கேள்வியுற்றார். பகைவர்களை வாட்டுபவரான பலராமர் அந்த இடத்திலும் பிராம்மணர்களுக்குத் தானங்களைக்கொடுத்துப் பாண்டவர்களால் யுத்தத்தில் கொல்லப்பட்ட சல்யனைப்பற்றி அப்பொழுது வ்யஸனமுற்றார். மாதவரான பலராமர், பிறகு, ஸமந்தபஞ்சகத்தினுடைய வாயிலினின்று வெளிப்பட்டு ரிஷிகணங்களை நோக்கிக் குருக்ஷேத்திரத்திற்குள்ள பலனைக் கேட்டார். பிரபுவே! யதுவம்சத்தில் பிறந்தவர்களுள் சிறந்தவரான பலராமரால் குருக்ஷேத்திரத்தினுடைய பலனைக்குறித்துக் கேட்கப்பட்டவர்களான அந்த மஹாத்மாக்கள் அவருக்கு அவையனைத்தையும் உள்ளபடி சொல்லத்தொடங்கினார்கள்.

---

## ஐம்பத்துநான்காவது அத்யாயம்.

## ஹ்ரதப்ரவேசபர்வம். (தொடர்ச்சி.)



(மஹரிஷிகள் குருக்ஷேத்திரமகிமையைப் பலராமருக்குச் சொல்லியது.)

ரிஷிகள், 'ராமரே! சாஸ்வதமான ஸமந்தபஞ்சகமானது பிரம்மதேவருடைய உத்தரவேதியென்று சொல்லப்படுகிறது. முற்காலத்தில் பெரியவரன்களைக் கொடுக்கிறவர்களான தேவர்கள் அந்த இடத்தில் உத்தமமான யாகத்தினால் (பரமாத்மாவை) நன்கு ஆராதித்தார்கள். முற்காலத்தில் ராஜரிஷிகளுள் சிறந்தவனும் சிறந்தபுத்தியுள்ளவனும் மஹாத்மாவுமான குருராஜனாலே அனேகவருஷகாலம் அபரிமிதமான தேஜஸுடன் இந்தக்ஷேத்திரமானது நன்கு உழப்பட்டது. அதனால், இவ்வுலகத்தில் இது குருக்ஷேத்திரமென்று பிரஸித்திபெற்றது' என்றனர். பலராமர், 'மஹாத்மாவான குருவினால் இந்த க்ஷேத்திரம் யாதுகாரணம்பற்றி உழப்பட்டது? தபோதனர்களே! (உங்களால்) உரைக்கப்படுகிற இந்தவிஷயத்தை நான் கேட்க விரும்புகிறேன்' என்று சொல்ல, ரிஷிகள் கூறலாயினர்.

பலராமரே! முற்காலத்தில் எப்பொழுதும் ஊக்கத்துடன் உழுதுகொண்டிருந்த குருவினிடம் தேவலோகத்தினின்று இந்திரன் வந்து காரணத்தைக் கேட்கலானான். இந்திரன், 'ராஜரிஷியே! அதிகமுயற்சியுடன் இதென்ன காரியம் நடந்துவருகின்றது? எதை உத்தேசித்து இந்தப்பூமியானது உழப்படுகிறது?' என்றுவினவ, குருராஜன், 'மஹேந்திர! இந்தக்ஷேத்திரத்தில் உண்டாகும் மனிதர்கள், பாபிகளால் விடுபட்டிருக்கின்ற புண்ணியசாலிகளுடைய லோகங்களை அடையப்போகின்றார்கள்' என்று சொன்னான். இந்திரன் அவனைப் பரிஹஸித்து மீண்டும் ஸ்வர்க்கலோகம்சென்றான். ராஜரிஷியும் ஒழிவில்லாமல் பூமியை உழுதுகொண்டேயிருந்தான். இந்திரன், ஒழிவின்றி உழுதுகொண்டிருக்கின்ற அந்தக்குருராஜனை அடிக்கடி வந்து வந்து கேட்டுக்கேட்டுப் பரிகாசஞ்செய்துவிட்டுச் சென்றான். அரசன் உக்ரமான தவத்துடன் பூமியை உழுதபொழுது இந்திரன் தேவர்களைப்பார்த்து, ராஜரிஷியினுடைய எண்ணத்தைவெளியிட்டான். தேவர்கள் இந்தவார்த்தையைக்கேட்டு இந்திரனைநோக்கி, 'இந்திர! முடியுமானால் ராஜரிஷியை வரத்தினால் வஞ்சிக்கவேண்டும். இவ்விடத்தில் பிறக்கிறமனிதர்கள் யாகங்களால் நம்மை ஆராதியாமலே ஸ்வர்க்கத்தை அடைவார்

களானல் நமக்கு ஹவிர்ப்பாகம் கிடைக்காது' என்றுகூறினர்கள். பிறகு, இந்திரன் ராஜரிஷியிடம் வந்து அப்பொழுது, 'உனக்கு ச்ரமம் வேண்டாம். நான்சொல்வதைச் செய். அரசனே! ராஜேந் திரனே! இந்த க்ஷேத்ரத்தில் எந்த மனிதர்கள் ஆலஸ்யமில்லா மலும் ஆகாரமில்லாமலுமிருந்து (தவம்புரிந்து) சரீரத்தை விடுவார் களோ அவர்களும், யுத்தத்தில் கொல்லப்பட்ட மனிதர்களும், விலங்குகளும், மற்றும் இறப்பவர்களும், ஸ்வர்க்கத்தை அடைந்தவர் களாகக் கடவர்' என்றுகூறினன். பிறகு, குருராஜன் இந்திர னைப் பார்த்து, 'அவ்வாறே ஆகட்டும்' என்றுசொன்னன். பிறகு, பலனென்கிற அஸுரனை அழித்தவனை இந்திரன் அவனிடத் தில் அனுமதிபெற்று மனமகிழ்ச்சியுடன் மீண்டும் ஸ்வர்க்கத் தைக்குறித்து விரைவாகச் சென்றான். யதுஸ்ரேஷ்டரே! முற் காலத்தில் ராஜரிஷியான குருவினல் இந்த க்ஷேத்திரம் இவ்வாறு உழப்பட்டது. இந்திரனல் அனுமதிகொடுக்கப்பெற்று அந்தக் (குருராஜன் இந்தப்) புண்ணியக்ஷேத்திரத்தில் உயிரைவிட்டான். இந்தஸ்தானமானது இந்திரனாலும் அவ்வாறே பிரம்மாதிகளான தேவர்களாலும் மதிக்கப்பட்டுள்ளது. இதைக்காட்டிலும் சிறந்த புண்ணிய ஸ்தலமானது பூமியில் உண்டாகப்போகிறதில்லை. இந்த க்ஷேத்திரத்தில் எந்த மனிதர்கள் சிறந்த தவம்புரிவார்களோ அவர் கள் அனைவர்களும் தேகத்தை விட்டபின் பிரம்மலோகத்தை அடைவார்கள். எந்தப் புண்ணியசாலிகளான மனிதர்கள் (இவ் விடத்தில்) தானம் செய்வார்களோ அவர்களுடைய அந்தத் தான மானது அதிசீக்கிரமாக ஆயிரமடங்காகின்றது. எந்த மனிதர் கள் இவ்விடத்தில் நித்யம் நல்ல செய்கைகளில் விருப்பமுள்ள வர்களாக வஸிப்பார்களோ அவர்கள் யமனுடைய வாஸஸ்தானத்தை ஒருபொழுதும் பார்க்கமாட்டார்கள். எந்த அரசர்கள் மஹாயாகங் களால் தேவர்களைப் பூஜிப்பார்களோ அவர்களுக்குப் பூலோகமுள்ள வரையில் ஸ்வர்க்கத்தில் வாஸமானது நிச்சயம். ஹலாயுதரே! மேலும், தேவராஜனை இந்திரன் இந்த இடத்தில்தான் குருக்ஷேத் திர ஸம்பந்தமான ஒரு காதையைக் கானஞ்செய்திருக்கிறான். அந்தக் காதையைக் கேளும். அதன்பொருள், 'குருக்ஷேத்திரத்தினின்று காற்றினல் தூற்றப்பட்ட புழுதிகளும் மனிதனைப் பாவியாயிருந்தா லும் உத்தமகதியை அடையும்படி செய்கின்றன. எந்தமனிதன், 'குருக்ஷேத்திரத்தை அடைவேன். நான் குருக்ஷேத்திரத்தில் வஸிப்பேன்' என்ற நிச்சயமுள்ளவனுயிருக்கிறானே அவன் ஸ்வர்க்

கத்தை அடைவான். 'குருக்ஷேத்திரத்தை அடைவோம்; நாம் குருக்ஷேத்திரத்தில் வஸிப்போம். அவ்வாறே இருப்பையும் மௌனவிரதத்தையும் வீராஸனத்தையும் தியானத்தையும் செய்வோம்' என்று அடிக்கடி நினைப்பவர்களும் புலம்புகிறவர்களும் தூரத்திலிருந்தாலும் (ஸமீபத்தில்) இருந்தாலும் நிச்சயமாக ஸ்வர்க்கத்தை அடைவார்' என்பது. நரஸ்ரேஷ்டரே! தேவஸ்ரேஷ்டர்களும் பிராம்மணோத்தமர்களும் அவ்வாறே ந்ருகன் முதலான ராஜஸ்ரேஷ்டர்களும் சிறந்த யாகங்களால் பரமாத்மாவை ஆராதித்துத் தேகங்களைவிட்டு நல்ல கதியை அடைந்தார்கள். தரந்துகை, ரந்துகை என்கிற இரண்டு நதிகளுக்கும் ராமஹ்ரதங்களுக்கும் மசக்ருகதீர்த்தத்திற்கும் இடையிலுள்ள இந்தக் குருக்ஷேத்ரத்திலுள்ள ஸமந்தபஞ்சகமானது பிரம்மதேவருக்கு உத்தரவேதி யென்று சொல்லப்படுகின்றது. இது மங்களகரமானது; மஹாபுண்ணியமானது; தேவர்களுக்கு மிக்க ஸம்மதமானது; ஸ்வர்க்கத்திற்குரிய குணங்களோடுகூடியது. ஆதலால், (இவ்விடத்தில்) யுத்தத்தில் கொல்லப்படும் அரசர்களெல்லோரும் எப்பொழுதும் அக்ஷயமான புண்ணியகதியை அடைவார்கள். இந்திரன் அப்பொழுது பிரம்மாதிகளோடுசேர்ந்து தானே இவ்வண்ணம் உரைத்தான். அவையெல்லாம் பிரம்ம விஷ்ணு மகேஸ்வரர்களால் அங்கீகரிக்கப்பட்டன' என்று கூறினார்கள்.

---

## ஐம்பத்தைந்தாவது அத்யாயம்.

### ஹ்ரதப்ரவேச பர்வம். (தொடர்ச்சி.)



(பலராமர் மித்ராவருணாஸ்ரமத்தில் நாரதரிடமிருந்து பீமனுக்கும் துர்யோதனனுக்கும் கதாயுத்தத்தின் தொடக்கத்தைக்கேட்டு அதனைப்பார்க்கவிரும்பிக் குருக்ஷேத்திரத்துக்குத் திரும்பி வந்தது.)

ஜனமேஜயரே! பிறகு, ஸாத்வதகுலத்தில் தோன்றிய பலராமர் குருக்ஷேத்திரத்தைக்கண்டு கொடுக்கவேண்டிய வஸ்துக்களைக் கொடுத்து மிகப்பெரிதும் பரிசுத்தமானதும் இலுப்பைத்தோப்புடனும் மாந்தோப்புடனும் கூடியதும் இத்திமரங்களாலும் ஆலமரங்களாலும் நெருங்கியதும், புன்கமரங்களாலும் பலாமரங்களாலும் மருதமரங்களாலும் நெருங்கியதும் பாவனமாயிருப்பதுமான ஆஸ்ரமத்தை அடைந்தார். யாதவர்களுள் சிறந்தவரான பலராமர் மிகச்சிறந்ததும்

பரிசுத்தமான அடையாளங்களுடன்கூடியதுமான அந்த ஆஸ்ர மத்தைக் கண்டு அந்த ரிஷிகளனைவரையும் பார்த்து, 'இந்த உத் தமமான ஆஸ்ரமமானது யாருடையது?' என்று வினவினர். அரசரே! அவர்களனைவரும் மஹாத்மாவான அவரைப் பார்த்து, 'ராமரே! இந்த ஆஸ்ரமமானது முன்பு யாருடையதாயிருந்த தென்பதை விஸ்தாரமாகக்கேளும். இந்த இடத்தில் முற்காலத் தில் ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரங்களால் விளையாடுகின்ற விஷ்ணுவான வர் உத்தமமான தவம்புரிந்தார். இந்த இடத்தில் இந்த விஷ்ணுவி னுடைய சாஸ்வதமான எல்லா யஜ்ஞங்களும் முறைப்படி நிறை வேறின. பிரஜைகளுக்கு நாதரே! இந்த இடத்திலேயே பால்யம் தொடங்கிப் பிரம்மசாரிணியாயிருந்த விருத்தப்பிராம்மணியானவள் யோகத்தையும் தவத்தையும்செய்து ஸ்வர்க்கத்தை அடைந்தாள். மன்னரே! மஹாத்மாவான சாண்டில்யருடைய புத்திரியானஸ்ரீமதி யானவள் விரதத்தை மேற்கொண்டவளும் ஸாத்வியும் நியமமுள்ள வளும் பிரம்மசாரிணியுமாயிருந்தாள். அவளும் சிறந்த யோகத்தை யடைந்து மிக்க உத்தமமான ஸ்வர்க்கத்தை அடைந்தாள். மஹா ராஜரே! அந்த ஸ்ரீமதியானவள் பயனுள்ளதான அஸ்வமேதத்தி னுடைய நல்ல பயனை ஆஸ்ரமத்தில் அனுபவித்து மஹாத்மாக் களால் பூஜிக்கப்பட்டவளாகி ஸ்வர்க்கத்தை அடைந்தாள்' என்றனர். யதுநந்தனரான அந்தப் பலராமர் புண்ணியமான ஆஸ்ரமத்தை அடைந்து தரிசித்து இமயமலையினுடைய சாரலிலிருக்கிற அந்த ரிஷிகளையும் அபிவாதனம்செய்து மாலைக்கடனைத்தையும் நிறை வேற்றிக்கொண்டு மலையின்மீது ஏறினர். பிறகு, பனைமரத்தைக் கொடியாகக்கொண்ட அவர், சிறிது தூரம் மலையில்சென்று உத்தம மான புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து அதிக ஆச்சர்யத்தை அடைந்தார். பலராமர் ஸரஸ்வதிநதிக்கு உற்பத்திஸ்தானமிருக்கின்ற ப்லக்ஷப்ரஸ்ரவணத்தையும் தீர்த்தங்களுள் மிகச்சிறந்த தீர்த்தமான காரபசனத்தையும் அடைந்தார். மஹாபலசாலியும் யுத்தத்தில்கெட்ட மதங்கொண்டவருமான அவர் அவ்விடத்திலும் தானம்செய்து பரி சுத்தமாயிருப்பதும் அதிகக் குளிர்ச்சியுள்ளதும் அழுக்கில்லாததும் சுத்தமாயிருப்பதுமான தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பித்ருக்களை யும் தேவதைகளையும் நன்கு திருப்திசெய்தார். அவர் அந்த இடத்திலும் ஸந்யாஸிகளோடும் பிராம்மணர்களோடும் ஓரிரவு வஸித்துப் பரிசுத்தமான மித்ராவருணர்களுடைய ஆஸ்ரமத்தை அடைந்தார். எந்தவிடத்தில்முற்காலத்தில்இந்திரனும் அக்னியும் அர்ய

மனும் பிரீதியடைந்தார்களோ அந்தஇடத்தைக் குறித்து அந்தப் பலராமர் காரபசனத்தினின்று வந்தார். தர்மத்தில் மனமுள்ளவரும் மஹாபலசாலியும் யாதவர்களுள் சிறந்தவருமான அவர் அவ்விடத்திலும் ஸ்நானஞ்செய்து அதிகப்ரீதியையடைந்து ரிஷிகளோடும் ஸித்தர்களோடும்கூடினவராக உட்கார்ந்துகொண்டு பரிசுத்தமானகதைகளைக்கேட்டார். அவ்வாறு அவர்கள் இருந்துகொண்டிருக்கும்தருணத்தில் பகவானுன நாரதமஹரிஷியானவர் ராமர் வீற்றிருக்கின்ற அந்த இடத்தை வந்தடைந்தார். அரசரே ! ஜடாமண்டலத்தினுல் சூழப்பட்டவரும், தர்ப்பபவித்திரமணிந்தவரும், மரவுரியுடுத்தவரும், மிக்க தவமுடையவரும், பொன்மயமான தண்டத்தையும்கமண்டலுவையும் தரித்தவரும், இனிய ஓசையுள்ளதும் மனத்துக்கினியதுமான அப்படிப்பட்ட மஹதி என்கிறவீணையை எடுத்துக்கொண்டு நர்த்தனம் செய்வதிலும் பாடுவதிலும் ஸமர்த்தரும், தேவர்களாலும் பிராம்மணர்களாலும் பூஜிக்கப்பட்டவரும், கலகங்களுக்கு உற்பத்திஸ்தானமாயிருப்பவரும், எப்பொழுதும் கலகப்பிரியருமான நாரதபகவான் ஸ்ரீமானுன பலராமரிருக்குமிடம் வந்தார். அந்தப்பலராமர் எழுந்து அவரைப் பூஜித்து விரதானுஷ்டானமுள்ளவரான தேவரிஷியைப்பார்த்துக்கௌரவர்களைப்பற்றி உள்ளபடி வினவினர். வேந்தரே ! எல்லாவேதங்களையும் அறிந்தவரான நாரதர் அப்பொழுது பலராமருக்கு நடந்த கௌரவர்களுடைய க்ஷேமமினைத்தையும் உள்ளபடி உரைத்தார். பிறகு, ரோகிணிபுத்திரரான பலராமர் நாரதரைப்பார்த்துத் தீனமானவாக்குடன் வினவலாயினர்.

'தபோதனரே ! அவ்விடத்திலிருந்த அந்தக்ஷத்திரியர்கள் எந்த நிலைமையிலிருக்கிறூர்கள்? இவையனைத்தும் முந்தியே என்னால் கேட்கப்பட்டன. ஆயினும் விஸ்தாரமாகக்கேட்கும்விஷயத்தில்எனக்கு அதிக ஆவல் உண்டாயிருக்கிறது' என்றுவினவ, நாரதர், 'முந்தியே பீஷ்மரும் துரோணரும் ஸிந்துராஜனுன ஜயத்ரதனும்கொல்லப்பட்டார்கள்; ஸூர்யகுமாரனுனகர்ணன் கொல்லப்பட்டான்; மஹாரதர்களான இந்தக்கர்ணனுடைய புத்திரர்களும் கொல்லப்பட்டார்கள். ரோகிணி நந்தனரே ! பூரிஸ்ரவஸும் சிறந்த வீர்யமுள்ளமத்ரராஜனுனசல்யனும் கொல்லப்பட்டார்கள்.இவர்களும் மஹாபலசாலிகளும் யுத்தங்களில் பின்வாங்காதவர்களுமான மற்றும் பல அரசர்களும் ராஜபுத்திரர்களும் குருராஜனுன துர்யோதனனுக்குப் பிரியத்தைச்செய்யக்கருதிப் பிரியமான உயிரில் ஆசையைவிட்டுப் போர்புரிந்து அங்குக்கொல்லப்பட்டார்கள். மிக்கபுஜபலமுள்ளவரே ! மாதவரே ! அங்

தத்துர்யோதனனுடையபடையில் கொல்லப்படாமலிருக்கின்றவரை என்னிடத்தினின்று கேளும். தார்த்தராஷ்டிரனுடைய சேனையில் யுத்தத்தில் பகைவர்களை அழிப்பவர்களான கிருபர், கிருதவர்மா, வீர்யவானான துரோணபுத்திரர் இம்மூவர்களே மிகுந்தவர்கள். ராமரே ! அவர்களும் அப்பொழுது பயத்தினால் பத்துத்திசைகளிலும் ஓடினார்கள். துர்யோதனன், சேனைகொல்லப்பட்டுக் காலாட்களும்ஓடவே, அதிகத்துன்பமுற்றவனாகத்வைபாயனமென்கிற மடுவில்பிரவேசித்தான். அப்பொழுது, ஸ்தம்பனம்செய்யப்பட்டிருக்கின்ற ஜலத்தில் படுத்திருக்கின்ற துர்யோதனனைப் பாண்டவர்கள் கிருஷ்ணனோடுகூட மிக்ககடுமையான சொற்களால் துன்பஞ்செய்தார்கள். ராமரே ! பலசாலியும் வீரனுமான அந்தத் துர்யோதனன் நான்கு பக்கத்திலும் கடுஞ்சொற்களால் துன்பத்தை உண்டுபண்ணப்பட்டு, பெரிதான கதாயுதத்தைக் கையிலெடுத்துக்கொண்டு மடுவிலிருந்து எழுந்திருந்தான். அந்தத் துரியோதனனும் இப்பொழுது பீமஸேனனோடு எதிர்த்து யுத்தம்செய்வதற்காக அருகில் வந்திருக்கிறான். ராமரே ! இப்பொழுது அவ்விருவருக்கும் மிக்கபயங்கரமான யுத்தம் நடக்கப்போகின்றது. மாதவரே ! உமக்கு விருப்பமிருந்தால் செல்லும். தாமதிக்கவேண்டாம். உமக்கு எண்ணமிருக்குமானால் சிஷ்யர்களுடைய மகாகோரமான யுத்தத்தைப் பாரும்' என்று கூறினார். பலராமர் நாரதருடைய வார்த்தையைக்கேட்டு அந்தப் பிராம்மணோத்தமர்களைப் பூஜித்துத் தம்முடன் வந்திருந்த அனைவரையும் அனுப்பினார். அந்தப் பலராமர், தம்முடன்வந்திருந்த வேலைக்காரர்களை 'த்வாரகைக்குப் போகலாம்' என்று கட்டளையிட்டார். நெறிதவறுதவரான அந்தப் பலராமர், பிறகு, மலைகளுள் சிறந்ததான இமயமலையிலுள்ள மங்களகரமான ப்லக்ஷப்ரஸ்ரவணமென்கிற தீர்த்தத்தினின்று கீழேயிறங்கி, மனத்தில் ப்ரீதியடைந்து, பெரிதான தீர்த்தபலனைக்கேட்டுப் பிராம்மணர்களுடையஸந்நிதியில் இந்த ஸ்லோகத்தைக் கானம்செய்தார். (அதன்பொருள்,) 'ஸரஸ்வதிநதியில் வாஸஞ்செய்வதினாலுண்டான ப்ரீதிக்கு ஸமமான ப்ரீதி ஏது? ஸரஸ்வதிநதியில் வாஸஞ் செய்வதினாலுண்டான குணங்களுக்கு ஸமமான குணங்கள் எவை ? ஸரஸ்வதிநதியை அடைந்து ஸ்வர்க்கத்தை அடைந்த ஜனங்களும், ஸரஸ்வதிநதியை எப்பொழுதும் நினைப்பார்கள். ஸரஸ்வதிநதியானது எல்லாநதிகளுள்ளும் பரிசுத்தமானது. ஸரஸ்வதி எப்பொழுதும் உலகங்களுக்கு மங்களத்தை விளைவிக்கின்றது. ஸரஸ்வதியையடைந்த ஜனங்கள் விண்ணுலகி

லும் இம்மண்ணுலகிலும் பாவத்தைப்பற்றி எப்பொழுதுமேதுக்கிக்க மாட்டார்கள்' என்பது. பிறகு, பகைவர்களை வாட்டுபவரான பல ராமர், ப்ரீதியுடன் ஸரஸ்வதியை அடிக்கடி பார்த்துக்கொண்டு குதிரைகள் கட்டின வெண்ணிறமுள்ள ரதத்தில் ஏறினர். யதுபுங்க வரான அந்தப்பலராமர் சிஷ்யர்களுள் நேர்ந்திருக்கிற யுத்தத்தைப் பார்க்கவிரும்பி விரைவாகச்செல்லுகின்ற அந்த ரதத்தோடு வந்து சேர்ந்தார். ஜனமேஜயரே ! இவ்வாறு அந்த யுத்தமானது நெருக்க மாக நடந்தது. அச்சமயத்தில் திருதராஷ்டிரன் துக்கத்துடன் "ஸஞ்சய ! கதாயுத்தமானது ஸமீபித்திருக்கும்போது, பலராமர் அருகில் வந்திருப்பதைக்கேட்டு என்னுடைய குமாரனை துர்யோத னன் எவ்வாறு பீமனை எதிர்த்துப் போர்புரிந்தான் ?" என வின வினன்.

ஹ்ராதப்ரவேசபர்வம் முற்றிற்று.



ஐம்பத்தாறுவது அத்யாயம்.

## கதாயுத்தபர்வம்.

(பீமனும் துரியோதனனும் கதாயுத்தத்துக்கு ஸன்னத்தரானது.)

ஸஞ்சயன் சொல்லலானன். "மஹாபாகுபலமுள்ளவனும் சிறந்த வீர்யமுள்ளவனும் உம்முடைய புத்திரனுமான துர்யோதனன் பல ராமருடைய ஸாந்நித்யத்தைப்பெற்று யுத்தம் செய்வதில் விருப்ப முள்ளவனாக மனத்தில் மிக்க களிப்பையடைந்தான். பாரதரே ! துர்யோதனராஜன் பலராமரைக்கண்டு எழுந்து எதிர்கொண்டுவந்து அதிகப்பிரீதியுடன் யுதிஷ்டிரரைப்பார்த்துக் கூறலானன். 'அரச னே ! இங்கிருந்து ஸமந்தபஞ்சகமென்கிற புண்ணிய க்ஷேத்திரத் தைக்குறித்துச் செல்வோம். அது தேவலோகத்தில் பிரம்மதேவ ருக்குப் பிரஸித்தமான உத்தரவேதி. மூவுலகங்களுள்ளும் மிக்க பரிசுத்தமானதும் சாஶ்வதமாயுள்ளதுமான அந்த க்ஷேத்திரத்தில் யுத்தத்தில் நாசத்தையடைந்து நிச்சயமாக ஸ்வர்க்கத்தையடைவாய்' என்றான். மஹாராஜரே! குந்திபுத்திரரும் வீரரும் பிரபுவுமான யுதிஷ்டிரர், 'அவ்வாறே ஆகுக' என்று சொல்லிவிட்டு ஸமந்தபஞ்ச கத்தைநோக்கிச் சென்றார். பிறகு, கோபமுள்ளவனும் காந்தியுள்ள வனுமான துர்யோதனராஜன் பெரிய கதையை எடுத்துக்கொண்டு பாண்டவர்களோடு கால்களால் நடந்துசென்றான். அவ்வாறு செல்லு

இன்றவனும் கதையைக் கையிற்கொண்டவனும் கவசம் பூண்டவனு மான துர்யோதனனை ஆகாசசஞ்சாரிகளான தேவர்கள், 'நல்லது, நல்லது' என்று புகழ்ந்தார்கள். அந்த இடத்தில் வாத்தியங்களை வாசிக்கின்ற அப்படிப்பட்டமனிதர்களும் கண்டு களிப்புற்றார்கள். பாண்டவர்களால் சூழப்பட்டவனும் குருதேசத்து அரசனும் உம்முடைய குமாரனுமான அந்தத்துரியோதனன் மதங்கொண்ட சிறந்த யானையினுடைய நடையை அடைந்து சென்றான். பிறகு, சங்கநாதங்களாலும் பேரிகளுடைய பேரொலிகளாலும் சூரர்களுடைய ஸிம்மநாதங்களாலும் திக்குக்களெல்லாம் நிறைக்கப்பட்டன. பிறகு, சிறந்த புருஷர்களுள் உத்தமர்களான அவர்களோ மேற்குமுகமாக உம்முடைய புத்திரனாலே குறிக்கப்பட்ட இடமும் ஸரஸ்வதியின் தென்புறமாயிருக்கின்றதும் நற்கதியைக் கொடுக்கின்றதும் உத்தமதீர்த்தத்துடன்கூடியதுமான குருக்ஷேத்ரத்தை அடைந்தார்கள். களர்மண்ணில்லாத அந்த இடத்தில் அவர்கள் யுத்தம்செய்ய விரும்பினார்கள். மகாராஜரே! பிறகு, பீமன் கவசத்தை அணிந்துகொண்டும் பெரிய முனையுள்ள கதையை எடுத்துக்கொண்டும் கருடனுக்குச் சமமான ரூபத்தைத்தரித்து நின்றான். அரசரே! நன்றாகக் கட்டப்பட்ட தலைப்பாகையுள்ளவனும் கலப்பில்லாத பொன்னாலாகிய கவசத்தை அணிந்தவனுமான உம்முடையபுத்திரன் பொன்மயமான மேருமலைபோல விளங்கினான். அவ்வாறு எதிர்த்தவர்களும் வீரர்களுமான அந்தப் பீம துர்யோதனரிருவரும் மிக்க கோபங்கொண்ட இரண்டு யானைகள்போல யுத்தத்தில் பிரகாசித்தார்கள். மஹாராஜரே! தேர்க்கூட்டத்தினிடையில் நிற்பவர்களும் புருஷஶ்ரேஷ்டர்களும் பிராதாக்களுமான அவ்விருவரும் உதித்திருக்கின்ற சந்திர ஸூர்யர்கள்போல் விளங்கினார்கள். அரசரே! ஒருவரையொருவர் கொல்வதில் விருப்பமுள்ளவர்களான அவ்விருவர்களும் கண்களாலே எரிக்கின்றவர்களாகிக் கோபங்கொண்ட இரண்டு மஹாஸர்ப்பங்கள் போல ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள். அரசரே! குருவம்சத்தில் உதித்தவனும் சிறந்த வீர்யமுள்ளவனுமான துர்யோதனராஜன் கதையை எடுத்துக்கொண்டு மிக்க மனமகிழ்ச்சியுள்ளவனாகவும் இரண்டு கடைவாய்களையும் நக்கிக்கொண்டவனாகவும் குரோதத்தினால் கண்கள் சிவந்தவனாகவும் பெருமூச்சுடன்கூடியவனாகவும் ஒரு யானை மற்றொரு யானையைப் பார்ப்பதுபோல் பீமஸேனனைப்பார்த்து யுத்தத்திற்காக அழைத்தான். வீர்யமுள்ளவனை பீமனும் அவ்வாறே உருக்குமயமான கதையைக் கையிலெடுத்துக்கொண்டு காட்டில்

ஸிம்மமானது ஸிம்மத்தை அழைப்பதுபோல அரசனை துரியோத னனை அழைத்தான். கதாயுதத்தைக் கையில் எடுத்துக்கொண்ட வர்களான அந்தத்துரியோதனன்விருகோதரனிருவரும் சிகரத்துடன் கூடின இரண்டுமலைகள்போல யுத்தத்தில் விளங்கினார்கள். மகாராஜ ரே! அவ்விருவரும் மிகப்பெருங்கோபமுள்ளவர்கள்; இருவரும் பயங்கரமான பராக்கிரமமுள்ளவர்கள்; இருவரும் புத்திமானான பல ராமருக்குக் கதாயுத்தத்தில் சிஷ்யர்கள்; இருவரும் மகாபலசாலி கள்; இருவரும் வருணனுக்குச்சமமான செய்கையுள்ளவர்கள்; இரு வரும் வாஸுதேவருக்கும் ராமருக்கும் குபேரனுக்கும் மதுகை டபர்களுக்கும் ஸமானர்கள்; இருவரும் ஸுந்தோபஸுந்தர்களுக் குச்சமமான செய்கையுள்ளவர்கள்; இருவரும் ராமராவணர்களுக் கும் வாலிஸுக்கிரீவர்களுக்கும் ஸமானர்கள். சத்துருக்களை தபிக் கச் செய்பவர்களானஅவ்விருவரும் அவ்வாறே காலனுக்கும் ம்ருத்யு வுக்கும் ஸமானர்கள். சரத்காலத்தில் ஒருபெண்யானையின்பொரு ட்டு மதத்தினால்மயங்கினவைகளும் கொழுப்புள்ளவைகளும் மத நீரைப்பெருக்குகின்றவைகளுமான இரண்டுபெரிய ஆண்யானைகள் போல அவ்விருவரும் ஒருவரையொருவர் எதிர்த்தோடிவந்தார்கள். ஒருவரோடொருவர் கோபங்கொண்டவர்களும் பகைவர்களை அடக்கு கிறவர்களுமான அவ்விருவரும் இரண்டுஸர்ப்பங்கள்போல ஜ்வலிக் கின்றகோபமாகிறவிஷத்தைக் கக்கினார்கள். பரதகுலத்தில் பிறந்த வர்களுள்சிறந்தவர்களான அவ்விருவரும் மிக்கபராக்ரமமுள்ளவர் கள்; இரண்டுஸிம்மங்கள்போல (யுத்தத்தில்ஒருவராலும்) அவமதிக்க முடியாதவர்கள்; கதாயுத்தத்தில் ஸமர்த்தர்கள். வீரர்களானஅவ்விரு வரும் நகங்களையும் கோரப்பற்களையும் ஆயுதங்களாகக்கொண்ட இர ண்டுபுலிகள்போல எவ்விதத்தினாலும் ஸகிக்கமுடியாதவர்கள்; பிரஜை களைஸம்ஹரிக்கின்ற பிரளயகாலத்தில் பொங்குகின்ற இரண்டுஸமுத் திரங்கள்போல (எவ்விதத்தினாலும்) தாண்டமுடியாதவர்கள். (பகை வர்களை) மிகவாட்டுகின்றவர்களும் (ஒருவரையொருவர்) பார்ப்பவர் களும் சத்துருக்களை அடக்குகிறவர்களும் குருஸ்ரேஷ்டர்களுமான அந்தஇரண்டு மகாரதர்களும் கோபங்கொண்ட இரண்டுஅங்காரகக் கிரகங்கள்போலவும், மாரிக்காலத்தில் மிக்ககடோரமாகக்கர்ஜித்துக் கொண்டு மழையைப்பொழிகின்றவையும் கீழ்த்திசையினின்றும் மேல்திசையினின்றும் தோன்றிவந்திருக்கின்றவையுமான இரண்டு மேகங்கள்போலவும், மகாத்மாக்களும் மிக்கபலசாலிகளும் கிரணங்க ளுள்ளவர்களும் காந்தியுள்ளவர்களும் உதித்திருக்கின்றவர்களுமான

இரண்டு பிரளயகாலஸூரியர்கள்போலவும் காணப்பட்டார்கள். மிக்க புஜபலமுள்ளவர்களான அவ்விருவர்களும் மிக்ககோபங்கொண்ட இரண்டுபுலிகள்போலவும் கர்ஜிக்கின்ற இரண்டுமேகங்கள்போலவும் இரண்டுஸிம்மங்கள்போலவும் அதிககோபங்கொண்ட இரண்டுயானை கள்போலவும் எரிகின்ற இரண்டுநெருப்புக்கள்போலவும் கிளர்ச்சி அடைந்தார்கள். ரோஷத்தினால் உதடுதுடிக்கின்றவர்களும் ஒருவரை ஒருவர் பார்க்கின்றவர்களும் மகாபலசாலிகளுமான அவ்விருவர் களும் சிகரத்துடன்கூடின இரண்டுமலைகள்போலக் காணப்பட்டார் கள். மகாபலசாலிகளும் கதையைக்கையில்கொண்டவர்களும் புருஷ ஸ்ரேஷ்டர்களுமான அவ்விருவரும் எதிர்த்தார்கள். இருவரும் அதிகஸந்தோஷமுள்ளவர்கள். இருவரும் மிகமதிக்கப்பெற்றவர்கள். புருஷஸ்ரேஷ்டர்களான துர்யோதனன், விருகோதரன் இருவரும் கனைக்கின்ற இரண்டு ஜாதிக்குதிரைகள்போலவும் கர்ஜிக்கின்ற இரண்டு யானைகள் போலவும் கர்ஜிக்கின்ற இரண்டுவிருஷபங் கள்போலவும் பலத்தினால் உன்மத்தர்களான இரண்டு தைத்யர்கள் போலவும் விளங்கினார்கள். அரசரே! பிறகு, துர்யோதனன் ஸ்ருஞ்சயர்களோடுநிற்பவரும் ஜ்வலிக்கின்றஸூர்யன்போலிருப்பவரு மான யுதிஷ்டிரரைப்பார்த்து, 'நானும்பீமனுமாகிய இருவருக்கும் இதோ யுத்தம்தொடங்கப்பட்டுவிட்டது. ராஜஸ்ரேஷ்டர்களே! ஸமீ பத்தில் உட்கார்ந்துகொண்டு யுத்தத்தைப்பாருங்கள்' என்றுகூறி னான். பிறகு, நன்றாகஉட்கார்ந்துகொண்டிருப்பதும் மிக்கபெரிது மான அந்தராஜமண்டலமானது ஆகாயத்தில்பிரகாசிக்கின்ற ஸூர்ய மண்டலம்போலக் காணப்பட்டது. மகாராஜரே! மகாபாகுபலமுள்ள வரும் மிக்கஒளிபொருந்தியவரும் அவர்களுடையமத்தியில் உட்கார்ந் தவரும் நாற்புறங்களிலும் பூஜிக்கப்படுகின்றவரும் கறுப்புவஸ்திரம் தரித்தவரும் வெண்ணிறமுள்ளவருமான பலராமர் அரசர்களுடைய நடுவிலிருந்துகொண்டு இரவில் நக்ஷத்திரங்களால் சூழப்பட்டிருக் கின்ற பூர்ணசந்திரன்போல் விளங்கினார். மகாராஜரே! அப்படி கதை யைக் கையிலெடுத்தவர்களும் எவ்விதத்தினாலும் (எவராலும்) தாங்க முடியாதவர்களுமான அவ்விருவரும் கடுஞ்சொற்களாலே ஒருவரை ஒருவர் துன்பமுறும்படி செய்துகொண்டு நின்றார்கள். பிறகு, கௌரவர்களுள் சிறந்தவர்களான அவ்விருவரும் ஒருவரையொருவர் பார்த்து அப்பிரியமான வாக்யங்களைஉரைத்து யுத்தத்தில் விருத்திர னும் இந்திரனும்போல எதிர்த்துப்பார்த்துக்கொண்டு அங்குநின்றார் கள்" என்றுகூறினான்.

## ஐம்பத்தேழாவது அத்யாயம்.

## கதாயுத்தபர்வம். (தொடர்ச்சி.)



(பீமனுக்கும் துர்யோதனனுக்கும் வீரவாதம்.)

ஜனமேஜயரே! பிறகு, நெருங்கின வாக்குச்சண்டைநேர்ந்தது. அந்தஸமயத்தில் திருதராஷ்டிரராஜன் துக்கத்துடன் இதனைஉரைக்கலானான். "இப்படிப்பட்ட இந்தமுடிவுஏற்படுகிற மனுஷ்யத்தன்மையானது நிந்திக்கத்தக்கது. பதினோர் அக்ஷௌஹிணீ சேனைகளுக்குத் தலைவனும் குற்றமற்றவனுமான என்குமாரன் எல்லாஅரசர்களையும் தன் ஆணைக்குக் கீழ்ப்படுத்தி இந்தப்பூமியை ஆண்டனுபவித்து இந்த யுத்தஸமயத்தில் கதையைஎடுத்துக்கொண்டு ஏகாகியாகவும் காலாளாகவும் யுத்தத்திற்குச்சென்றான். என்னுடைய குமாரன் உலகத்துக்கே நாதனாயிருந்தும் அநாதன்போலக் கதையை எடுத்துக்கொண்டு செல்லுகின்றானென்றால் அதிருஷ்டத்தைத்தவிர வேறு யாது காரணமுளது? ஸஞ்சய! அந்தோ! என்புத்திரனால் பெருந்துக்கம் அடையப்பட்டுவிட்டது" என்றான். அந்த அரசன் இவ்வாறு சொல்லிவிட்டுத் துக்கத்தினால் பீடிக்கப்பட்டவனாகப் பேசாமலிருந்துவிட்டான். ஸஞ்சயன் சொல்லலானான்.

"வீர்யமுடையவனும் மேகத்தின் இடிமுழக்கம்போன்ற முழக்கத்துடன்கூடியவனுமான அந்தத்துரியோதனன் ஸந்தோஷத்தினால் பெரியகாளைபோலக் கர்ஜித்துக்கொண்டு அப்பொழுது பீமனை யுத்தரங்கத்தில் யுத்தத்திற்காகஅழைத்தான். மஹாபலசாலியான குருராஜன் பீமனை அழைக்கும்போது, மிக்ககோரமாயும் பலவாறாயுமிருக்கின்ற உருவங்கள் தோன்றின; காற்றுக்கள் இடிகளுடன் வீசின; புழுதிமழை பொழிந்தது; எல்லாத்திசைகளும் இருளால் நன்கு மூடப்பட்டனவாயின; பேரொலியுள்ளவைகளும் பெருங் காற்றுடன் கூடியவைகளும்நெருங்கியவைகளும் மயிர்க்கூச்சத்தையுண்டுபண்ணுகின்றவைகளுமான கொள்ளிக்கட்டைகள் வெடித்துக்கொண்டு ஆகாயத்தினின்று நூறுநூறாகக் கீழேவிழுந்தன; பிரஜைகளுக்கு நாதரே! ராஹுவும் பர்வமில்லாதகாலத்தில் ஸூர்யனை விழுங்கியது; காடுகளுடனும் மரங்களுடனும்கூடின பூமியானது அதிகமாகநடுங்கியது; க்ரூரமான காற்றுக்களும் கீழாகப் பரற்கற்களை இறைத்துக்கொண்டு உரத்துவீசின; மலைகளுடைய சிகரங்களும் பூமியில் விழுந்தன; பற்பலவடிவங்களுள்ள மிருகங்களும் பத்துத்திசைகளிலும் ஸஞ்சாரம்

செய்தன; நரிகள் காந்தியுள்ளவைகளும் கோரரூபமுள்ளவைகளும் மிக்க அச்சந்தருபவைகளுமாகி ஊளையிட்டன; மிக்க பயங்கரமான இடிகளும் மயிர்க்கூச்சத்தை உண்டுபண்ணுகின்றவைகளாயின. ராஜேந்திரரே! ஜ்வலிக்கின்ற திசையில் மிருகங்கள் அமங்களகரமாகச் சப்தித்தன; கிணற்றிலுள்ள தண்ணீரானது நாற்பக்கத்திலும் பொங்கிற்று. அசரீரிகளான பேரொலிகள் பயங்கரமாகக் கேட்கப்பட்டன. அந்த விருகோதரன், இவைமுதலான நிமித்தங்களைக்கண்டு தர்மங்களால் பிரகாசிப்பவரும் ஜ்யேஷ்டப்ராதாவுமான யுதிஷ்டிரரைப்பார்த்து, 'மந்தபுத்தியுடையவனான இந்தத்துரியோதனன் என்னால் ஜயிக்கப்படக்கூடியவன். ஹ்ருதயத்திலேயே மறைந்திருக்கின்றகோபத்தைக் கௌரவராஜனான துர்யோதனன்மீது, அர்ஜுனன் அக்னியைக் காண்டவவனத்தில்விட்டது போல விடப்போகிறேன். பாண்டவரே! குருகுலத்திற்குமுடிவைச் செய்பவனான இந்தப்பாவியைக் கதையினால்கொன்று உம்முடைய இருதயத்திலிருக்கின்ற சல்யத்தை இப்பொழுது நான் பிடுங்கப்போகிறேன். யுத்தமுனையில் கதையினால் இந்தப்பாவியைக்கொன்றுகீர்த்திமயமான மாலையை இப்பொழுது நான் உமக்குப் போடப்போகிறேன். அரசரே! யுத்தத்தில் இந்தப் பெரியகதையினாலே இப்பொழுது பிளக்கப்போகிறேன். இவன் மீண்டும் ஹஸ்தினாபட்டணத்தில் பிரவேசிக்கப்போகிறதில்லை. தோஷமற்றவரே! பரதர்களுள் சிறந்தவரே! படுத்திருக்கையில் ஸர்ப்பங்களை விட்டது, அன்னத்தில் விஷமிட்டது, பிரமாணகோடியென்னுமிடத்தில் தள்ளினது, அரக்குமாளிகையில் நெருப்புவைத்தது, ஸபையில் பரிஹாஸஞ்செய்தது, எல்லாப் பொருள்களையும் கொள்ளைகொண்டது, *வனவாஸம் செய்வித்தது, ஒருவருஷம் அஜ்ஞாதவாஸஞ் செய்வித்தது, இவைகளால்நமக்குண்டான இந்தத்துக்கங்களுடைய முடிவை இன்று நான் அடையப்போகிறேன். ஒருதினத்தில் இவனைக்கொன்று என்மட்டில் கடனாளியல்லாதவனாகப்போகிறேன். பரதர்களுள் சிறந்தவரே! கெட்ட புத்தியையுடையவனும் பரிபக்வமடையாத மனமுள்ளவனுமான தார்த்தராஷ்டிரனுடைய ஆயுளும் தாய்தந்தையரைப் பார்ப்பதும் இன்றோடு முடிந்தன. ராஜேந்திரரே! மஹாராஜரே! கெட்டபுத்தியுள்ளவனான குருராஜனுடைய ஸௌக்யமும் மீண்டும் ஸ்திரீகளைப் பார்ப்பதும் இன்றோடு முடிந்தன. குருராஜனான சந்தனுவினுடைய குலத்தைக் கெடுக்கவந்த பாவியான துர்யோதனன் இன்றைக்குத்

* இங்கு பொருட்பொருத்தத்துக்காகச் சிறிது மாற்றப்பட்டது.

தன்உயிரையும் ஐஸ்வர்யத்தையும் ராஜ்யத்தையும் இழந்து பூமியில் படுக்கப்போகிருன். ராஜாவான திருதராஷ்டிரன் இன்று புத்திரன் கொல்லப்பட்டானென்பதைக்கேட்டுச் சகுனியினுடையபுத்தியினுல் உண்டானதும் செய்யத்தகாததும் அமங்களமுமான காரியத்தை நினைக்கப்போகிருன்' என்று கூறினன். அரசர்களுள் சிறந்தவரே! வீர்யசாலியான பீமஸேனன் இவ்வாறு சொல்லிவிட்டுக் கதையைக் கையிலெடுத்துக்கொண்டு இந்திரன் விருத்திரனை அழைத்ததுபோல யுத்தத்திற்காக அழைத்துக்கொண்டு எதிரில் நின்ருன். கதையைத் தூக்கிக்கொண்டிருப்பவனும்சிகரத்துடன்கூடின கைலாஸம்போன்ற வனுமான துர்யோதனனைக்கண்டு மீண்டும் பீமஸேனன் கோபமுள் ளவனுகக் கூறலானுன். 'துர்யோதன! அரசனுன திருதராஷ்டிர னுடைய அப்படிப்பட்ட கெட்டசெய்கையையும் அவ்வாறே உன் னுடைய அவ்விதமான கெட்டசெய்கையையும் வாரணுவதத்தில் நடந்த செய்கையையும் நீ நினைத்துக்கொள். வீட்டுக்கு விலக்கா யிருந்த த்ரௌபதியானவள் ஸபையின்நடுவில் துன்பமடைவிக்கப் பட்டதும், மேலும் சூதாட்டத்தில் உன்னுலும் சகுனியினுலும்அரச ரான தர்மநந்தனர் வஞ்சிக்கப்பட்டதும், வனத்தில் உங்களால்உண்டு பண்ணப்பட்டு எங்களால் அடையப்பட்ட பெருந்துக்கமும், ஸாமா ன்யஜாதியில் பிறந்தவர்கள்போல் எங்களால் விராடநகரத்தில் அடை யப்பட்ட துக்கமுமாகிய அனைத்தையும் இப்போது நாசஞ்செய்யப் போகிறேன். துஷ்டபுத்தியுள்ளவனே! பாக்யத்தினுல் காணப்பட் டாய். பிதாமஹரும் ரதிகர்களுள் சிறந்தவருமான காங்கேயர் உன் னிமித்தமாக ரதிகனுனசிகண்டியினுல் கொல்லப்பட்டுச் சரதல்பத் தில்படுத்திருக்கிருர்; த்ரோணரும் கர்ணனும் பிரதாபசாலியானசல்ய னும் கொல்லப்பட்டார்கள்; வைரமாகிற நெருப்பை முதலில் உண்டு பண்ணினவனும் அந்த ஸுபலகுமாரனுமான சகுனியும் கொல்லப் பட்டான்; அவ்வாறே பாவியும் த்ரௌபதிக்குத் துயரத்தை உண்டு பண்ணினவனுமான பிராதிகாமியும் கொல்லப்பட்டான். சூரர்களும் விக்கிரமத்துடன் போர்புரிகின்றவர்களுமான உன்னுடைய பிராதாக் களனைவரும் கொல்லப்பட்டார்கள். இவர்களும் இன்னும் மற்ற அனேக அரசர்களும் உன்னிமித்தமாகக் கொல்லப்பட்டார்கள். உன்னை நான் இப்பொழுது கதையினுல் கொல்லப்போகிறேன். இதில் ஸம்சயமில்லை' என்ருன்.

அரசரே! இவ்வண்ணம் அரசனுன (தன்னைப்) பார்த்து உரக் கப்பேசுகின்ற விருகோதரனை நோக்கி ஸத்யவிக்ரமனுன உம்முடைய

குமாரன் பயமற்றவனாக உரைக்கலானான். 'விருகோதர! பலவிதமான தற்புகழ்ச்சியினால் யாதுபயன்? இப்பொழுது யுத்தம் செய். குலாதம! இப்பொழுது உன்னுடைய யுத்தஸ்ரத்தையை நான் நீக்கப்போகிறேன். உத்தமனான துர்யோதனன் அல்பபலமுள்ளவனான உன்னால் வேறு ஸாதாரணமனிதன்போல இவ்வாறு வாக்கினால் பயமடையும்படி செய்விப்பதற்கு ஸாத்தியப்படாதவன். வெகுநாளாக விரும்பப்பட்டதும் என்மனத்திலேயேஇருந்துகொண்டிருப்பதும் உன்னுடன் செய்வதுமான இந்தக் கதாயுத்தமானது பாக்கியத்தினால் தேவதைகளால் ஏற்படுத்தப்பட்டுவிட்டது. துர்ப்புத்தியுள்ளவனே! வாக்கினாலும் பற்பல பேச்சினாலும் தற்புகழ்ச்சியினாலும் யாதுபயன்? செய்கையினால் இந்த வார்த்தையை அடக்கிக்கொள். தாமஸம் செய்யாதே' என்று கூறினான். அவனுடைய அந்த வார்த்தையைக் கேட்டு அங்கு வந்திருந்த அரசர்களும் ஸோமகர்களும் அனைவரும் புகழ்ந்தார்கள். பிறகு, எல்லாராலும் நன்றாகப் பூஜிக்கப்பட்டவனும் நன்றாக மயிர்க்கூச்சமடைந்த மேனியுள்ளவனுமான குருநந்தனன் மீண்டும் யுத்தத்தின்பொருட்டுப் புத்தியைத் தைரியப்படுத்திக்கொண்டான். கோபமுள்ளவனும் மதயானைபோன்றவனுமான அந்தத்துரியோதனனை அரசர்கள் கைக்கொட்டுக்களாலே மீண்டும் அதிக உத்ஸாகத்தையடையும்படி செய்தார்கள். மகாபலசாலியும் பாண்டுநந்தனனுமான பீமன் கதையை எடுத்துக்கொண்டு மஹாபலசாலியான துர்யோதனனைக்குறித்து வேகத்தோடு எதிர்த்தோடினான். அச்சமயத்தில் யானைகள் கர்ஜித்தன. அடிக்கடி குதிரைகளும் கனைத்தன. ஜயத்தில் விருப்பமுள்ளவர்களான பாண்டவர்களுடைய சஸ்திரங்களும் பிரகாசித்தன.

---

## ஐம்பத்தேட்டாவது அத்யாயம்.

### கதாயுத்தபர்வம். (தொடர்ச்சி.)



(பீமனுக்கும் துர்யோதனனுக்கும் கதாயுத்தம்.)

பிறகு, தளராதமனமுள்ள துர்யோதனன், அவ்வாறு வந்திருக்கின்ற பீமஸேனனைக்கண்டு, கர்ஜித்துக்கொண்டு அதிகவேகத்தோடு அவனுக்கு எதிரில் சென்றான். (அவர்கள்) கொம்புகளுள்ள இரண்டு காளைகள்போல ஒருவரோடொருவர் மோதிக்கொண்டார்கள். அடிகளுடைய பேரிடிபோன்ற சப்தம் உண்டாயிற்று. ஒருவரையொருவர் பிடிக்கஎண்ணங்கொண்டவர்களான அவ்விருவருக்கும் இந்திரனுக்

கும் பிரஹ்லாதனுக்கும் உண்டானதுபோலக் கைகலந்ததும் மயிர் சிலிர்த்தலை உண்டுபண்ணுகின்றதுமான யுத்தம் நேர்ந்தது. ரக்தத்தினால் எல்லா அங்கங்களும் நனைக்கப்பட்டவர்களும் கதையைக்கையில் கொண்டவர்களும் மனவுறுதியுள்ளவர்களும் மஹாபலசாலிகளுமான அவ்விருவர்களும் பூத்திருக்கின்ற இரண்டு பலாசவிருக்ஷம்போலக் காணப்பட்டார்கள். அவ்வாறு மிக்க பயங்கரமான அந்த மஹாயுத்தம் நடந்துவருந் தருணத்தில் ஆகாயமானது மின்மினிப்பூச்சிகளுடைய கூட்டங்களால் (வியாபிக்கப்பட்டது) போலப் பார்க்கத்தக்கதாக விளங்கியது. அவ்வாறு ஸங்குலமாயும் மிக்க நெருக்கமாயுமிருக்கின்ற அந்த யுத்தம் நடந்துவரும் தருணத்தில்,யுத்தம் செய்கின்றஇருவரும் களைப்படைந்தார்கள். சத்துருக்களைத் தபிக்கச் செய்பவர்களான அவ்விருவரும் ஒரு முகூர்த்தகாலம் இளைப்பாறி மறுபடியுமே விசித்திரமாயும் மங்களகரமாயுமுள்ள இரண்டுகதைகளை எடுத்துக்கொண்டு நன்குபோர்புரிந்தார்கள். மஹாவீர்யமுள்ளவர்களும் இளைப்பாறித்தேறுதலடைந்தவர்களும் புருஷஸ்ரேஷ்டர்களும் பலசாலிகளும்பெண் யானை நிமித்தமாகச்சண்டையிடுகின்ற அடங்காதமதங்கொண்ட இரண்டுஆண்யானைபோன்றவர்களும் ஸமமானவீர்யமுள்ளவர்களும் கையிலெடுக்கப்பட்ட கதாயுதத்துடன்கூடியவர்களுமான அவ்விருவரையுங்கண்டு தேவர்களும் கந்தர்வர்களும் தானவர்களும் அதிக ஸந்தோஷத்தைஅடைந்தார்கள். கதையேந்திநிற்கும் துர்யோதனனையும் விருகோதரனையும் கண்டு விஜயத்தில் எல்லாப் பிராணிகளுக்கும் ஸம்சயமுண்டாயிற்று. பிறகு, பலசாலிகளுள்சிறந்தவர்களும் பிராதாக்களும் ஒருவருக்கொருவர் அனர்த்தத்தை விளைவிக்கும் ஸமயத்தை விரும்பினவர்களுமான அவ்விருவரும்மறுபடியும்எதிர்த்துத் துன்பம்விளைவிக்கக்கூடிய ஸமயத்தைக்குறித்து முயன்றார்கள். வேந்தரே ! போர் காண்பவர்கள் யமதண்டம் போன்றதும் பெரிதாயிருக்கின்றதும் இந்திரனுடைய வஜ்ராயுதம்போன்றதும் உயரத்தூக்கப்பட்டதும் பயங்கரமாயுள்ளதும் பகைவர்களை நாசஞ்செய்கின்றதுமான கதாயுதத்தைக் கண்டார்கள். யுத்தத்தில் பீமஸேனன் கதையைச் சுழற்றும்தருணத்தில் ஒரு முகூர்த்தகாலம் கோரமாயும் மிக்க நெருக்கமாயுமுள்ள சப்தம் உண்டாயிற்று. பிறகு, துர்யோதனன் ஒப்பற்ற வேகத்துடன்கூடின அந்தக் கதாயுதத்தைச் சுழற்றுகின்ற சத்துருவான பாண்டவனைக்கண்டு ஆச்சர்யமுள்ளவனானான். பாரதரே ! அப்பொழுது, வீரனான விருகோதரன், மறுபடியுமே பற்பல கதிகளுடனும் மண்டலகதிகளுடனும் ஸஞ்சரித்துக்கொண்டு

விளங்கினன். ஒருவரையொருவர் கொல்லும்விஷயத்தில் முயற்சி யுள்ளவர்களான அவ்விருவரும் ஒருவரையொருவர் எதிர்த்து, தின்பண்டத்துக்காக இரண்டு பூனைகள் அடித்துக்கொள்வதுபோல அடிக்கடி அடித்துக்கொண்டார்கள். பீமஸேனனே, அவ்வாறு பல விதமான மார்க்கங்களிலும் மண்டலகதிகளிலும் விசித்ரமான கத ப்ரத்யாகதங்களிலும் விசித்ரமான கோமூத்ரிகாகதிகளிலும் பற்பல விதமாயுள்ள ஸ்தானங்களிலும் ஸஞ்சரித்தான். கதாயுத்தத்தில் ஸமர்த்தர்களான அவ்விருவரும் ப்ரஹாரங்களுடைய பரிமோக்ஷம், வர்ஜனம், பரிதாவனம், அபித்ரவணம், அக்ஷேபம், அவஸ்தானம், விக்ரஹம், மத்ஸ்யோத்விருத்தம்,உருவிருத்தம், அவப்லுதம், உபப்லுதம், உபந்யஸ்தம், அபந்யஸ்தம், என இவ்வித கதாயுத்தகதிகளில் ஸஞ்சரிக்கின்றவர்களாகிப் பரஸ்பரம் அடித்துகொண்டார்கள். கௌரவர்களுள் சிறந்தவர்களான அவ்விருவிரும் மறுபடியும் வஞ்சித்துக்கொண்டு ஸஞ்சரித்தார்கள். பலவிதமான யுத்தகதிக ளால் விளையாடுகின்றவர்களும் அதிக பலசாலிகளுமான அவ் விருவரும் மண்டலகதிகளில் ஸஞ்சரித்தார்கள். பகைவர்களை அடக்குகிறவர்களும் யுத்தத்தில் நான்கு பக்கத்திலும் போர்விளை யாட்டைக் காண்பிக்கின்றவர்களுமான அவ்விருவர்களும் கதை களாலே விரைவாக ஒருவரையொருவர் அடித்தார்கள். மகா ராஜரே! ரக்தத்தினால் எல்லாப்பக்கத்திலும் நனைக்கப்பட்டிருக் கின்ற அவ்விருவரும் இரண்டு தந்தங்களால் ஒன்றோடொன்று முட்டிக்கொள்ளும் இரண்டுயானைகள்போல விளங்கினார்கள். பகை வர்களைவாட்டுபவரே ! விருத்திரனுக்கும் இந்திரனுக்கும் க்ரூரமான யுத்தம்நடந்ததுபோலப்பிற்பகலில் அவ்விருவருக்கும்மிக்ககோரமான அவ்விதயுத்தம் நடந்தது. பிறகு, கதையைக் கையில்கொண்டவர்க ளான அவ்விருவரும் மண்டலாகாரமானகதியில் நிலைபெற்றார்கள். அரசரே! பலசாலியான துர்யோதனன் வலமாக வட்டமிட்டான். அச்சமயத்தில் பீமஸேனன் இடமாக வட்டமிட்டான். மகாராஜரே! யுத்தமுனையில் அவ்வாறு ஸஞ்சரிக்கின்ற அந்தப்பீமனுடையவிலாப் புறத்தில் துர்யோதனன் அடித்தான். பாரதரே ! பிறகு, பீமன் உம் முடைய புத்திரனால் அடிக்கப்பட்டவனாகி அந்த அடியை லக்ஷியம் செய்யாமல் பெரிதானகதாயுதத்தைச் சுழற்றினான். மஹாராஜரே ! இந்திரனுடைய வஜ்ராயுதத்திற்கொப்பானதும் கோரமானதும் யம தண்டம்போலக் கையிலெடுக்கப்பட்டுள்ளதுமான பீமஸேனனுடைய அந்தக்கதையை அவர்கள் கண்டார்கள். கதையைச்சுழற்றுகின்ற

பீமஸேனனைக்கண்டு பகைவரைப்பீடிப்பவனுன உம்முடையகுமாரன் கோரமானகதையைத்தூக்கித் திருப்பியடித்தான். பாரதரே! உமதுபுத்திரனுடைய கதையினிடத்திலுண்டாகிற காற்றுவேகத்திஞல் மிக்கநெருக்கமானசப்தமுண்டாயிற்று; ஒளியுந்தோன்றியது. தேஜஸ்வியான அந்தத்துர்யோதனன் தனித்தனியான பற்பலமார்க்கங்களிலும் மண்டலகதிகளிலும் ஸஞ்சரிக்கின்றவனுக மறுபடியும் பீமனைக்காட்டிலும் அதிகமாகப் பிரகாசித்தான். முழுவேகத்துடனுங்கூடினபீமனுல் சுழற்றப்பட்டபெரியகதையானது உக்கிரமான பேரொலியோடு புகையுடனும் ஜ்வாலையுடனுங்கூடின நெருப்பைக் கக்கியது. துர்யோதனன் பீமஸேனனுல் கதைசுழற்றப்பட்டதைக் கண்டு உருக்குமயமான பெரியகதையைச் சுழற்றிக்கொண்டு அதிகமாகப் பிரகாசித்தான். மஹாத்மாவான அந்தத்துரியோதனனுடைய கதையிலிருந்துஉண்டாகிறகாற்றின் வேகத்தைக்கண்டுஸாத்யகியுடன்கூடிய எல்லாப்பாண்டவர்களையும் பயம்வந்தடைந்தது.சத்துருக்களை அடக்குகிறவர்களான அவ்விருவரும் யுத்தரங்கத்தில் நான்குபக்கத்திலும் போர்விளையாட்டைக் காண்பித்துக்கொண்டு ஒருவரைஒருவர் கதைகளால் விரைவாகஅடித்தார்கள். மஹாராஜரே! ரக்தத்தினுல் நனைக்கப்பட்டவர்களான அவ்விருவரும் இரண்டுயானைகள் தந்தங்களால் எதிர்ப்பதுபோலப் பரஸ்பரம்எதிர்த்து விளங்கினுர்கள். விருத்திரனுக்கும் இந்திரனுக்கும் யுத்தம்நடந்ததுபோலப் பிற்பகலில்அவ்விருவருக்கும் அதிககோரமாயும் பஹிரங்கமாயுமுள்ள அப்படிப்பட்டயுத்தம் இவ்வாறுநடந்தது. ஸன்னத்தனுக நிற்கின்ற பீமனைக் கண்டு மகாபலசாலியானஉம்முடையபுத்திரன் மிக்க ஆச்சர்யகரமான மார்க்கங்களில் ஸஞ்சரித்துக்கொண்டு குந்தீபுத்திரனைக்குறித்து எதிர்த்தோடினுன். கோபித்துக்கொண்டிருக்கிறபீமனே மிக்ககோபமுள்ளவனுன அந்தத்துரியோதனனுடைய மகாவேகமுள்ளதும் ஸ்வர்ணத்தினுல் அலங்கரிக்கப்பட்டிருப்பதுமான அந்தக்கதையை அடித்தான். மகாராஜரே! அவ்விரண்டு கதாயுதங்களுடையமோதுதலாலுமுண்டான நெருப்புப்பொறிகளுடன்கூடின சப்தமானது உரைந்துகொள்ளுகின்ற இரண்டுவஜ்ராயுதங்களுடைய சப்தம்போலத் தோன்றியது. மஹாராஜரே! அந்தயுத்தரங்கத்தில் வேகமுள்ளதும் பீமஸேனனுல் பிரயோகிக்கப்பட்டதும் விழுகின்றதுமான அந்தக்கதையினுல் பூமியானது நன்றுக நடுங்கியது. எதிரியானையைக்காண்பதால் கோபங்கொண்ட மதயானைபோன்ற துரியோதனன் போரில் அப்படிப்பட்டகதை திருப்பியடிக்கப்பட்டதைப் பொறுக்கவில்லை. அரசனுன

துர்யோதனன் நிச்சயங்கொண்டவனாகி (க்கதையை) இடப்பக்கத்தில் வட்டமாகச்சுழற்றிப் பயங்கரமான வேகமுள்ளகதையினால் குந்தீபுத்ரனைத் தலையில்அடித்தான். மஹாராஜரே! உமதுபுத்ரனால் அந்தக் கதையினால்அடிக்கப்பட்ட பாண்டுநந்தனனானபீமன் அசையவில்லை. இது ஆச்சர்யம்போல் இருந்தது. மன்னரே! கதையினால் அடிக்கப் பட்டும் பீமன் ஓரடியினின்றும் மற்றோர்அடி அசையாமலிருந்த தாகிய ஆச்சரியத்தை எல்லாச்சேனைகளும் புகழ்ந்தன. பிறகு, பயங் கரமான பராக்ரமத்துடன்கூடின பீமன் மிக்கபெரிதானதும் ப்ரகாச முள்ளதும் பொன்னாலலங்கரிக்கப்பட்டதுமான கதையைத் துரியோ தனன்மீது பிரயோகித்தான். மஹாபலசாலியான துரியோதனன்கலங் காதவனாகி லாகவத்தினால்அந்தஅடியை வீணாகச்செய்தான். அச்சம யத்தில் பெரிதானஆச்சரியம் உண்டாகியது. வேந்தரே! பீமனால்பிர யோகிக்கப்பட்டதும் பேரிடிமுழக்கம்போல் சப்திக்கின்றதும்வீணாகக் கீழேவிழுகின்றதுமான அந்தக்கதையானதுபூமியைநடுங்கச்செய்தது. கௌரவர்களுள் உத்தமனும் மஹாபலசாலியுமான அந்தத்துரியோத னன், கௌசிகங்களென்னும் முறைகளைக் கைப்பற்றி அடிக்கடி மேலேதுள்ளிக்கொண்டு, கதைவிழுந்ததையும் பீமஸேனன் வஞ்சிக் கப்பட்டதையும்அறிந்து அப்பொழுது பீமனை வஞ்சித்து மிக்க கோ பங்கொண்டு கதையினால் மார்பில்அடித்தான். மஹாயுத்தத்தில் கதை யினால் அடிக்கப்பட்டவனும் மதிமயக்கமுற்றவனுமான பீமன் உமது புத்ரனால் அடிக்கப்பட்டுச் செய்யவேண்டியகாரியத்தை அறியவில்லை. அரசரே! அவன் அவ்வாறிருக்கும்பொழுது ஸோமகர்களும் பாண் டவர்களும் தம்எண்ணம் மிகஅழிந்தவர்களும் மகிழ்ச்சியற்றமனமுள் ளவர்களும் ஆனார்கள். அவன் அந்தஅடியினால் யானைபோலக் கோப மூட்டப்பட்டவனாகி யானைபோன்ற உமதுகுமாரனை யானைபோல் எதிர்த்து ஓடினான். பிறகு, பீமன் ஸிம்ஹமானது வேகத்துடன் காட்டுயானையை எதிர்த்து ஓடுவதுபோல உமதுபுத்ரனைநோக்கி விரை வாகக் கதையுடன் எதிர்த்தோடினான். அரசரே! கதையைப்பிரயோ கிப்பதில் ஸமர்த்தனானபீமன் அரசனை உம்முடைய குமாரனுக்கு அருகில் வந்து அவனைக்குறித்துக் கதையைச் சுழற்றினான். பீமஸே னன் அப்பொழுது துரியோதனனை விலாப்புறத்தில் அடித்தான். அவன் அடியினால் மனந்தளர்ச்சியடைந்துஇரண்டுமுழங்கால்களையும் மண்டி யிட்டுப் பூமியில்விழுந்தான். ஜகந்நாதரே! குருகுலத்தில் பிறந்தவர் களுள் சிறந்தவனான அந்தத்துரியோதனன் இரண்டு முழங்கால்களை யும் மண்டியிட்டுப் பூமியில்விழுந்தவுடன், ஸ்ருஞ்சயர்களுடைய ஆர

வாரமானது தோன்றியது. பரதஸ்ரேஷ்டரே! புருஷஸ்ரேஷ்டனுன உம்முடையகுமாரன் அந்தஸ்ருஞ்சயர்களுடைய பேரொலியைக்கேட்டுப் பொருமல் மிக்ககோபம்கொண்டான். மஹாபாகுபலமுள்ள துர்யோதனன் எழுந்திருந்து மஹாஸர்ப்பம்போலச் சீறிக்கொண்டு இரண்டு கண்களாலும் பீமஸேனனைக் கொளுத்துகிறவன்போலப் பார்த்தான். பிறகு, பரதர்களுள்சிறந்தவனுன அந்தத்துரியோதனன், யுத்தத்தில் பீமஸேனனுடைய தலையை நொறுக்கப்போகிறவன்போலக் கதையைக் கையில் எடுத்துக்கொண்டு எதிர்த்துஓடினன். பயங்கரமான பராக்கிரமமுள்ளவனும் மஹாபலசாலியும் மலைபோன்றவனுமான அந்தத்துரியோதனன் மஹாத்மாவானபீமனை நெற்றிஓரத்தில் அடித்தான். அவன் அசையவில்லை. அரசரே! யுத்தத்தில் கதையினுல் அடிக்கப்பட்டு வெளியில்பெருகுகின்ற ரத்தத்துடன்கூடின அந்தப்ருதாபுத்ரனுனபீமன் மதப்பெருக்குள்ள யானைபோல மீண்டும் பிரகாசித்தான். பிறகு, சத்ருக்களை நாசம்செய்பவனும் தனஞ்சயனுக்கு மூத்தவனுமானபீமன், வீரர்களைக்கொல்லுகின்றதும் உருக்குமயமானதும் வஜ்ராயுதத்திற்கும் இடிக்கும் ஒப்பானசத்தத்துடன் கூடியதுமானகதையைக் கையில்எடுத்துப் பலத்தினுல் ஆக்ரமித்துப் பகைவனை அடித்தான். பீமஸேனனுல் அடிக்கப்பட்டவனும் உமது குமாரனுமான அந்தத் துர்யோதனன் உடம்பின்பூட்டுக்கள் கலகலக்கச்செய்யப்பட்டவனுகிக் காட்டில் நன்ருகப்பூத்ததும் காற்றின்வேகத்தால் அடிபட்டதும் சுழலுகின்றதுமான பெரிய ஸாலவிருக்ஷம் போல விழுந்தான். பிறகு, பாண்டவர்கள் பூமியில் விழுந்திருக்கின்ற உம்முடைய புத்ரனைக்கண்டு ஆரவாரம்செய்தார்கள்; ஸந்தோஷிக்கவும் ஸந்தோஷித்தார்கள். பிறகு, உம்முடையகுமாரன் பிரஜ்ஞையை அடைந்து மடுவினின்று ஓர்யானை கிளம்புவதுபோல மேலே கிளம்பினுன். எப்பொழுதும் பொருமையுள்ளவனும் மஹாரதனும் அரசனுமான அந்தத்துரியோதனன் அப்பொழுது நல்ல சிக்ஷையுள்ளவன் போல நாற்புறமும் சுற்றிவந்து எதிரில்நிற்கின்ற பாண்டவனை அடித்தான். அவன் அங்கங்கள் தளர்ந்தவனுகிப் பூமியில் விழுந்தான். அந்தக் குருராஜன் யுத்தத்தில் பீமனைப் பராக்கிரமத்தால் கீழேதள்ளி ஸிம்மநாதம்செய்தான். கதையடியினுல் வஜ்ரத்திற்கு ஸமமான அவனுடையகவசத்தையும் பராக்கிரமத்தால் உடைத்தான். பிறகு, ஆகாயத்தில் ஆரவாரிக்கின்ற தேவர்கள் அப்ஸரஸுகள் இவர்களுடைய பேரொலி தோன்றியது. தேவர்களால் மிகுதியாக வர்ஷிக்கப்பட்ட உத்தமமான பலநிறமுள்ள புஷ்பங்களின்

மிகுதியான வர்ஷமும் விழுந்தது. பிறகு, பூமியில் விழுந்திருக்கின்ற ஆண்மையிற்சிறந்தவனான பீமனையும் பலத்தினால் குறைவற்றவனாயிருக்கின்ற கௌரவனையும் மிக்கதிடமாயிருந்த கவசத்தினுடைய பங்கத்தையும்கண்டு பகைவர்கள் மிகப்பயந்தார்கள். பிறகு, விருகோதரன் ஒருமுகூர்த்தத்திற்குள் பிரஜ்ஞையையடைந்து ரத்தத்தினால் நனைந்திருக்கின்ற தனதுமுகத்தைத் துடைத்துக்கொண்டு தைரியத்தைப் பின்பற்றி இருகண்களையும் புரட்டிவிழித்துப் பலத்தினால் நிலைத்துநின்றான். பிறகு, பராக்கிரமத்தில் யமனுக்குஒப்பான நகுல ஸகதேவர்களும் பார்ஷதனுடன்கூடியவனும் வீர்யமுள்ளவனுமான ஸாத்யகியும் உமதுகுமாரனைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணம்கொண்டவர்களும் 'நான், நான்' என்று விரைபவர்களுமாக அழைத்துக்கொண்டு எதிர்த்துவந்தார்கள். பலசாலியானபாண்டவன் ஸ்ரமமும் நடுக்கமும்நீங்கினவனாகி மறுபடியும் அவர்களைத் திரும்பச்செய்துவிட்டு யமன்போலத் தானே உம்முடையபுத்ரனை, தேவராஜன் உத்தமனான நமுசியை எதிர்த்ததுபோல யுத்தத்தில் எதிர்த்துச் சென்றான்.

---

## ஐம்பத்தோன்பதாவது அத்யாயம்.

### கதாயுத்தபர்வம். (தொடர்ச்சி.)



(பீமஸேனன் துர்யோதனனுடைய தொடையைப் பிளந்தது.)

பிறகு, கௌரவஸ்ரேஷ்டர்களிருவருக்கும் விருத்தியடைந்திருக்கின்ற யுத்தத்தைப்பார்த்து, அச்சமயத்தில், அர்ஜுனன் புகழுள்ளவரான வாஸுதேவரைநோக்கி, 'இந்த இரண்டுவீரர்களுள் யுத்தத்தில் எவன் சிறந்தவனென்று உம்மால் எண்ணப்பட்டிருக்கிறான்? ஜனார்த்தனரே! யாருக்கு எந்தக்குணம் சிறந்தது? இதனைச் சொல்வீராக' என்றுவினவ, வாஸுதேவர் கூறலானார்.

'உபதேசம் இருவருக்கும் ஸமானம். பீமனோ பலத்தினால் அதிகரித்தவன். இந்தத் துரியோதனன் விருகோதரனைக்காட்டிலும் ஸமர்த்தன்; முயற்சியுள்ளவன். பீமஸேனனோ தர்மத்தினால் யுத்தஞ்செய்வானாகில் ஜயிக்கமாட்டான். அந்யாயத்தினால் யுத்தஞ்செய்தால் ஸுயோதனனைக் கொல்லவே கொல்வான். தேவர்களால் அஸுரர்கள் மாயையினால் ஜயிக்கப்பட்டார்களென்று நாம் கேட்டிருக்கிறோம். அப்படிப்பட்ட விரோசனன் இந்திரனால்

மாயையினலேயே ஜயிக்கப்பட்டான். இந்திரன் விருத்திரனுடைய தேஜஸை மாயையினல் நாசஞ்செய்தான். ஆதலால், வீரனை இந்தவிருகோதரன் மாயையைக் கைப்பற்றவேண்டும். தனஞ்சய! சூதாடும்ஸமயத்தில், 'உன்னுடைய இரண்டுதொடைகளையும் யுத்தத்தில் கதையினல் பிளப்பேன்' என்று துர்யோதனனைக் குறித்துப் பீமன் பிரதிஜ்ஞைசெய்திருக்கிறன். பகைவர்களை அழிப்பவனை அப்படிப்பட்ட இந்தப்பீமஸேனன் அந்தப்பிரதிஜ்ஞையையும் நிறைவேற்றட்டும். மாயாவியான அரசனை மாயையினலேயே நாசஞ்செய்யட்டும். இவன் பலத்தைப்பின்பற்றி நியாயத்தோடு போர்புரிவானகில், அதனல், அரசரான யுதிஷ்டிரர் ஆபத்திற்கு உள்பட்டவராவார். பாண்டுநந்தன! மீண்டும் சொல்லுவேன். என்னிடத்திலிருந்து தெரிந்துகொள். தர்மராஜருடைய அபராதத்தினல் மீண்டும் நம்மைப் பயம் வந்துஅடைந்தது. மிக்கபெரிதான கார்யத்தைச் செய்து பீஷ்மர் முதலான கௌரவர்களைக்கொன்று ஜயமும் சிறந்த கீர்த்தியும் அடையப்பட்டுவிட்டன. வைரமும் தீர்த்துக்கொள்ளப்பட்டுவிட்டது. ஆதலால், இவ்வண்ணம் அடையப்பட்ட வெற்றியானது மீண்டும் ஸம்சயத்திற்கிடமாக்கப்பட்டது. பாண்டவவீர! ஒருவனை ஜயிக்கும் விஷயத்தில் இப்படிப்பட்ட பந்தயமானது ஏற்படுத்தப்பட்டமையால் தர்மராஜருக்கு இதுபெரிதான துர்ப்புத்தி. துர்யோதனன் ஸமர்த்தன்; வீரன்; அவ்வாறே ஒரு வழியை அடைந்திருப்பவன்; மேலும், புராதனமாயிருப்பதும் தத்வார்த்தத்துடன்கூடியதுமான இந்த ஶ்லோகமானது சுக்ராசாரியரால் கானம்பண்ணப்பட்டிருப்பதாகக் கேள்வி. அதனைச்சொல்லுகிறேன்; என்னிடத்தினின்றும் கேள். அதன்பொருள், 'முறியஅடிக்கப்பட்டவர்களும் மீண்டும் திரும்பிவருகின்றவர்களும் ஜயத்தை விரும்புகின்றவர்களுமான மிகுந்திருக்கின்ற பகைவர்களிடமிருந்து பயப்படவேண்டும். ஏனென்றல், அவர்கள் ஒருநிச்சயத்தையடைந்தவர்கள்' என்பது. தனஞ்சய! ஸாஹஸத்தினல் எதிர்ப்பவர்களும் உயிரில் ஆசையற்றவர்களுமான வீரர்களுக்கெதிரில் இந்திரனும் நிற்பது அஸாத்தியம். முறிய அடிக்கப்பட்டவனும் சேனைகொல்லப்பட்டவனும் மடுவில் பிரவேசித்தவனும் தோல்வியடைந்து கானகத்தை அடையவிருப்பங்கொண்டவனும் ராஜ்யத்தை அடைவதில் ஆசையற்றவனுமான இந்தத் துரியோதனனைக் கற்றறிந்தவனை எவன் யுத்தத்தில் தேடி மறுபடியும் த்வந்துவயுத்தத்திற்கு அழைப்பான்? எவன் பீமஸேனனைக்கொல்லவேண்டுமென்கிற எண்ணத்தி

ளூல் பதின்மூன்று வருஷம் கதையினுல் நல்ல பயிற்சியைப்பெற்று மேலாகவும் குறுக்காகவும் ஸஞ்சரிக்கிருனே அப்படிப்பட்ட துர்யோதனன் ஜயிக்கப்பட்டிருக்கின்ற நம்முடைய ராஜ்யத்தைக் கவர்ந்து கொள்ளாமலிருப்பானு? மிக்க புஜபலமுள்ள பீமஸேனன் அந்யாயத்தினுல் இவனைக் கொல்லாமல்போனுல் குருவம்சத்திலுதித்த இந்தத்தார்த்தராஷ்டிரன் உங்களுக்கு அரசனுவான்' என்றுசொன்ஞர். தனஞ்சயனே மஹாத்மாவான கேசவருடைய இந்தவார்த்தையைக்கேட்டுப் பீமஸேனன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே இடத்தொடையைத் தட்டினுன். பிறகு, பீமன் குறிப்பைத்தெரிந்துகொண்டு கதையுடன் யுத்தரங்கத்தில் விசித்திரமானமண்டலகதிகளிலும் யமகங்களிலும் இதர கதிகளிலும் ஸஞ்சாரம்செய்தான். அரசரே ! பாண்டவன் வலமாகவும் இடமாகவும் கோமூத்ரி கதியுடனும் சுற்றிச் சத்துருவை மயக்குகிறவன்போல ஸஞ்சாரம்பண்ணினுன். அவ்வாறே, கதையின்வழியில் ஸமர்த்தனுன உம்முடைய புத்திரனும் பீமஸேனனைக்கொல்லவேண்டுமென்கிற எண்ணத்தினுல் லாகவத்துடன் ஆச்சர்யமாக ஸஞ்சாரம்செய்தான். யுத்தத்தில் கோபங்கொண்ட இரண்டுயமன்போன்றவர்களும், சந்தனங்களாலும் காரகில் சாந்தினுலும் பூசப்பட்டிருக்கின்ற கோரமான இரண்டுகதாயுதங்களைச் சுழற்றுகின்றவர்களும், வைரத்தினுடைய முடிவை அடையஎண்ணங்கொண்டவர்களும்,ஒருவரையொருவர் கொல்லவிரும்பியவர்களும், மஹாவீரர்களும், புருஷஸ்ரேஷ்டர்களுமான அவ்விருவரும் ஸர்ப்பத்தின் மாம்ஸத்தில் விருப்பமுள்ள இரண்டுகருடபக்ஷிகள் சண்டையிடுவதுபோலப் போர்புரிந்தார்கள். அரசரே ! அந்த யுத்தத்தில் விசித்திரமான மண்டலகதிகளில் ஸஞ்சரிப்பவர்களும் ஸமமாக அடிக்கின்றவர்களும் சூரர்களும் பலசாலிகளும் வாயுவினுல் இரண்டுகடல்கள் பொங்குவதுபோலப் பொங்குகின்றவர்களுமான துரியோதனராஜன் பீமன் இருவருடையகதைகளின் மோதுதலாலும் உண்டாகின்ற அக்னிஜ்வாலைகள் அவ்விடத்தில் தோன்றின. மதங்கொண்ட இரண்டு யானைகள்போல ஸமமாக அடிக்கின்றவர்களான அவ்விருவருடைய கதைகளின் மோதுதலாலும் உண்டாகின்றபேரொலியானது தோன்றியது. அப்பொழுது பயங்கரமாயும் மிக்க ஸங்குலமாயும் இருக்கின்ற அந்த யுத்தத்தில் சண்டைசெய்கின்றவர்களும் பகைவர்களை அடக்குகிறவர்களுமான அவ்விருவரும் களைப்புற்றுர்கள். சத்துருக்களைத்தபிக்கச்செய்பவரே ! அவ்விருவரும் ஒருமுகூர்த்தகாலம் தேறுதலடைந்து மறுபடியுமே கோபங்

கொண்டவர்களாகப் பெரியகதைகளைக் கையில் எடுத்து அடித்துக் கொள்ள ஆரம்பித்தார்கள். ராஜேந்திரரே! கதையின் அடிகளால் பரஸ்பரம் காயப்படுத்திக்கொள்ளுகின்ற அவ்விருவருக்கும் மிக்ககோரமும் வெளிப்படையுமானயுத்தம் நடந்தது. யுத்தத்தில் விரைவாகச் செல்பவர்களும் காளையினுடைய கண்போன்ற கண்களை யுடையவர்களும் பலசாலிகளுமான அவ்விருவீரர்களும் சேற்றில் நிற்கின்ற இரண்டு கடாமாடுகள்போல ஒருவரோடொருவர் அடித்துக்கொண்டார்கள். எல்லா அங்கங்களிலும் காயப்படுத்தப்பட்டவர்களும் ரக்தத்தினால் நாற்புறத்திலும் நனைக்கப்பட்டவர்களுமான அவ்விருவீரர்களும் இமயமலையில் பூத்திருக்கின்ற இரண்டு பலாசவிருக்ஷங்கள் போலக் காணப்பட்டார்கள். துர்யோதனனோ பிருதாபுத்ரனான பீமனால் துன்பம் விளைக்கக்கூடிய அவகாசம் காண்பிக்கப்பட்டபோது சிறிது புன்னகையுடன் விரைவாக நெருங்கினான். விவேகியும் பலசாலியுமான விருகோதரன் ஒருநொடியில் அந்தத் துர்யோதனன் அருகில் வந்திருப்பதைக் கண்டு அதிகவேகத்தோடு அவன்மீது கதையைப் பிரயோகித்தான். உம்முடைய குமாரன் அந்த அடியைக்கண்டு அந்த இடத்திலிருந்து விலகினான். அந்தக்கதை வீணாகப் பூமியில் விழுந்தது. கௌரவர்களிற் சிறந்தவரே! உம்முடைய குமாரன் அதிகம் பரபரப்பினால் அந்த அடியை விடுவித்துக்கொண்டு பீமஸேனனையும் கதையினால் அடித்தான். அளவற்ற தேஜஸுள்ள அந்தப்பீமஸேனனுக்கு ரக்தம்பெருகியதனாலும் அடி பெரிதாகவிழுந்ததனாலும் மூர்ச்சையுண்டாயிற்று. உம்முடையபுத்ரன் யுத்தத்தில் அந்தப்பாண்டவன் பீடிக்கப்பட்டதை அறியவில்லை. பீமனும் மிகப்பீடிக்கப்பட்டிருக்கின்ற சரீரத்தைத் தாங்கிக் கொண்டான். உம்முடைய குமாரன் யுத்தத்தில் அந்தப்பீமஸேனனை அடிப்பதற்கு ஸன்னத்தமாக நிற்பவனாக எண்ணினான். அக்காரணத்தினால் மறுபடியும் அவனை அடிக்கவில்லை. மன்னரே! பிறகு, பாண்டவன் ஒரு முகூர்த்தகாலம் தேறுதலடைந்து கதையை எடுத்துக்கொண்டு பக்கத்திலிருக்கும் துர்யோதனனை நோக்கி வேகத்தோடு எதிர்த்துச்சென்றான். பரதர்களுள் சிறந்தவரே! எதிர்த்துவருகின்றவனும்பரபரப்புள்ளவனும் அளவுகடந்தபராக்கிரமமுள்ளவனுமான அந்தப் பீமஸேனனைக்கண்டு அவனுடையஅந்தக்கதையடியை வீணாகச் செய்ய எண்ணங்கொண்டவனும் பெரியமனமுள்ளவனுமான உம்முடைய குமாரன் நிற்பதில்புத்தியைச்செலுத்தி விருகோதரனை வஞ்சிக்கவிருப்பங்கொண்டு மேலேஎழும்பக்கருதினான். பீமஸேனனோ

அரசனுடைய அந்த எண்ணத்தை அறிந்துகொண்டான். அரசரே! பிறகு, பாண்டவன் கதிபேதத்தினுல் வஞ்சிக்கிறவனும் மறுபடியுமே மேலே எழும்புகின்றவனுமான துர்யோதனனுக்கு எதிரில்ஓடிச் சிங்கம் போல நன்ருகமேலேபாய்ந்து இரண்டுதொடைகளையும் லக்ஷயம் வைத்து வேகத்தோடு கதையைப் பிரயோகித்தான். அரசரே! பிறகு, பயங்கரமான செய்கையையுடைய பீமனுல் பிரயோகிக்கப்பட்டதும் வஜ்ராயுதம்போன்றதுமான அந்தக் கதாயுதமானது துர்யோதனனுடைய இனியதோற்றமுள்ள இரண்டுதொடைகளையும் முறித்தது. அரசரே! பீமஸேனனுல் தொடைகள்முறிக்கப்பட்டவனும் புருஷஸ்ரேஷ்டனுமான அந்த உம்முடையகுமாரன் பூமியைஎதிரொலியிடும்படிசெய்துகொண்டு விழுந்தான். இடிகளுடன்கூடினகாற்று வீசிற்று. புழுதிமழையும் பொழிந்தது. பெருமரங்களுடனும் சிறுமரங்களுடனும் மலைகளுடனுங்கூடினபூமியும் நடுங்கியது. பூமிக்கு நாதனுன அந்தத்துரியோதனன் விழுந்தவுடன், பேரொலியுள்ளதும் பிரகாசிக்கின்றதும் இடியுடன்கூடியதும் பயங்கரமானதும் பெரிதுமானகொள்ளியும்விழுந்தது. பாரதரே! உம்முடையபுத்திரன்தள்ளப்பட்டவுடனே, அச்சமயத்தில் இந்திரன் அப்படிப்பட்டரக்தமழையையும் புழுதிமழையையும் பொழிந்தான். பாரதரே! அச்சமயத்தில் ஆகாயத்தில் யக்ஷர்கள் ராக்ஷஸர்கள் அவ்வாறே பிசாசங்கள் இவர்களுடையபேரொலிகேட்கப்பட்டது. கோரமான அந்த ஒலியினுலே எல்லாத்திக்குக்களிலும் அனேகமிருகங்கள்பக்ஷிகள்இவற்றின் அதிகோரமானசப்தம் தோன்றியது. உம்முடையபுத்திரன் கீழேதள்ளப்பட்டவுடனே, அவ்விடத்தில் மிகுந்திருக்கின்ற குதிரைகளும் யானைகளும் மனிதர்களும் பெரியசப்தத்தை வெளியிட்டார்கள். உம்முடையபுத்திரன் தள்ளப்பட்டவுடனே, பேரிகள் சங்கங்கள் மிருதங்கங்கள் இவற்றின்பேரொலியும் தோன்றியது; பாதாளமும்சென்றது. அரசரே! அச்சமயத்தில் திக்குக்கள் அநேக கால்களுள்ளவைகளும் அனேககைகளுள்ளவைகளும் கோரமான காட்சியுள்ளவைகளும் கூத்தாடுகின்றவைகளும் பயத்தைக்கொடுக்கின்றவைகளுமான தலையில்லா முண்டங்களால் வியாபிக்கப்பட்டன. மன்னரே! உம்முடைய புத்திரன் தள்ளப்பட்டவுடனே, த்வஜமுள்ளவர்களும் அஸ்திரமுள்ளவர்களும் அவ்வாறே சஸ்திரமுள்ளவர்களும் நடுங்கினுர்கள். அரசர்களுள்சிறந்தவரே! மடுக்களும் கிணறுகளும் ரக்தத்தைக்கக்கின. அதிகவேகமுள்ள நதிகளும் எதிர்த்தோடின. வேந்தரே! உம்முடைய புத்திரனுன துர்யோதனன் விழுந்தவுடனே, அப்பொழுது ஸ்திரீகள்

புருஷர்கள் போலவும் புருஷர்களெல்லாம் ஸ்திரீகள் போலவும் ஆனார்கள். பரதர்களுள் சிறந்தவரே! அந்த ஆச்சர்யகரமான உத்பாதங்களைக் கண்டு எல்லாப் பாஞ்சாலர்களும் பாண்டவர்களும் கலங்கின மனத்தையுடையவர்கள் ஆனார்கள். பாரதரே! தேவர்களும் கந்தர்வர்களும் அவ்வாறே அப்ஸரஸுகளும் உமது இரண்டுகுமாரர்களுடைய ஆச்சர்யமான யுத்தத்தைப்பேசிக்கொண்டு இஷ்டப்படி சென்றார்கள். ராஜேந்திரரே! அவ்வாறே ஸித்தர்களும் வாயுவுடன் ஸஞ்சரிக்கிற சாரணர்களும் நரஶ்ரேஷ்டர்களான பீமதுர்யோதனர்களைப் புகழ்ந்துகொண்டு வந்தபடியே சென்றார்கள்.

---

## அறுபதாவது அத்யாயம்.

### கதாயுத்தபர்வம். (தொடர்ச்சி.)



(பீமஸேனன் துர்யோதனனுடைய அநியாயங்களை நினைவூட்டி இடக்காலால் அவன்தலையை உதைத்ததும், யுதிஷ்டிரர் துர்யோதனனைத் தேற்றியதும்.)

உயர்ந்த பெரிய விருக்ஷம்போலத் தள்ளப்பட்டிருக்கின்ற அந்தத்துர்யோதனனைக் கண்டு அவ்விடத்திலிருந்த பாண்டவர்களனைவரும் மனத்தில் களிப்படைந்தார்கள். சிங்கத்தினால் தள்ளப்பட்டமதங்கொண்ட யானைபோலிருக்கின்ற துர்யோதனனை எல்லாப்பாண்டவர்களும் ஸோமகர்களும் மயிர்சிலிர்த்தவர்களாகிக் கண்டார்கள். பிறகு, பிரதாபமுள்ள பீமஸேனன், அடித்துத் தள்ளப்பட்டிருக்கின்ற அந்தக் கௌரவராஜனான துர்யோதனனை அணுகி, 'புத்தியில்லாதவனே! கெட்டபுத்தியுள்ளவனே! முற்காலத்தில் ஸபையில் ஒற்றைவஸ்திரம் தரித்தவளான த்ரௌபதியைநோக்கிப் பரிஹஸித்துக்கொண்டு 'பசு, பசு' என்று எந்த வார்த்தையைச்சொன்னாயோ அந்தப்பரிஹாஸத்தினுடைய பலனை இப்பொழுது நீ அடை' என்று சொன்னான். இவ்வாறு சொல்லிவிட்டு அந்தப் பீமஸேனன் இடக்காலால் துர்யோதனனுடைய தலையில் உதைத்தான். ராஜஸிம்மனான துர்யோதனனுடைய தலையைக் காலால் புரட்டிப் புரட்டி உதைத்தான். நராதிபரே! அவ்வாறே, கோபத்தால் கண்கள் மிகச் சிவந்தவனும் பகைவர்படையைப் பீடிப்பவனுமான பீமன் மறுபடியும் சொல்லிய வாக்யத்தைக் கேளும். 'எந்த மூடர்கள் முற்காலத்தில் எங்களைப்பார்த்து, 'பசு, பசு' என்று கூத்தாடினார்களோ அவர்களைப்பார்த்து நாங்கள், இப்பொழுது

'பசு, பசு' என்று அடிக்கடி பிரதிக்கூத்தாடுகிறோம். எங்களுக்கு த்ரோகமாவது நெருப்பாவது சூதாட்டமாவது வஞ்சனையாவது இல்லை. நாங்கள் எங்களுடைய புஜபலத்தை ஆதாரமாகக்கொண்டு பகைவர்களை நன்ருகப் பீடிக்கின்றோம்' என்ருன். அந்த விருகோதரன் வெகுகாலம்கழித்து வைரத்தினுடைய அக்கரையை அடைந்து மெதுவாகச்சிரித்துக்கொண்டு யுதிஷ்டிரரையும் கேசவரையும் ஸ்ருஞ்சயர்களையும் தனஞ்சயனையும் மாத்ரீபுத்திரர்களையும் பார்த்து, 'வீட்டுக்கு விலக்கான த்ரௌபதியை ஸபையில் இழுத்துவந்தவர்களும் அவளை ஆடையில்லாதவளாகச் செய்ய முயன்றவர்களுமான தார்த்தராஷ்டிரர்கள் த்ரௌபதியினுடைய தவத்தினுல் யுத்தத்தில் பாண்டவர்களால் கொல்லப்பட்டிருப்பதைப் பாருங்கள். க்ரூரர்களும் நம்மை முன்பு, 'எள்ளுப் பதர்கள்' என்று சொன்னவர்களுமான திருதராஷ்டிர ராஜனுடைய குமாரர்கள் பரிவாரங்களோடும் பந்துக்களோடும் நம்மால் கொல்லப்பட்டார்கள். நாம் இஷ்டப்படி ஸ்வர்க்கத்தையோ நரகத்தையோ அடைவோம்' என்று சொன்னுன். மறுபடியும் பீமஸேனன் பூமியில் விழுந்திருக்கின்ற அரசனை துர்யோதனனுடைய தோளையடைந்திருக்கின்ற அந்தக் கதையைக் கையிலெடுத்துக்கொண்டு இடக்காலால் அவனைத் தலையைமிதித்து, 'வஞ்சகா' என்று சொன்னுன். மன்னரே! ஸந்தோஷமுள்ளவனும் அல்பபுத்தியுள்ளவனுமான பீமஸேனன் குருராஜனுடைய தலையில் காலை வைத்ததைப் பார்த்துத் தர்மாத்மாக்களும் சிறந்தவர்களுமான ஸோமகர்கள் மகிழவில்லை. உம்முடைய புத்திரனை அவ்வாறு கொன்று தற்புகழ்ச்சிசெய்துகொள்ளுகின்றவனும் பலவாறு கூத்தாடுகின்றவனுமான விருகோதரனைப்பார்த்துத் தர்மராஜர் இந்தவசனத்தை உரைக்கலானுர். 'பீம! வைரத்தினுடைய கடனைத் தீர்த்துக்கொண்டாய். நல்லசெய்கையினுலோ கெட்டசெய்கையினுலோ உன்னுல் பிரதிஜ்ஞை நிறைவேற்றப்பட்டது. இப்பொழுது ஓய்ந்துவிடு. இவனுடையதலையைக்காலால் உதைக்காதே. தர்மமானது உன்னை மீறிப்போகவேண்டாம். தோஷமற்றவனே! இவன் அரசன்; ஞாதி; அடிக்கப்பட்டுமிருக்கிருன். இது நியாயமன்று. பீம! பதினேர் அக்ஷௌஹிணிகளுக்குநாதனும் கௌரவர்களுக்குத்தலைவனும் ஞாதியுமான அரசனைக் காலால் தொடாதே. உறவினரையும் மந்திரிகளையும் படையையும் இழந்தவனும் யுத்தத்தில் அடிக்கப்பட்டவனும் அரசனுமான இவன் எல்லாவிதத்தினுலும் (நம்மால்) துக்கிக்கத்தக்கவன். அரசனை இவன் பரிஹஸிக்கத்

தக்கவனல்லன். மந்திரிகளும் உறவினர்களும் மைந்தர்களும் கொல்லப்பட்ட உன்னுடைய ப்ராதாவான இந்தத்துரியோதனன் ஸந்ததி அற்றவனாக அழிந்தான். உன்னால்செய்யப்பட்ட இந்தவிஷயம் நியாயமன்று. முன்பு ஜனங்கள், 'இந்தப்பீமஸேனன் தார்மிகன்' என்று உன்னைச்சொன்னார்கள். பீமஸேன! அப்படிப்பட்ட நீ எந்தக்காரணத்தினால் அரசனைக் காலால் தீண்டுகிறாய்?' என்றார். யுதிஷ்டிரர், பீமஸேனனைப் பார்த்து இவ்வாறு சொல்லிவிட்டுக் கண்ணீருடன்கூடினகுரலுள்ளவராகவும் தைன்யமுற்றவராகவும், பகைவர்களை அடக்குபவனான துர்யோதனனுடைய அருகில்வந்து, 'அப்பா! நீ கோபியாதே. உனக்காகத் துக்கமும்படாதே. செய்யப்பட்டிருக்கிற மிக்ககோரமான கர்மம் அனுபவிக்கப்படுகிறதென்பது நிச்சயம். கௌரவர்களுட் சிறந்தவனே! நாங்கள் உன்னைக் கொல்லஎண்ணமுள்ளவர்களானதும் நீ எங்களைக் கொல்ல எண்ணங்கொண்டவனானதுமாகிய கொடும்பயன் பிரம்மதேவரால் நமக்குக் கட்டளையிடப்பட்டது, இது நிச்சயம். பாரத! பேராசையினாலும் மதத்தினாலும் பால்யத்தினாலும் உன்குற்றத்தினாலும், பெரிதான இப்படிப்பட்ட வியஸனத்தை அடைந்தவனாகிறாய். தோழர்களையும் ப்ராதாக்களையும் அவ்வாறே பித்ருக்களையும் புத்திரர்களையும் பௌத்திரர்களையும் மற்றவர்களையும் மாளும்படிசெய்து, பிறகு மாண்டாய். உன்னுடைய அபராதத்தினால் எங்களால் உன்னுடைய ப்ராதர்க்கள் கொல்லப்பட்டார்கள். ஞாதிகளும் கொல்லப்பட்டார்கள். தெய்வமானது தாண்டமுடியாததென்று நினைக்கிறேன். தோஷமற்றவனே! கௌரவ! நீ உனக்காகத்துக்கிக்கலாகாது. உன்னுடைய மரணம் சிலாக்கியமானது. எல்லா நிலைமைகளிலும் நாங்களே இப்பொழுது துக்கிக்கவேண்டியவர்கள். அப்படிப்பட்ட உறவினர்களாலும் நண்பர்களாலும் விடுபட்டவர்களான நாங்கள் தீனமான ஸ்திதியிலிருக்கப்போகிறோம். அவ்வண்ணம் சோகத்தினால் தளர்ச்சியடைந்த மனத்தையுடையவர்களும் துக்கத்தினால் மூடப்பட்டவர்களும் விதவைகளுமான ப்ராதாக்கள் புத்திரர்கள் இவர்களுடைய மனைவிகளை எவ்வாறு பார்ப்பேன்? அரசனே! நீ ஒருவன் நல்ல நிலைமையை அடைந்தவன். ஸ்வர்க்கத்தில் உனக்கு வாஸம் சாஸ்வதம். நாங்கள் நரகமென்றுபெயர்கொண்ட குரூரமான துக்கத்தை அடையப்போகிறோம். துக்கத்தை அடைந்தவர்களும் விதவைகளும் சோகத்தினால் மெலிவடைந்தவர்களுமான திருதராஷ்டிரருடைய நாட்டுப்பெண்களும் அவர்களுடைய நாட்டுப்பெண்களும் நிச்சயமாக எங்களை நிந்திக்கப்போகிறார்கள்' என்றார். தர்மநந்தனரும் அரசரு

மான யுதிஷ்டிரர் இவ்வண்ணமுரைத்து அதிக துக்கத்தினால் பீடிக்கப்பட்டவராகிப் பெருமூச்சுவிட்டார்; நெடுங்காலம் புலம்பவும் புலம்பினார்" என்று கூறினான்.

---

## அறுபத்தோராவது அத்யாயம்.

## கதாயுத்தபர்வம். (தொடர்ச்சி.)



(பீமன் அநியாயம்செய்தானென்று கோபங்கொண்ட பலராமர் அவனைக்கொல்லச்சென்றதும், கோவிந்தர் அவரைச் சமாதானம்செய்ததும், பிறகு, பலராமர் துவாரகைக்குச் சென்றதும், யுதிஷ்டிரர் கிருஷ்ணனோடும் பீமனோடும் ஸல்லாபம்செய்ததும்.)

திருதராஷ்டிரன், "ஸூத! அதர்மத்தினால்அரசன் கொல்லப்பட்டதைக்கண்டு அப்பொழுது மாதவருக்குத்தமையனும் மஹாபலசாலியுமான பலதேவர், என்னசொன்னார்? ஸஞ்சய! கதாயுத்தத்தின் விசேஷங்களை அறிந்தவனும் கதாயுத்தத்தில் ஸமர்த்தனுமான ரோஹிணீபுத்திரன் எதைச்செய்தானோ அதை எனக்குச் சொல்வாயாக" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"பலசாலியும் அடிப்பவர்களுள்சிறந்தவருமான ராமர் பீமஸேனனால் உம்முடையகுமாரன் தலையிலுதைக்கப்பட்டதைக்கண்டு அதிக கோபங்கொண்டார். பிறகு, ஹலாயுதர் அரசர்களுடையமத்தியில் கையை உயரத்தூக்கிக்கொண்டும் கோரமானதீனஸ்வரத்தைவெளியிட்டுக்கொண்டும், 'பீம! சீ, சீ' என்றும் 'அந்தோ! தர்மயுத்தத்தில் நாபிக்குக்கீழேஅடிக்கிறதென்பது நிந்திக்கத்தக்கது. விருகோதரன் கதாயுத்தத்தில் செய்த இது பார்க்கப்பட்டதில்லை. நாபிக்குக் கீழே அடிக்கக்கூடாதென்பது சாஸ்திரத்தின் நிச்சயம். இவனோ சாஸ்திரத்தை விட்டுவிட்டுத் தன் இஷ்டப்படி நடக்கிறான்' என்றும் கூறினார். அதைஅதைக்கூறுகின்ற அந்தப் பலராமருக்கு அதிககோபம் உண்டாகிவிட்டது. மஹாராஜரே! பிறகு, பலதேவர் அரசனைப்பார்த்துக் கோபத்தினால் கண்கள் மிகச்சிவந்தவராகிப் பின்வரும் வசனத்தை உரைக்கலானார்.

'கிருஷ்ண! இவன் கீழேவிழுந்தவனல்லன். இவன் எனக்கு ஸமானன்; நிகரில்லாதவன். ஆச்ரிதர்களின் பலக்குறைவினால் ஆச்ரயமானது அலக்ஷ்யம்செய்யப்படுகிறது' என்றார். பிறகு, பலசாலி

யான ராமர் கலப்பையைத் தூக்கிக்கொண்டு பீமனை எதிர்த்துச்சென்றார். கையை ஓங்கிக்கொண்டிருப்பவரும் மஹாத்மாவுமான அந்தப் பலராமருடைய உருவமானது பற்பலதாதுக்களால் விசித்திரமாயுள்ளதும் வெண்ணிறமுள்ளதுமான பெரியமலைக்கு ஒப்பானதாக இருந்தது. மஹாராஜரே! பலராமரைக்கண்டு, வீரர்களும் அஸ்திரங்களை அறிந்தவர்களும் அர்ஜுனனுடன்கூடினவர்களுமான பிராதாக்களோடுசேர்ந்தவனும் பலசாலியுமானபீமன், வ்யஸனத்தை அடையவில்லை. பிறகு, பலசாலியானகேசவர் விநயமுள்ளவராக ராமரைப் பருத்து உருட்சியாயுள்ள இருகைகளாலும் பிரயத்தினத்தினால்வலிந்துதடுத்தார். ராஜேந்திரரே! அப்பொழுது, யதுசிரேஷ்டர்களான வெண்மைநிறமுள்ள பலராமரும் கருமைநிறமுள்ள வாஸுதேவருமாகிய இருவரும் சேர்ந்திருக்கின்ற கைலாஸமலையும் அஞ்சனமலையும்போல அதிகமாக விளங்கினார்கள். அரசரே! ஸாயங்காலத்தில் ஆகாசத்தை அடைந்திருக்கின்ற சந்திரஸூர்யர்கள்போல் விளங்கினார்கள். கேசவர் கோபமுள்ள இந்தப்பலராமரைத் தணிக்கிறதற்காகக் கூறலானார். 'தன்னுடையவளர்ச்சி, மித்திரர்களுடைய வளர்ச்சி, மித்திரர்களுடைய மித்திரர்களின் வளர்ச்சி, இவற்றுக்குமாறாகப் பகைவருக்கு நேரும் அவர்களின் குறைவு, அவர்களின் மித்திரர்களுடையகுறைவு, மித்திரமித்திரர்களுடையகுறைவு இவைஆறும் தனக்கு விருத்திகரமானவை. எப்பொழுது இவை தன்னிடத்திலும் மித்திரனிடத்திலும் மாறுபட்டிருக்குமோ அப்பொழுது மனவருத்தத்தை அடையவேண்டும். சீக்கிரமாக வைரத்தின்சாந்தியைச் செய்துகொள்ளவேண்டும். பாண்டவர்கள் நமக்கு ஸஹஜமித்திரர்கள்; சுத்தமான பௌருஷமுள்ளவர்கள்; நம்முடைய அத்தைபிள்ளைகள். அவர்கள் பகைவர்களால் அதிகமாகத் துன்புறுத்தப்பட்டிருக்கிறார்கள். பிரதிஜ்ஞையைப் பாதுகாப்பது க்ஷத்திரியனுக்குத் தர்மமென்று நீர் அறிந்துகொள்ளும். பீமனால் ஸபையின்கண், 'கதையினால் துர்யோதனனுடைய இருதொடைகளையும் மஹாயுத்தத்தில் பிளப்பேன்' என்று முன்பு பிரதிஜ்ஞைசெய்யப்பட்டதன்றோ? சத்துருக்களைத் தபிக்கச்செய்பவரே! 'உன்னுடைய இருதொடைகளையும் பீமன் கதையினால் பிளக்கப்போகிறான்' என்று மைத்ரேயமஹரிஷியினால் (துரியோதனன்) முந்தியே சபிக்கப்பட்டுமிருக்கிறான். ஆதலால், நான் தோஷத்தைக்காணவில்லை. பிரலம்பனை ஸம்ஹரித்தவரே! நீர் கோபித்துக்கொள்ளவேண்டாம். புருஷஸ்ரேஷ்டரே! நம்மைச்சேர்ந்தவர்களும் ஸுககரமான நேசத்தையுடையவர்களுமான பாண்டவர்

கேளோடு பிறப்பிலேயே உறவானது நமக்குஏற்பட்டிருக்கிறது. அவர்களுடையவிருத்தியினுலன்ருே நமக்குவிருத்தி? கோபித்துக்கொள்ளாதீர்' என்றுகூறினுர். தர்மங்களை அறிந்தவரான பலராமர் வாஸுதேவருடைய வசனத்தைக்கேட்டு, 'கோவிந்த! தர்மம் ஸாதுக்களால் தரிக்கப்பட்டிருக்கிறது. அந்தத்தர்மமும் (அர்த்தம் காமம்) இரண்டினுலும் சுருக்கத்தை அடைகிறது. மிக்கபேராசையுள்ளவனுக்கு அர்த்தம் பிரதானம். விஷயங்களில் மிக்கபற்றுதலுள்ளவனுக்குக் காமம் பிரதானம். எவன் தர்மார்த்தங்களையும் தர்மகாமங்களையும் அர்த்தகாமங்களையும் பீடிக்காமல் தர்மார்த்தகாமங்களை அனுஷ்டிக்கிருனே அவன் மிகுதியான ஸுகத்தைஅடைகிருன். கோவிந்த! நீயோ என்னைப்பார்த்து இஷ்டப்படிசொன்னுய். பீமஸேனன் தர்மத்தைக் கெடுத்ததினுல் அப்படிப்பட்ட இந்த விஷயமனைத்தும் நிலைகுலையும்படி செய்யப்பட்டது' என்றுகூறினுர்.

மாதவர், 'தேவரீர் கோபமில்லாதவர்; தர்மாத்மா; எப்பொழுதும் தர்மத்தில்அன்புள்ளவரென்று உலகத்தில்பிரஸித்திபெற்றிருக்கிறீர். ஆதலால், தணிந்துவிடும்; கோபம் பாராட்டவேண்டாம். கலியுகம் வந்துவிட்டதென்பதைத் தெரிந்துகொள்ளும். பாண்டவனுடைய பிரதிஜ்ஞையையும் அறிவீராக. ஆதலால், புருஷஶ்ரேஷ்டனுன பீமன் வஞ்சனையைப் பிரதானமாகக்கொண்ட துர்யோதனனை யுத்தத்தில் கொன்று வைரம் பிரதிஜ்ஞை இவ்விரண்டின் விஷயத்திலும் கடனைத் தீர்த்துக்கொண்டவனுகட்டும். எவன் வஞ்சனையில் புத்தியைச் செலுத்தின சத்துருவை யுத்தத்தில் வஞ்சனையினுல் கொல்வானே அவனுக்கு அந்தச்சண்டையில் அதர்மமில்லை. யுத்தத்தில் போர்புரிகின்றவனும் கௌரவர்களுக்கும் விருஷ்ணிகளுக்கும் கீர்த்தியை உண்டுபண்ணுகிறவனும் வீரனுமான சத்துருவைப் பீமன் கொன்ருனென்னும் விஷயத்தில் அதர்மமில்லை. இவனுல் தூண்டப்பட்டவனுன கர்ணன் யுத்தத்தில் போர்புரிகின்றவனும் வீரனும் கௌரவர்களுக்கும் விருஷ்ணிகளுக்கும் கீர்த்தியை உண்டுபண்ணுகிறவனுமான அபிமன்யுவின் வில்லைப் பின்புறத்தினின்று அறுத்தான். பிறகு, வில்லறுக்கப்பட்டவனும் ரதத்தை இழந்தவனும் ஆண்மையில் நிலைபெற்றவனும் ஓடாதவனுமான அபிமன்யுவை ஆயுதங்களை இழந்தவனுகச் செய்து அனேகர்கள் கொன்ருர்கள். பிறந்ததுமுதல் லோபகுணமுள்ளவனும் பாவத்தில் புத்தியைச் செலுத்தினவனும் * கெட்ட புத்தியுள்ளவனும் குலத்தைக் கெடுத்த

* இது இரண்டுமுறை வருகிறது.

பாவியுமான துரியோதனன் பீமஸேனனால் கொல்லப்பட்டான். சத்துருக்களோடு போர்புரிகின்ற துரியோதனன், பீமஸேனனால் பதின்மூன்று வருஷகாலமாகத் தேடிவைக்கப்பட்டிருந்த பிரதிஜ்ஞையை யாது காரணம்பற்றித் தெரிந்துகொள்ளாமலிருந்தான்? மேலே எழும்பி வேகத்தோடு பீமனைக்கொல்ல எண்ணங்கொண்ட துர்யோதனனை அந்தப்பீமன் கதையினால் இரண்டு தொடைகளையும் பிளந்தான். நிற்கும்பொழுதாவது மண்டலகதியிலாவது அடிக்கவில்லை' என்றார். அரசரே! அந்த ராமர் கேசவரிடத்தினின்று இந்தக்கபட தர்மத்தைக்கேட்டுப் பிரீதியற்ற மனத்துடன் ஸபையில் கூறலானார். 'பாண்டவன் தர்மாத்மாவான துர்யோதனராஜனை அதர்மத்தினால் கொன்று கபட யுத்தஞ்செய்பவனென்கிற பிரஸித்தியை இந்த உலகத்தில் அடையப்போகிறான். தர்மாத்மாவான துரியோதனனும் அழிவில்லாதகதியை அடையப்போகிறான். ருஜுவாக யுத்தம்செய்பவனும் தர்மத்தினால் ராஜ்யத்தை ரக்ஷித்தவனும் ஜனங்களுக்கு நாதனாயிருந்தவனுமான துர்யோதனராஜன் யுத்த தீக்ஷையை அடைந்து யுத்தரங்கத்தில் ரணயஜ்ஞத்தை விஸ்தாரமாக அனுஷ்டித்துச் சத்துருக்களாகிற அக்னியில் தன் தேகத்தை ஹோமம்செய்து கீர்த்தியாகிற அவப்ருதத்தை அடைந்தான். நண்பர்களோடும் ஞாதிகளோடும் பந்துக்களோடும் சேர்ந்து மஹாராஜன் ஸ்வர்க்கம் போகப்போகிறான்' என்றார். பிரதாபசாலியான ரோஹிணீபுத்திரர் இவ்வாறுசொல்லிவிட்டு ரதத்தின்மீதேறிக்கொண்டு வெண்மேகமானது சிகரத்துடனிருந்தாற்போன்ற வடிவத்துடன் கூடியவராகித் துவாரகையைக் குறித்துச் சென்றார். ஜனங்களுக்கு நாதரே! ராமர் துவாரகையைக் குறித்துச்சென்ற பிறகு, பாஞ்சாலர்களும் விருஷ்ணிவீரர்களுடன் கூடின பாண்டவர்களும் மனத்தில் அதிகஸந்தோஷமில்லாதவர்களானார்கள்.

பிறகு, தீனரும் கவலையுற்றவரும் தலைகுனிந்தவரும் சோகத்தினால் எண்ணம் குலைந்தவருமான யுதிஷ்டிரரைப் பார்த்து வாஸுதேவர் இவ்வாறுஉரைக்கலானார். 'தர்மராஜரே! யாதுகாரணம்பற்றி நீர் அதர்மத்தைச்செய்ய அனுமதிகொடுக்கிறீர்? அரசரே! பந்துக்களைப்பறிகொடுத்தவனும் விழுந்தவனும் பிரஜ்ஞையற்றவனுமான இந்தத் துர்யோதனனுடைய தலையானது பீமனால் காலால் துகைக்கப்படுகிறதைத் தர்மங்களை அறிந்தவரான நீர் எந்தக் காரணத்தினால் உபேக்ஷை செய்கிறீர்?' என்று வினவ, யுதிஷ்டிரர், 'மாதவரே! விருகோதரன் கோபத்தினால் அரசனான துர்யோதனனைக் காலால்

தலையில் உதைத்தது எனக்குப் பிரியமானதன்று. குலமழிவதில் நான் மகிழவில்லை. நாங்கள் திருதராஷ்டிர புத்திரர்களால் நித்தியம் கபடத்தினால் வஞ்சிக்கப்பட்டோம். நாங்கள் க்ரூரமான அனேக வசனங்களை உரைத்துக் காட்டுக்கு அனுப்பப்பட்டோம். விருஷ்ணி குலத்திலுதித்தவரே! பீமஸேனனுடைய உள்ளத்தில் அந்தத் துக்கம் அதிகமாக இருக்கிறதென்று நினைத்து என்னால் இது உபேக்ஷிக்கப்பட்டது. ஆதலால், நல்ல புத்தியில்லாதவனும் பேராவலுள்ளவனும் காமத்துக்கு வசப்பட்ட துர்ஜனர்களை அனுஸரிப்பவனுமான துர்யோதனனைக் கொன்று, செய்யப்பட்ட கார்யம் தர்மமோ அதர்மமோ, பாண்டவன் அபீஷ்டத்தை அடையட்டும்' என்று கூறினார். குந்திபுத்திரரும் தர்மராஜருமான யுதிஷ்டிரர் இவ்வண்ணம் உரைத்தவுடன், மஹாபாகுபலமுள்ளவரும் யதுகுலதுரந்தரருமான வாஸுதேவர் யுதிஷ்டிரரைப் பார்த்துக் கஷ்டத்தினால், 'இது இஷ்டப்படி ஆகட்டும்' என்று சொன்னார். அவர் இவ்வண்ணம் சொல்லிவிட்டு வாயுபுத்திரனான பீமனுக்குப் பிரியத்தைச்செய்யவேண்டுமென்கிற எண்ணத்தினால் அவனால் யுத்தத்தில் செய்யப்பட்டவை அனைத்தையும் பாராட்டினார். மஹாபாகுபலமுள்ள அர்ஜுனனும் பிரியமற்ற மனத்துடன் ப்ராதாவான பீமனைப்பற்றி நல்லதோ தீயதோ ஒரு வசனத்தையும் சொல்லவில்லை. அரசரே! கோபமுள்ளவனும் அபரிமிதமான தேஜஸுள்ளவனும் ஸந்தோஷத்தினால் நன்றாக மலர்ந்த கண்களையுடையவனும் ஜயத்தினால் விளங்குபவனுமான பீமஸேனன் யுத்தத்தில் உம்முடைய புத்திரனைக்கொன்று மிக்கமனக்களிப்புள்ளவனாகத் தர்மராஜரான யுதிஷ்டிரரை அபிவாதனம்செய்து எதிரில் நின்று இருகைகளையும் குவித்துக்கொண்டு கூறலானான். 'மஹாராஜரே! பகைவர்களழிக்கப்பட்டதும் க்ஷேமகரமாயிருப்பதுமான பூமி முழுவதும் இப்பொழுது உம்முடையது. அதனை ஆள்வீராக. ஸ்வதர்மத்தைக்காப்பற்றும். அரசரே! எவன் வஞ்சனையினால் இந்தவைரத்தை உண்டுபண்ணினானோ வஞ்சனையில் ப்ரீதியுள்ள அப்படிப்பட்ட இந்தத் துரியோதனன் அடிக்கப்பட்டுப் பூமியில்படுத்திருக்கிறான். துச்சாஸனனை முதன்மையாகக்கொண்டவர்களும் உக்கிரமான வசனத்தை உரைப்பவர்களுமான அப்படிப்பட்ட உம்முடைய பகைவர்களனைவரும் ராதேயனும் சகுனியும் கொல்லப்பட்டார்கள். மஹாராஜரே! ரத்னங்கள் மிக நிரம்பியதும் வனங்களுடனும் பர்வதங்களுடனும் கூடியதுமான அப்படிப்பட்ட இந்தப்பூமியானது, பகைவர்கள்கொல்லப்பட்டவரான உம்மை இப்போது திரும்பிவந்தடைந்தது' என்று

உரைத்தான். யுதிஷ்டிரர், 'பீம! பகையினுடைய முடிவை அடைந்தாய். அரசனான துரியோதனன் கொல்லப்பட்டான். வாஸுதேவருடைய அபிப்பிராயத்தைப் பின்பற்றி இந்தப்பூமியானது ஜயிக்கப்பட்டது. பாக்கியத்தினால், நீ, மாதா கோபம் இவ்விருவர்விஷயத்திலும், கடனுளியல்லாமையையடைந்தாய். அவமதிக்கமுடியாதவனே! பாக்கியத்தினால், ஜயத்தோடு விளங்குகிறாய். பாக்கியத்தினால், சத்துரு கொல்லப்பட்டான்' என்று சொன்னார்" என்றான்.

---

## அறுபத்திரண்டாவது அத்யாயம்.

## கதாயுத்தபர்வம். (தொடர்ச்சி.)



**(பாஞ்சாலர்முதலியோர் பீமனைத்துதித்ததும், கிருஷ்ணனும் துரியோதனனும் ஒருவரையொருவர்நிந்தித்ததும், துரியோதனன் தன்னைப்புகழ்கையில் கந்தர்வர்கள் பூமாரிபொழிந்ததும், பீஷ்மர்முதலியோருடைய மரணத்தினால்துக்கிக்கின்ற பாண்டவர்களைக் கிருஷ்ணன் தேற்றியதும்.)**

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! யுத்தத்தில் பீமஸேனனால் கொல்லப்பட்ட துர்யோதனனைக்கண்டு பாண்டவர்களும் ஸ்ருஞ்சயர்களும் யாதுசெய்தனர்?" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான்.

"மஹாராஜரே! சிங்கத்தினால் கொல்லப்பட்ட மதங்கொண்ட காட்டானையைப்போல், பீமஸேனனால் யுத்தத்தில்கொல்லப்பட்ட துர்யோதனனைக்கண்டு கோவிந்தரும் பாண்டவர்களும் பாஞ்சாலர்களும் ஸ்ருஞ்சயர்களும் மனத்தில் மிக்கஸந்தோஷமுள்ளவர்களாகிக் குருநந்தனன் கொல்லப்பட்டதருணத்தில் மேலாடைகளை வீசினார்கள்; ஸிம்மநாதங்களையும் செய்தார்கள். மகிழ்ச்சிக்கு வசப்பட்டிருக்கின்ற இவர்களை இந்தப்பூமியானது பொறுக்கவில்லை. சிலர் விற்களைச் சுழற்றினார்கள். சிலர் நாண்கயிறுகளைச் சுழற்றினார்கள். மற்றவர்கள் பெரிய சங்கங்களை முழக்கினார்கள். இன்னும்சிலர் துந்துபிகளை அடித்தார்கள். அவ்வாறே மற்றவர்கள் விளையாடினார்கள். உம்முடைய பகைவர்கள் சிரித்தார்கள். வீரர்கள் பீமஸேனனைப்பார்த்து அடிக்கடி இந்தவசனத்தை உரைத்தார்கள். 'மிக்கபயிற்சியுள்ளவனான குருராஜனைக் கதையினால் யுத்தத்தில்கொன்று இப்பொழுது உன்னால் யுத்தத்தில் செய்யமுடியாத மிக்கபெரிதானகார்யமன்றோ செய்யப்பட்டது. உன்

ளுல்செய்யப்பட்ட இந்தச்சத்துருவதத்தை ஜனங்கள் மஹாயுத்தத்தில் இந்திரனுல்செய்யப்பட்ட விருத்திரவதம்போல எண்ணினர்கள். பற்பல மார்க்கங்களிலும் மண்டலகதிகளிலும் நாற்பக்கத்திலும் ஸஞ்சரிக்கின்ற சூரனுன இந்தத் துர்யோதனனை விருகோதரனைத் தவிர வேறு எவன் கொல்வான்? நீ இந்தச்சமயத்தில் பிறரால் எவ்விதத்திலும் அடையமுடியாத வைரத்தினுடைய அக்கரையை அடைந்தாய். மற்றவனுல் இப்படிப்பட்ட இந்தக் கார்யம் செய்ய அஸாத்தியமானது. வீர! யுத்தமுனையில் மதயானைபோன்ற உன்னுல் துர்யோதனனுடைய தலையானது அதிருஷ்டத்திலை காலால் துகைக்கப்பட்டது. தோஷமற்றவனே! உத்தமமான யுத்தத்தைச் செய்து சிங்கத்தினுல் கடாமாட்டினது ரக்தம் குடிக்கப்பட்டாற்போல துச்சாஸனனுடையரக்தமானது அதிருஷ்டத்தினுல் உன்னுல் பானம்பண்ணப்பட்டது. எவர்கள் தர்மாத்மாவான யுதிஷ்டிரராஜர் விஷயத்தில் அபகாரம் செய்தார்களோ அவர்களுடைய தலையில் தெய்வாதீனமாக உன்னுடைய செய்கையினுல் உன்னுடைய கால் வைக்கப்பட்டது. பீம! பகைவர்களைக் கீழ்ப்படுத்தினதினுலும் துர்யோதனனுடைய வதத்தினுலும் தெய்வாதீனமாக உன்னுடைய மிக்க பெரிதான புகழானது பூமியில் பிரஸித்தி அடைந்தது. பாரத? விருத்திரன் கொல்லப்பட்டவுடன் இவ்வண்ணமே இந்திரனை வந்திகள் புகழ்ந்தார்கள். அவ்வாறே நாங்களும் பகைவர்களைக்கொன்ற உன்னைப் புகழ்ந்தோம். பாரத! துர்யோதனனுடைய வதமானது ஏற்பட்டவுடனே எங்களுக்குச் சிலிர்த்த ரோமங்கள் இன்னுங்கூட மடக்கப்படவில்லை. அதனை நீ தெரிந்துகொள்' என்றனர். அவ்விடத்தில் ஒன்றுசேர்ந்தவர்களும் காற்றுடன் ஸஞ்சரிப்பவர்களுமான தேவர்கள் பீமஸேனனைப் பார்த்து இவ்வண்ணம் உரைத்தார்கள். ஸந்தோஷமுள்ளவர்களும் புருஷசிரேஷ்டர்களும் தகாதவசனத்தை உரைப்பவர்களுமான பாண்டவர்களோடு சேர்ந்த அந்தப் பாஞ்சாலர்களைக் கண்டு மதுஸூதனர் அச்சமயத்தில் உரைக்கலானுர். 'அரசர்களே! கொல்லப்பட்டிருக்கிற சத்துருவை மறுபடியும் உக்கிரமான சொற்களால் அடிக்கடி கொல்வது நியாயமன்று. மந்தபுத்தியுள்ளவனுன இந்தத் துர்யோதனன் கொல்லப்பட்டான். எப்பொழுது இவன் வெட்கமில்லாதவனும் பேராசையுள்ளவனும் பாவிகளை ஸஹாயமாகக்கொண்டவனும் நண்பர்களுடைய கட்டளையை மீறிநடப்பவனுமானுனே அப்பொழுதே இந்தப்பாவியானவன் மாண்டவனுகிவிட்டான். இவன்

விதுரராலும் துரோணராலும் கிருபராலும் பீஷ்மராலும்ஸ்ருஞ்சயர்களாலும் பாண்டவர்களின்பொருட்டுப் பலவாறு வேண்டப்பட்டும் பித்ருபாகத்தைக் கொடுக்கவில்லை. புருஷாதமனுன இந்தத் துரியோதனன் இப்பொழுது அவர்களுக்கு மித்திரனுமல்லன்; சத்துருவுமல்லன். கட்டைபோல அஸாரமாக இருக்கின்ற இவனைச் சொற்களால் மிகுதியாகத் துன்பஞ்செய்வதினால் என்னபயன்? அரசர்களே! சீக்கிரமாக ரதங்களில் ஏறுங்கள்; போவோம். பாபாத்மாவான துரியோதனன் மந்திரிகளோடும் ஞாதிகளோடும் பந்துக்களோடும் பாக்கியத்தினால் கொல்லப்பட்டான்' என்றார். பிரஜைகளுக்கு நாதரே! துரியோதனராஜன் கிருஷ்ணனிடத்தினின்று இவ்வாறு அவமதிப்பான வார்த்தையைக்கேட்டுக் கோபத்துக்கு வசப்பட்டவனாக எழுந்திருந்தான். அவன் இருகைகளாலும் பூமியைப்பிடித்துக்கொண்டும் பின்தட்டினால் உட்கார்ந்துகொண்டும் பார்வையைப் புருவங்களில் ஏறச்செய்துகொண்டும், வாஸுதேவரிடத்தில் அதனை வைத்தான். பாதிஉயர்ந்திருக்கிற சரீரத்துடன் கூடினவனான அரசனுடைய ரூபமானது கோபமுள்ளதும் வாலறுக்கப்பட்டதும் பற்களில் விஷமுள்ளதுமான ஸர்ப்பத்தினுடைய ரூபம்போல இருந்தது. அவன் பிராணனுக்கு முடிவையுண்டுபண்ணுகின்ற கோரமான வேதனையையும் பாராதவனாகக் கடுஞ்சொற்களால் வாஸுதேவரை வருத்தமடையும்படி செய்யத்தொடங்கினான்.

'கம்ஸதாஸனான வஸுதேவனுடைய புத்திர! 'தொடைகளைப் பிள' என்று பீமனுக்கு வீணாக ஞாபகத்தை உண்டுபண்ணினவனான உன்னால் அதர்மத்தினால் கதாயுத்தத்தில் நான் வீழ்த்தப்பட்டமையால் உனக்கு வெட்கமில்லையா? அர்ஜுனனைப்பார்த்து நீ சொல்லிய வசனத்தை நான் தெரிந்துகொள்ளவில்லையா? நியாயமாக யுத்தம்செய்கின்ற அரசர்களை அனேககபடோபாயங்களால் ஆயிரக்கணக்காக மாளும்படிசெய்த உனக்கு வெட்கமில்லை; தயைஇல்லை. நாள்தோறும் சூரர்களுக்குப் பெரியதுன்பத்தைச் செய்துவந்த பிதாமஹரான பீஷ்மர் சிகண்டியைமுன்னிட்டு உன்னால் உயிரை இழக்கும்படிசெய்யப்பட்டார். மிக்கதுர்புத்தியுள்ளவனே! அஸ்வத்தாமாவினுடைய பெயர்போன்ற பெயருள்ள யானையைக்கொன்று ஆசார்யரான துரோணர் சஸ்திரத்தைக் கீழேஎறியும்படி செய்யப்பட்டார். அது என்னால்அறியப்படவில்லையா? வீர்யமுள்ளவரான அந்தத்துரோணரும் குரூரனான இந்த த்ருஷ்டத்யும்னனால் வீழ்த்தப்படுந்தருணத்தில் நீ பார்த்துக்கொண்டிருந்தாய். இவனை நீ தடுக்கவில்லை. பாண்டுபுத்திரனை

அர்ஜுனனைக் கொல்வதற்காக யாசித்து (வாங்கப்பட்ட) சக்தியையே கடோத்கசன்மீது போடும்படிசெய்தவனான உன்னைவிடக் கொடும்பாவி யார்? கைகளறுக்கப்பட்டவனும் அவ்வாறு பிராயோபவேசஞ்செய்தவனும் பலசாலியுமான பூரிஸ்ரவஸானவன் உன்னால்தூண்டிவிடப்பட்ட துராத்மாவான ஸாத்யகியினால் கொல்லப்பட்டான். பார்த்தனை ஜயிக்கவேண்டுமென்கிற எண்ணத்தினால் உத்தமமான செய்கையைச்செய்பவனான கர்ணனோ, நாகஸ்ரேஷ்டனான அஸ்வஸேனனை வீணாக்கிக் கொல்லப்பட்டான். மறுபடியும் சக்ரமானது பூமியில் அமிழவே, வியஸனத்தினால் பீடிக்கப்பட்டவனும் தோல்வியை அடைந்தவனும் சக்கரத்தைத்தூக்குவதில் முயற்சியுள்ளவனுமாயிருந்த புருஷஸ்ரேஷ்டனான கர்ணன் யுத்தத்தில் மாளும்படிசெய்யப்பட்டான். நீ என்னையும் கர்ணனையும் பீஷ்மதுரோணர்களையும் யுத்தத்தில் ருஜுவாக எதிர்த்துப் போர்புரிந்திருப்பாயாகில் நிச்சயமாகவே உனக்கு ஜயமுண்டாயிராது. ஸ்வதர்மத்தை அனுஷ்டித்த அரசர்களும் நாங்களும் மற்றவர்களும் அயோக்யனானஉன்னால் கபடமார்க்கத்தினால் உயிரைஇழக்கும்படி செய்யப்பட்டோம். கிருஷ்ண! மாயாவியான உன்னால் சூரியனைமறைக்கிற மாயையைச்செய்து ஸிந்துராஜனான ஜயத்ரதன் கொல்லப்பட்டான். அதை நான் அறியேனா?' என்றுசொன்னான்.

வாஸுதேவர், 'காந்தாரிநந்தன! பாபமார்க்கத்தை அனுஷ்டித்த நீ பிராதாக்களோடும் பிள்ளைகளோடும் பந்துக்களோடும் பரிவாரங்களோடும் ஸுஹ்ருத்துக்களோடும்சேர்ந்து மாண்டாய். உன்னுடைய பாவங்களாலேயே வீரர்களான பீஷ்மதுரோணர்கள் கொல்லப்பட்டார்கள். உன்னுடைய ஸ்வபாவத்தை அனுஸரித்தவனானதால் கர்ணனும் யுத்தத்தில் கொல்லப்பட்டான். மூட! என்னால் வேண்டப்பட்டும் பாண்டவர்களுக்குப் பித்ருபாகமான ஸ்வராஜ்யத்தைப் பேராசையினாலும் சகுனியிடத்தில் உனக்கிருந்த நிச்சயத்தினாலும் நீ கொடுக்கவிரும்பவில்லை. உன்னால் பீமஸேனனுக்கு விஷம்கொடுக்கப்பட்டது. அதிக கெட்டபுத்தியுள்ளவனே! எல்லாப் பாண்டவர்களும் தாயோடுகூட அரக்குமாளிகையில் கொளுத்தப்பட்டார்கள். கெட்டஎண்ணமுள்ளவனே! வீட்டுக்கு விலக்காயிருந்த த்ரௌபதியானவள் சூதாட்டத்தில் ஸபையின்கண் இழுத்துவரப்பட்டாள். வெட்கங்கெட்டவனே! அப்பொழுதே நீ கொல்லப்படத்தக்கவன். சூதுகருவிகளை ஆடத்தெரியாதவரான தர்மராஜரைச் சூதாட்டத்தில் ஸாமர்த்தியமுள்ள சகுனியினால் கபடத்தி

ணல் தோல்வியடையச் செய்தாயன்றோ? அதனால், நீ யுத்தத்தில்கொல்லப்பட்டாய். பாவி! பாண்டவர்கள் வேட்டையாடுவதற்காகப் போயிருக்குந் தருணத்தில் பாவியான ஜயத்ரதனால் கானகத்தில் த்ருணபிந்துவினுடைய ஆஶ்ரமத்திலிருந்த த்ரௌபதியானவள் கிலேசத்தை அடைவிக்கப்பட்டமையாலும், மேலும், பாலனும் உதவி இல்லாதவனுமான அபிமன்யு யுத்தத்தில் அனேகர்களால் உன்னுடைய தோஷங்களால் கொல்லப்பட்டமையாலும் நீ யுத்தத்தில் கொல்லப்பட்டாய். யுத்தத்தில் கார்யத்தைச்செய்பவரும் பாண்டவர்களுக்கு அனர்த்தத்தைச்செய்ய விருப்பமுள்ளவருமான பீஷ்மரைச் சிகண்டியானவன் மித்திரனுக்காகக் கொன்றான். அதில் அக்கிரமம் இல்லை. ஸ்வதர்மத்தைப் பிற்படுத்தி உனக்குப் பிரியத்தைச்செய்ய வேண்டுமென்கிற எண்ணத்தினால் அஸத்துக்களுடையவழியில் நிலை பெற்றிருந்த துரோணாசாரியர் திருஷ்டத்யும்னனால் யுத்தத்தில் கொல்லப்பட்டார். கற்றறிந்தவனான ஸாத்யகி, தன் பிரதிஜ்ஞையை ஸத்யமாகச்செய்யஎண்ணிப் பகைவனும் மஹாரதனும் ஸோமதத்தகுமாரனுமான பூரிஶ்ரவஸை யுத்தத்தில் கொன்றான். அரசனே! புருஷஶ்ரேஷ்டனான அர்ஜுனன் யுத்தரங்கத்தில் போர் புரிகின்றவனாக எவ்விதத்தினாலும் ஒருபொழுதும் இகழத்தக்க கார்யத்தைச் செய்யமாட்டான். மிக்க கெட்டபுத்தியுள்ளவனே! அர்ஜுனன் பலவாறு கர்ணனுக்குத் துன்பம்விளைவிக்கக்கூடிய ஸமயத்தைப்பெற்றிருந்தும் வீரர்களின்செயலைநினைத்துக்கொண்டு அவனை யுத்தத்தில்கொன்றான். இவ்வாறு சொல்லாதே. தேவர்களுடைய அபிப்பிராயத்தைஅறிந்து அவர்களுக்குப் பிரியத்தையும் நன்மையையும் செய்யவேண்டுமென்கிற எண்ணத்தினால், அர்ஜுனன்மீது (போடப்பட்ட) பெரிய நாகாஸ்திரமானது என்னால் தவறும்படிசெய்யப்பட்டது. நீயும் பீஷ்மரும் கர்ணனும் துரோணரும் துரோணபுத்திரரும் விராடநகரத்தில் அந்தஅர்ஜுனனுடைய கருணையினால் உயிரோடு விடப்பட்டீர்கள். கந்தர்வர்களிடங்களில் அவ்வாறு வெளியிடப்பட்ட பார்த்தனுடையபராக்கிரமத்தை நினைத்துக்கொள். காந்தாரீநந்தன! பாண்டவர்கள் உன்விஷயத்தில் செய்ததில் அதர்மமில்லை. ஸ்வதர்மத்தினால் பகைவர்களைத் தவிக்கச்செய்பவர்களான வீரர்கள் தங்களுடைய புஜபலத்தைப் பின்பற்றி யுத்தத்தில் ஜயித்தார்கள். நீ பாவியானபடியினால் நாசமடைந்தாய். எந்தஎந்த அகார்யங்களை நாங்கள் செய்ததாக நீ சொல்லுகிறாயோ அவைஅனைத்தும் உன்னுடைய அதிகமான துர்க்குணத்தினாலல்லவோ அனுஷ்டிக்கப்பட்டன. பிரு

ஹஸ்பதி சுக்கிரர் இவர்களுடைய உபதேசத்தை நீ கேட்டதில்லை. முதியவர்களை நீ உபாஸிக்கவில்லை. ஹிதமானவாக்கியத்தையும் நீ கேட்டதில்லை. நீ அதிகபலமுள்ள லோபத்தினாலும் ஆசையினாலும் வசப்படுத்தப்பட்டவனாகி அகார்யங்களைச்செய்தாய். அப்படிச் செய்த தன் முடிவை அனுபவிப்பாயாக' என்றுகூறினர்.

துரியோதனன், 'முறைப்படி அத்யயனம் செய்திருக்கிறேன்; தானமும் செய்திருக்கிறேன். ஸமுத்திரம்சூழ்ந்தபூமியும் என்னால் அனுபவிக்கப்பட்டது. பகைவர்களுடையமுடியிலும் நிலைபெற்றுநின்றேன். எவன் என்னைவிடச் சிறந்தமுடிவுள்ளவன்; தம்தொழிலை நன்குசெய்கின்ற க்ஷத்தியர்களுக்கு விருப்பமான இந்தமரணமானது என்னால் அடையப்பட்டது. எவன் என்னைக்காட்டிலும் சிறந்த முடிவுள்ளவன்? தேவர்களுக்குரியவைகளும் அரசர்களாலடையஅரியவையுமானமனுஷ்யபோகங்களும்உத்தமமானஐஶ்வர்யமும் என்னால் அடையப்பட்டன.எவன் என்னைவிடச் சிறந்தமுடிவுள்ளவனாவான்? அச்சுத! நண்பர்களோடும் உறவினர்களோடும்கூடி நான் ஸ்வர்க்கம்போகப்போகிறேன். நீங்கள் நிந்திக்கப்பட்ட எண்ணத்துடன் துக்கித்துக்கொண்டிருக்கப்போகிறீர்கள். பீமனால் காலால் என்தலை உதைக்கப்பட்டதென்பதில் எனக்கு வியஸனமில்லை.ஒருக்ஷணத்தில் காக்கைகளோ கழுகுகளோ பருந்துகளோ காலைவைக்கப்போகின்றன' என்றுகூறினான். புத்திசாலியான குருராஜனுடைய இந்தவாக்கியத்தின்முடிவில் புண்யவாஸனையுள்ள புஷ்பங்களுடைய மிக்கபெரிதான மாரியானது விழுந்தது.கந்தர்வர்கள் மிக இனியவையான நான்குவித வாத்தியங்களையும் முழக்கினார்கள். அப்ஸரஸுகளும் அரசனுடைய கீர்த்தியுடன்கூடின செய்கையைக் கானம்செய்தார்கள். அரசரே! ஸித்தர்களும் 'நல்லது, நல்லது'என்னும் வாக்குக்களை வெளியிட்டார்கள். வாஸனைபொருந்தியதும் புண்யகந்தமுள்ளதுமான காற்றானது மிருதுவாயும் ஸுகமாயும்வீசியது.எல்லாத்திசைகளும்பிரகாசித்தன. ஆகாயம் வைடூர்யம்போல விளங்கியது. வாஸுதேவரை முந்தினவராகக்கொண்ட அந்தப்பாண்டவர்கள் அத்யாச்சர்யங்களையும் துர்யோதனனுடைய பூஜையையும்கண்டு வெட்கினார்கள். அவர்கள்,பீஷ்மரும் த்ரோணரும் கர்ணனும் பூரிஶ்ரவஸும் அதர்மத்தினால் கொல்லப்பட்டதைக்கேட்டுச் சோகத்தால் பீடிக்கப்பட்டவர்களாகி வியஸனமுற்றார்கள். கவலையுற்றவர்களும் தீனமானமனத்தையுடையவர்களுமான அந்தப்பாண்டவர்களைக்கண்டு கண்ணபிரான் மேகம்போலவும் துந்துபிபோலவும் சப்தித்துக்கொண்டு இந்தவசனத்தை உரைக்கலானார்.

ணல் தோல்வியடையச் செய்தாயன்றோ? அதனால், நீ யுத்தத்தில்கொல்லப்பட்டாய். பாவி! பாண்டவர்கள் வேட்டையாடுவதற்காகப் போயிருக்குந் தருணத்தில் பாவியான ஜயத்ரதனால் கானகத்தில் த்ருணபிந்துவினுடைய ஆஸ்ரமத்திலிருந்த த்ரௌபதியானவள் கிலேசத்தை அடைவிக்கப்பட்டமையாலும், மேலும், பாலனும் உதவி இல்லாதவனுமான அபிமன்யு யுத்தத்தில் அனேகர்களால் உன்னுடைய தோஷங்களால் கொல்லப்பட்டமையாலும் நீ யுத்தத்தில் கொல்லப்பட்டாய். யுத்தத்தில் கார்யத்தைச்செய்பவரும் பாண்டவர்களுக்கு அனர்த்தத்தைச்செய்ய விருப்பமுள்ளவருமான பீஷ்மரைச் சிகண்டியானவன் மித்திரனுக்காகக் கொன்றான். அதில் அக்கிரமம் இல்லை. ஸ்வதர்மத்தைப் பிற்படுத்தி உனக்குப் பிரியத்தைச்செய்ய வேண்டுமென்கிற எண்ணத்தினால் அஸத்துக்களுடையவழியில் நிலை பெற்றிருந்த துரோணாசாரியர் திருஷ்டத்யும்னனால் யுத்தத்தில் கொல்லப்பட்டார். கற்றறிந்தவனான ஸாத்யகி, தன் பிரதிஜ்ஞையை ஸத்யமாகச்செய்யஎண்ணிப் பகைவனும் மஹாரதனும் ஸோமதத்தகுமாரனுமான பூரிஸ்ரவஸை யுத்தத்தில் கொன்றான். அரசனே! புருஷஸ்ரேஷ்டனான அர்ஜுனன் யுத்தரங்கத்தில் போர் புரிகின்றவனாக எவ்விதத்தினாலும் ஒருபொழுதும் இகழத்தக்க கார்யத்தைச் செய்யமாட்டான். மிக்க கெட்டபுத்தியுள்ளவனே! அர்ஜுனன் பலவாறு கர்ணனுக்குத் துன்பம்விளைவிக்கக்கூடிய ஸமயத்தைப்பெற்றிருந்தும் வீரர்களின்செயலைநினைத்துக்கொண்டு அவனை யுத்தத்தில்கொன்றான். இவ்வாறு சொல்லாதே. தேவர்களுடைய அபிப்பிராயத்தைஅறிந்து அவர்களுக்குப் பிரியத்தையும் நன்மையையும் செய்யவேண்டுமென்கிற எண்ணத்தினால், அர்ஜுனன்மீது (போடப்பட்ட) பெரிய நாகாஸ்திரமானது என்னால் தவறும்படிசெய்யப்பட்டது. நீயும் பீஷ்மரும் கர்ணனும் துரோணரும் துரோணபுத்திரரும் விராடநகரத்தில் அந்தஅர்ஜுனனுடைய கருணையினால் உயிரோடு விடப்பட்டீர்கள். கந்தர்வர்களிடங்களில் அவ்வாறு வெளியிடப்பட்ட பார்த்தனுடையபராக்கிரமத்தை நினைத்துக்கொள். காந்தாரீநந்தன! பாண்டவர்கள் உன்விஷயத்தில் செய்ததில் அதர்மமில்லை. ஸ்வதர்மத்தினால் பகைவர்களைத் தவிக்கச்செய்பவர்களான வீரர்கள் தங்களுடைய புஜபலத்தைப் பின்பற்றி யுத்தத்தில் ஜயித்தார்கள். நீ பாவியானபடியினால் நாசமடைந்தாய். எந்தஎந்த அகார்யங்களை நாங்கள் செய்ததாக நீ சொல்லுகிறாயோ அவைஅனைத்தும் உன்னுடைய அதிகமான துர்க்குணத்தினாலல்லவோ அனுஷ்டிக்கப்பட்டன. பிரு

ஹஸ்பதி சுக்கிரர் இவர்களுடைய உபதேசத்தை நீ கேட்டதில்லை. முதியவர்களை நீ உபாஸிக்கவில்லை. ஹிதமானவாக்கியத்தையும் நீ கேட்டதில்லை. நீ அதிகபலமுள்ள லோபத்தினாலும் ஆசையினாலும் வசப்படுத்தப்பட்டவனாகி அகார்யங்களைச்செய்தாய். அப்படிச் செய்த தன் முடிவை அனுபவிப்பாயாக' என்றுகூறினர்.

துரியோதனன், 'முறைப்படி அத்யயனம் செய்திருக்கிறேன்; தானமும் செய்திருக்கிறேன். ஸமுத்திரம்சூழ்ந்தபூமியும் என்னால் அனுபவிக்கப்பட்டது. பகைவர்களுடையமுடியிலும் நிலைபெற்றுநின் றேன். எவன் என்னைவிடச் சிறந்தமுடிவுள்ளவன்; தம்தொழிலை நன்குசெய்கின்ற க்ஷத்தியர்களுக்கு விருப்பமான இந்தமரணமானது என்னால் அடையப்பட்டது. எவன் என்னைக்காட்டிலும் சிறந்த முடிவுள்ளவன்? தேவர்களுக்குரியவைகளும் அரசர்களாலடையஅரிய வையுமானமனுஷ்யபோகங்களும்உத்தமமானஐஶ்வர்யமும் என்னால் அடையப்பட்டன.எவன் என்னைவிடச் சிறந்தமுடிவுள்ளவனாவான்? அச்சுத! நண்பர்களோடும் உறவினர்களோடும்கூடி நான் ஸ்வர்க்கம்போகப்போகிறேன். நீங்கள் நிந்திக்கப்பட்ட எண்ணத்துடன் துக்கித்துக்கொண்டிருக்கப்போகிறீர்கள். பீமனால் காலால் என்தலை உதைக்கப்பட்டதென்பதில் எனக்கு வியஸனமில்லை.ஒருக்ஷணத்தில் காக்கைகளோ கழுகுகளோ பருந்துகளோ காலைவைக்கப்போகின்றன' என்றுகூறினன். புத்திசாலியான குருராஜனுடைய இந்தவாக்கியத்தின்முடிவில் புண்யவாஸனையுள்ள புஷ்பங்களுடைய மிக்கபெரிதான மாரியானது விழுந்தது.கந்தர்வர்கள் மிக இனியவையான நான்குவித வாத்தியங்களையும் முழக்கினர்கள். அப்ஸரஸுகளும் அரசனுடைய கீர்த்தியுடன்கூடின செய்கையைக் கானம்செய்தார்கள். அரசரே! ஸித்தர்களும் 'நல்லது, நல்லது' என்னும் வாக்குக்களை வெளியிட்டார்கள். வாஸனைபொருந்தியதும் புண்யகந்தமுள்ளதுமான காற்றானது மிருதுவாயும் ஸுகமாயும்வீசியது.எல்லாத்திசைகளும்பிரகாசித்தன. ஆகாயம் வைடூர்யம்போல விளங்கியது. வாஸுதேவரை முந்தினவராகக்கொண்ட அந்தப்பாண்டவர்கள் அத்யாச்சர்யங்களையும் துர்யோதனனுடைய பூஜையையும்கண்டு வெட்கினர்கள். அவர்கள்,பீஷ்மரும் த்ரோணரும் கர்ணனும் பூரிஶ்ரவஸுும் அதர்மத்தினால் கொல்லப்பட்டதைக்கேட்டுச் சோகத்தால் பீடிக்கப்பட்டவர்களாகி வியஸனமுற்றார்கள். கவலையுற்றவர்களும் தீனமானமனத்தையுடைவர்களுமான அந்தப்பாண்டவர்களைக்கண்டு கண்ணபிரான் மேகம்போலவும் துந்துபிபோலவும் சப்தித்துக்கொண்டு இந்தவசனத்தை உரைக்கலானர்.

'மிகவிரைவாக அஸ்திரப்பிரயோகம்செய்கின்ற இந்தத் துரியோதனனும் விக்ரமசாலிகளான அந்த எல்லாமகாரதர்களும் நேரானயுத்தத்தால் உங்களால் யுத்தத்தில் கொல்லமுடியாதவர்கள். ஆதலால், அரசர்களே! என்னுல் இவர்கள் உபாயத்தால் கொல்லப்பட்டார்கள். அப்படிச்செய்யாவிடில் பாண்டவர்களுக்கு ஒருபொழுதும் ஜயமுண்டாகாது. அவர்கள்எல்லோருமே சிறந்தவில்லாளிகள்; பூமியில் அதிரதர்களான அந்நால்வரும் லோகபாலர்களாலுங்கூட நேரில் தர்மத்தினுல் கொல்வதற்கு ஸாத்யப்படாதவர்கள். அவ்வாறே, கதையைக் கையில்கொண்டவனும் சிரமம் நீங்கினவனுமான இந்தத் துரியோதனன் காலதண்டத்தைக் கையிலேந்தியயமனுலும் தர்மத்தினுல் கொல்வற்கு ஸாத்யப்படாதவன். இந்தஅரசன் கபடத்தால் கொல்லப்பட்டான். அனேகசத்துருக்கள் வஞ்சனேயுடன்கூடின உபாயங்களால் கொல்லப்பட்டார்களென்பதை நீங்கள் மனத்தில்வைத்துக்கொள்ளாதீர்கள். அஸுரர்களே ஸம்ஹரிப்பதில் நோக்கங்கொண்ட முன்னோர்களான தேவர்களால் இந்தவழி அனுஸரிக்கப்பட்டிருக்கிறது. ஸாதுக்களால் அனுஸரிக்கப்பட்ட வழியானது எல்லோராலும் அனுஸரிக்கப்படும். மஹாத்மாக்களான இவர்களுக்கு இவ்வாறு பிரம்மதேவர் தாமே விதித்திருக்கிருர். வல்லமையினுல் விதியைத்தாண்டுவது ஒருவனுலும்முடியாது. தனஞ்சய! சென்றதையும் செல்லுகிறதையும்செல்வதையும் ஒருநொடியில் கொல்லக்கூடியவனும் தெய்வத்தை வேறுவிதமாகச் செய்வதற்கு விரும்பமாட்டான். [1]கிருதகிருத்யர்களானநாம் ஸாயங்காலத்தில் இருப்பிடம்செல்ல விரும்புவோம். அரசர்கள்எல்லாரும் குதிரைகளோடும் யானைகளோடும் ரதங்களோடும் விடாய் தீரட்டும்' என்ருர்.

வாஸுதேவருடைய வார்த்தையைக் கேட்டு, அப்பொழுது, பாண்டவர்களும் பாஞ்சாலர்களும் மிக்க மனக்களிப்புற்றவர்களாக ஸிம்மக்கூட்டம்போலக் கர்ஜித்தார்கள். பிறகு, ஜனார்த்தனர் பாஞ்சஜன்யமென்கிற சங்கத்தை ஊதினுர். அர்ஜுனன் மிக்க மனமகிழ்ச்சியுடன் தேவதத்தமென்கிற சிறந்தசங்கத்தை ஊதினுன். குந்தீபுத்ரரான யுதிஷ்டிரராஜர் அநந்தவிஜயமென்கிற சங்கத்தை ஊதினுர். பயங்கரமான செய்கைகளேயுடைய விருகோதரன் பௌண்ட்ரமென்கிற பெரும்சங்கத்தை ஊதினுன். நகுலனும் ஸகதேவனும் ஸுகோஷம் மணிபுஷ்பகமென்கிற மஹாசங்கங்களே ஊதினுர்கள். அவ்வாறே, திருஷ்டத்யும்னன் ஜைத்ரமென்கிற சங்கத்

1 மேற்கொண்ட காரியத்தைச் செய்துமுடித்தவர்கள்.

தை ஊதினன். ஸாத்யகி நந்தீவர்த்தனமென்கிற சங்கத்தை ஊதினன். பரதர்களுள் சிறந்தவரே! அந்தச் சங்கங்களுடைய பேரொலியினால் ஆகாயம்முழுமையும் நிறைக்கப்பட்டது. பூமியும்நடுங்கியது. பிறகு, சங்கங்களும் பேரிகளும் பணவங்களும் ஆனகங்களும் கோமுகங்களும் பாண்டவசேனைகளில் முழக்கப்பட்டன. அந்தச் சப்தமானது நெருங்கியதாயிற்று. சில புருஷஶ்ரேஷ்டர்கள், துரியோதனன் கொல்லப்பட்டதைக்கண்டு ஸந்தோஷமுள்ளவர்களாகப் பயமற்றுப் பாண்டவர்களை மங்களகரமான ஸ்தோத்திரங்களால் துதித்தார்கள்.

---

## அறுபத்துமூன்றாவது அத்யாயம்.

## கதாயுத்தபர்வம். (தொடர்ச்சி.)

**(பாஞ்சாலர்கள்முதலானவர்கள் தங்கள்தங்கள் இருப்பிடம்சேர்ந்தவுடன் பாண்டவர்கள் துரியோதனனுடைய பாசறைக்குப்போனதும், கிருஷ்ணன் ரதத்தினின்று பார்த்தனைஇறக்கிவிட்டுத் தாமும்இறங்கி உடனே அந்தரதத்தைஎரித்ததும், கிருஷ்ணன் தேரையெரித்ததற்குக்காரணத்தை அர்ஜுனனுக்குக்கூறியதும், கிருஷ்ணனுடையதூண்டுதலால் பாண்டவர்கள் அன்றிரவு ஓகவதீநதியின்கரையில் வஸித்ததும், யுதிஷ்டிரனுடைய தூண்டுதலால் வாஸுதேவர் காந்தாரியைத் தேற்றுதற்காக ஹஸ்தினபுரம் சென்றதும்.)**

பிறகு, பரிகாயுதம்போன்ற கைகளையுடையவர்களான அரசர்களனைவரும் மகிழ்ச்சியுள்ளவர்களாகிச் சங்கங்களை முழக்கிக்கொண்டு இருப்பிடம் சென்றார்கள். அரசரே! நம்முடைய பாசறையைக் குறித்துச்செல்லுகின்ற பாண்டவர்களைப் பின்தொடர்ந்து, மகாவில்லாளியான யுயுத்ஸுவும் அவ்வாறே ஸாத்யகியும்சென்றார்கள். திருஷ்டத்யும்னனும் சிகண்டியும் திரௌபதிபுத்திரர்களனைவரும் மற்ற எல்லாமஹாவில்லாளிகளும் தத்தம் சிபிரங்களைக்குறித்துச்சென்றார்கள். பிறகு, அந்தப்பார்த்தர்கள், ஜனங்கள் வெளியில்போனபின் அரங்கம்போலக் காந்தியைஇழந்ததும், உத்ஸவத்தைஇழந்த பட்டணம் போன்றதும், நாகம்பிடிக்கப்பட்ட மடுப்போன்றதும், நாதனைஇழந்ததும், ஸ்திரீகளாலும் நபும்ஸகர்களாலும் பெரும்பான்மையாக ஆக்கிரமிக்கப்பட்டுள்ளதும், பிராயமுதிர்ந்த மந்திரிகளால் வீற்றிருக்கப்பட்டதுமான துரியோதனனுடைய பாசறையினுள் பிரவேசித்தார்கள்

அரசரே! துரியோதனனுக்கு முந்திச்செல்பவர்கள் காவிவஸ்திரம் போல் அழுக்கடைந்த வஸ்திரத்தைத்தரித்து அஞ்சலிபந்தஞ்செய்து கொண்டு அவ்விடத்தில் இந்தப் பாண்டவர்களை உபாஸித்தார்கள். மஹாராஜரே! ரதிகர்களுள் சிறந்தவர்களான பாண்டவர்கள் குரு ராஜனுடைய பாசறையை அடைந்து ரதங்களினின்று இறங்கினார்கள். பரதர்களுள் சிறந்தவரே! பிறகு, எப்பொழுதும் பிரியமாகவும் ஹித மாகவுமிருக்கிற கார்யத்தைச்செய்வதில் ஜாகரூகரான கேசவர் அர் ஜுனனைப்பார்த்து, 'பரதர்களில் சிறந்தவனே! காண்டீவத்தையும் பெரியவையான இரண்டு அக்ஷய தூணீரங்களையும் கீழே இறக்கு. பிறகு, நான் இறங்குவேன். தோஷமற்றவனே! நீயும் இறங்கிவிடு. இது உனக்கு நன்மையைத்தரக்கூடியது' என்று சொன் னார். வீரனும் பாண்டுபுத்திரனுமான தனஞ்சயன் அதை அவ் வண்ணமே செய்தான். பிறகு, மேதாவியான கோவிந்தர், அந்த அர்ஜுனன் இறங்கினபின் குதிரைகளுடைய கடிவாளங்களை விட்டு விட்டு, காண்டீவத்தை வில்லாகக்கொண்ட அர்ஜுனனுடைய ரதத்தினின்று கீழேஇறங்கினார். பிராணிகளுக்கு ஈசுவரரும் மஹாத் மாவுமான அந்தக் கேசவர் இறங்கினவுடனே, வானரமும் த்வஜத்தில் வாஸஞ்செய்துகொண்டிருந்த தேவர்களுடன் விரைவாக விலகிச் சென்றது. அரசரே! துரோணராலும் கர்ணனாலும் திவ்யாஸ்திரங் களால் எரிக்கப்பட்டிருந்த அந்த மஹாரதமானது, பிறகு, உடனே அக்னியினால் விரைவாகப்பற்றி எரிந்தது. காண்டீவத்தை வில்லா கக்கொண்ட அர்ஜுனனுடைய ரதமானது அம்பறுத்தூணிகளுட னும் கடிவாளங்களுடனும் குதிரைகளுடனும் நுகத்தடி கட்டுக் கயிறுகளுடனும் சாம்பலாகிப் பூமியில்விழுந்தது. பிரபுவே! அர சரே! அவ்வாறு அந்தரதம் சாம்பலானதைக்கண்டு பாண்டுபுத் திரர்கள் ஆச்சர்யமடைந்தவர்களானார்கள். அர்ஜுனனும் கைகளைக் கூப்பி அன்புடன் நமஸ்கரித்து அபிவாதனஞ்செய்து, 'கோவிந்தரே! பகவானே! என் ரதமானது நெருப்பினால் எரிக்கப்பட்டுவிட்டது? யதுநந்தனரே! இது என்ன பெரிதான ஆச்சர்யம் உண்டாகியது? மிக்க புஜபலமுள்ளவரே! நான் கேட்கத்தக்கதாக எண்ணினால் அதனை எனக்குச் சொல்வீராக' என்று வினவினான். வாஸுதேவர், 'அர்ஜுனா! இந்தரதமானது முந்தியே துரோணர் கர்ணன் இவர் களுடைய அஸ்திரங்களால் எரிக்கப்பட்டது. பகைவர்களைத் தவிக்கச் செய்பவனே! நான் இதன்மீது ஏறியிருந்ததினால் யுத்தத்தில் இது அழிந்துபோகாமலிருந்தது. நீ இப்பொழுது க்ருதக்ருத்யனாகி

விட்டபடியால் என்னால் விடப்பட்ட இந்த ரதமானது இப்பொழுது பிரம்மாஸ்திர தேஜஸினால் எரிக்கப்பட்டுச் சிதறியது' என்றுசொன்னார். ஷாட்குண்யபரிபூர்ணரும் சத்துருக்களை ஸம்ஹரிப்பவருமான கேசவர் சிறிது புன்சிரிப்புடன் யுதிஷ்டிரராஜரைக் கட்டிக்கொண்டு, 'குந்திநந்தனரே! பாக்கியத்தினால் நீர் ஜயசீலராக விளங்குகிறீர். தெய்வாதீனமாக உம்முடைய பகைவர்கள் ஜயிக்கப்பட்டார்கள். அரசரே! தெய்வாதீனமாகக் காண்டீவத்தைத்தரித்த அர்ஜுனனும் பாண்டவனான பீமஸேனனும் நீரும் மாத்ரீபுத்திரர்களான நகுலஸஹதேவர்களும் ஸௌக்கியமாக இருக்கிறீர்கள். பாரதரே! வீரர்களுக்கு நாசத்தை உண்டுபண்ணினதும் பகைவர் கொல்லப்பட்டதுமான இந்த யுத்தத்தினின்று விடுபட்டீர்கள். மேலே செய்யவேண்டிய கார்யங்களை விரைவாகச்செய்யும். முன்பு அர்ஜுனனுடன் உபப்லாவ்யநகரத்துக்குவந்த என்னை உத்தேசித்து நீர் மதுபர்க்கத்தைக்கொடுத்து, 'மகாபாகுபலமுள்ளவரே! பிரபுவே! கோவிந்தரே! பிராதாவும் உமக்கு நண்பனுமான இந்தத் தனஞ்சயனை எல்லாஆபத்துக்களிலும் ரக்ஷிக்கக்கடவீர்' என்று சொன்னீரன்றோ? அவ்விதம்சொல்லிய உமக்கு நானும், 'அவ்வாறே ஆகுக' என்று சொன்னேன். ஜனேசுவரரே! ராஜேந்திரரே! சூரனும் ஸத்தியபராக்கிரமனுமான உம்முடைய அந்த ஸவ்யஸாசியானவன் பிராதாக்களோடு ஜயமுள்ளவனாகும்படி ரக்ஷிக்கப்பட்டான். வீரர்களுக்கு நாசத்தை உண்டுபண்ணுகிறதும் மயிர்க்கூச்சத்தை உண்டுபண்ணுகிறதுமான இந்த யுத்தத்தினின்று விடுவிக்கப்பட்டான்' என்றுகூறினார். மஹாராஜரே! வாஸுதேவர் இவ்வண்ணம்உரைக்கக்கேட்ட தர்மராஜரான யுதிஷ்டிரர், மயிர்பொடித்தவராகி, ஜனார்த்தனரைப்பார்த்து மறுமொழி கூறலானார். 'சத்துருக்களைத் துகைப்பவரே! துரோணராலும் கர்ணனாலும் விடப்பட்ட பிரம்மாஸ்திரத்தை ஸாக்ஷாத் வஜ்ரபாணியான இந்திரனேயானாலும் உம்மைத்தவிர வேறுஎவன் தாங்குவான்? தேவரீருடைய அனுக்ரஹத்தினால் யுத்தத்தில் அனேகர் கொல்லப்பட்டார்கள். மகாயுத்தத்தை அடைந்தவனான அர்ஜுனனும் புறங்கொடுப்பவனாகாமலிருந்தான். மகாபாகுபலமுள்ளவரே! அப்படியே உமது அருளினால், நானும் எனது * பரம்பரைகளும் காரியங்களைத் தொடர்ச்சியாகச் செய்து, பராக்ரமத்தினுடைய நல்லபலன்களை அடைந்தோம். உலகத்தில் பிரஸித்திபெற்றிருக்கிறீர். உபப்லாவ்யத்தில் ஸ்ரீவியாஸ

* வேறுபாடம்.

மஹரிஷி, 'எங்கே தர்மமோ அங்கே கிருஷ்ணன்; எங்கே கிருஷ்ணனோ அங்கே ஜயம்' என்று எனக்குச்சொன்னார்' என்றுகூறினார். இவ்வாறு கூறக்கேட்ட வாஸுதேவர், யுதிஷ்டிரரைப்பார்த்து, 'பாரதரே! குருநந்தனரே! உம்முடையதும் சத்துருக்களுடையதுமான பதினெட்டு அக்ஷௌஹிணிசேனைகளும் இவ்வுலகில் பலத்தினால் அர்ஜுனனுக்கு ஈடாகா. அப்படிப்பட்ட இந்தப் பாண்டுநந்தனனான அர்ஜுனன் திவ்யாஸ்திரங்களனைத்தையும்சங்கரரிடத்தினின்றுஅடைந்து, 'யுத்தத்தில் நீ எனக்கு ஸமமாக இருப்பாய்; அல்லது, மேலானவனாக இருப்பாய்' என்று அனுமதிகொடுக்கப்பட்டவனாக மீண்டு பூமியைவந்தடைந்தான். பிரபுவே! நரசிரேஷ்டனான அர்ஜுனன் உம்மால் அனுமதிகொடுக்கப்பட்டால் சென்றதையும் நிகழ்கின்றதையும் வருவதையும் அரைநிமிஷத்தில் (மரணத்தை) அடைவிப்பான் என்பது என்னுடைய எண்ணம். கோபங்கொண்டதனஞ்சயன் அரைநிமிஷத்திற்குள் பீஷ்மர், துரோணர், கிருபர், கர்ணன், அஸ்வத்தாமா, ஜயத்ரதன் ஆகிய இவர்களைக் கொல்லத் திறமையுள்ளவனாவான். அந்த அர்ஜுனன், தேவர்கள் அஸுரர்கள் கந்தர்வர்கள் யக்ஷர்கள் உரகர்கள் ராக்ஷஸர்கள் இவர்களுடன்கூடின மூவுலகங்களையும் ஜயிக்கச்சக்தியுள்ளவன். இவ்வுலகிலுள்ள மானிடரைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? என்னால் தூண்டப்பட்டும் அவர்களைக் கொல்வதில் புத்தியைச்செலுத்தவில்லை. அஃது அவ்வாறுஏற்பட்டது தெய்வத்தின் செயல். அதனால், அவர்கள் அதிக பலசாலிகளானார்கள். அரசரே! இவ்விஷயத்தில் உண்மையானசொற்கள் என்னால் நன்குஉரைக்கப்பட்டன. என்னிடத்தில் எல்லாம் காண்பிக்கப்பட்டன. அதனால், இவன் சத்துருக்களைஜயித்தான். அரசரே! மிக்கபுஜபலமமைந்த அர்ஜுனனும் எனக்கு ஸமானன். பிரபுவே! மஹேசுவரரிடத்தினின்று அஸ்திரங்களைப்பெற்ற பிரபுவான அந்தஅர்ஜுனன் எதைத்தான் செய்யமாட்டான்?' என்றார். பாரதரே! இவ்வாறு சொல்லப்பட்ட அந்த வீரர்கள் உம்முடைய பாசறையை அடைந்து பொக்கசங்களையும் மிகுதியான ரத்தினக்குவியல்களையும் கைக்கொண்டார்கள். பாரதரே! நரேந்திரரே! மகாபாக்கியசாலிகளும் சத்துருக்களைஜயித்தவர்களுமான அவர்கள் வெள்ளி, பொன், மணிகள், முத்துக்கள், பூஷணங்கள், சிறந்தகம்பளங்கள், தோல்கள், யானைகள், குதிரைகள், ரதங்கள், சிறந்தசயனங்கள், கணக்கிலடங்காத வேலைக்காரர்கள், வேலைக்காரிகள், ராஜ்யத்துக்குரிய மற்ற உபகரணங்கள் இவைகளையும் குறைவு

படாத உம்முடைய தனத்தையும் அடைந்து உரக்க அட்டஹாஸஞ் செய்தார்கள். அந்தப்பாண்டவவீரர்கள் அனைவரும் அடிக்கடி தேறுதலடைந்து வாகனங்களைவிட்டுவிட்டுக் கவலையற்றவர்களாயிருந்தார்கள். மஹாராஜரே! பிறகு, மிக்க புகழுள்ளவரான வாஸுதேவர், 'நாம் மங்களத்திற்காகப் பாசறைக்குவெளியில் வஸிக்கவேண்டும்' என்று உரைத்தார். 'அவ்வண்ணமே' என்றுசொல்லிவிட்டு அந்தப் பாண்டவர்களெல்லாரும் அவ்வாறே ஸாத்யகியும் வாஸுதேவரோடு கூடினவர்களாக மங்களத்திற்காக வெளியில்சென்றார்கள். அரசரே! பகைவர்களைக் கொன்றவர்களான அந்தப்பாண்டவர்கள் பாவனமான ஓகவதீஎன்கிறநதியைஅடைந்து அன்றிரவு (அங்கே) வாஸம் செய்தார்கள். பிறகு,யுதிஷ்டிரராஜர் அச்சமயத்திற்கு ஏற்ற ஒருவிஷயத்தை ஆலோசித்து, 'மாதவரே! சத்துருக்களைச் சிக்ஷிப்பவரே! உமக்கு விருப்பமிருந்தால், குரோதத்தினால் நன்கு ஜ்வலிக்கின்ற காந்தாரியைத் தணிப்பதற்காக அவ்விடம்செல்வது உமக்குத் தக்கதாகும். மஹாபாக்கியமுள்ளவரே! * ஹேதுக்களோடும் காரணங்களோடும்கூடினவையும் காலத்துக்குத்தக்கபடி சொல்லப்படுபவையுமான வாக்கியங்களால் சீக்கிரமாகக் காந்தாரியை மனவருத்தந் தணிந்தவளாகச் செய்யவேண்டும். பிதாமஹரான வியாஸபகவானும் அவ்விடத்தில்இருப்பார்' என்று வேண்டினார். பிறகு, யதுகுலத்திலுதித்தவரானகோவிந்தரை ஹஸ்தினாபட்டணத்துக்கு அனுப்பினார்கள். பிரதாபசாலியான அந்த வாஸுதேவரும் தாருகனை ரதத்தில் ஏறும்படிசெய்துகொண்டு அம்பிகாபுத்திரனை திருதராஷ்டிரனிருக்கிற இடத்தைக்குறித்து வேகத்துடன் விரைவாகச் சென்றார். சைப்யம் ஸுக்ரீவம் என்கிற குதிரைகள் பூட்டின தேரின்மீதேறிச் செல்லப்போகிறவரான அந்தக் கண்ணபிரானைப்பார்த்து, பாண்டவர்கள், 'புத்திரர்கள் கொல்லப்பட்டவளும் கீர்த்தியுள்ளவளுமான காந்தாரியைத் தேறுதலடையும்படி செய்யும்' என்று வேண்டினார்கள். பாண்டவர்களால் உரைக்கப்பட்டவரும் ஸாத்வதர்களுள் சிறந்தவருமான அந்த ஸ்ரீ வாஸுதேவர் அந்தப்பட்டணம் சென்றார். பிறகு, பிள்ளைகள் கொல்லப்பட்ட காந்தாரியிடம் விரைவாகச் சென்றார்" என்று கூறினான்" என்றார்.

---

*'ஹேதுக்கள்=காணப்பட்டகுற்றங்கள்; காரணங்கள்=காணப்படாதவையும் அவசியம் நேரக்கூடியவையுமான குற்றங்கள்' என்பது பழையஉரை.

## அறுபத்துநான்காவது அத்யாயம்.

## கதாயுத்தபர்வம். (தொடர்ச்சி.)



(காந்தாரியைத்தேற்றக் காரணமும், கோவிந்தர் காந்தாரியையும் திருதராஷ்டிரனையும்தேற்றிப் பாண்டவரிடம் திரும்பிவந்ததும்.)

ஜனமேஜயர், "பிராம்மணோத்தமரே! யாதுகாரணம்பற்றித் தர்மராஜரான யுதிஷ்டிரர், பகைவரைவாட்டுபவரான வாஸுதேவரைக் காந்தாரியினிடம்அனுப்பினார்?முந்தியே மாதவர் ஸமாதானத்திற்காகக் கௌரவர்களிடத்தில் போனார். அவர் அந்த விருப்பத்தை அடையவில்லை. அதனால் இந்தயுத்தம் நேர்ந்தது. பிராம்மணரே! யுத்தவீரர்களும் துரியோதனனும் கொல்லப்பட்டுப் பூமியில் பாண்டுநந்தனருக்கு யுத்தத்தில் பகைநாசம் ஏற்பட்டுச் சேனைகள் ஓடிப் பாசறையும் சூன்யமாகி உத்தமமான புகழும்அடையப்பட்டிருக்கும் அத்தருணத்தில், மறுபடியும் வாஸுதேவர் சென்றதற்குக் காரணம் யாது? பிராம்மணரே! (யாராலும்) அறியமுடியாத மனமுள்ள ஜனார்த்தனர் தாமே சென்றமையால் அதற்குக் காரணமானது சிறிதாயிருக்குமென்று எனக்குத் தோன்றவில்லை. அத்வர்யுக்களுள் சிறந்தவரே! பிராம்மணரே? இந்தக் காரியத்தினுடைய நிச்சயத்தில் எது காரணமோ அஃதனைத்தையும் உள்ளபடி உரைப்பீராக" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

"அரசரே! பரதர்களுள் சிறந்தவரே! இந்தக்கேள்வியானது உமக்குத் தகுந்தது. என்னைப்பார்த்து எதைக்கேட்டீரோ அதை உமக்கு நான் உள்ளபடி உரைப்பேன். மன்னரே! பாரதரே! மஹாராஜரே! யுத்தமுறையை மீறிச்சென்று யுத்தரங்கத்தில் பீமஸேனனால் கதாயுத்தத்தினால் அநியாயமாகக் கொல்லப்பட்டமகாபலசாலியும் திருதராஷ்டிர புத்திரனுமான துரியோதனனைக்கண்டு யுதிஷ்டிரருக்குப் பெரும்பயம்உண்டாகியது. அந்தயுதிஷ்டிரர் மஹாபாக்யவதியும் தவமுள்ளவளுமான காந்தாரியை நினைத்தார். அவள் கோரமானதவத்தினால் மூவுலகங்களையும் எரித்துவிடுவள். ஆலோசிக்கின்ற அந்த யுதிஷ்டிரருக்கு, அப்பொழுது, 'குரோதத்தினால் ஜ்வலிக்கின்ற காந்தாரியின் குரோதசமனம் முந்தி ஏற்படவேண்டும். அவள் நம்மால் செய்யப்பட்டிருக்கிற இப்படிப்பட்ட புத்திரவதத்தைக்கேட்டுக் கோபங்கொண்டவளாகி நம்மை மனத்திலுள்ள கோ

பாக்னியினால் சாம்பலாகச் செய்வாள். புத்ரன் கபடமில்லாமல் யுத்தஞ்செய்ததையும் வஞ்சனையினால் கொல்லப்பட்டதையும்கேட்டு அவள் கடுமையான இந்தத் துக்கத்தை எவ்வாறு பொறுக்கச் சக்தியுள்ளவளாவாள்?' என்று இவ்விதபுத்தி தோன்றியது. யுதிஷ்டிரர் இவ்வண்ணம் பலவாறு ஆலோசித்துப் பயத்தோடும் சோகத்தோடும் வாஸுதேவரைப் பார்த்து இந்த வாக்கியத்தை உரைக்கலானார்.

'கோவிந்தரே! அச்சுதரே! மனத்தினாலும் அடையமுடியாததான இந்தராஜ்யமானது பகைமுடிக்கப்பெற்றதாகத் தேவரீருடைய அனுக்கிரஹத்தினால் நம்மால் அடையப்பட்டது. மிக்க புஜபலமுள்ளவரே! யாதவநந்தனரே! மயிர்புளகமடையச்செய்கிற யுத்தத்தில் எனக்கு நேரில் நீர் மிகவும்பெரிய அடிகளையும்பட்டீர். மிக்கதோள்வலியமைந்த அச்சுதரே! முற்காலத்தில் தேவாஸுரயுத்தத்தில் தேவசத்துருக்களுடைய வதத்தின்பொருட்டு உம்மால் எவ்விதமான உதவிசெய்யப்பட்டதோ, எப்படி தேவசத்துருக்கள் கொல்லப்பட்டார்களோ அவ்விதம் எங்களுக்கும் உதவிபுரிந்தீர்; (எங்கள்பகைவரும் கொல்லப்பட்டார்கள்.) விருஷ்ணி வம்சத்திலுதித்தவரே! உம்மால் ஸாரத்தியம் செய்தும் நாங்கள் காக்கப்பட்டோமன்றோ? மஹாயுத்தத்தில் பல்குனனுக்கு நீர் நாதராயில்லாமலிருந்தால் இந்தச் சேனைக்கடலானது யுத்தத்தில் எவ்வாறு ஜயிக்கப்படக்கூடியதாகும்? மாதவரே! பெரிய கதையடிகளும் பரிகங்களால் அடியும் சக்திகளாலும் பிண்டிபாலங்களாலும் தோமரங்களாலும் கோடாலிகளாலும்அடியும் எங்களுக்காக உம்மால் தாங்கப்பட்டன. மிக்க கொடிய சொற்களும் கேட்கப்பட்டன. யுத்தத்தில் வஜ்ராயுதம் வீழ்தற்கொப்பான ஆயுத வீழ்ச்சிகளும் தாங்கப்பட்டன. அச்சுதரே! துர்யோதனன் கொல்லப்பட்டதனால் உம்முடைய அந்தஶ்ரமங்கள் ஸபலமாயின. கோவிந்தரே! அவை எல்லாம் மீண்டும் வீணாகாவண்ணம் செய்யும். மாதவரே! ஜயம் அடையப்பட்டிருக்குந்தருணத்தில், நம்முடைய மனமானது ஸந்தேகமாகிற ஊஞ்சலில் ஏறியிருக்கிறது. மிக்கபுஜபலமுள்ளவரே! காந்தாரியினுடைய கோபத்தைத் தணியும்படிசெய்யும். மகாபாக்கியவதியான அந்தக்காந்தாரி நாள்தோறும் உக்கிரமான தவத்தினால் இளைத்திருக்கிறாள்; புத்திரர்கள் பௌத்திரர்கள் இவர்களின் வதத்தைக்கேட்டு நிச்சயமாக நம்மை எரிப்பாள். வீரரே! அவளுடைய மனத்தைத் தெளியும்படி செய்வதுதான் இச்சமயத்துக்கு உரியதென்பது என்னுடையஎண்ணம். புருஷோத்தமரே! குரோதத்தினால் மிகவும் ஜ்வலிப்பவளும் புத்திரவியஸனத்தினால்

இளைத்தவளுமான அந்தக்காந்தாரியை உம்மைத்தவிர வேறு எந்த மனிதன் பார்க்கச் சக்தியுள்ளவன்? பகைவர்களை அடக்குபவரே! மாதவரே! குரோதத்தினால் ஜ்வலிக்கின்ற காந்தாரியை மனத்தெளிவடையச் செய்வதின்பொருட்டு அங்கே நீர்செல்வதுதான் ஸமயோசிதமென்று எனக்குத் தோன்றுகிறது. மஹாபாகுபலமுள்ளவரே! நீரன்றோ உலகங்களை உண்டுபண்ணுகிறவர்; பற்பல நாமரூபங்களைப்படைத்தவர்; உலகங்களுடைய உத்பத்திக்கும் நாசத்துக்கும் காரணம். ஹேதுக்களோடும் காரணங்களோடும் கூடியவைகளும் ஸமயோசிதமாகச் சொல்லப்பட்டவைகளுமான வாக்கியங்களால் காந்தாரியைச் சீக்கிரமாகவே கோபம் தணிந்தவளாகச்செய்வீர். பிதாமஹரான வியாஸபகவான் அங்கே இருப்பார். மிக்க தோள்வலியமைந்தவரே! ஸாத்வதர்களுள் சிறந்தவரே! பாண்டவர்களுக்கு நன்மையை விரும்புகின்ற நீர் எல்லாவிதத்திலும் காந்தாரிக்குக் கோபந்தணித்தலைச் செய்யக்கடவீர்' என்று கூறினர்.

யதுகுலத்தைத் தாங்குபவரான ஸ்ரீகேசவர், தர்மராஜருடைய வசனத்தைக் கேட்டுத் தாருகனை அழைத்து, 'ரதத்தை ஸித்தஞ்செய்' என்று சொன்னர். பிறகு, கேசவருடைய வசனத்தைக்கேட்டுத் தாருகன், விரைவுடன், ரதமானது ஸித்தமாயிருக்கிறதென்பதை மஹாத்மாவான அவரிடம் தெரிவித்தான். யாதவர்களுள் சிறந்தவரும் பகைவரைவாட்டுபவரும் பிரபுவுமான கேசவர்அந்த ரதத்தின் மீதேறிக்கொண்டு விரைவாக ஹஸ்திநபட்டணம் சென்றார். மஹாராஜரே! பிறகு, ஆறுகுணங்களுள்ளவரும் சிறந்தவீர்யமுள்ளவருமான மாதவர் ரதத்திலேறிக்கொண்டு சென்று ஹஸ்திநபட்டணத்தை அணுகி அதில் பிரவேசித்தார். வீரரான கண்ணபிரான் தேரினொலியினால் நகரத்தை ஒலியிடும்படி செய்துகொண்டு நுழைந்து திருதராஷ்டிரனுக்கு அறிவித்து உத்தமமான ரதத்தினின்று இறங்கித் தைரியத்துடன் திருதராஷ்டிரனுடைய அரண்மனையில் பிரவேசித்தார்; அந்த இடத்தில் முந்தியே வந்திருந்த ரிஷிசிரேஷ்டரான வியாஸரைக் கண்டார். ஜனார்த்தனரான கேசவர், ஸ்ரீவியாஸர் திருதராஷ்டிரமகாராஜர் இவர்களின் கால்களில் வணங்கித் தைர்யத்துடன் காந்தாரியையும் வந்தனஞ்செய்தார். ராஜேந்திரரே! பிறகு, யாதவர்களுள்சிறந்தவரும் அதோக்ஷஜருமானஸ்ரீவாஸுதேவர்,திருதராஷ்டிரனுடையகையைப் பிடித்துக்கொண்டு உரக்க ரோதனம்செய்தார். பகைவர்களை அடக்குகிறவரான அந்தக்கேசவர் ஒரு முகூர்த்தகாலம் சோகத்தினாலுண்டான கண்ணீரைச்சொரிந்து தண்ணீரால்இருகண்

களையும்துடைத்துக்கொண்டு விதிப்படிஆசமனம்செய்து திருதராஷ்டிரனைப்பார்த்து வணக்கமான வாக்கியத்தை உரைக்கலானார்.

'பாரதரே! முன்பு நடந்ததும் இனிநடப்பதும் ஒன்றும்உமக்குத் தெரியாததில்லை. பிரபுவே! பாரதரே! உம்முடையமனத்தை அனுஸரித்தவர்களான எல்லாப்பாண்டவர்களும் குலத்திற்கும் அவ்வாறே க்ஷத்திரியர்களுக்கும் அழிவுண்டாகாவண்ணம் காலத்தைஅனுஸரித்துநடந்துகொண்ட அந்தவிஷயமும் உமக்குநன்குதெரியும். தர்மபுத்ரரானயுதிஷ்டிரர் பிராதாக்களோடு உடன்பாட்டைச்செய்துகொண்டு பொறுத்திருந்தார். கபடமான சூதாட்டத்தினால் ஜயிக்கப்பட்டிருக்கிற சுத்தர்களான பாண்டவர்கள் வனவாஸத்தையும் ஏற்றுக்கொண்டனர். பற்பலவேஷங்களால் மறைக்கப்பட்ட பார்த்தர்கள் அஜ்ஞாதவாஸத்தையும் ஏற்றுக்கொண்டனர். பாண்டவர்களால் இன்னும் மற்றஅனேக கிலேசங்கள் அசக்தர்கள்போல எப்போதும்அனுபவிக்கப்பட்டன. யுத்தஸமயம் ஸமீபித்த தருணத்தில் நானே நேரில் வந்து எல்லாஜனங்களுக்குமெதிரில் உம்மிடம் ஐந்துகிராமங்களை வேண்டினேன். காலத்தினால் கவரப்பட்டநீர் பேராசையினால்கொடுக்கவில்லை. அரசரே! உம்முடைய அபராதத்தினால் எல்லாக்ஷத்திரியர்களும் நாசமடைந்தார்கள். பீஷ்மராலும் ஸோமதத்தனாலும் பாஹ்லீகனாலும் கிருபராலும் த்ரோணராலும்துரோணபுத்திரராலும் புத்திசாலியான விதுரராலும் நித்தியம் ஸமாதானத்தைப்பற்றி வேண்டப்பட்டீர். நீர் அதைச் செய்யவில்லை. பாரதரே! எல்லாமனிதர்களும் காலத்தினால் அடிக்கப்பட்டமனத்தையுடையவர்களாக மயங்குகின்றார்கள். நேர்ந்திருக்கின்ற இந்தவிஷயத்தில் நீரே முந்தி விவேகமில்லாதவராகிவிட்டீர். காலபலத்தைவிட வேறுஎன்னகாரணமிருக்கின்றது? தெய்வமே முக்கியகதி. மஹாபிராஜ்ஞரே! பாண்டவர்கள் மீது தோஷங்களைச் சுமத்தாதீர். மஹாத்மாக்களான பாண்டவர்களிடம் முறைதவறுனசெய்கை சிறிதுமில்லை. பகைவர்களைத்தவிக்கச்செய்பவரே! தர்மத்தினாலும் நியாயத்தினாலும் சினேகத்தினாலும் இவைஅனைத்தையும் உமதுசொந்தக்குற்றத்தினால்நேர்ந்தபயனென்று அறிந்து, நீர் பாண்டுபுத்திரர்கள்மீது கோபத்தைப் பாராட்டலாகாது. நாதரே! நீரும் காந்தாரியுமாகிய உங்கள் ஸந்ததியும் வம்சமும் பிண்டங்களும் புத்திரனால் செய்யப்படும்பலனும் பாண்டவர்களிடம் நிலைபெற்றிருக்கின்றன. கௌரவர்களுட்புலிபோன்றவரே! நீர் வியஸனமடையவேண்டாம். புகழ்பெற்றவளானகாந்தாரியும்வியஸனமடைய வேண்டாம். புருஷஸ்ரேஷ்டரே! பாண்டவர்களிடத்தில் பாவத்தை

எண்ணவேண்டாம். பாரதரே! இது முழுமையும் உம்முடைய அக்கிரமத்தினால் விளைந்ததென்று எண்ணிப் பாண்டவர்கள்மீது நல்ல எண்ணமுள்ளவராயிரும். உமக்கு வந்தனம். மஹாபாகுபல முள்ளவரே! பரதஸ்ரேஷ்டரே! தர்மராஜருக்கு இயற்கையாகவே உம்மிடத்திலிருக்கிற பக்தியையும்நேசத்தையும் நீர் அறிந்திருக்கிறீர். தீங்கிழைத்தவர்களானபகைவர்களுக்கு இந்தத் துன்பத்தைச்செய்து அவர் இரவும்பகலும் தகிக்கப்படுகிறார்.ஸுகத்தை அடையவேயில்லை. நரஸ்ரேஷ்டரே! ஆண்மையிற்சிறந்தவரான அந்தயுதிஷ்டிரர் உம்மையும் புகழுள்ளவளானகாந்தாரியையும்பற்றித் துக்கித்துக்கொண்டு சாந்தியை அடையவேயில்லை. அவர் அதிகவெட்கத்தினால் கவரப்பட்டவராகி, புத்திரசோகத்தினால் நன்கு வாட்டப்பட்டவரும் (கவலையுற்ற) புத்தியினால் பொறிகலங்கியவருமான உம்மை அடையவில்லை' என்றார்.

மகாராஜரே! யதுவம்சத்திலுதித்தவர்களுள்உத்தமரான ஸ்ரீகோவிந்தர், திருதராஷ்டிரரைப்பார்த்து இவ்வாறு உரைத்துவிட்டு, சோகத்தினால் பீடிக்கப்பட்டவளான காந்தாரியைப்பார்த்து உத்தமமானவாக்கியத்தை உரைக்கலானார். 'ஸுபலனுடையபெண்ணே! நல்லவிரதத்தை அனுஷ்டிக்கிறவளே! நான் உன்னைநோக்கிச்சொல்வதைத் தெரிந்துகொள். கல்யாணி! இவ்வுலகில் உனக்கு ஸமமானஸ்திரீ இப்பொழுதுஇல்லை. அரசியே! இரண்டுபக்ஷத்தார்களுக்கும் ஹிதமானதும் தர்மத்துடனும் அர்த்தத்துடனுங்கூடியதும் ஸபையின்கண் என்னெதிரில் சொல்லியதுமானவாக்கியம் நினைவிருக்கிறதா? கல்யாணி! நல்வார்த்தையை உரைத்தாய். உன்னுடைய புத்திரர்களால் அது அவ்வாறுசெய்யப்படவில்லை. ஜயத்தில்விருப்பமுள்ள துர்யோதனனுக்கு நீ கடுமொழியையும்சொன்னாய். ராஜபுத்திரி! 'மூட! என்வசனத்தைக் கேள். எங்கே தர்மமோ அங்கே ஜயம்' என்றுகூறிய உன்னுடைய இந்தவாக்கியம் அப்படியேவந்துவிட்டது. கல்யாணி! இவ்வாறு அறிந்திருப்பவளானநீ சோகத்தில் மனத்தைச் செலுத்தாதே. பாண்டவர்களுடையநாசத்தில் ஒருபொழுதும்உனக்கு எண்ணம் உண்டாகவேண்டாம். மஹாபாக்கியவதியே! தவவலிமையினால் குரோதத்தினால் ஜ்வலிக்கின்றகண்ணால் சராசரங்களுடன் கூடினபூமியையும் எரிப்பதற்குச் சக்தியுள்ளவளாயிருக்கிறாய்' என்றார். வாஸுதேவருடைய வார்த்தையைக்கேட்டுக் காந்தாரியானவள், 'மஹாபாகுபலமுள்ளவரே! கேசவரே! இது நீர் சொல்லுகிறபடிதான். மனோவியாதிகளால் எரிக்கப்படுகின்ற எனக்குப் புத்தி நிலை

தவறிவிட்டது. ஜனார்த்தனரே! உம்முடைய வாக்கியத்தைக்கேட்டு என்னுடைய அந்தப்புத்தியானது நிலைபெற்றுவிட்டது. கேசவரே! மனிதர்களுள் உத்தமரே! கண்ணில்லாதவரும் பிராயமுதிர்ந்தவரும் புத்ரர்கள் மாண்டுபோனவருமான திருதராஷ்டிரராஜருக்கு ஒன்று சேர்ந்திருக்கிற பாண்டவவீரர்களுடன்கூடின நீரே கதி' என்கிறவாக்கியத்தை உரைத்தாள். புத்திரசோகத்தினால் தபிக்கப்பட்டவளான காந்தாரி இவ்வளவுவரையும் வசனத்தை உரைத்துவிட்டு வஸ்திரத்தினால் முகத்தை மூடிக்கொண்டு உரக்க அழுதாள். பிறகு, மகாபுஜபலமுள்ளவரும் பிரபுவுமான கேசவர், சோகத்தினால் பீடிக்கப்பட்ட அந்தக்காந்தாரியை ஹேதுக்களுடனும்காரணங்களுடனுங்கூடினவாக்கியங்களால் ஸமாதானப்படுத்தினார். லக்ஷ்மீநாதரான கேசவர் காந்தாரியையும் திருதராஷ்டிரனையும் ஸமாதானப்படுத்தி அஸ்வத்தாமாவினால் கருதப்பட்டிருக்கிறவிஷயத்தை அறிந்தார். ராஜேந்திரரே! பிறகு, கேசவர், விரைவாக எழுந்திருந்து வியாஸருடைய இருகால்களையும் முடியினால்வணங்கிக் கௌரவராஜனைநோக்கி, 'குருசிரேஷ்டரே! உம்மிடத்தில் விடைபெற்றுக்கொள்ளுகிறேன். துக்கத்தில் மனத்தைச் செலுத்தவேண்டாம். துரோணபுத்திரருடைய அபிப்பிராயம் கெட்டதாயிருக்கிறது. அதனால், விரைவாக எழுந்துவிட்டேன். அவரால் இரவில் பாண்டவர்களைக் கொல்வதில் புத்தியானது வைக்கப்பட்டிருக்கிறது' என்று கூறினார். இந்த வசனத்தைக்கேட்டு மகாபாகுபலமுள்ள திருதராஷ்டிரன், காந்தாரியோடு கூடினவனாக, கேசியைஅழித்தவரான கேசவரைப்பார்த்து, 'மகாபாகுபலமுள்ளவரே! சீக்கிரமாகச்செல்லும். பாண்டவர்களைப் பாதுகாப்பீராக. ஜனார்த்தனரே! மீண்டும் உம்மோடு நான் சீக்கிரமாக ஸந்திபெறுவேன்' என்றுகூறினான். பிறகு, அச்சுதர் தாருகனோடு கூடி வேகமாகப்புறப்பட்டார். மன்னரே! வாஸுதேவர் சென்றவுடன், அறியமுடியாத மனமுள்ளவரும் உலகங்களால் நமஸ்கரிக்கப்பட்டவருமான வியாஸர்,ஜனநாதனை திருதராஷ்டிரனைஸமாதானஞ் செய்தார். அரசரே! தர்மாத்மாவான வாஸுதேவரும் கிருதக்ருத்யராகிப் பாண்டவர்களைப் பார்க்க எண்ணங்கொண்டு ஹஸ்தினாபட்டணத்திலிருந்து பாசறைக்குச் சென்றார். அந்த மாதவர், இரவில் பாசறைக்குச்சென்று பாண்டவர்களை அடைந்தார். அவர்களுக்கு அந்த விருத்தாந்தத்தைச்சொல்லி அவர்களுடன்கூடி ஜாக்கிரதையுடன் இருந்தார்.

---

## அறுபத்தைந்தாவது அத்யாயம்.

## கதாயுத்தபர்வம். (தொடர்ச்சி.)



(துரியோதனன் புலம்பியதும், ஸமாசாரம் கொண்டுபோகிறவர்கள் துரியோதனன் சாய்ந்ததை அச்வத்தாமாவுக்குத் தெரிவித்ததும்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்ஜய! சூரனென்கிற கர்வமுள்ளவனும் தொடைகள் முறிக்கப்பட்டுப் பூமியில்விழுந்தவனும் காலால்தலையில் மிதிக்கப்பட்டவனுமான என்னுடைய புத்திரன் என்ன சொன்னான்? அதிககோபமுள்ளவனும் பாண்டவர்களிடத்தில் வைரமுள்ளவனுமான துரியோதனராஜன் மகாயுத்தத்தில் மிக்க வியஸனத்தை அடைந்திருக்கையில் என்னசொன்னான்?" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"அரசரே! நராதிபரே! அந்தத் துயரக்கடலில் மூழ்கின அரசன் சொன்னதை உள்ளபடி நான் உரைப்பேன்; கேளும். மன்னரே! தொடைகள் முறிக்கப்பட்டவனும் புழுதியினால் மூடப்பட்டவனுமான அந்தத் துரியோதனராஜன் அச்சமயத்தில் தலைமயிர்களைக் கோதிக்கொண்டு பத்துத்திசைகளையும் பார்த்து முயற்சியினால் கேசங்களைமுடிந்து ஸர்ப்பம்போலப் பெருமூச்சுவிட்டுக் கொண்டு கோபத்தினாலும் கண்ணீராலும் வியாபிக்கப்பட்ட இரு கண்களாலும் என்னைப்பார்த்து இருகைகளையும் பூமியில்தேய்த்து அடங்காதமதங்கொண்ட யானைபோலச் சிதறியிருக்கின்ற தலைமயிர்களை ஆட்டிக்கொண்டு பற்களால் பற்களைக்கடித்துப் பாண்டவர்களுள் மூத்தவரான யுதிஷ்டிரரை நிந்தித்துப் பெருமூச்சுவிட்டுப் பின்வருமாறு கூறலானான். 'சந்தனுகுமாரரும் நாதருமான பீஷ்மரிடத்திலும் சஸ்திரதாரிகளுள் சிறந்த கர்ணனிடத்திலும் கிருபரிடத்திலும் சகுனியிடத்திலும் அஸ்திரதாரிகளுள் சிறந்தவரான துரோணரிடத்திலும் அச்வத்தாமாவிடத்திலும் அவ்வாறே சல்லியனிடத்திலும் சூரனான கிருதவர்மாவினிடத்திலும் மஹாத்மாக்களான இன்னும் மற்றச் சூரர்களிடத்திலும் பாரத்தைவைத்தவனான நான் இந்தநிலைமையை அடைந்தேன். காலம் எவ்விதத்தினாலும் தாண்டத்தகாததன்றோ? பதினோர் அக்ஷௌஹிணிக்கு நாதனான அப்படிப்பட்ட நான் இந்த நிலைமையை அடைந்தேன். மஹாபாகுபலமுள்ளவனே! காலத்தை அடைந்து ஒருவனும் மீறி

நடக்கவியலாது. இந்தயுத்தத்தில் ஜீவித்திருக்கிற என்னைச் சேர்ந்தவர்களிடத்தில், 'நான் பீமஸேனனால் யுத்தமுறையைமீறி அடிக்கப்பட்டேன்' என்று சொல்லவேண்டும். பாண்டவர்களால் பூரிஸ்ரவஸ், கர்ணன், பீஷ்மர், புத்திமானான துரோணர் இவர்கள்விஷயத்தில் மிக்க குரூரமான அனேக செய்கைகள் செய்யப்பட்டன. குரூரர்களான பாண்டவர்களால் நிந்திக்கப்பட்ட இந்தக்கார்யமும் செய்யப்பட்டது. இதனால், அவர்கள் ஸாதுக்களிடத்தில் நிந்திக்கத்தக்க நிலைமையை அடைவார்கள் என்பது என்னுடைய எண்ணம். கபடத்தினால் ஜயத்தைத்தேடுவதினால் பராக்கிரமசாலிக்குப் பிரீதி எவ்வாறு உண்டாகும்? கற்றறிந்தவருள் எவன்தான் ஸமயத்தை மீறி நடந்தவனை மதிப்பான்? கற்றறிந்தவன் எவன்தான் பாவியும் பாண்டுபுத்திரனுமான விருகோதரன்போல அதர்மத்தினால் ஜயத்தை அடைந்து ஸந்தோஷிப்பான்? தொடைகள் முறிந்தவனான என்னுடைய தலையானது கோபங்கொண்ட பீமஸேனனால் காலால்இப்பொழுது மிதிக்கப்பட்டதென்பதைக்காட்டிலும் என்னஆச்சர்யம் இருக்கிறது? ஸஞ்ஜய! மிகவாட்டுபவனும் ஸ்ரீயினால்அடையப்பட்டவனும் பந்துக்களின் நடுவிலிருப்பவனுமான இவனை எந்தமனிதன் இவ்வண்ணம் செய்வனோ அவனல்லனோ ஆண்பிள்ளை? ஸஞ்சய! யுத்ததர்மத்தை அறிந்தவர்களும் துக்கத்தினால்பீடிக்கப்பட்டவர்களுமான என்னுடைய மாதாபிதாக்களிடம் நான் சொன்னதாகப் பின்வருமாறு தெரிவிக்கவேண்டும். 'யாகங்கள் செய்யப்பட்டன. வேலைக்காரர்கள் போஷிக்கப்பட்டார்கள். கடல்சூழ்ந்த பூமியானது நன்கு ஆளப்பட்டது. ஸஞ்ஜய! உயிரோடேயே இருக்கிற சத்துருக்களுடைய தலையில் நான்நிலைபெற்றிருந்தேன். சக்திக்குத்தக்கப்படி கொடுக்கத்தக்க வஸ்துக்கள் என்னால்கொடுக்கப்பட்டன. மித்திரர்களுக்குப் பிரியம் செய்யப்பட்டது. சத்துருக்கள் எல்லாரும் பீடிக்கப்பட்டார்கள். எவன் என்னைக்காட்டிலும் நல்ல முடிவோடிருப்பவன்? பந்துக்கள் எல்லாரும் ஸம்மானிக்கப்பட்டார்கள். பூஜிக்கத்தக்கஜனங்கள் நன்கு பூஜிக்கப்பட்டார்கள். மூன்று புருஷார்த்தங்களும் அனுஷ்டிக்கப்பட்டன. எவன் என்னைக்காட்டிலும் நல்லமுடிவை யடைந்தவன்? முக்கியர்களான அரசர்களிடம் ஆஜ்ஞைசெலுத்தப்பட்டது. எவ்விதத்தாலும் கிடைக்கஅரிதான கௌரவம் அடையப்பட்டது. அவ்வாறே நல்லகுதிரைகளின்மீது ஏறிச் சவாரிசெய்யப்பட்டது. எவன் என்னோடு ஸமமாகச் சிறந்தநிலைமையைப் பெற்றவன்? பகைவரின் தேசங்கள் என்னால் அடையப்பட்டன. அரசர்களும்

அடிமைகள்போல அனுபவிக்கப்பட்டார்கள். நண்பர்களுக்கு நல்ல காரியம் செய்யப்பட்டது. எவன் எனக்குச்சமமாகச் சிறந்த முடிவைப்பெற்றவன்? விதிப்படி அத்யயனம் செய்யப்பட்டது. தானம் செய்யப்பட்டது. நோயில்லாத வாழ்நாளும் கழிக்கப்பட்டது. எனக்குரியசெயலால் லோகங்கள் ஜயிக்கப்பட்டன. என்னிலும் எவன் நல்ல முடிவுபெற்றவன்? பிரபுவே! தெய்வாதீனமாக, நான் யுத்தத்தில் வெல்லப்படவில்லை: நான், அடிமைக்காரர்கள்போலப் பகைவரை அடுக்கவில்லை. விசாலமான என்னுடைய அரசச் செல்வமானது தெய்வச்செயலால் நான் மாண்டபிறகு, பிறரை அடைந்தது. தமக்குரிய தொழிலைச்செய்கின்ற க்ஷத்திரியர்களுக்கு எது இஷ்டமோ அப்படிப்பட்ட நாசம் என்னால் அடையப்பட்டது. எவன் எனக்குச் சமமாக நல்லமுடிவு பெற்றவன்? பாக்கியத்தினால், அல்பன்போல நான்ஜயிக்கப்பட்டு வைரத்தினின்று திரும்பவில்லை. தெய்வாதீனமாக, ஒருவிதமான அவமானத்தைப்பெற்றுத் தோல்விஅடைவிக்கப்படவில்லை. தூங்குகிறவனையோ அல்லது மிக்க மயக்கமுற்றிருப்பவனையோ விஷமிட்டுக்கொல்வதுபோல யுத்த தர்மத்தை மீறினவனான பீமஸேனனால் ஸமயத்தைத்தாண்டி இவ்வாறு கொல்லப்பட்டேன். மஹாபாக்கியசாலியான அஸ்வத்தாமாவுக்கும் ஸாத்வதனானகிருதவர்மாவுக்கும் சாரத்வதரானகிருபருக்கும் 'அதர்மத்தினால் பிரவிர்த்தித்தவர்களும் யுத்த தர்மத்தை முழுதும் கடந்தவர்களுமான பாண்டவர்கள்விஷயத்தில் பெரும்பான்மையாக நீங்கள் நம்பிக்கைவைக்கலாகாது' என்று நான்சொன்னதாகச்சொல்ல வேண்டும்' என்றான். ஸத்யவிக்கிரமனும் அரசனுமான உம்முடைய புத்திரன் ஸமாசாரங்கொண்டுபோகின்ற தூதர்களைப்பார்த்து, 'நான் யுத்தத்தில் பீமஸேனனால் அதர்மத்தினால் கொல்லப்பட்டேன். அப்படிப்பட்டநான் ஸ்வர்க்கத்தைஅடைந்த துரோணரையும் அவ்வாறே கர்ணனையும் சல்யனையும் மஹாவீர்யமுள்ள விருஷஸேனனையும் ஸுபலனுடைய குமாரனான சகுனியையும் மஹாவீர்யமுள்ள ஜலஸந்தனையும் அரசனான பகதத்தனையும் மஹாவில்லாளியான ஸோமதத்தனையும் ஸிந்துதேசாதிபதியான ஜயத்ரதனையும் எனக்குஸமமான துச்சாஸனன்முதலான தம்பிமாரையும் விக்கிரமசாலியான துச்சாஸன புத்திரனையும் லக்ஷ்மணனையும் இரண்டுபுத்திரர்களையும் இன்னும்மற்றஎன்னைச்சார்ந்த ஆயிரக்கணக்கான அனேகவீரர்களையும் கூட்டத்தினின்றுதவறின வழிப்போக்கன்போல நான் பின்புறம்தொடர்ந்துசெல்லப்போகிறேன். தமையன்மார்களும் கணவனும் மாண்

டார்களென்பதைக்கேட்டு அதிகமாக அலறுகின்றவளும் துக்கத்தினால் பீடிக்கப்பட்டவளுமான என்தங்கையாகிய அந்தத்துச்சலை எவ்வாறு இருக்கப்போகிறாள்? பிராயமுதிர்ந்தவரும் அரசருமான என்பிதாவாகிய திருதராஷ்டிரர் காந்தாரியுடன்கூடினவராக நாட்டுப்பெண்களோடும் பேரன்மார்களுடைய மனைவிகளோடும் என்னகதியையடைவார்? கல்யாணியும் விசாலமானகண்களுடன்கூடியவளுமான லக்ஷ்மணனுடைய மாதாவும் புத்திரர்களையும் பர்த்தாவையும் இழந்ததினால் நிச்சயமாகவே விரைவாக நாசத்தை அடைவாள். ஸன்யாஸியும் பேசுவதில்திறமையுள்ளவனுமான * சார்வாகன் அறிவானாகில் மகாபாக்யசாலியான அவன் நிச்சயமாக எனக்குப் பரிஹாரஞ்செய்வான். மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்ற ஸமந்தபஞ்சகமென்கிற புண்யக்ஷேத்திரத்தில் நான் மரணத்தைஅடைந்து சாஸ்வதலோகங்களை அடையப்போகிறேன்' என்றுசொன்னான். ஐயா! பிறகு, ஆயிரக்கணக்கான ஜனங்கள் நீர்ததும்புகின்ற கண்களோடுகூடியவர்களாக அரசனுடையபுலம்பலைக்கேட்டுப் பத்துத்திசைகளிலும் ஓடினார்கள். பிறகு, ஸமுத்திரங்களுடனும் வனங்களுடனுங்கூடியதும் சராசரங்களுடன்கூடியதுமான பூமியானது பேரொலியுடன் பயங்கரமாக அசைந்தது. திசைகளும் கலங்கின. அவர்கள் துரோண புத்திரரிடம்சென்று கதாயுத்தத்தில் நடந்தவிஷயங்களையும் அரசன்வீழ்த்தப்பட்டதையும் நடந்தபடி தெரிவித்தார்கள். பாரதரே! பிறகு, தூதர்களனைவரும் துரோணபுத்திரரிடத்தில் அதைச் | சொல்லிவிட்டுத் துக்கத்தினால் வாட்டத்தைஅடைந்தவர்களாகவும் சோகத்தினால் தாக்கப்பட்ட மனமுள்ளவர்களாகவும் நெடுங்காலம் சிந்தித்து மனவருத்தமுற்றவர்களாக வந்தவழியைஅடைந்து தம் தம் இருப்பிடம் சென்றார்கள்.

---

* பிராமணவேஷம்பூண்ட ஓர்அரக்கன்,

## அறுபத்தாறுவது அத்யாயம்.

## கதாயுத்தபர்வம். (தொடர்ச்சி.)



(அஸ்வத்தாமாவும் கிருபரும் கிருதவர்மாவும் துர்யோதனனைப்பார்த்துத் துக்கித்ததும், அஸ்வத்தாமாவுக்கும் துர்யோதனனுக்கும் ஸல்லாபமும், அஸ்வத்தாமா இரவில்பாண்டவர்களைக்கொல்வதாகப் பிரதிஜ்ஞை செய்ததும், துர்யோதனன் சொற்படி க்ருபர் அஸ்வத்தாமாவை ஸேனாதிபதியாக அபிஷேகஞ் செய்ததும்.)

அரசரே! ஸமாசாரங்கொண்டுபோகிறவர்களிடமிருந்து துரியோதனனுடையவதத்தைக்கேட்டு அப்பொழுது பாண்டவர்கள் போக, மிகுந்திருப்பவர்களும் கூர்மையானபாணங்களாலும் கதைகளாலும் தோமரங்களாலும் சக்திகளாலும் பிளக்கப்பட்டிருப்பவர்களுமான அஸ்வத்தாமா, கிருபர், ஸாத்வதனை கிருதவர்மா இந்தக் கௌரவமஹாரதர்கள் விரைவுடன்வேகமுள்ள குதிரைகளோடு யுத்தபூமியைவந்தடைந்தார்கள். காட்டில் காற்றின்வேகத்தினால் முறித்துத்தள்ளப்பட்ட பெரியஸாலவிருக்ஷம்போல் அவ்விடத்தில் அடித்துத்தள்ளப்பட்ட மஹாத்மாவான துரியோதனனைக் கண்டார்கள். பூமியில் புரளுகின்றவனும், ரத்தத்தால் நன்குநனைக்கப்பட்டவனும், அரண்யத்தில் வேடனால்தள்ளப்பட்ட பெரியயானைபோன்றவனும், பலவாறு சுழலுகின்றவனும், ரத்தப்பெருக்கினால் முழுதும் நனைக்கப்பட்டவனும், ஆதித்யனுக்குக் கோசரமான ஸ்தலத்தினின்று தற்செயலாக வீழ்ந்திருக்கின்ற சந்திரன் போன்றவனும், ஊழிக்காற்றினால் வற்றச்செய்யப்பட்ட கடல்போன்றவனும், ஆகாயத்தில் பனியினால் சூழப்பட்ட மண்டலத்துடன்கூடின பூர்ணசந்திரன் போன்றவனும், புழுதியினால் கவரப்பட்டவனும், நீண்டகைகளுள்ளவனும், விக்ரமத்தில் யானைபோன்றவனும், பொருளை அடைய விரும்பும் வேலைக்காரர்களால் சிறந்தஅரசன் சூழப்படுவதுபோலக் கோரமானபூதகணங்களாலும் ஊனுண்ணும்பிராணிகளாலும் நான்கு பக்கங்களிலும் சூழப்பட்டவனும், புருவநெறித்திருக்கும் முகமுள்ளவனும், கோபத்தினால் கண்களைப்புரட்டிவிழிப்பவனும், கோபமுள்ளவனும், புருஷஸ்ரேஷ்டனும், பூமியில்பிரவஸித்திபெற்றவனும், அவ்வாறேகீழேவிழுத்தப்பட்டவனும், சிறந்தவில்லாளியும், பூமியில்வீழுந்திருப்பவனுமான அந்தஅரசனைக் கிருபர்முதலான அந்தஎல்லாரதிகர்

களும்கண்டு மோகமடைந்தார்கள். அனைவர்களும் ரதங்களினின்று கீழே இறங்கி அரசனருகில் விரைவாகஓடி அவனை அடைந்து பூமியில் உட்கார்ந்தார்கள். மஹாராஜரே! பிறகு, அஸ்வத்தாமா கண்களில் நீர் ததும்பப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு அரசர்க்கரசரனைவர்க்குந் தலைவனான் பரதஸ்ரேஷ்டனைப்பார்த்து, 'புருஷஸ்ரேஷ்டனே! இந்த மண்ணுலகில் நீ புழுதிகளில்புரண்டு படுத்திருக்கிறபடியால் நிச்சய யாக இந்த உலகில் புண்யமென்பது சிறிதுமில்லை. ராஜேந்திரா! முன்பு, நீ அரசனாயிருந்து பூமியில் ஆணைசெலுத்தி இப்பொழுது நிர் ஜனமானகாட்டில் எவ்வாறு ஒருவனாயிருக்கிறாய்? பரதர்களில் சிறந் தவனே! துச்சாஸனனையும் மஹாரதனானகர்ணனையும் அப்படிப் பட்ட எல்லா நண்பர்களையும் நான் காணவில்லை. இது என்ன? லோகநாதனான நீ புழுதிகளால் பூசப்பட்ட மேனியையுடையவனாகப் படுத்திருத்தலால் தெய்வகதியானது எவ்விதத்தினாலும் அறியமுடி யாததென்பது நிச்சயம். பகைவரைவாட்டுபவனான இந்த அரசன் அரசர்களுக்கு முன்னிலையில்சென்று, புல்லுடன்கூடின புழுதியை வாயில்கவ்வுகிறான். காலத்தினுடைய மாறுபாட்டைப்பார்! அரசே! மாசற்றதான உன்னுடைய அந்தக்குடை எங்கே? சாமரம் எங்கே? ராஜஸ்ரேஷ்டனே! உனது அந்தப் பெரிய சேனை எங்கேபோய்விட் டது? உலகங்களுக்குக் குருவும் நாதனுமான நீ ஒருகாரணத்தினால் இந்த நிலைமையை அடைந்தாயாதலால் நிச்சயமாகக் காரியங்களு டைய கதியானது எவ்விதத்தாலும் அறியமுடியாததே. (ஐஸ்வர்யத் தினால்) இந்திரனை மிஞ்சுபவனான உனக்கு நேர்ந்திருக்கின்ற இந்த வியஸனத்தைக் கண்டு, சாஸ்வதமாகவேயிருந்தாலும், ஐஸ்வர்யமா னது எல்லாமனிதர்களிடங்களிலும் சாஸ்வதமல்லாததென்றே எண் ணப்படுகிறது' என்று கூறினார்.

வேந்தரே! விசேஷமாகத் துக்கித்த அந்த அஸ்வத்தாமாவு டைய அந்த வார்த்தையைக்கேட்டு உம்முடையகுமாரன் ஸமயத்திற் கேற்றதான இவ்வசனத்தை உரைக்கலானான். துரியோதனராஜன் அப்பொழுது இரண்டுகைகளாலும் கண்களைத் துடைத்துக்கொண் டும் துக்கத்தால்உண்டானகண்ணீரைப் பெருக்கிக்கொண்டும் கிருபர் முதலான எல்லாவீரர்களையும் பார்த்து, 'இப்படிப்பட்ட இந்த லோக தர்மமானது பிரம்மதேவரால் ஏற்படுத்தப்பட்டதாகச் சொல்லப்படு கிறது. எல்லாப்பிராணிகளுக்கும் நாசமானது காலக்கிரமத்தால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. அப்படிப்பட்ட நாசம் என்னை அணுகி விட்டது, உங்களுக்குப் பிரத்தியக்ஷமன்றோ? நான் பூமியை

ஆண்டு இந்தமுடிவை அடைந்தேன். நான் தெய்வாதீனமாக யுத்தத்தில் ஒருவித ஆபத்திலும் திரும்பி ஓடினவனல்லேன். நான் தெய்வாதீனமாகப் பாவிகளால் விசேஷித்து வஞ்சனையினாலேயே கொல்லப்பட்டேன். யுத்தஞ்செய்ய எண்ணங்கொண்ட என்னால் பாக்கியத்தால் நித்யம் முயற்சியும் செய்யப்பட்டது. ஞாதிகளும் பந்துக்களும்கொல்லப்பட்டநான், பாக்கியத்தால் இந்தயுத்தத்தில் கொல்லப்பட்டேன். ஜனங்களுக்கு அழிவைச்செய்யும் இந்த ஆபத்தினின்று விடுபட்டவர்களும் க்ஷேமத்துடன்கூடியவர்களும் மங்களத்துடன் கூடியவர்களுமான உங்களை நான் பாக்கியத்தால் பார்க்கிறேன். இது எனக்கு மிக்க பிரியமானது. என்னுடையநாசத்தினால் நீங்கள் இச்சமயத்தில் நேசகாரணமாக மனவருத்தமடையவேண்டாம். உங்களுக்கு வேதங்கள் பிரமாணமாயிருந்தால், என்னால்அழிவற்ற உலகங்கள் ஜயிக்கப்பட்டன. அபரிமிதமான தேஜஸுள்ள கிருஷ்ணனுடைய பிரபாவத்தைஅறிந்தேன். அவனால் நன்றாகஅனுஷ்டிக்கப்பட்ட க்ஷத்திரிய தர்மத்தினின்று நான் நழுவும்படி செய்யப்படவில்லை. அது என்னால் அடையப்பட்டுவிட்டது. எவ்விதத்தாலும் நான் துக்கிக்கப்படத்தக்கவனல்லேன். உங்களுக்குத் தகுந்ததும் இயன்றதுமானகாரியம் உங்களால் செய்யப்பட்டுவிட்டது. சக்தியினால் வெற்றியிலும் முயற்சி செய்யப்பட்டது. தெய்வமானது தாண்டத்தகாதது' என்று சொன்னான்.

ராஜேந்திரரே! அந்தத் துரியோதனன் துக்கத்தினால் மிகத் தளர்ச்சியடைந்தவனாகி இவ்வளவு வசனத்தை உரைத்து நீர்ததும்புகின்ற கண்களுடன் பேசாமலிருந்துவிட்டான். அவ்வாறு கண்ணீரோடும் துக்கத்தோடும்கூடின அரசனைக்கண்டு துரோணபுத்ரர் பிரளயகாலநெருப்புப்போலக் கோபத்தினால் ஜ்வலித்தார். அவர் சினத்தினால் கவரப்பட்டவராகிக் கையால் கையைப்பிசைந்து கண்ணீரினால் தடுமாறுகின்ற வாக்கினால் அரசனைநோக்கி இந்த வசனத்தை உரைக்கலானார். 'அரசே! என்பிதா அற்பர்களால் மிக்க குரூரமான செய்கையினால் கொல்லப்பட்டார். இப்பொழுது உன்னால் எவ்வளவு வருத்தமடைகின்றேனோ அவ்வளவு வருத்தம் அதனால் நான் அடையவில்லை. பிரபுவே! ஸத்யமாகச் சொல்லுகின்ற இந்த வசனத்தை என்னிடத்தினின்றுகேள். மஹாராஜனே! * இஷ்டாபூர்த்தத்தினாலும் தானத்தினாலும் தர்மத்தினாலும்

* இஷ்டம்=யாகம்செய்தல் முதலியன. பூர்த்தம்=குளம்வெட்டுதல் முதலியன.

ஸுக்ருதத்திலும், இன்றிரவில் வாஸுதேவன் பார்த்துக்கொண் டிருக்கும்பொழுதே எல்லாப் பாஞ்சாலர்களையும் பாண்டவர்களையும் நான் கொல்லப்போகிறேன். மஹாராஜனே! நீ எனக்கு அனுமதி கொடுக்கக்கடவாய்' என்றார்.

திருதராஷ்டிரரே! உம்முடையகுமாரன் துரோணபுத்திரருடைய அந்தவசனத்தைக்கேட்டுக் கிருபரைப்பார்த்து மனத்துக்குப் பிரீதியை உண்டுபண்ணுகிற வசனத்தை உரைக்கலானான். 'ஆசார்யரே! ஜலத்தினால் நிறைந்த கலசத்தைச் சீக்கிரமாகக் கொண்டுவாரும்' என்றான். பிராம்மணோத்தமரான அந்தக்கிருபாசார்யர் அரசனுடைய அந்தவசனத்தைக்கேட்டுநிறைந்தகுடத்தைஅரசனுடையஸமீபத்தில் கொண்டுவந்தார். மகாராஜரே! பிரஜாநாதரே! உம்முடைய புத்திரன் அந்தக்கிருபரைப்பார்த்து, 'பிராம்மணோத்தமரே! எனக்குப்பிரியத்தைச்செய்ய விரும்புவீராகில், என்னுடையகட்டளையினால் துரோணபுத்திரரை ஸேனாபதிஸ்தானத்தில் அபிஷேகம் செய்வீராக. உமக்கு மங்களம். க்ஷத்திரியத்தொழிலுடனிருக்கும்பிராம்மணன் முக்கியமாக அரசனுடைய கட்டளையினால் யுத்தம்செய்யவேண்டும். தர்மத்தை அறிந்தவர்கள் இவ்வாறு அறிகிறார்கள்' என்றுசொன்னான். பிறகு, அரசனுடைய வசனத்தைக்கேட்டு, சாரத்வதரானகிருபர் துரோணபுத்திரரை அரசனுடைய அனுமதியினால் ஸேனாபதிஸ்தானத்தில் அபிஷேகஞ்செய்தார். மஹாராஜரே! அபிஷேகஞ்செய்யப்பட்ட அஸ்வத்தாமா ராஜஸ்ரேஷ்டனை ஆலிங்கனஞ்செய்துவிட்டு ஸிம்மநாதத்தினால் எல்லாத்திசைகளையும் எதிரொலியிடும்படி செய்துகொண்டு சென்றார். ராஜேந்திரரே! துரியோதனனும் ரக்தத்தினால் எல்லாப்பக்கத்திலும் நனைக்கப்பட்டவனாக இருந்துகொண்டு எல்லாப்பிராணிகளுக்கும் பயத்தை உண்டுபண்ணுகிற அந்த இரவை அடைந்தான். அரசரே! அவர்கள் அந்த யுத்தபூமியினின்று விரைவாக விலகிச் சென்று சோகத்தினால் மிகப்பீடிக்கப்பட்ட மனத்துடன் அதிக மனக்கவலையுற்றார்கள்" என்று கூறினான்" என்றார்.

கதாயுத்தபர்வம் முற்றிற்று.

---

## சல்யபர்வம் முற்றிற்று.



ஸ்ரீ:

ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீ க்ருஷ்ணத்வைபாயநாய நம:

# ஸ்ரீ மஹாபாரதம்.

## ஸௌப்திக பர்வம்.

### முதலாவது அத்யாயம்.

### ஸௌப்திக பர்வம்.

*நாராயணம் நமஸ்க்ருத்ய நரம்சைவ நரோத்தமம் ।
தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீரயேத் ॥

(அஸ்வத்தாமாமுதலியோர் கானகத்தில் ஓர் ஆலமரத்தினடியில் உட்கார்ந்ததும், அங்கே ஒருகோட்டான் பலகாக்கைகளைக் கொல்லக்கண்டு அஸ்வத்தாமா தானும் பாண்டவர்களை அவ்விதம் கொல்ல நிச்சயித்துக் கிருபரையும் கிருத வர்மாவையும் எழுப்பித் தாம்செய்ய விரும்பி னதைச்சொல்லி ஆலோசித்ததும்.)

பிறகு, (அஸ்வத்தாமா கிருபர் க்ருதவர்மாஆகிய) அவர்கள் எல்லாரும் ஒன்றுசேர்ந்து தெற்குத்திக்கைநோக்கிச் சென்றார்கள். ஸூர்யாஸ்தமனவேளைக்கு ஸமீபகாலத்தில் பாண்டவர்களுடைய பாசறைக்குச் சமீபத்தில் வந்தார்கள். அவர்கள் குதிரைகளை விட்டு விட்டு விரைவுடன் பாண்டவஸேனாவீரர்கள் தங்களை அறிந்துவிடு வார்களோவென்று பயந்து, பிரவேசிக்கமுடியாத ஒருவனப்ரதேசத் தையணுகி மறைவாக அதனுள் நுழைந்தார்கள். கூர்மையான சஸ்திரங்களால் அறுக்கப்பட்டவர்களும் எல்லாப்பக்கங்களிலும் காயப்படுத்தப்பட்டவர்களுமான அவர்கள் பெருமூச்செறிந்து கொண்டும் பாண்டவர்களை நினைத்துக்கொண்டும் பாண்டவஸேனா வீரர்களுடைய பாசறைக்குச் சிறிது தூரத்தில் தங்கியிருந்தார்கள். ஜயத்தில் விருப்பமுள்ளவர்களான பாண்டவர்களுடைய கோரமான

* இதன் உரைவிசேஷங்களை முன்பர்வங்களின் தொடக்கத்தில் காண்க.

சப்தத்தைக்கேட்டு, பின் தொடர்ந்துவருவார்களோ என்கிற ப்யத்தி ஞல் மீண்டும் கீழ்த்திசையை நோக்கி ஓடினார்கள். கோபத்துக்கும் பொறுமைக்கும் வசப்பட்டவர்களான அந்தச் சிறந்த வில்லாளிகள் அவ்விடத்தினின்று ஒருமுகூர்த்தகாலம் நடந்துசென்று, களைத்த குதிரைகளையுடையவர்களும் தாகமுள்ளவர்களும் அரசனுடைய வதத்திஞல் ஸந்தாபத்தை அடைந்தவர்களும் ஸஹிக்காதவர்களு மாகி, ஒருமுகூர்த்தகாலம் பேசாமலிருந்தார்கள்'' என்றான்.

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! பதிஞயிரம் யானைகளுக்கு ஸம மான பலத்தையுடைய என் புத்திரன் கொல்லப்பட்டதாகிய பீமனுல் செய்யப்பட்ட இந்தக்கார்யம் நம்பத்தகாதது. ஸஞ்சய! எல்லாப் பிராணிகளாலும் கொல்லத்தகாதவனும் வஜ்ரம்போன்ற தேகத்தை யுடையவனும் யௌவனமுள்ளவனுமான என்னுடைய புத்திரன் யுத்தத்தில் பாண்டவர்களால் கொல்லப்பட்டான். கவல்கணகுமார! யுத்தத்தில் ஒன்றுகூடிப் பார்த்தர்களால் என்னுடைய புத்திரன் கொல்லப்பட்ட காரணத்திஞல் மனிதர்களால்தெய்வமானது தாண்ட முடியாதது. ஸஞ்சய! நூறு புத்திரர்களும் கொல்லப்பட்டார்க ளென்பதைக்கேட்டும் ஆயிரம் துண்டாகச் சிதருமலிருப்பதிஞல் என்உள்ளம் உருக்குமயமானது; இதுநிச்சயம். புத்திரர்களைச் சாகக் கொடுத்துப் பிராயமுதிர்ந்த தாய்தந்தையர்இருவரும் எவ்வாறு இருப் பார்? பாண்டு புத்திரனுடைய தேசத்தில் வஸிப்பதற்கு நான்பிரியப் படவில்லை. ஸஞ்சய! நான் அரசனுக்குப் பிதாவாகவும் நானே அர சஞகவுமிருந்துவிட்டு, எவ்வாறு பாண்டுபுத்திரனுடைய கட்டளைப் படி கிங்கரஞக நடந்துகொள்வேன்? ஸஞ்சய! பூமி முழுதையும் அனுபவித்து (அரசர்களுடைய) முடியில் நிலைபெற்று நின்றவனை நான் கெட்ட முடிவை உண்டு பண்ணிக்கொண்டு இப்பொழுது எவ்வாறு (யுதிஷ்டிரனுக்கு) அடிமை செய்கிறவஞவேன்? ஸஞ்சய! எவன் ஒருவஞல் என்னுடைய நூறு பிள்ளைகளும் மிகுதியின்றிக் கொல்லப்பட்டார்களோ அப்படிப்பட்ட பீமனுடைய வாக்கியங்களை நான் எவ்வாறு கேட்கச் சக்தியுள்ளவஞவேன்? ஸஞ்சய! மஹாத் மாவான அந்த விதுரனுடைய வசனத்தை அனுஷ்டிக்காதவஞன என்னுடைய புத்திரஞல் அவனுடைய வசனம் ஸத்யமாகச் செய்யப் பட்டது, ஐயனே! ஸஞ்சய! என்னுடைய புத்திரஞன துர்யோத னன் அதர்மத்திஞல் கொல்லப்பட்ட பிறகு, கிருதவர்மாவும் கிரு பரும் அஸ்வத்தாமாவும் யாது செய்தனர்?'' என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான்.

"அரசரே! மனஉறுதியுள்ளவர்களான உம்மைச்சார்ந்த வீரர்கள், சிறிதுதூரம் சென்று பற்பலவிருக்ஷங்களோடும் கொடிகளோடுங் கூடின கோரமான கானகத்தைக் கண்டார்கள். அவர்கள் தண்ணீர் குடித்த சிறந்த குதிரைகளுடன்கூட ஒரு முகூர்த்தகாலம் இளைப் பாறித் துர்யோதனனுடைய கட்டளைப்படி ஸூர்யாஸ்தமன வேளை யில் பற்பலமிருகக் கூட்டங்களால் அடையப்பட்டதும் பற்பலபக்ஷி களால் நிரம்பியதும் பற்பலவிருக்ஷங்களாலும் கொடிகளாலும் மூடப் பட்டதும் பற்பலகொடியபாம்புகளால் அடையப்பட்டதும் நீர் நிரம் பிய பற்பலதடாகங்களால் விளங்குகின்றதும் அநேகந்தாமரைஓடை களால் நன்றாகமூடப்பட்டதும் கருநெய்தல்களுடன்கூடினதும் கோரமாயிருப்பதுமான அப்படிப்பட்டகாட்டில் நுழைந்து நான்கு பக்கங்களிலும்பார்த்து, பிறகு, அனேகம்கிளைகளால் சூழப்பட்ட ஓர் ஆலமரத்தைக் கண்டார்கள். அரசரே ! அப்பொழுது புருஷஸ்ரேஷ் டர்களான அந்தமஹாரதர்கள் அந்த ஆலமரத்தின் அருகிற்சென்று, சிறந்த அந்த *வனஸ்பதியைப்பார்த்தார்கள். பிரபுவே! அவர்கள் ரதங் களினின்று இறங்கிக் குதிரைகளை அவிழ்த்துவிட்டு விதிப்படி ஆச மனம்செய்து ஸந்தியை உபாஸித்தார்கள். பிறகு,ஸூர்யன் பர்வதங் களுள் சிறந்தஅஸ்தகிரியை அடையவே,எல்லாஉலகத்தையும் வளர்ப் பதானஇரவு வந்துவிட்டது. பரவியிருக்கின்ற கிரகங்களாலும் மற்ற அஸ்வினிமுதலிய நக்ஷத்ரங்களாலும் நான்குபக்கங்களிலும் அலங்க ரிக்கப்பட்டஆகாயமானது (ராத்திரியாகிறபெண்ணுக்கு)அழகியவஸ் திரம்போல் விளங்கியது. இரவில் ஸஞ்சரிப்பவைகளான பிராணிக ளெல்லாம் இஷ்டப்படி கூத்தாடின. பகலில்ஸஞ்சரிக்கின்ற பிராணி கள் நித்திரைக்கு வசப்பட்டன. இரவில்ஸஞ்சரிக்கின்ற பிராணிக ளுடைய பயங்கரமான சப்தமானது தோன்றியது. மாம்ஸத்தில் விருப்பமுள்ளவர்களான ராக்ஷஸர்களும் மிக்கஸந்தோஷத்தை அடைந்தார்கள். கோரமானஇரவும் வந்தது. பயங்கரமான அந்தராத் திரியின் தொடக்கத்தில் கிருதவர்மாவும் கிருபரும் அஸ்வத்தாமா வும் துக்கத்தோடும்சோகத்தோடும்கூடியவர்களாகச் சேர்ந்து நெருங்கி உட்கார்ந்தார்கள். ஆலமரத்துக்குஅருகில் நெருங்கியிருந்து, நடந்த குருபாண்டவவீரர்களுடைய அப்படிப்பட்டநாசத்தையே (நினைத்து) துக்கித்து அதிகசிரமத்துடன் பற்பலபாணங்களால் காயப்படுத்தப் பட்டவர்களான அம்மூவரும், நித்திரையினால் வியாபிக்கப்பட்ட அங்கங்களையுடையவர்களாகப் பூமியில்உட்கார்ந்தார்கள். பிறகு,

* பூவாமற்காய்க்கும் மரம்; ஆதிபர்வம், 244-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

ஸுகத்துக்கே தகுந்தவர்களும் துக்கத்தை அனுபவிக்கத் தகாதவர்களும் மஹாபலசாலிகளுமான கிருபரும் கிருதவர்மாவும் பூமியில் உட்கார்ந்து நித்திரைக்குவசப்பட்டார்கள். மகாராஜரே! ஸர்வோத்தமமான சயனத்தில் படுப்பவர்களான அந்தமகாரதர்களிருவரும் அந்தஇடத்தில் பூமியிலேயே அநாதர்கள்போல் உறங்கினார்கள். பாரதரே! அந்தத்துரோணபுத்திரரோ மிக்கசினமும் பொறாமையும் மேலிட்டு ஸர்ப்பம்போலச்சீறிக்கொண்டு தூங்கவேயில்லை. அவர் அடங்காதகோபத்தினால் எரிக்கப்பட்டு நித்திரையை அடையவே இல்லை. மிக்கபுஜபலமுள்ள அஸ்வத்தாமா கோரமானகாட்சியையுடைய அந்தக்காட்டைப்பார்த்தார். மிகுந்தபுஜபலமுள்ள அஸ்வத்தாமா பற்பலமிருகங்களாலடையப்பட்ட வனத்தைப்பார்த்து வாயஸங்களால் சூழப்பட்ட ஆலமரத்தைப்பார்த்தார். கௌரவரே! அந்தமரத்தில் ஆயிரக்கணக்கானகாகங்கள் தனித்தனியாகக் கூடுகளை ஆதாரமாகக்கொண்டு ஸுகமாகஉறங்கி அந்தஇரவைப் போக்கிக்கொண்டிருந்தன. அந்தக்காகங்கள் கவலையற்று ஸுகமாக நான்கு பக்கத்திலும் தூங்கிக்கொண்டிருக்கும்பொழுது, திடீரென்றுவந்ததும் பயங்கரமான காட்சியுள்ளதும் பெரியசத்தமும் பெரியதேகமும் மரகதப்பச்சைபோன்றகண்களும் கீரிபோல்பிங்களவர்ணமும் மிக்க கூர்மையுள்ளமூக்கும் நகங்களுமுடையதும் கருடன்போல்வேகமுள்ளதுமான ஒருகோட்டானை அஸ்வத்தாமாகண்டார். பாரதரே! பிறகு, அந்தப்பக்ஷியானது மெதுவாகச் சப்தித்துக்கொண்டு பதுங்குவதுபோல அந்தஆலமரத்தின்கிளையில் பிரவேசித்தது. வாயஸங்களுக்குப் பகையான அந்தப்பக்ஷியானது ஆலமரத்தின்கிளையில்உட்கார்ந்து, நிர்ப்பயமாகத்தூங்கிக்கொண்டிருந்த காக்கைகளைக்கொல்லத் தொடங்கியது. கால்களை ஆயுதமாகக்கொண்ட அந்தக்கோட்டானானது சிலகாக்கைகளுடைய சிறகுகளைமுறித்தது; தலைகளை அறுத்தது; சிலகாக்கைகளின்கால்களை ஒடித்தது. பலசாலியான அந்தக்கோட்டான் எந்தப்பக்ஷிகள் தன்னுடையகண்ணுக்கு எதிர்ப்பட்டனவோ அவைகளை க்ஷணத்திற்குள்கொன்றது. அரசரே! அவைகளுடைய சரீரத்தின்உறுப்புக்களாலும் சரீரங்களாலும் மலைபோன்றதும் வட்டமாயிருப்பதுமான ஆலமரமுழுவதும் மூடப்பட்டுவிட்டது. பிறகு, பகைவர்களை அழிக்குந்திறமைபொருந்தியதான அந்தக்கோட்டானானது அந்தக்காக்கைகளைக்கொன்று பகையாளிகளுக்குத் தன்னிஷ்டப்படி பிரதிஅபகாரத்தைச்செய்து ஸந்தோஷமுள்ளதாயிற்று. இரவில் கோட்டானால்செய்யப்பட்ட அப்படிப்பட்ட அந்தச்செய்கை

யைக்கண்டு துரோணபுத்திரர் தாமும் அவ்விதகபடகார்யத்தில் எண்ணங்கொண்டவராக ஒருவராகஆலோசித்தார். 'இந்தப்பக்ஷியினால் யுத்தவிஷயத்தில் எனக்கு உபதேசஞ்செய்யப்பட்டது. பகைவர்களை நாசஞ்செய்வது யுக்தம். (அதற்குக்) காலமும்வந்துவிட்டதென்பது என்னுடையஎண்ணம். ஜயத்தினால்பிரகாசிப்பவர்களும் பலசாலிகளும் ஊக்கமுள்ளவர்களும் அஸ்திரசஸ்திரங்களில் நல்லகைப்பழக்கமுள்ளவர்களும் அடிக்கும்திறமையுள்ளவர்களுமான பாண்டவர்கள் என்னால் இப்பொழுது கொல்வதற்கு ஸாத்தியப்படாதவர்கள். எரிகிற நெருப்பின்ஜ்வாலையில்விழுந்து விட்டில் உயிரை இழப்பதுபோலத் தன்னை அழியச்செய்வதான செய்கையைப்பின்பற்றி அரசன்முன்னிலையில் அவர்களுடையவதம் என்னால்பிரதிஜ்ஞைசெய்யப்பட்டது. நியாயம்தவறாமல் யுத்தம்செய்வதனால் உயிர்போவது நிச்சயம். கபடத்தினாலோ ஸித்தியானது உண்டாகும். சத்துருக்களுக்கும் பெரிதான க்ஷயம்உண்டாகும். அவ்விரண்டினுள் ஸந்தேகத்துக்கிடமானபயனைக்காட்டிலும் ஸந்தேகமில்லாதபயனே சிறந்ததாகும். அர்த்தசாஸ்திரத்தில் ஸமர்த்தர்களான அந்தஜனங்கள் அதனைக் கொண்டாடுகிறார்கள். இந்தப்பலஸித்திவிஷயத்தில் எந்தக்கார்யம் இகழப்பட்டதாகவும் உலகத்தோரால் நிந்திக்கப்பட்டதாகவுமிருக்குமோ அந்தக்கார்யமும் க்ஷத்திரியதர்மத்தில் நிற்கின்றமனிதனால்செய்யத் தக்கது. சீரிடப்படாதபுத்தியுள்ளவர்களான பாண்டவர்களால் அடிக்கடி நிந்திக்கப்பட்டவைகளும் இகழத்தக்கவைகளும் கபடத்துடன் கூடியவைகளுமான கார்யங்கள் செய்யப்பட்டேயிருக்கின்றன. இந்த விஷயத்தில் முற்காலத்தில் தர்மத்தை நன்றாகஅறிந்தவர்களும் நியாயத்தைப்பார்க்கின்றவர்களும், தத்வத்தைக்கண்டறிகிறவர்களுமான மஹான்களால் தத்வார்த்தங்களுடன்கூடின சுலோகங்கள் கூறப்பட்டிருப்பதாகக்கேட்கப்படுகின்றன. அவற்றின்பொருள், 'சத்துருக்களின்படையானது, களைத்திருக்கும் ஸமயத்திலோ பிளக்கப்பட்டிருக்குந்தருணத்திலோ சாப்பிடும்பொழுதோ பிரயாணஸமயத்திலோ பிரவேசிக்கும்பொழுதோ சத்துருக்களால் அடிக்கத்தக்கது. எந்தச் சேனையானது நடுநிசியில் நித்திரையினால் பீடிக்கப்பட்டதாகவாவது அவ்வாறே தலைவர்கள் அற்றதாகவாவது யுத்த வீரர்கள் பிரிந்து போனதாகவாவது இரண்டாகப் பிரிந்து எதிர்த்ததாகவாவது இருக்குமோ அது அடிக்கத்தக்கது' என்பது' என்று துரோணபுத்திரர் இவ்வாறு ஆலோசித்து, இரவில் தூங்கிக்கொண்டிருக்கிற பாஞ்சாலர்களுடன்கூடின பாண்டவர்களைக் கொல்வதில்

நிச்சயம் செய்தார். அவர் குரூரமான எண்ணத்தைக்கொண்டு அடிக்கடி நன்றாக நிச்சயித்து, தூங்கிக்கொண்டிருக்கிற அந்த மாதுலனையும் கிருதவர்மாவையும் எழுப்பினார். விழித்துக்கொண்டவர்களும் மஹாத்மாக்களும் மஹாபலசாலிகளுமான கிருபர் கிருதவர்மா இருவரும் வெட்கத்தினால் மூடப்பட்டவர்களாகி அந்தச்சமயத்தில் தகுந்த உத்தரம் சொல்லவில்லை. அவர் ஒருமுகூர்த்தகாலம் ஆலோசித்து அவ்விருவர்களையும் பார்த்து, 'யாருக்காக நமக்குப் பாண்டவர்களோடு தொடர்ச்சியான வைரம் ஏற்பட்டதோ அந்த மஹாபலசாலியும் நிகரற்றவீரனும் ராஜாவுமான துரியோதனன் கொல்லப்பட்டான். யுத்தத்தில் சுத்தவீரனும் பதினோர் அக்ஷௌஹிணீ ஸேனைகளுக்குத்தலைவனும் ஒருவனுமாயிருந்த துர்யோதனன், அல்பர்களான அனேகர்களால் சூழப்பட்டுப் பீமஸேனனால் நாசம் பண்ணப்பட்டான். ஸாம்ராஜ்யாபிஷேகஞ் செய்யப்பட்ட முடியுள்ள துர்யோதனனுடைய தலையைக் காலால் மிதித்த அல்பனான பீமஸேனனால் மிக்க கொடுமையான இந்தக்கார்யம் செய்யப்பட்டது. பாஞ்சாலர்கள் மிகுதியாகக் கர்ஜிக்கின்றார்கள்; ஸிம்மநாதம் செய்கின்றார்கள்; சிரிக்கின்றார்கள்; சங்கங்களை ஊதுகின்றார்கள்; நூறுநூறாகஸந்துஷ்டர்களாகத் துந்துபிகளை அடிக்கின்றார்கள். சங்கத்வனிகளோடு கலந்ததும் நெருங்கினதும் கோரமாயுள்ளதுமான வாத்தியகோஷமானது காற்றினால் பரவும்படி செய்யப்பட்டுத் திசைகளைநிரப்புவதுபோலிருக்கின்றது. இதோ கனைக்கின்ற குதிரைகளின் சப்தமும் கர்ஜிக்கின்ற யானைகளுடைய கர்ஜனமும் சூரர்களுடைய ஸிம்மநாதமும் மிக்க பெரிதாகக் கேட்கப்படுகின்றன. கீழ்த்திசையை ஆஸ்ரயித்து மிக்க ஸந்தோஷத்துடன் செல்லுகின்ற (பாண்டவ ஸேனாவீரர்களுடைய) மயிர்க்கூச்சத்தை உண்டுபண்ணுகிற தேருருளைகளின் நேமியொலிகள் கேட்கப்படுகின்றன. பாண்டவர்களால் கௌரவர்களுடைய வதமானது இவ்வாறுசெய்யப்பட்டுவிட்டது. இந்த மஹாஆபத்தில் நாம் மூன்றுபேர்கள்தாம் மிகுந்தோம். அந்த வதத்தில், நூறு யானைபலமுள்ளவர் சிலரும் எல்லா அஸ்திரங்களையுமறிந்தவர் சிலரும் பாண்டவர்களால் கொல்லப்பட்டார்கள். காலத்தின்மாறுபாடென்று எண்ணுகிறேன். செய்யமுடியாத முயற்சி செய்யப்பட்டிருந்தபோதிலும், இந்தக்கார்யத்துக்கு இவ்விதமாக முடிவுஏற்பட்ட காரணத்தினால், நிச்சயமாக இந்தக்கார்யம் உண்மையில் இவ்வாறு ஆகத்தக்கதே. உங்களிருவருக்கும் மோகத்தினால் அறிவுகுறையாமலிருக்குமேயாகில், இந்தமஹாவியஸனத்தில் எது நமக்கு நன்மையை விளைவிக்குமோ அப்படிப்பட்டகார்யத்தைச் சொல்லவேண்டும்' என்றுகூறினார்.

---

## இரண்டாவது அத்யாயம்.

## ஸௌப்திகபர்வம். (தொடர்ச்சி.)



(கிருபர் செய்யவேண்டியவிஷயத்தை அஸ்வத்தாமாவுக்கு உபதேசித்தது.)

கிருபர், 'பிரபுவே! காரணங்களுடன்கூடின உன்னுடையவசனம் முழுவதையும் நான் கேட்டேன். மிக்கபுஜபலமுள்ளவனே! இப்பொழுது என்னுடையவசனத்தையும் சிறிதுகேள். எல்லாமனிதர்களும் தெய்வத்தினிடத்தில் நான்குபக்கத்திலும் கட்டப்பட்டிருக்கிறார்கள். மனிதமுயற்சியிலும் (சிறிது) கட்டப்பட்டிருக்கிறார்கள். தெய்வம் *புருஷகாரம் என்னும் இரண்டிலும் எல்லாம் கட்டப்பட்டுள்ளன. அவ்விரண்டைக்காட்டிலும் மேலானதுஇல்லை. உத்தமனே! தெய்வம்ஒன்றினாலேயே கார்யங்கள் ஸித்திக்கிறதில்லை. கேவலம் புருஷகாரத்தினாலும் கார்யஸித்தி உண்டாகிறதில்லை. இரண்டும் சேர்ந்தால் ஸித்தி உண்டாகின்றது. அதமமும் உத்தமமுமாயிருக்கின்ற எல்லாப்பதார்த்தங்களும் அவ்விரண்டினாலும் கட்டப்பட்டவைகளாயிருந்துகொண்டு ஸர்வவிதத்தினாலும் பிரவிர்த்திக்கின்றவைகளாகவும் நிவிர்த்திக்கின்றவைகளாகவும் காணப்படுகின்றன. மேகமானது மலையில் மழையைப்பொழிந்து என்னபயனைப் பயக்கிறது? அவ்வாறே, உழப்பட்ட நிலத்தில் பொழிந்தால் பலனை உண்டுபண்ணுகிறதில்லையா? தனித்த மனிதமுயற்சியும் முயற்சியில்லாததெய்வமும் எல்லாஇடத்திலும் பயனற்றனவாகின்றன. அவ்விரண்டினுள் முந்தின பக்ஷமானது சிறந்தது என்பது நிச்சயம். மழையும் நன்றாகப் பெய்து நிலமும் நன்றாகஉழப்பட்டிருந்தால் வித்து எவ்வாறு பெரும் பயனைத்தருமோ அவ்வாறு மனிதர்களுடையகார்யஸித்தி உண்டாகிறது. அவ்விரண்டினுள் தெய்வம் சிந்திக்கமுடியாதது; ஸ்வதந்திரமாகவேஇருக்கிறது. கற்றறிந்தவர்கள் தெய்வத்தைஉறுதியாகப்பற்றி மனிதமுயற்சியில் நிற்கின்றார்கள். புருஷஸ்ரேஷ்டனே! மனிதர்களுக்குஅவ்விரண்டினாலும் எல்லாக்கார்யார்த்தங்களும் ஸித்திக்கின்றன. மனிதர்கள் அவ்விரண்டுகளாலும்பிரவிர்த்திக்கின்றவர்களாகவும் அவ்வாறே நிவிர்த்திக்கின்றவர்களாகவும் காணப்படுகின்றார்கள். செய்யப்பட்டிருக்கிற அந்தப்புருஷகாரமும் தெய்வத்தினால் ஸித்திக்கிறது. அவ்வண்ணமிருந்தால்தான் கார்யத்தைச்செய்கின்றவனுக்கு (அது)

* மனிதமுயற்சி.

பலத்தை உண்டுபண்ணுகிறது. மனிதர்கள் ஸமர்த்தர்களாக இருந்தாலும் தெய்வமின்றித்தொடங்கப்பட்டிருக்கிற அவர்களுடையமுயற்சியானது, நன்றாகச் செய்யப்பட்டிருந்தாலும், உலகத்தில் பயனற்றதாகக்காணப்படுகிறது. மனிதர்களுள் எவர்கள் சோம்பேறிகளாகவும் மனோதைர்யமற்றவர்களாகவும் இருக்கிறார்களோ அவர்கள் புருஷகாரத்தை நிந்திக்கின்றார்கள். அது கற்றறிந்தவர்களுடைய மனத்திற்கு ருசியாது. பூமியில் பெரும்பான்மையாகச் செய்யப்பட்ட கார்யமானது பயனற்றதாகக் காணப்படுகிறதில்லை. பெரும்பயனுள்ளகார்யத்தைச் செய்யாமலிருப்பவனே துக்கத்தைக்காண்கிறான். காரியத்தைச்செய்யாமல் தற்செயலாக ஸித்திபெறுபவன் முயற்சி செய்து ஸித்திபெறாமலிருப்பவன் இவ்விருவரும் காண்பதற்கரியர். ஸமர்த்தன் ஜீவிப்பதற்குச்சக்தியுள்ளவனாகிறான். சோம்பேறி ஸுகமாக முன்னேற்றமடைவதில்லை. இந்தஜீவலோகத்தில் ஸமர்த்தர்கள் பெரும்பான்மையாக நன்மையை விரும்புகிறவர்களாகக் காணப்படுகின்றார்கள். ஸமர்த்தன் தொடங்கப்பட்டிருக்கிற கார்யத்தினுடைய பயனை அடையாமல்போவானாகில் இவனுக்கு ஒருவிதமான இகழ்ச்சியும் உண்டாகாது. அடையத்தக்கதைச் சிறிதாவது அடைவான். உலகத்தில் தொழிலைச்செய்யாமல் ஒருஸமயத்திலும் மனிதன் பயனை அடைகிறதில்லை. அவன் நிந்தையையே அடைகிறான். பெரும்பான்மையாக அவன் வெறுக்கத்தக்கவனாகிறான். எவன் இவ்வண்ணம் இதைஅநாதரவுசெய்து இதைக்காட்டிலும் வேறாகஇருக்கிறானோ அவன் தனக்கு அனர்த்தங்களை அடைகிறான். இது புத்திமான்களுடையநீதி. தெய்வம் புருஷகாரத்தினாலாவது புருஷகாரம் தெய்வத்தினாலாவது விடுபட்டிருக்குமேயாகில் இந்இரண்டுகாரணங்களாலும் முயற்சியானது பயனற்றதாகிவிடும். இவ்வுலகில் புருஷகாரத்தினால் கார்யமானது ஸித்திபெறாது. எவன் தேவதைகளுக்கு நமஸ்காரம்செய்து கார்யஸித்திகளை நன்றாகவிரும்புகிறானோ தாக்ஷிண்யத்துடன்கூடின அந்த ஸமர்த்தனை மனிதன் வீண்செய்கையுள்ளவர்களால் கெடுக்கப்படுகிறதில்லை. பெரியோர்களை அடுத்து நன்மையைக் கேட்டுத்தெரிந்துகொண்டு அதனைச்செய்பவனுடையபுத்திதான் சிறப்புடையது. மனிதன் பெரியோரால்மதிக்கப்பட்டவர்களை எப்பொழுதும் முயன்றுமுயன்று கேட்கவேண்டும். அவர்கள், அடையாததை அடைவதில் சிறந்தமூலகாரணம். ஸித்தியானது விருத்தர்களை மூலமாகக்கொண்டதென்று சொல்லப்படுகிறது. மூத்தோர்களுடைய வசனத்தைக்கேட்டு எவன்முயற்சியைச்செய்வனோ அவன் அப்பொழுது

முயற்சியினுடைய சிறந்தபலத்தைச் சீக்கிரத்தில் அடைகின்ருன். எந்தமனிதன் காமத்தினுலும் குரோதத்தினுலும் பயத்தினுலும் லோபத்தினுலும் கார்யஸித்திகளே விரும்புவனே அவன் நாதனற்றவனும் அவமானமுள்ளவனுமாகிஐஸ்வர்யத்தினின்றுசீக்கிரமாகத்தவறிவிழுகிருன். பேரவாவுள்ளவனும் தீர்க்கதர்சியுமல்லாத துர்யோதனனல் மூடத்தனத்தினல் ஆலோசிக்கப்படாத அப்படிப்பட்டஇந்த ஸாமர்த்தியமற்ற கார்யம்தொடங்கப்பட்டது. நன்மையில் புத்தியுள்ளவர்களே அநாதரம் செய்து அயோக்யர்களோடு ஆலோசனைசெய்து தடுக்கப்பட்டும் சிறந்தகுணமுள்ளபாண்டவர்களோடு பகைமையைத்தேடிக்கொண்டான். முந்தியே அவன் அதிககெட்டஸ்வபாவமுள்ளவன். தைர்யத்தைப்பாராட்டுவதற்கு அவன் தகுதியுள்ளவனல்லன். கார்யம் முழுதும் அழிந்துபோனபிறகு தவிக்கிருன். மித்திரர்களுடைய வசனம் இவனல்அனுஷ்டிக்கப்படவில்லே. அப்படிப்பட்ட பாவியான மனிதனே நாம்அனுஸரிக்கிருேமாதலால் நம்மையும்உக்கிரமாயும்பெரிதாயுமிருக்கிற இந்தஅநீதி வந்தணுகிவிட்டது. தாபத்தைஉண்டு பண்ணுகின்ற இந்தவ்யஸனத்தினல் இப்பொழுது என்னுடையபுத்தியும் ஏதோஒன்றைநினேக்கிறது ; தனக்குஉரியநன்மையைத் தெரிந்துகொள்ளவில்லே. புத்திமயக்கங்கொண்டமனிதன் நட்பினர்களேக் கேட்கவேண்டும். அப்பொழுதுதான் இவனுக்குப் புத்தியும் விநயமும்ஏற்படுகின்றன. அப்பொழுதுதான் நன்மையைத்தெரிந்துகொள்ளுகிருன். ஆதலால், இவனுடைய கார்யங்களுடையமூலத்தைப் புத்தியினல்நிச்சயம்செய்து கற்றறிந்தவர்களேக் கேட்கவேண்டும். அவர்களேக்கேட்டால்அவர்கள்இந்தவிஷயத்தில் என்னசொல்லுகிருர்களோ அதனேச்செய்யவேண்டும். நாம்சென்று திருதராஷ்டிரனேயும் புகழுள்ள காந்தாரியையும் மகாபுத்திமானன விதுரரையும் கேட்போம். கேட்கப்பட்ட அவர்கள் நமக்கு உறுதியான எந்த விஷயத்தைச்சொல்லுவார்களோ அது நம்மால் விளம்பமின்றிச்செய்யத்தக்கதென்பது என்னுடைய நிச்சயமானஎண்ணம். கார்யங்களேத்தொடங்காததினல் ஒருபொழுதும் அர்த்தம் ஸித்தியாது. புருஷகாரம் செய்யப்பட்டிருந்தும் எவர்களுக்குக் கார்யம்ஸித்திக்கிறதில்லேயோ அவர்கள் தெய்வத்தினல்கெடுக்கப்பட்டவர்கள். இந்தவிஷயத்தில் ஆலோசிக்கவேண்டாம்' என்றுகூறினர்.

---

## மூன்றுவது அத்யாயம்.

## ஸெளப்திகபர்வம். (தொடர்ச்சி.)



(அஶ்வத்தாமா க்ருபருடையவசனத்தைக்கேளாமல் க்ருபர் க்ருதவர்மாஇருவர்முன்னிலையிலும் பாண்டவர்களையும் பாஞ்சாலர்களையும் கொல்வதாகச் சபதம்செய்தது.)

மஹாராஜரே! துக்கத்துடனும்சோகத்துடனும்கூடின அஶ்வத்தாமா தர்மத்துடனும்அர்த்தத்துடனும்கூடினதும் மங்களகரமுமான கிருபருடையவசனத்தைக்கேட்டு, ஜ்வலிக்கின்றஅக்னிபோன்ற சோகத்தினால் எரிக்கப்படுகின்றவராயிருத்தலால், பிறகு, மனத்தைக் குரூரமாகச்செய்துகொண்டு அவ்விருவரையும் பார்த்து மறுமொழி கூறலானார். 'ஒவ்வொருமனிதனிடத்திலும் எந்த எந்தப்புத்தியானது நல்லதாகத்தோன்றுகிறதோ அந்த அந்தஸ்வபுத்தியினால் அவர்களனைவர்களும் தனித்தனியாக ஸந்தோஷிக்கின்றார்கள். உலகத்தில் எல்லாரும் தம்மைச் சிறந்தபுத்திசாலிஎன்று எண்ணிக்கொள்ளுகிறார்கள். எல்லாரும் தம்தம்மையே நன்குமதிக்கிறார்கள். எல்லாரும் தம்மைப் புகழ்ந்துகொள்ளுகிறார்கள். எல்லாருக்கும் தம்முடைய அறிவானது சிறந்ததென்கிற வாதத்தில் நிச்சயமிருக்கிறது; பிறனுடைய புத்தியை நிந்திக்கின்றார்கள். அடிக்கடி தம் புத்தியைப் புகழ்ந்துகொள்ளுகின்றார்கள். எவர்களுடைய புத்தியானது வேறு காரணங்களுடன் பொருத்திக் காட்டுவதனால் ஏற்றதென்றுகிறதோ அவர்கள் ஒருவரைப்பற்றி யொருவர் ஸந்தோஷிக்கின்றார்கள். அடிக்கடி ஒருவரையொருவர் புகழ்கிறார்கள். அந்த மனுஷ்யனுடைய அந்த அந்தப் புத்தியே அப்பொழுது அப்பொழுது காலத்தின் சேர்க்கையினால் மாறுபட்டத்தை அடைந்து ஒன்றுலொன்று அழிகிறது. பெரும்பாலும் மனிதர்களுடையசித்தங்கள் நிலையற்றிருப்பதனால்அவற்றிற்கு மெலிவுண்டாகவே, அந்த அந்தப்புத்தி உண்டாகின்றது. பிரபுவே! எவ்வாறு ஸமர்த்தனான வைத்தியன் வியாதியை அறிந்து அது தணிவதின்பொருட்டு உபாயத்தினால் முறைப்படி மருந்து செய்கிறானோ அவ்வாறு மனிதர்கள் கார்யஸித்தியின்பொருட்டுப் புத்தியைச் செலுத்துகின்றார்கள். பண்டிதர்கள் அறிவினாலும் தம்முடைய யுக்தியினாலும் அதை ஏற்றுக்கொள்ளுகின்றார்கள். மனிதன் பாலயத்திலும் யௌவனத்திலும் மத்தியகாலத்திலும் வெவ்வேறு புத்தியினால் மோகமடைகிறான். முதுமையிலோ அவன் வேறு புத்தி

யை அடையவிருப்பமுள்ளவனாகிறான். போஜகுலத்தவனே! புருஷன் மஹாகோரமானவ்யஸனத்தையோ அப்படியே மிக்கசெல்வப் பெருக்கையோ அடைந்து புத்திவேறுபாட்டை அடைகிறான். ஒரு மனிதனிடத்திலேயே அப்போதைக்கப்போது அந்த அந்தப் புத்தி உண்டாகிறது. பிரஜ்ஞையானது அநித்யமன்றோ. அது அவனுக்கே ருசிக்கிறதில்லை. தன்னுடைய அறிவு எட்டினவரையில் நிச்சயித்து எந்தப் புத்தியை நல்லதாகப் பார்க்கிறானோ அந்தப்புத்தியினால் செய்ய வேண்டியகார்யத்தை நன்றாகச் செய்கிறான். அது அவனுக்கு முயற்சியை உண்டுபண்ணுகிறது. போஜனே! எல்லாமனிதர்களும் இது நல்லதென்று நிச்சயமுள்ளவராகவே மரணமுதலான கார்யங்களில் பிரீதியைப் பண்ணத் தொடங்குகிறார்கள். எல்லா மனிதர்களும் தம்முடைய அறிவு ஸரியானதென்று அறிந்தே பற்பல கார்யங்களைச் செய்கின்றார்கள்; நன்மையென்றே எண்ணுகிறார்கள். இப்பொழுது எனக்கு இந்த வ்யஸனத்தினாலுண்டாயிருக்கிறதும், எல்லாருடைய சோகத்தையும் நாசம் செய்கின்றதுமான புத்தியை உங்களிருவருக்கும் உரைக்கப்போகிறேன். பிரம்மதேவர் பிரஜைகளைப்படைத்து அவைகளுக்குத் தொழிலையும் ஏற்படுத்தி ஒவ்வொருவர்ணத்திலும் மிகச்சிறந்ததான ஒவ்வொருதொழிலையும் நன்றாக நிலைநாட்டினார். பிராமணனிடத்தில் உத்தமமானவேதத்தையும் க்ஷத்திரியனிடத்தில் உத்தமமானபலத்தையும் வைஶ்யனிடத்தில் ஸாமர்த்தியத்தையும் சூத்திரனிடத்தில் எல்லாஜாதிக்கும் அனுகூலமாயிருத்தலையும் ஏற்படுத்தினார். மனவடக்கமில்லாதபிராம்மணன் சிறந்தவனாகான். பலமற்றவனான க்ஷத்திரியன் மரித்தவனுக்குஸமானன். சாதுர்யமில்லாத வைஶ்யன் நிந்திக்கப்படுகிறான். பிரதிகூல ஸ்வபாவமுள்ள சூத்திரனும் இகழப்படுகிறான். பிராம்மணர்களால் எங்கும் புகழப்பட்ட சிறந்தபிராமணகுலத்தில் அப்படிப்பட்ட நான் பிறந்தேன். பாக்கியக்குறைவினால் இந்தக்ஷத்திரியதர்மத்தைஅனுஷ்டிக்கிறவனானேன். நான் க்ஷத்திரியதர்மத்தை அடைந்தபின், பிராம்மண்யத்தைஆச்ரயித்து மகிமையுடைய கார்யத்தைச்செய்வேனேயாகில் அந்தஎன்னுடையகார்யமானது ஸாதுக்களுக்கு ஸம்மதமாகாது. யுத்தத்தில் திவ்யமானதனுஸையும் திவ்யாஸ்திரங்களையும் தரித்து, பிதாகொல்லப்பட்டதையும்கண்டு ஸபையில்எதைச்சொல்வேன்? அப்படிப்பட்ட நான் இப்பொழுது இஷ்டப்படி க்ஷத்திரியதர்மத்தைக் கைமேற்கொண்டு அரசன்விஷயத்திலும் மஹாத்மாவான பிதாவின் விஷயத்திலும் கடனில்லாமையை அடையப்போகிறேன்.

